சிறந்த நடிகர், முதல்தர இயக்குநர், தேர்ந்த எழுத்தாளர் வசிலி ஷுக்ஷின் (1929—1974) பல்வேறு துறைகளில் தம் கைவண்ணத்தைக் காட்டி விரைந்த வெற்றிகள் பெற்ருர். எனவே வெற்றி ஒளியின் ஊடாகவே அவருடைய உள ஆழத்தை எப்போதும் வேறு பிரித்துக் காண வேண்டி இருந்தது.

ஷுக்ஷின் புகழும் மக்களின் பெரு விருப்பும் பெற முதன்மையாகக் காரணமாய் இருந்தவை அவருடைய சிறு கதைகளா, அவர் கதாநாயகன் பாத்திரத்தை ஏற்று அற்புதமாக நடித்த ''ஏரியின் அருகே'' என்ற திரைப்படமா, அவரே தயாரித்து அளித்த ''கலீனு கிராஸ்னயா'' முதலிய திரைப்படங்களா, மக்கள் விவசாயிப் போரின் வீரன் ஸ்தெபான் ராஸின் பற்றிய நாவலா என்று சொல்வது கடினம்... எப்படியும், கதையாசிரியர் என்ற முறையில் ஷுக்ஷின் அரிய திறமை பெற்றவர் என்பது விவாதத்துக்கு இடமற்றது. மக்களது சுபாவங்களையும் எல்லா வகையான வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் கதைகளையும் வரலாறுகளையும் அவர் நன்ருக அறிந்திருந்தார். ''ஷுக்ஷின், மக்கள் எழுத்தாளர்—அச்சொல்லின் பழைய அர்த்தத்தில்'' என்று அவரைப் பற்றிப் பத்திரிகைகள் எழுதின.

வாழ்நாளின் இறுதிப் பத்தாண்டில் ஷுக்ஷின் இயற்றிய சிறந்த சிறுகதைகள் இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ளன.

# வசீலி ஷுக்ஷீன்

# வாழ விருப்பம்

## முதலிய கதைகள்

பொருளடக்கம்



முன்னேற்றப் பதிப்பகம்
மாஸ்கோ

விற்பனையாளர்கள் நியூ
செஞ்சுரி புக் ஹவுஸ் பிரை
வேட் லிமிடெட்
சென்னை

மொழிபெயர்ப்பாளர்: பூ. சோமசுந்தரம்
தயாரிப்புக் கலைஞர்: செ. பரபாஷ்

ஈகர் கினேவஷெவ், யெவ்கேனியா தெரெகவா, அனத்தோலி கோவ்துன், ருதோல்ப் கூசெரவ், வலேரி கூஸின் முதலியோரின் புகைப்படங்கள் புத்தகத்தில் சேர்க்கப்பட்டுள்ளன.

**Василий Шукшин**

«ОХОТА ЖИТЬ» И ДРУГИЕ РАССКАЗЫ

*на тамильском языке*



சோவியத் நாட்டில் அச்சிடப்பட்டது

Ш $\frac{70302-311}{014(01)-81}$ 687—80 4702010200

## கைதேர்ந்த காரோட்டி

இளவேனிலில், விதைப்பு தொடங்கும் பருவத்தில், பிஸ்திரியான்கா கிராமத்துக்கு வந்தான் புதிய இளைஞன் ஒருவன்—காரோட்டி பாஷ்கா ஹல்மான்ஸ்கி. உலர்ந்து நரம்புகள் புடைத்த மேனி. துடியான நடை. மஞ்சள் பாரித்த சாம்பல் நிற வட்ட விழிகளில் துணிவு. நேரான மெல்லிய மூக்கு. அம்மைத் தழும்புகள் இட்ட முகம். செங்குத்தான, முறிந்த புருவம். நிரம்பச் சிடுமூஞ்சியும் அல்ல, அழகனும் அல்ல. ஏதோ ஒரு பறவை போல் இருந்தான்.

பாஷ்கா கெர்ழாக்குகள்* குடும்பத்தில் பிறந்தவன், கத்தூன் ஆற்றின் மேற்பகுதிக் கிராமங்களில் ஒன்றைச் சேர்ந்தவன். ஆனால், பழம் போக்கில் போகிற, சுறுசுறுப்பு இல்லாத கெர்ழாக்குகளின் வாழ்க்கை முறையை அவன் கட்டாயமாகக் கொஞ்சங்கூட மேற்கொள்ளவில்லை.

அவன் பிஸ்திரியான்காவுக்கு வந்தது இப்படி.

பிஸ்திரியான்கா கூட்டுப்பண்ணைத் தலைவர் யெர்மலாய் புரோகரவ் கூட்டுப்பண்ணை ஜீப்பில் நகரத்திலிருந்து திரும்பிக் கொண்டிருந்தார். நடுவில் அவருடைய ஜீப்பின் விசை வில் முறிந்து விட்டது. புரோகரவ் ஓட்டுநருடன் வாயாரச் சண்டை பிடித்து விட்டு வழியே சென்ற கார்களைக் கூவி நிறுத்த முற்பட்டார். இரண்டு கார்கள் நிற்கவில்லை. மூன்றாவது ஒன்றைடன் லாரி நின்றது. காரோட்டி கதவைத் திறந்தான்.

''எங்கே போக வேண்டும்?''

''பிஸ்திரியான்கா.''

''ஸல்தோன் அதற்கு அப்பாலேயா, முன்னேயா?''

''கொஞ்சம் முன்னே. ஏன்?''

''உட்காரும். ஸல்தோன் வரை கொண்டு விடுகிறேன். எனக்கு வழி காட்டும்.''

''போவோம்.''

காரோட்டி இருக்கையில் சாய்ந்து உட்கார்ந்திருந்தான். வலது கை இயக்கு சக்கரத்தின் மேலும் இடது முழங்கை

---

* **கெர்ழாக்குகள்**—பண்டை. ருஷ்யக் கிறிஸ்தவ சம்பிரதாயத்தைச் சேர்ந்தவர்கள். பெரும்பாலும் சைபீரியாவில் வசித்து வந்தார்கள்.—மொ-ர்.

கதவின் மேலும் இருந்தன. முன்னே பாதை மீது பார்வை செலுத்தியவாறு சிந்தனையுடன் கண்களைச் சுரித்துக் கொண்டிருந்தான்.

லாரி நொடிகளிலிருந்து மாயமாய் விலகியவாறு முடிந்த அளவு அதிக வேகத்தில் பறந்தது. எதிரே வந்த ஒரு காரில் மோதாமல் மயிரிழை தப்பிற்று. கூட்டுப்பண்ணைத் தலைவருக்கு அச்சத்தால் மூச்சு நின்று விடும் போல் இருந்தது. அவர் காரோட்டியை ஏறிட்டுப் பார்த்தார். அவனோ, எதுவும் நடக்கவில்லை போல உட்கார்ந்து கண்களைச் சுரித்துக் கொண்டிருந்தான்.

''நீ இதுவரை ஒரு போதும் மண்டையை உடைத்துக் கொண்டதில்லையா?'' என்று கேட்டார் புரோகரவ்.

''என்ன?.. பரவாயில்லை, பயப்படாதேயும், பெரியவரே. விமானம் ஓட்டுவதில் முக்கியமானது என்ன?'' என்று புன்னகை செய்தான் காரோட்டி. சரளமான, நல்லியல்புள்ள புன்னகை.

''விமானம் ஓட்டுவதில் முக்கியமானது சளசளக்காமல் இருப்பது என்று நினைக்கிறேன்.''

''இல்லை, சரி அல்ல.'' இளைஞன் இயக்கு சக்கரத்தை ஒரேயடியாக விட்டுவிட்டு, சிகரெட்டுக்காகப் பைக்குள் கையை விட்டான். பயணியின் திகில் அவனுக்கு வேடிக்கையாக இருந்தது போலும்.

புரோகரவ் பற்களைக் கடித்து முகத்தைத் திருப்பிக் கொண்டார்.

அந்தக் கணத்தில் லாரி நொடியில் தடாலென்று விழுந்து வெளியேறிற்று. புரோகரவ் இயல்பூக்கத்தால் தூண்டப் பட்டுக் கதவைப் பிடித்துக் கொண்டார். காரோட்டியை நெருப் பெழ நோக்கினர்.

''டேய்!.. விமானி!''

இளைஞன் மறுபடி புன்னகை செய்தான்.

''விரைவை மதிக்கிறேன்'' என்று ஒப்புக் கொண்டான்.

புரோகரவ் இளைஞனின் விழிகளைக் கூர்ந்து பார்த்தார்: இளைஞனை எதனாலோ அவருக்குப் பிடித்துப் போயிற்று.

''நீ எதற்காக ஸல்தோன் போகிறாய்?''

''வேலையாக.''

''விதைப்புக்கா?''

''ஆம்... விவசாயிகளுக்கு உதவ வேண்டும்.''

தந்திரக்காரர் புரோகரவ் சற்று நேரம் பேசாதிருந்தார். அவரும் புகை பிடித்தார். காரோட்டியை நைச்சியம் பண்ணித் தம் கூட்டுப்பண்ணைக்கு இட்டுச் செல்ல முடிவு செய்தார்.

''ஸல்தோனுக்கேயா அல்லது வட்டாரத்துக்கா?''

''வட்டாரத்துக்கு. லிஸ்த்வியான்கா கிராமத்துக்கு... உங்கள் வட்டாரத்தில் இடங்கள் எல்லாம் நன்றாய் இருக்கின்றன.''

''உன் பெயர் என்ன?''

''என் பெயரா? பாவெல். பாவெல் யெகோரிச். கூப்பிடுவது பாஷ்கா என்று.''

''பெயரில் எனக்கும் உனக்கும் ஒற்றுமை இருக்கிறது. என் தகப்பனார் பெயர் யெகோர், ஆகையால் நானும் யெகோரிச்தான். என் ஊருக்கு வாயேன் யெகோரிச்?''

''அப்படி என்றால்?''

''கேள். லிஸ்த்வியான்கா கூட்டுப்பண்ணைத் தலைவரை எனக்குத் தெரியும். உன்னைப் பற்றி அவரிடம் பேசி ஒப்பந்தம் செய்து கொள்கிறேன். நானும் கூட்டுப்பண்ணைத் தலைவன். லிஸ்த்வியான்கா அத்துவானம் என்று நான் உன்னிடம் சொல்லிவிட வேண்டும். எங்களதோ, பெரிய கிராமம்...''

''எனக்கு என்னவோ புரியவில்லை. என்னுடைய அலுவல் சீட்டில் என்ன சொல்லி இருக்கிறது என்றால்...''

''எங்கே வேலை செய்தாலும் உனக்கு ஒன்றுதானே? நான் அதே மாதிரிச் சீட்டு உனக்குத் தருகிறேன்... நீ விதைப்பில் வேலை செய்தாய் என்று—எல்லாம் முறைப்படி. அந்தத் தலைவரோடு நாங்கள் பேசி இசைவு பெறுகிறோம். பார்க்கப் போனால் அவர் இந்த வகையில் எனக்குக் கடன்பட்டவர். என்ன சொல்கிறாய்?''

''உங்கள் ஊரில் பொழுதுபோக்குக் கழகம் உண்டா?''

''கழகமா? அது இல்லாமலா?''

''பட்டம் பிடித்தாயிற்று.''

''என்ன?''

''அதாவது இசைகிறேன் என்கிறேன். பிரமிதோன்.''

இளைஞனை மகிழ்விப்பதற்காகப் புரோகரவ் சிரித்தார்.

''கிண்டல் பேர்வழி நீ...'' (விதைப்பு வேலைக்கு ஒரு காரோட்டி, அதுவும் லாரியுடன் கிடைத்திருக்கிறான் என்றால்

லேசா? பிரமிதோன்தான், அதுவும் பிரமாதமான பிரமிதோன்!) ''கிண்டல் பேர்வழி அப்பா நீ, யெகோரிச்.''

''ஏதோ முயற்சி செய்கிறேன். அப்படியானல், பொழுது போக்குக் கழகம் இருக்கிறதாக்கும்?''

''இருக்கிறது, பாஷ்கா. அதுவும் எப்பேர்ப்பட்ட கட்டிடம்—முன்பு மாதாகோயில் இருந்த இடம்!''

''பிரார்த்தனை செய்வோம்'' என்ருன் பாஷ்கா.

புரோகரவ், பாஷ்கா இருவரும் கலகலவென்று சிரித்தார்கள்.

பாஷ்கா பிஸ்திரியான்காவுக்கு வந்த கதை இதுதான்.

புரோகரவின் வீட்டில் அவன் தங்கினுன். புரோகரவின் மனைவியோடு விரைவில் சினேகம் பண்ணிக் கொண்டான். மாலை வேளைகளில் அவளுடன் சந்தோஷமாக உரையாடினுன்.

வாத்து இறைச்சி போட்டுத் தயாரித்திருந்த சுவையான சேமியாப் பொங்கலைத் திருப்தியுடன் சாப்பிட்டுக் கொண்டே, ''மனைவி பரிவு காட்ட வேண்டும்'' என்ருன் பாஷ்கா.

''சரியாய்ச் சொன்னுய்'' என்று ஆமோதித்தார் குனிந்து இறுக்கமான நீள்சோட்டைக் கழற்றிக் கொண்டிருந்த புரோகரவ். ''பரிவு காட்டாதவள் எந்த வகையில் மனைவி?''

''நான் வேலையிலிருந்து வீட்டுக்கு வருகிறேன், என்ன? களைத்துப் போய், ஒரே அழுக்காக. அப்போது மனைவி சுறுசுறுப்பாக ஓடியாடுவதை நான் முதலில் பார்க்க வேண்டும். உதாரணமாக, 'வணக்கம், மருஸியா', என்பேன் நான். அவள் குதூகலமாக, 'வணக்கம், பாவ்லிக்! களைத்துப் போனுயோ?' என்று கேட்க வேண்டும்.''

''பாவம், அவளும் பகல் முழுவதும் கடுமையாக வேலை செய்திருந்தால் குதூகலத்துக்கு எங்கே போவாளாம்?'' என்ருள் புரோகரவின் மனைவி.

''அப்போதும் அவள் குதூகலமாய் இருக்க வேண்டும். இல்லாமல் ஏக்கமும் சலிப்புமாக இருந்தாளானல் நான் அவளிடம் சொல்வேன்: 'பிரமிதோன்.' அப்புறம் மற்ற பெண்கள் மேல் எனக்கு நாட்டம் விழும். சரிதானே, யெகோரிச்?''

''முழுக்க முழுக்க!'' என்று ஆமாம் போட்டார் புரோகரவ்.

வீட்டுக்காரி கோபம் கொண்டவள் போல நடித்து, எல்லா ஆண்களும் திமிர் பிடித்தவர்கள் என்ருள்.

ஊர் சேர்ந்த மறுநாளே பொழுதுபோக்குக் கழகத்துக்கு வந்தான் பாஷ்கா. அமிழ்ந்த குதூகலமும் பள்பளப்புமாக: ஆழ்ந்த சிவப்புச் சட்டையின் கழுத்துப்பட்டை திறந்திருந்தது. கால்களில் குருமத் தோல் நீள்சோடுகள் பளிச்சிட்டன. புத்தம் புதிய இராணுவத் தொப்பி போட்டிருந்தான். அதன் விளிம்புக்கு அடியிலிருந்து சணல் நிற மலர்க் கொடி போல நீட்டிக்கொண்டிருந்தது சுட்டி மயிர்ச் சுருள்.

''இங்கே ஆட்கள் எல்லாம் எப்படி... மோசம் இல்லையே?'' என்று ஓர் இளைஞனிடம் அசட்டையாகக் கேட்டவன், நடனம் ஆடிக் கொண்டிருந்த இணைகள் மீது தற்செயலாகக் கண்ணோட்டினான். ''உள்ளூர் ஆட்கள்'' தன்னை எப்படி மதிக்கிறார்கள் என்று தெரிந்து கொள்ள விரும்பினான்.

''மோசம் இல்லை'' என்று பதிலளித்தான் இளைஞன்.

''ஆமாம், நீ ஏன் இப்படிச் சலிப்பாய் இருக்கிறாய்?''

''இப்படிக் குறுக்குக் கேள்வி கேட்க நீ யார்?'' என்று முறைத்தான் இளைஞன்.

பாஷ்கா அமைதியாகப் பல்லிளித்தான்.

''நான் உங்கள் புதிய வழக்கு விசாரணை அதிகாரி. ஒழுங்கை நிலைநாட்ட வந்திருக்கிறேன்.''

''சாக்கிரதை. இல்லாவிட்டால் இந்த ஊர்க்காரர்கள் உன்னையே நாட்டிவிடுவார்கள் எங்கேனும்.''

''பரவாயில்லை.'' பாஷ்கா இளைஞனைப் பார்த்துக் கண் சிமிட்டிவிட்டு ஹாலில் இருந்த மங்கைகளையும் வாலிபர்களையும் பார்வையிடுவதைத் தொடர்ந்தான்.

ஊர்க்காரர்களும் அவனைப் பார்வையிட்டார்கள்.

பாஷ்காவுக்கு இந்த மாதிரிச் சந்தர்ப்பங்கள் பிடித்திருந்தன. தெரியாதது, பழக்கம் இல்லாதது, முதலில் நட்பு அற்றது அவனுக்குக் கிளர்ச்சி ஊட்டியது. அவனுடைய ஆர்வத்தை மற்றவர்களைவிட அதிகமாகத் தூண்டினார்கள் கன்னிப் பெண்கள்.

நடனம் முடிந்தது. இணைகள் தங்கள் தங்கள் இடங்களுக்குச் சென்றன.

''இந்தப் பெண் யார்?'' என்று அதே இளைஞனிடம் கேட்டான் பாஷ்கா. உள்ளூர் அழகியான நாஸ்தியா அவன் கண்களில் பட்டு விட்டாள்.

இளைஞன் அவனோடு உரையாட விரும்பாமல் அப்பால் சென்றான்.

வால்ட்ஸ் நடன இசை தொடங்கிற்று.

பாஷ்கா ஹால் முழுவதையும் கடந்து நாஸ்தியாவின் அருகே போய் சற்றே தலை வணங்கி, ''வால்ட்ஸ் நடனத்துக்கு உங்களை அழைக்கிறேன்!'' என்று உரக்கச் சொன்னான்.

அவனுடைய நாகரிக தோரணை எல்லோரையும் வியப்பில் ஆழ்த்தியது. ஒளிவு மறைவற்ற மகிழ்ச்சி ததும்பும் ஆர்வத்துடன் ஆட்கள் அவனைப் பார்க்கலானார்கள்.

நாஸ்தியா நிதானமாக எழுந்து பாஷ்காவின் வறண்ட தோள் மேல் கனத்த கையை வைத்தாள். பாஷ்கா கண் கொட்டாமல் அவளை அன்பு ததும்பப் பார்த்தான்.

வட்டமிட்டு நடனமாடத் தொடங்கினார்கள்.

நாஸ்தியாவின் அங்க அசைவுகள் கொஞ்சம் மந்தமாக, சோம்பல் உள்ளவையாக இருந்தன. மாறாகப் பாஷ்கா தொடக்கத்திலிருந்தே சிக்கலான பேயாட்டம் ஆடத் தலைப்பட்டான். அதனால் சிலர் ஆடுவதை நிறுத்தி விட்டு அவனைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவன் ஒரு சமயம் நாஸ்தியாவைத் தன்னிடமிருந்து விலக விட்டான், மறு சமயம் தன் பக்கம் சுண்டி இழுத்துச் சுழன்று சுழன்று ஆடினான்... கடைசியில் அவன் நாஸ்தியாவிடமிருந்து சற்று விலகி, அவள் கையைத் தன் கையிலிருந்து நழுவ விடாமல் ருஷ்ய ஜதி வரிசைகள் ஆடத் தொடங்கவே, எல்லோரும் மெய்மறந்து ஆகா ஆகா என்று வியந்தார்கள். பாஷ்காவோ, ''இது சொற்பந்தான். இன்னும் எவ்வளவோ இருக்கிறது. எப்போதாவது உற்சாகம் பிறந்தால் ஆடிக் காட்டுகிறேன்'' என்று சொல்பவன் போன்ற தோற்றத்துடன் ''உள்ளூர் ஆட்களுக்கு'' மேலே எங்கேயோ பார்த்தான்.

நாஸ்தியா கன்றிச் சிவந்தாள். முன் போலவே மெதுவாக, நீந்துபவள் போல நடந்தாள்.

''நல்ல உளறுவாயன்தான் நீ!'' என்று பாஷ்காவின் விழிகளை விழி பொருந்த நோக்கியவாறு குதூகலமாக மொழிந்தாள்.

பாஷ்கா அதைச் சட்டை செய்யவே இல்லை.

''நீ எந்த ஊர்?''

''மாஸ்கோ'' என்று அலட்சியமாகச் சொன்னான் பாஷ்கா.

''அங்கே எல்லோரும் இப்படிப்பட்டவர்கள் தானோ?''

''எப்படிப்பட்டவர்கள்?''

''அதுதான், மண்டைக் கனம் பிடித்தவர்கள்.''

நாஸ்தியாவின் மர்மமான கரு விழிகளின் அகாதமான ஆழத்தில் பல அர்த்தங்கள் ததும்பிய அன்புப் பார்வையைச் செலுத்தியவாறு, ''உங்கள் பக்குவமின்மை எனக்கு வியப்பு அளிக்கிறது'' என்றான் பாஷ்கா.

நாஸ்தியா மெல்லென நகைத்தாள்.

பாஷ்கா ஆழ்ந்த தோற்றத்தை வருவித்துக் கொண்டான்.

''உங்களை எனக்குப் பிடித்திருக்கிறது. இந்த மாதிரி ஆதர்சத்தை வெகு காலமாகத் தேடிக் கொண்டிருந்தேன்'' என்றான்.

''ரொம்பத் துடியான ஆள் நீ'' என்று அவனை நேரிட்டு நோக்கினாள் நாஸ்தியா.

''நான் மெய்யாகவே சொல்லுகிறேன்.''

''அதற்கு என்ன?''

''இன்று நான் உங்களை வீடு வரை கொண்டு விடுகிறேன். அதாவது வேறு எவனாவது உங்களுக்கு இல்லை என்றால். சம்மதந்தானே?''

நாஸ்தியா கேலியாக நகைத்துத் தலை அசைப்பால் மறுப்பு தெரிவித்தாள். பாஷ்கா அதைக் கவனிக்கவே இல்லை.

வால்ட்ஸ் நடனம் முடிந்தது.

பாஷ்கா உடனடியவளை அவளுடைய இடம் வரை கொண்டு விட்டு, மறுபடி நாகரிகமாக வணங்கி விடை பெற்று, மற்ற இளைஞர்களோடு புகை பிடிப்பதற்காக முகப்புத் தாழ்வாரத்துக்குப் போனான்.

இளைஞர்கள் அவனைக் கோணலாகப் பார்த்தார்கள். இப்படி நேர்வது வழக்கம் என்பதைப் பாஷ்கா அறிந்திருந்தான்.

புகை பிடித்துக் கொண்டிருந்தவர்களை நெருங்கி, ''இங்கே பக்கத்தில் குடிக்கடை எங்கும் இல்லையோ?'' என்று கேட்டான்.

இளைஞர்கள் ஒன்றும் சொல்லாமல் பாஷ்காவைக் கேலியாகப் பார்த்தார்கள்.

''நீங்கள் என்ன, வாயில் கொழுக்கட்டையை அடைத்துக் கொண்டிருக்கிறீர்களா?''

''நீ இங்கே தலை தெறிக்கும் வேகத்தில் காரியங்கள் தொடங்கியிருப்பதாக உனக்குத் தோன்றவில்லையா?'' என்று

கேட்டான் நடனத்துக்கு முன் பாஷ்கா பேசிக் கொண்டிருந்த அதே இளைஞன்.

''இல்லை, தோன்றவில்லை.''

''எனக்குத் தோன்றுகிறது.''

''இல்லாதது தோன்றினல் சிலுவைக்குறி இட்டுக் கொள்.''

இளைஞன் கடுப்புடன் முகத்தைச் சுளித்தான்.

''கொஞ்சம் வெளியே போய்ப் பேசுவோமா?''

பாஷ்கா தலையசைப்பால் மறுப்பு தெரிவித்தான்.

''என்னல் முடியாது.''

''ஏன்?''

''காரணம் இல்லாமல் காலை முறித்துப் போடுவீர்கள்... அப்புறம் எப்போதாவது பேசுவோம். மொத்தத்தில் என் மேல் உங்களுக்கு என்ன காட்டம்? நான் யாருக்கும் தீங்கு செய்ததாகத் தெரியவில்லையே.''

இம்மாதிரித் திருப்பத்தை இளைஞர்கள் எதிர்பார்க்கவில்லை. பாஷ்காவின் நேர்மை அவர்களுக்குப் பிடித்திருந்தது. கொஞ்சங் கொஞ்சமாக மனம் விட்டுப் பேசலானுர்கள்.

அவர்கள் பேசிக் கொண்டிருந்த போதே தாங்கோ நடனம் தொடங்கி விட்டது. வேருெரு இளைஞன் நாஸ்தியாவை உடனுட அழைத்துவிட்டான். பாஷ்கா சிகரெட்டுத் துணுக்கை எரிச்சலும் புகைச்சலுமாகத் தரையில் எறிந்து மிதித்துத் துவைத்தான். நாஸ்தியாவுக்கு மணமகன் இருப்பதாகவும் அவன் மாஸ்கோவிலிருந்து வந்திருக்கும் பொறியாளன் என்றும் அவர்கள் மணம் செய்து கொள்ளப் போவதாகத் தோன்றுவதாகவும் இளைஞர்கள் பாஷ்காவிடம் சொன்னுர்கள். அவனே, நாஸ்தியாவைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தான். இளைஞர்களின் பேச்சை அவன் காதிலேயே போட்டுக் கொள்ளவில்லை போல் இருந்தது. பின்பு தொப்பியைப் பின்மண்டைக்கு நகர்த்தி, முகத்தைச் சுளித்தான்.

''பார்ப்போம் யார் யாரைப் படம் பிடிக்கிறுர்கள் என்று.'' இவ்வாறு சொல்லித் தொப்பியைச் சரிப்படுத்திக் கொண்டான். ''எங்கே அவன்?''

''யார்?''

''பொறியன்.''

''அவன் இன்று வரவில்லை.''

''மெத்தப் படித்தவர்கள் என்ருல் எனக்குக் கிள்ளுக் கீரை.''

தாங்கோ நடனம் முடிந்தது.

பாஷ்கா நாஸ்தியாவிடம் போஞன்.

''என்னுடைய ஒரு கேள்விக்கு நீங்கள் பதில் சொல்ல வில்லே.''

''எந்தக் கேள்விக்கு?''

''இன்று உங்களே நான் வீடு வரை கொண்டு விடட்டுமா?''

''நான் தனியே போய்க் கொள்கிறேன், நன்றி.''

பாஷ்கா அவள் பக்கத்தில் உட்கார்ந்தான். அவனுடைய வட்டப் பூனேக் கண்கள் மறுபடி ஆழ்ந்த முறையில் நோக்கின.

''கொஞ்சம் பேசுவோம், கனவான்கள் மாதிரி.''

''அட கடவுளே'' என்று பெருமூச்செறிந்து எழுந்து ஹாலின் மறு கோடிக்குப் போய் விட்டாள் நாஸ்தியா.

பாஷ்கா அவள் போனதைப் பார்த்தான். சுற்றி இருந்தவர்கள் அனுதாபத்துடன் சிரித்ததைக் கேட்டான். அவமதிக்கப்பட்டதாக அவன் உணரவில்லே. நெஞ்சுதான் வலித்தது. கொதித்தது, வலித்தது. அவனும் எழுந்து கழகக் கட்டிடத்திலிருந்து வெளியேறிஞன்.

மறு நாள் மாலே பாஷ்கா முந்திய நாளே விடப் பகட்டாக உடை அணிந்தான். பூத்தையல் செய்த சட்டையைப் புரோகரவிடம் கேட்டு வாங்கிப் போட்டுக் கொண்டான். குஞ்சம் வைத்த நீலப் பட்டு இடைக் கச்சால் அதை இறுக்கிஞன். தன் நீலக் குறுஞ்சராயை மாட்டிக் கொண்டான், பஸ்தோன் கோட்டை அணிந்தான், பின்பு ஊர் நூல் நிலேயத்துக்குப் போஞன் (நாஸ்தியா நூலகராக வேலே செய்து வந்ததை அவன் முன்பே விசாரித்துத் தெரிந்து கொண்டிருந்தான்).

நூல் நிலேயமாகவும் வாசகசாலேயாகவும் ஒரே நேரத்தில் பயன்பட்டு வந்த விசாலமான வீட்டுக்குள் போனதும், ''வணக்கம்!'' என்று ஆழ்ந்த தோரணேயில் கூறிஞன்.

நூல் நிலேயத்தில் நாஸ்தியா மட்டும் இருந்தாள். வாசகசாலே மேசை அருகே ஓர் இளேஞன் உட்கார்ந்து அகனியோக் சஞ்சிகையைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

நாஸ்தியா பாஷ்காவுக்கு முகமன் கூறி, ஏற்கெனவே தெரிந்தவன் என்பதஞல் புன்னகை செய்தாள்.

பாஷ்கா அவளுடைய மேசையை அணுகி, அவளை ஏறெடுத்தும் பார்க்காமல் புத்தகங்களை நிதானமாகப் பார்வையிடலானன். சஞ்சிகை பார்த்துக் கொண்டிருந்தவன்தான் நாஸ்தியாவின் மணமகனை பொறியாளன் என்று அவன் புரிந்து கொண்டான்.

பாஷ்கா தன்னை அடையாளம் கண்டு கொள்ளாததால் சிறிது வியப்பு அடைந்த நாஸ்தியா, ''படிப்பதற்கு ஏதேனும் வேண்டுமா?'' என்று கேட்டாள்.

''வேண்டும், வந்து...''

''என்ன வேண்டும் உங்களுக்கு?'' நாஸ்தியா தன்னை அறியாமலே ''உங்களுக்கு'' என்று மரியாதை கொடுத்துப் பேசினாள்.

''கார்ல் மார்க்சின் **மூலதனம்**. அதில் ஓர் அத்தியாயம் நான் முழுவதும் படிக்கவில்லை.''

இளைஞன் சஞ்சிகையை ஒரு புறம் வைத்து விட்டுப் பாஷ்காவை ஏறிட்டுப் பார்த்தான்.

நாஸ்தியாவுக்குச் சிரிப்பு வந்தது, ஆனால் பாஷ்காவின் கண்டிப்பான விழிகளைக் கண்டதும் சிரிப்பை அடக்கிக் கொண்டாள்.

''உங்கள் குலப் பெயர் என்ன?''

''ஹல்மான்ஸ்கி பாவெல் யெகோரிச். பிறந்த ஆண்டு ஆயிரத்துத் தொள்ளாயிரத்து முப்பத்தைந்து. இரண்டாம் வகுப்புக் காரோட்டி-பொறி வினைஞன்.''

நாஸ்தியா இந்த விவரங்கள் எல்லாவற்றையும் குறித்துக் கொண்ட போது பாஷ்கா அவளுக்குத் தெரியாமல் ஓரக் கண்ணால் அவளைப் பார்வையிட்டான். பின்பு திரும்பிப் பார்த்தான். பொறியாளன் அவனைக் கவனித்துக் கொண்டிருந்தான். அவர்களுடைய பார்வைகள் சந்தித்தன. பாஷ்கா குழப்பம் அடைந்து... அவனுக்குக் கண் சாடை காட்டினான்.

''குறுக்கெழுத்துப் புதிர்களை விடுவிக்கிறீர்களோ?''

என்ன பதில் சொல்வது என்று பொறியாளனுக்குச் சட்டெனப் புரியவில்லை.

''ஆமாம்... நீங்கள் நிரம்ப ஆழ்ந்த விஷயங்களில் ஈடுபடுவதைப் பார்க்கிறேன்.''

''ஒன்று தெரியுமா கேனு, இவரும் மாஸ்கோக்காரர் தாம்'' என்றாள் நாஸ்தியா.

''அப்படியா?!''—கேனு மெய்யாகவே மகிழ்ச்சி அடைந்

தான். ''நீங்கள் அங்கிருந்து வந்து வெகு காலம் ஆயிற்ளுே? அங்கே புதினம் என்ன என்ருவது சொல்லுங்கள்.''

பாஷ்கா நூலகச் சீட்டில் கையெழுத்திடுவதில் தேவைக்கு மேல் அதிக நேரம் கடத்திஞன். பேசாதிருந்தான்.

''நன்றி'' என்று நாஸ்தியாவிடம் சொல்லி விட்டு மேசை அருகே போய், பருத்த நூலே அதன் மேல் எறிந்து விட்டு கேஞவின் பக்கம் கையை நீட்டி, ''என் பெயர் பாவெல் யெகோரிச்'' என்ருன்.

''என் பெயர் கேஞ. உங்களேச் சந்தித்ததில் நிரம்ப மகிழ்ச்சி!''

பாஷ்கா சில சஞ்சிகைகளேத் தன் பக்கம் நகர்த்திக் கொண்டு, ''மாஸ்கோவைப் பற்றிக் கேட்டீர்களா?'' என்று எதிர்க் கேள்வி போட்டான். ''மாஸ்கோ ஆரவாரிக்கிறது, இரைகிறது...'' என்று சொன்னவன், பொறியாளனுக்கு நிதானிக்க இடம் தராமல் சளசளத்துக் கொண்டு போஞன்: ''வேடிக்கைச் சஞ்சிகைகளே எனக்குப் பிடிக்கும்! அதிலும் குடிகாரர்களேப் பற்றி ரொம்ப ரொம்ப வேடிக்கையான படங்கள் அவற்றில் வருகின்றன...''

''ஆமாம், வேடிக்கையாய் இருப்பது உண்டு. நீங்கள் மாஸ்கோவிலிருந்து வந்து வெகு காலம் ஆகி விட்டதோ?''

''மாஸ்கோவிலிருந்தா?''—பாஷ்கா சஞ்சிகையின் பக்கங்களேப் புரட்டிஞன். ''நான் அங்கே போனதே கிடையாதே. இந்தப் பெண் என்னே வேறு யாரோ என்று நினேக்கிருள்.''

''பொழுதுபோக்குக் கழகத்தில் நேற்று நீங்கள் தாமே என்னிடம் சொன்னீர்கள்!'' என்று திகைப்புடன் கூறிஞள் நாஸ்தியா.

பாஷ்கா அவளேப் பார்த்தான்.

''எனக்கு என்னவோ நினேவு இல்லே.''

நாஸ்தியா கேஞவை நோக்கிஞள், கேஞ பாஷ்காவை நோட்டமிட்டான்.

பாஷ்கா படங்களே ஒவ்வொன்ருகப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''விந்தைதான். அப்படியாஞல் நான் கனவு கண்டேன் போலிருக்கிறது'' என்ருள் நாஸ்தியா.

''நடக்கக் கூடியதுதான்'' என்று இசைந்த பாஷ்கா சஞ்சிகைகளேத் தொடர்ந்து பார்த்துக் கொண்டு போஞன். பின்பு

ஒரு சஞ்சிகையை கேஞவிடம் கொடுத்து, ''இதோ பாருங்கள், மோசடிக்காரனே, பயங்கரம்!'' என்றுன்.

கேஞ புன்னகை செய்தான்.

''நீங்கள் விதைப்பு வேலைக்கு இங்கே வந்திருக்கிறீர்களா?''

''ஆமாம்.'' பாஷ்கா நாஸ்தியாவைத் திரும்பிப் பார்த்தான். அவள் அவனை ஆர்வத்துடன் உற்று நோக்கிஞள். பாஷ்கா இதைக் கவனித்தான். ''டிராப்ட்ஸ் விளையாடுவோமா?'' என்று பொறியாளனிடம் கேட்டான்.

''டிராப்ட்ஸா?'' என்று வியந்தான் பொறியாளன். ''சதுரங்கம் விளையாடுவோமே?''

''சதுரங்கம் சலிப்பு தட்டும்'' என்று சொன்ஞன் பாஷ்கா (அவனுக்குச் சதுரங்கம் ஆடத் தெரியாது). ''சிந்திக்க வேண்டும். டிராப்ட்ஸில் என்றுல் டக் டக்கென்று காய்களை நகர்த்தலாம்.''

''டிராப்ட்ஸும் விளையாடலாந்தான்'' என்று இசைந்து நாஸ்தியாவைப் பார்த்தான் கேஞ.

நாஸ்தியா தடுப்புப் பிரிவின் பின்னிருந்து வெளிவந்து அவர்கள் பக்கத்தில் உட்கார்ந்தாள்.

''வெட்டுப் பறி உண்டா?'' என்று கேட்டான் பாஷ்கா.

''அப்படி என்றுல்?''

''ஒருவன் வெட்ட வேண்டிய காயை வெட்டாமல் இருந்துவிட்டால் எதிராளி அந்தக் காயைப் பறித்துக் கொள்வான்'' என்று விளக்கிஞள் நாஸ்தியா.

''அப்படியா... பறித்துக் கொள்ளலாம். பறித்துக் கொள்வோம்.''

பாஷ்கா பலகையில் காய்களை மளமளவென்று பரப்பிஞன். இரண்டு காய்களை எடுத்து முதுகுக்குப் பின் மறைத்துக் கொண்டான்.

''எந்தக் கையில்?''

''இடது கையில்.''

''உங்களுக்கு ஆட்டம் இல்லை.'' பாஷ்கா முதலில் காயை நகர்த்திஞன். நாற்காலியில் இன்னும் சௌகரியமாக உட்கார்ந்து கொண்டு, ''இப்படிச் செய்வோம்'' என்று ஆரம்பித்தான். அவனுடைய முகம் மனநிறைவையும் தந்திரத்தையும் காட்டியது. ''இங்கே புகை பிடிப்பது கூடாது, அல்லவா?'' என்று நாஸ்தியாவிடம் கேட்டான்.

''அறவே கூடாது.''

''புரிந்தது!''—பாஷ்கா இரண்டாவது காயை நகர்த்தினன். ''பிரெஞ்சுக்காரர்கள் சொல்வது போல, கொஞ்சம் பிரமிதோன் செய்வோம்.''

பொறியாளனுக்கு ஆட்டத்தில் தேர்ச்சி பற்றுது என்பது உடனே தெரிந்தது. நாஸ்தியா அவனுக்குச் சொல்லிக் கொடுக்கத் தலைப்பட்டாள். அவன் இதை எதிர்த்தான்.

''பொறு! இப்படிச் செய்யக் கூடாது. கேள்... அட சொல்லிக் கொடுப்பது எதற்கு?''

''நீ தப்பாக ஆடுகிருயே!''

''அதனுல் என்ன! ஆடுபவன் நான்தானே.''

''கற்றுக் கொள்ள வேண்டும்.''

பாஷ்கா புன்னகைத்தான். தன்னம்பிக்கை ததும்ப விரைவாகக் காயை நகர்த்திஞன்.

''அதோ அதை நகர்த்து, கேனு, கோடியில் இருக்கிறதே, அந்தக் காயை'' என்று அடக்க மாட்டாமல் மறுபடி சொல்லிக் கொடுத்தாள் நாஸ்தியா.

''மாட்டேன். என்றால் இப்படி விளையாட முடியாது'' என்று எரிச்சலோடு சொன்ஞன் கேனு. ''நானே அதை நகர்த்துவதாக இருந்தேன், இப்போது வேண்டுமென்றே அதை நகர்த்த மாட்டேன்.''

''எதற்குப் பதற்றப்படுகிருயாம்? வேடிக்கையான பேர்வழி!''

''நான் எப்படிப் பதற்றப்படாமல் இருப்பது?''

''பதற்றப்படுவது கெடுதல்'' என்று சொல்லி நாஸ்தியாவைப் பார்த்து மறைவாகக் கண் சிமிட்டிஞன் பாஷ்கா.

நாஸ்தியா முகம் சிவந்தாள்.

''அப்படியாஞல் இதோ தோற்று விடுவாய்! வேண்டுமென்றே.''

''மாட்டார். எதற்காக?.. என்னைப் படம் பிடிக்க இன்னும் எத்தனையோ சந்தர்ப்பங்கள் வாய்க்கும்'' என்று பரிவுடன் சொன்ஞன் பாஷ்கா. ''ஆனுல் ஒன்று. என் ஒரு காய் ராணி ஆகி விட்டது. நீங்கள் ஆடுங்கள்.''

''இனி தோற்று விடுவான்'' என்று சள்ளையோடு சொன்ஞள் நாஸ்தியா.

''உன் வேலையைப் பார்! இப்படிக் குறுக்கிடக் கூடாது, மெய்யாகவே. போ அப்பாலே!''

''இந்த அழகில் பொறியாளனும்.'' நாஸ்தியா எழுந்து தன் இடத்துக்குப் போனாள்.

''இது... புத்தி கெட்ட பேச்சு. பொறியாளனுக்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?''

''அவனுக்குப் பிடித்திருக்க அஞ்சுகிறேன்'' என்று ஒரு பாட்டின் வரியைப் பாடியவாறு நூலகத்தின் உள்ளே போய் விட்டாள் நாஸ்தியா.

''பெண்பாலார்'' என்று எதற்காகவோ சொன்னான் பாஷ்கா.

பொறியாளன் பலகையில் இருந்த காய்களைக் கலைத் தான்.

''நான் தோற்று விட்டேன்'' என்று ஓரளவு கரகரத்த குரலில் கூறினான்.

''வெளியே போய்ப் புகை பிடிப்போமா? என்றான் பாஷ்கா.

''போவோம்.''

வெளி நடையில் புகை பிடித்தவாறு பொறியாளன் சொன்னான்:

''எனக்குப் புரியவில்லை. இது என்னதான் சுபாவமோ? எல்லாவற்றிலும் கட்டாயமாகக் குறுக்கிட்டாக வேண்டும்.''

''பரவாயில்லை'' என்று பட்டும் படாமலும் சொன்னான் பாஷ்கா. ''நீ இங்கே நிரம்ப காலமாக இருக்கிறாயோ?''

''என்ன?''

''இங்கே நிரம்ப காலமாக இருக்கிறாயோ என்று கேட் டேன்.''

''நானா? இது இரண்டாவது மாதம்.''

''மணக்க விருப்பமா?''

பொறியாளன் பாஷ்காவை வியப்புடன் பார்த்தான்.

''இவளையா? ஆம். ஏன்?''

''ஒன்றும் இல்லை. நல்ல பெண். அவள் உன்னைக் காதலிக் கிறாளா?''

பொறியாளன் ஒரேயடியாகக் குழப்பம் அடைந்தான்.

''காதலிக்கிறாளாவா?.. அப்படித்தான் நினைக்கிறேன்.''

சற்று நேரம் பேசாதிருந்தார்கள். பாஷ்கா புகைத்தவாறு சிகரெட்டு நுனியை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். பொறியாளன் தொண்டையைக் கனைத்து விட்டு வினவினான்:

''கார்ல் மார்க்சின் **மூலதனத்தை** நீ உண்மையாகவே படிக்கிறாயா?''

''அட இல்லை என்கிறேன்.'' பாஷ்கா சிகரெட்டை அசட்டையாக உதடுகளால் கவ்வி வாயோரத்துக்கு நகர்த்தி, கண்களைச் சுரித்து, கைகளை இடைக் கச்சில் செருகி, விரைந்த அசைவால் சட்டையைச் சரிப்படுத்திக் கொண்டான். ''சினிமாவுக்குப் போகலாமா?'' என்று கேட்டான்.

''இன்றைக்கு என்ன படம்?''

''ஏதோ வேடிக்கைப் படமாம்.''

''போகலாம்.''

''ஆனால் ஒன்று... இவளையும் கூப்பிடு...''—பாஷ்கா தலையசைப்பால் நூலகத்தின் கதவைச் சுட்டி, பரிவுடன் விழிகளைச் சுருக்கிக் கொண்டான்.

''பின்னே, அவள் இல்லாமலா!'' என்று பொறியாளனும் ஆழ்ந்த தோரணையில் சொன்னான். ''இதோ அவளிடம் போய்... பேசுகிறேன்...''

''போ, பேசு!''

பொறியாளன் உள்ளே சென்றதும் பாஷ்கா வாசலுக்குப் போய் அழிமேல் முழங்கைகளை ஊன்றிக்கொண்டு தெருவைப் பார்க்கலானான்.

...சினிமாவில் மூன்று பேரும் ஒன்றாக உட்கார்ந்தார்கள். நாஸ்தியா பொறியாளனுக்கும் பாஷ்காவுக்கும் நடுவில் அமர்ந்தாள்.

விளக்குகள் அணைந்ததும் அணையாததுமாகப் பாஷ்கா நாஸ்தியாவின் கிட்டே நகர்ந்து அவளுடைய கையைப் பிடித்துக் கொண்டான். நாஸ்தியா பேசாமல் கையை விடுவித்துக் கொண்டு அப்பால் நகர்ந்தாள். பாஷ்கா ஒன்றுமே நடவாதது போலத் திரையைப் பார்க்கத் தொடங்கினான். ஒரு பத்து நிமிடங்கள் பார்த்துக் கொண்டிருந்து விட்டு நாஸ்தியாவின் கையை மறுபடி பதபாகமாகத் தேடலானான். நாஸ்தியா சட்டென்று அவன் அருகே நகர்ந்து, அவன் காதில் அரை குறையாகப் படும் படிக் கிசுகிசுத்தாள்:

''நீ கை நீட்டினாயானால் கழகத்தார் எல்லார் முன்னிலையிலும் உன்னை அவமானப்படுத்துவேன்.''

பாஷ்கா அக்கணமே கையை எடுத்து விட்டான்.

இன்னும் ஒரு ஐந்து நிமிடங்கள் உட்கார்ந்திருந்தான். பிறகு நாஸ்தியா பக்கம் குனிந்து, தானும் காதோடு கிசுகிசுத்தான்:

''என் இதயம் சிதறு குண்டு போல வெடித்து விடும்.''

நாஸ்தியா வாய்க்குள் சிரித்துக் கொண்டாள். பாஷ்கா அவளுடைய கையை மறுபடி தேடத் தலைப்பட்டான். நாஸ் தியா கேனுவிடம் திரும்பி, ''நான் உன் இடத்தில் உட்கார் கிறேன்'' என்றாள்.

''மறைக்கிறதா? இந்தாரும்,தோழரே, தலையை அகற்றிக் கொள்ளும்!'' என்று முன் வரிசைக்காரனுக்கு உத்தர விட்டான் பாஷ்கா.

அந்த ஆள் தலையை ''அகற்றிக்'' கொண்டான்.

''இப்போது பரவாயில்லையா?''

''பரவாயில்லை'' என்றாள் நாஸ்தியா.

ஹாலில் இரைச்சலாய் இருந்தது. ஓயாமல் ஆட்கள் உரக்கச் சிரித்த வண்ணமாய் இருந்தார்கள்.

பாஷ்கா மூன்றாக உடலை மடக்கிக் கொண்டு சிக ரெட்டைப் பொருத்தி இனிய புகையை அவசர அவசரமாக விழுங்கத் தொடங்கினான். நீலப் புகைப் படலங்கள் ஒளிக் கதிர்களில் துலக்கமாகச் சுருண்டு கிளம்பின. நாஸ்தியா அவனுடைய விலாவில் இடித்தாள்:

''நீ என்ன?''

பாஷ்கா சிகரெட்டை அணைத்தான்... நாஸ்தியாவின் கையைக் கண்டுபிடித்து அதை வலிவாக அழுத்தி விட்டு, குனிந்து வாயிலை நோக்கிச் சென்றான்.

''இந்த வேடிக்கைப் படம் புலிகளுக்குத்தான் ஏற்றது'' என்று போகிற போக்கில் கேனுவிடம் கூறினான்.

வெளியே வந்ததும் பாஷ்கா சட்டைப் பொத்தான்களைச் சழற்றி விட்டு, சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு மெது நடையாக வீட்டுக்குப் போனான்.

வீட்டில் உடை மாற்றிக் கொள்ளாமல் கட்டிலில் படுத் தான்.

''ஏன் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டிருக் கிறாய்?'' என்று விசாரித்தார் புரோகரவ்.

''அட சும்மாதான்...'' என்ற பாஷ்கா சில நிமிடங்கள் படுத்திருந்து விட்டு, ''பெண்களைத் திருடும் வழக்கம் இப் போது உண்டா என்று தெரிந்தால் நல்லது'' என்றான்.

புரோகரவுக்கு விளங்கவில்லை. ''அது என்ன வழக்கம்?'' என்று கேட்டார்.

''முன்பு இருந்தது போன்ற வழக்கம்... முன்னால் எல்லாம் ஆட்கள் பெண்களைத் திருடுவது உண்டே?''

''அதுவா! சைத்தானுக்கே வெளிச்சம்! அவர்களைத் திருடுவது எதற்காக? திருட்டு இல்லாமலே அவர்கள் சந்தோஷமாய் இருக்கிறார்கள் என்று நினைக்கிறேன்.''

''உண்மைதான். நான் வெறுமே ஒரு பேச்சுக்குச் சொன்னேன்'' என்று சொல்லிச் சற்று நேரம் பேசாதிருந்தான் பாஷ்கா. ''குற்றச் சட்டத் தொகுப்பில் இந்தத் திருட்டுக்குத் தண்டனை விதிக்கப்படவில்லையோ?'' என்று அப்புறம் கேட்டான்.

''இல்லையோ என்னவோ. எனக்குத் தெரியாது, பாஷ்கா.''

பாஷ்கா கட்டிலிலிருந்து எழுந்து அறையில் நடந்தான். ஒரே முனைப்புடன் எதையோ பற்றிச் சிந்தித்தான்.

''வாழ்க்கையில் பதினெட்டு வயது வருவது ஒரு தரமே'' என்று திடீரென்று பாடினான். ''யெகோரிச், இந்தாரும் சட்டை. தாங்க்-யூ!''

''எதற்காக இருந்தாற் போலிருந்து?

''சும்மாதான்.''

புரோகரவின் பூத்தையல் சட்டையைக் கழற்றி விட்டுத் தன்னுடையதைப் போட்டுக் கொண்டான் பாஷ்கா. அறையின் நடுவில் சற்று நின்று இன்னும் சிறிது நேரம் சிந்தனை செய்தான். ''படம் பிடித்தாயிற்று, யெகோரிச்!'' என்றான்.

''நீ என்ன, எவளேனும் பெண்ணைத் திருடத் திட்டம் இட்டிருக்கிறாயா?'' என்று கேட்டார் புரோகரவ்.

பாஷ்கா வாய் விட்டுச் சிரித்தான், ஆனால் ஒன்றும் பேசாமல் வெளியே போய்விட்டான்.

ஈரமும் இருட்டுமான இரவு. சற்று முன் நல்ல மழை பெய்திருந்தது. எங்கும் துளிகள் சொட்டிக் கொண்டிருந்தன. நாய்கள் குலைத்தன. எங்கோ மோட்டார் கடகடத்தது.

பாஷ்கா தன் லாரி நிறுத்தப்பட்டிருந்த செப்பனிடும் நிலையத்துக்குப் போனான்.

நிலையத் திடலில் ஒருவன் அவனைக் கூவி அழைத்தான்.

''நான் நம்மவன்'' என்றான் பாஷ்கா.

''நம்மவன் என்றால் யார்?''

''ஹல்மான்ஸ்கி.''

''வேலைக்காக வந்தவனா?''

''ஆமாம்.''

ஆட்டுத்தோல் கோட்டு அணிந்து, பழங்காலத் துப்பாக்கி

யும் கையுமாக ஒளி வட்டத்துக்குள் வந்தார் காவல்காரப் பாட்டா.

''வண்டியை எடுத்துப் போகவா?''

''ஆமாம்.''

''சிகரெட்டு இருக்கிறதா?''

''இருக்கிறது.''

இருவரும் சிகரெட்டுகளைப் பற்ற வைத்துக் கொண்டார்கள்.

''ஆனால் மழை இன்னும் பெய்யும்'' என்று கூறிக் கொட்டாவி விட்டார் பாட்டா. ''மழையில் தூக்கம் வருகிறது.''

''நீர் தூங்குமேன்'' என்று யோசனை சொன்னான் பாஷ்கா.

''கூடாது. கொஞ்ச நாள் முன்னாலே நான் தூங்கிப் போக இருந்தேன், அப்போது வந்து விட்டார், அதுதான் அவர்...''

பேச்சில் விருப்பமுள்ள முதியவரின் கதையைப் பாஷ்கா இடை முறித்தான்.

''நல்லது, பெரியவரே, எனக்கு அவசரம்.''

''சரி, சரி'' என்று கிழவனார் மறுபடி கொட்டாவி விட்டார்.

பாஷ்கா லாரியை முடுக்கிச் செப்பனிடும் நிலையத் திடலிலிருந்து வெளியேறினான்.

நாஸ்தியாவின் வீடு அவனுக்குத் தெரிந்திருந்தது—ஆற்றோரத்தில், செங்குத்துச் சரிவுக்கு மேலே.

பகலில் அவன் புரோகரவுடன் பேசிக் கொண்டிருந்த போது அவர் அவனுக்கு அந்த வீட்டைக் காட்டியிருந்தார். நாஸ்தியாவின் அறை சன்னல்கள் தோட்டத்துப் பக்கம் இருந்ததைப் பாஷ்கா நினைவில் பதித்துக் கொண்டான்.

அவளுடைய வீட்டில் நாய் இருக்கிறதா இல்லையா என்பதுதான் இப்போது பாஷ்காவுக்குக் கவலை அளித்த பிரச்சினை.

கிராம வீதிகளில் ஒருவரும் இல்லை. காதல் சோடிகள்கூட மறைந்து விட்டன. எங்கேனும் பள்ளத்தில் விழுந்து விடாமல் இருப்பதற்காகப் பாஷ்கா லாரியை மெதுவாக ஓட்டிச் சென்றான்.

நாஸ்தியாவின் வீட்டின் பக்கத்தில் போனதும் அவன் லாரியை நிறுத்தி இறங்கினான், ஆனால் எஞ்சினை அணைக்கவில்லை.

''நல்லது'' என்று வாய்க்குள் சொல்லி, மார்பை உள்ளங்

கையால் தேய்த்துக் கொண்டான். அவன் பதற்றம் அடைந் திருந்தான்.

வீட்டில் வெளிச்சம் இல்லை. இருட்டில் பார்வை செலுத் திய பாஷ்கா இலையுதிர்ந்த மொட்டை மரங்களின் ஊடாக மங்கலாக மினுமினுத்த இருண்ட அறை சன்னல்களைக் கண் டான். அவனுடைய நெஞ்சு உரக்கப் படபடத்தது.

''நாய் மட்டும் இல்லாதிருந்தால் நல்லது.''

அவன் இருமி, வேலியை எச்சரிக்கையுடன் அசைத்தான். முகப்பு வெளியில் மௌனம் நிலவியது. நிசப்தம். கூரை யிலிருந்து நீர் சொட்டிக் கொண்டிருந்தது.

''இந்தா பாஷ்கா... இதோ மண்டையில் அடி வாங்கு வாய், இல்லாவிட்டால்...''

தாழ்ந்த வேலியை ஓசையின்றித் தாண்டி, சன்னல்களின் பக்கம் சென்றான். தன் நம்பகமான லாரியின் மந்தமான முணு முணுப்பு பின்புறமிருந்து வந்ததைக் கேட்டான். தன் காலடி களையும் உரத்த சொட்டுக்களையும் செவி மடுத்தான். வசந்தம் சாறுடன் தொடங்கி இருந்தது. நிலவறை மணம் வீசியது.

தோட்டத்தில் நடக்கையில் பாஷ்கா பதினெட்டு வயது பற்றிய பாட்டின் ஒரே அடியைத் திரும்பத் திரும்ப மனதுக் குள் பாடிக் கொண்டிருந்தான்: ''வாழ்க்கையில் பதினெட்டு வயது வருவது ஒரு தரமே''. அன்று நாள் முழுதும் அவன் இந்தப் பாட்டைப் பாடிய வண்ணமாய் இருந்தான்.

சன்னல்களை அவன் நெருங்கியதும் அவன் காலடியில் சடக்கென முறிந்தது ஒரு சுள்ளி. பாஷ்கா அசையாமல் நின்று விட்டான். நிசப்தம். தண்ணீர் சொட்டிக் கொண் டிருந்தது.பாஷ்கா கடைசி இரண்டு அடிகள் எடுத்து வைத்து, இடைச் சுவர் ஓரமாக நின்றான். மூச்சை ஆழ்ந்து இழுத்து விட்டான்.

''அவள் இங்கே தனியாய்ப் படுத்திருக்கிறாளா இல்லையா?'' என்ற கேள்வி புதிதாக முளைத்தது.

டார்ச் விளக்கை எடுத்துப் பொருத்தி சன்னல் பக்கம் திருப்பினான். மஞ்சள் ஒளிப் புள்ளி சுவர்கள் மீது ஊர்ந்து, கணப்பு, கதவு, கட்டில்... என்று தனித் தனியே பொருள் களை இருட்டிலிருந்து வெளியே கொணர்ந்தது. புள்ளி திடுக் கிட்டு நின்று விட்டது. கட்டிலில் யாரோ அசைந்து தலையை நிமிர்த்தினார்கள். நாஸ்தியா. அவள் கலவரப்படவில்லை. அனு

யாசமாகத் துள்ளி எழுந்து, இரவுச் சட்டை மட்டும் அணிந்த நிலையில் சன்னல் பக்கம் வந்தாள். பாஷ்கா டார்ச்சை அணைத்து விட்டான்.

நாஸ்தியா கொக்கியைக் கழற்றி சன்னலைத் திறந்தாள்.

ஆள் உறங்கியதால் தேங்கியிருந்த வெப்ப மணம் அறையிலிருந்து வந்தது.

''நீ என்ன?'' என்று தணிந்த குரலில் கேட்டாள். தொலைவில் விலகியது போன்ற அவளுடைய குரல் பாஷ்காவை எச்சரிக்கை கொள்ளச் செய்தது.

''அடையாளம் கண்டு கொண்டாளோ?'' அவன் பயந்து போனான். தற்போதைக்குத் தன்னை வேற்றாளாக அவள் நினைக்க வேண்டும் என்று அவன் விரும்பினான். எனவே பேசாதிருந்தான்.

நாஸ்தியா சன்னலிலிருந்து விலகிப் போய் விட்டாள். பாஷ்கா டார்ச்சைப் போட்டான். நாஸ்தியா கதவருகே போய் அதை இறுகச் சாத்திவிட்டு சன்னலுக்குத் திரும்பினாள். பாஷ்கா டார்ச்சை அணைத்து விட்டான்.

''அவள் அடையாளம் தெரிந்து கொள்ளவில்லை. இல்லாவிட்டால் ஒரு சட்டை மட்டும் போட்டுக் கொண்டு நடமாட மாட்டாள்.''

அவளுடைய கூந்தலின் மணத்தைப் பாஷ்கா முகர்ந்தான். அவன் தலை கிறுகிறுத்தது. அவளை ஒரு பக்கம் விலக்கி விட்டு சன்னலில் ஏறி அறைக்குள் புகுந்தான்.

''தீர யோசித்து விட்டாயா?'' என்று கேட்டாள் நாஸ்தியா. அவளுடைய குரலில் பரிவு தொனித்தது.

''யோசித்து விட்டேன், யோசித்து விட்டேன். இப்போது தொடங்கும் ஆட்டம்'' என்று எண்ணிக் கொண்டான் பாஷ்கா.

பாஷ்கா அறைக்குள் இறங்கி அவள் அருகே வந்ததும், ''கால்களைத் தேய்த்துத் துடைத்துக் கொள்ளேன்'' என்றாள் நாஸ்தியா.

பாஷ்கா அப்போதும் வாய் திறக்கவில்லை. கதகதப்பும் மென்மையுமான அவள் மேனியைக் கட்டித் தழுவினான். அவனுடைய அணைப்பின் இறுக்கத்தால் அவளுடைய சட்டையில் ஒரு நாடா அறுந்து விட்டது.

''ஓ'' என்று ஆழ்ந்து பெரு மூச்சு விட்டாள் நாஸ்தியா. 'என்ன செய்கிறாய் நீ, கிறுக்கா!..''

பாஷ்கா அவளை முத்தமிடத் தலைப்பட்டான். அக்கணமே நாஸ்தியாவுக்கு ஏதோ நேர்ந்து விட்டது. அவனுடைய அணைப்பிலிருந்து சட்டெனத் திமிறிக் கொண்டு துள்ளி விலகி, விளக்குப் போடும் விசையைச் சுவற்றில் பரபரப்புடன் தடவித் தேடினாள்.

''அவ்வளவுதான். முடிவு வந்து விட்டது'' என்று எண்ணிய பாஷ்கா மோசத்திலும் மோசமானதற்குத் தன்னைத் தயார்படுத்திக் கொண்டான். இதோ அவள் கூச்சலிடுவாள், அவளுடைய தகப்பனார் ஓடி வருவார், அவனைப் படம் பிடிப்பார். எதற்கும் வாய்ப்பாக அவன் சன்னல் ஓரத்துக்கு நகர்ந்தான்.

பளிச்சென்று விளக்கு எரிந்தது. நாஸ்தியா ஒரேயடியாகத் திகைத்துப் போனதால் வேற்றான் முன்னே அனேகமாக ஆடையின்றி இருப்பதை முதலில் புரிந்து கொள்ளவில்லை.

பாஷ்கா அவளை நோக்கிக் கனிவாக முறுவலித்தான்.

''பயந்து போனாயோ?''

நாஸ்தியா நாற்காலி மேலிருந்து ஸ்கர்ட்டை எடுத்து அணிந்து கொண்டாள். பின்பு பாஷ்காவை நெருங்கினாள். அவன் நிதானிப்பதற்குள் இடது கன்னத்தில் பளாரென்று விழுந்தது அறை. மறு கணமே வலது கன்னத்திலும் அதே போன்ற அறை விழுந்தது.

பிறகு சற்று நேரம் இருவரும் எதிரெதிரே நின்று ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டிருந்தார்கள்... கோபமிகுதியால் நாஸ்தியாவின் கன்னங்கள் குப்பென்று சிவந்தன. அந்தக் கணத்தில் அவள் பிரமிப்பூட்டும் அழகுடன் திகழ்ந்தாள்.

''பொறியாளன் அதிர்ஷ்டக்காரன்'' என்று தன்னை அறியாமலே எண்ணினான் பாஷ்கா.

''இப்போதே இங்கிருந்து போய்த் தொலை!'' என்று குரலை உயர்த்தாமல் கட்டளை இட்டாள் நாஸ்தியா.

அவள் கூச்சலிட மாட்டாள், அந்த வகையானவள் அல்ல என்று பாஷ்கா புரிந்து கொண்டான்.

''கொஞ்சம் பேசுவோம், கனவான்கள் மாதிரி'' என்று சிகரெட்டைப் பொருத்தியவாறு சொன்னான். ''நான் போய் விடலாம் தான். ஆனால் அது பாமரத்தனம், பக்குவம் இல்லாமை.'' நெருப்புக் குச்சியை சன்னலுக்கு வெளியே எறிந்து

விட்டு, தன் எண்ணத்தைச் சற்று அவசரமாக வெளியிட முற்பட்டான், ஏனென்ருல் நாஸ்தியா ஏதேனும் கனத்த பொருளைக் கையில் எடுத்துக் கொண்டு, வெளியேறும்படி தன்னை அதட்டுவாள் என்று பயந்தான். பதற்ற மிகுதியால் அவன் சன்னலுக்கும் மேசைக்குமாக அறையில் நடமாடத் தொடங்கினன். ''நான் காதல் கொண்டிருக்கிறேன், கேட்டாயா? இது உண்மை, விளம்பரம் அல்ல. எனக்குப் புரியாதது ஒன்று தான்: இந்தப் பொறியாளனுக்கு நான் எதில் சளைத்தவன்? தேவை ஏற்பட்டால் சோஷலிச உழைப்பு வீரன் பட்டத்தை என்னால் சுளுவாகப் பெற முடியும். நீ என்னிடம் சொல்ல வேண்டியதுதான் பாக்கி. வேறு ஒன்றும் வேண்டாம். இந்த விஷயத்தில் இவ்வளவு ஆர்ப்பாட்டம் எதற்கு? தயாராகு, என்னோடு கிளம்பு. நகரத்தில் வசிப்போம்.''பேசிக் கொண்டே வந்த பாஷ்கா நிறுத்தினன். நாஸ்தியாவைக் கண்கொட்டாமல் ஆழ்ந்து நோக்கினன். அவன் அவளைக் காதலித்தான். யாரும் வாழ்க்கையில் இதுவரை ஒருபோதும் காதலிக்காத விதத்தில் காதலித்தான்.

அவள் இதைப் புரிந்து கொண்டாள்.

''எப்பேர்ப்பட்ட அசடன் நீ'' என்று வருத்தத்துடன் எளிமையாகச் சொன்னாள். ''என்ன உளறுகிறாய் இங்கே?'' —அவள் நாற்காலியில் உட்கார்ந்தாள். ''பண்ணுகிற வம்பை எல்லாம் பண்ணி விட்டு இப்போது பிரமாதத் தத்துவம் பேசக் கிளம்பி விட்டான். காதலிக்கிறானும்!..'' நாஸ்தியா விந்தையாகக் கண்களைக் கொட்டினாள், முகத்தைத் திருப்பிக் கொண்டாள். பாஷ்கா புரிந்து கொண்டான்: அவள் அழத் தொடங்கினாள். ''நீ காதலிக்கிறாயாக்கும், நான் மட்டும் என்ன, காதலிக்கவில்லை என்று நினைக்கிறாயோ?''—நாஸ்தியா சட்டென்று அவன் பக்கம் திரும்பினாள். விழிகள் நீர் மல்கி இருந்தன.

அவள் அபூர்வ அழகியாக, பிரமிப்பூட்டும் அளவுக்கு அழகுள்ளவளாக இருந்தாள். வாழ்நாளில் ஒருபோதும் அவளைத் தனக்கு உரியவள் ஆக்கிக் கொள்ள முடியாது என்று பாஷ்கா புரிந்து கொண்டான். அவன் விஷயம் எப்போதும் இப்படித் தான்: சற்று முக்கியமானது, ஆழ்ந்தது எதுவும் அவனுக்குக் கிடைக்காது.

''எதற்காக அழுகிறாய்?''

''எதற்காக என்றால், நீங்கள் உங்களைப் பற்றி மட்டுமே

நினைக்கிறீர்களே, அதற்காக... ஆக்கங்கெட்ட தன்னலமிகளா! இவன் காதலிக்கிறானும்!''—அவள் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். ''காதலிக்கிறாய் என்றால் கொஞ்சமாவது மரியாதை காட்டு, இப்படிச் செய்யாதே...''

''அப்படி நான் என்ன செய்து விட்டேன்? சன்னல் வழியாக உள்ளே வந்தேனுக்கும், பிரமாதம்! எல்லார் சன்னல்கள் வழியாகவும்தான் ஆட்கள் உள்ளே வருகிறார்கள்...''

''சன்னல் பெரிய காரியம் அல்ல. நீங்கள் எல்லோரும் அசடுகள் என்பதுதான் முக்கியம். அந்த மனிதனுந்தான் அசடு... பொறாமையால் சாம்பிக் கருகி விட்டான். உன்னிடம் அவனுக்குப் பொறாமை. இங்கிருந்து போய்விடக் கிளம்பினான்.''

''போய் விடவா? எங்கே?''—அந்த அசடன் யார் என்பது பாஷ்காவுக்குப் புரிந்து விட்டது.

''எங்கே... அவனையே கேளு!''

பாஷ்கா முகம் சுளித்தான்.

''மெய்யாகவா?''

நாஸ்தியா மறுபடி உள்ளங்கையால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். ஒன்றும் பேசவில்லை.

அவள் மேல் உண்டான இரக்கத்தால் பாஷ்காவின் நெஞ்சு வலித்தது.

''கிளம்பு!'' என்று உத்தரவிட்டான்.

நாஸ்தியா வியப்பால் விரிந்த விழிகளால் அவனை நோக்கினாள்.

''அவனிடம் போவோம். வீண் பேச்சுப் பேசும் இந்த மாஸ்கோக்காரனுக்குக் காதல் எப்பேர்ப்பட்டது என்று விளக்குகிறேன்.''

''அட உட்கார்... உளறாதே!''

பாஷ்கா பெரிய மனிதத் தோரணையை மேற்கொண்டான். ''கேளுங்கள், மங்கையாரே, அழகியாரே... என் முகத்தில் நீங்கள் அறையலாம், பட்டுக் கொள்வேன். ஆனால் மட்டித்தனமான இந்தச் சொற்களை என்னால் செரித்துக் கொள்ள முடியாது. உளறாதே என்றால் என்ன அர்த்தம்?''

''இப்போது நீ எங்கே போவாய்? நடு நிசிக்கு மேல் ஆகி விட்டது...''

''பரவாயில்லை. உடை மாட்டிக் கொள். இந்தா, சட்டை.''

நாற்காலி முதுகில் தொங்கிய சட்டையை எடுத்து நாஸ்தியாவிடம் வீசினன் பாஷ்கா. நாஸ்தியா அதைப் பிடித்துக் கொண்டு தயக்கத்தோடு எழுந்தாள். பாஷ்கா மறுபடி அறையில் குறுக்கும் நெடுக்கும் நடந்தான்.

''எதைக் கண்டு பொருமைப்பட்டான் அவன்?'' என்று ஓரளவு சுயதிருப்தியுடன் வினவினன்.

''நாம் நடனம் ஆடினேமே... அதை எவனே அவனிடம் சொல்லி விட்டான். பிறகு சினிமாவில் இரகசியம் பேசினேம். அவன்தான் வடிகட்டின அசடு ஆயிற்றே.''

''உன்னல் அவனுக்கு விளக்க முடியவில்லையோ?''

''ரொம்பத்தான் வேண்டும் எனக்கு விளக்குவது! நான் எங்கும் வர மாட்டேன்.''

பாஷ்கா நின்று விட்டான்.

''மூன்று வரையில் எண்ணுவேன்: ஒன்று, இரண்டு... நீ வராவிட்டால் முத்தமிடத் தொடங்குவேன்!''

''விடுவேனே உன்னைத் தொடங்க! நீ அவனிடம் என்ன சொல்வாய்?''

''எனக்குத் தெரியும் என்ன சொல்வது என்று!''

''நான் எதற்காக வர வேண்டும்?''

''வேண்டும்.''

''எதற்காக என்கிறேன்.''

''அவன் வீடு எனக்குத் தெரியாது. மொத்தத்தில் நீ வர வேண்டும். அவ்வளவுதான்.''

நாஸ்தியா சட்டையையும் சோடுகளையும் போட்டுக் கொண்டாள்.

''வெளியே போ, நான் உன் பின்னே வருகிறேன். யாராவது இப்போது பார்த்தால்...''

பாஷ்கா தோட்டத்தில் இறங்கிக் கொண்டு நாஸ்தியாவுக்கு உதவினன். சாலைக்குப் போனர்கள்.

லாரி எஜமானைப் பார்த்து உறுமியது.

''உட்கார், அழுகை அழகீ!.. இரவு நேரத்தில் உங்களோடு தொல்லைப்பட வேண்டி இருக்கிறது பார்.''

எதிர்பாராத இந்தப் புதிய பாத்திரம் பாஷ்காவுக்குப் பிடித்திருந்தது.

நாஸ்தியா லாரி அறையில் ஏறி அமர்ந்தாள்.

''என்னைக் கடத்திப் போக நினைத்தாயோ? லாரியில்?''

''நமக்கு அந்தப் பாக்கியம் ஏது?.. உங்களோடு ஏதேனும்

செய்வதற்கு முன்னுலேயே களைத்துச் சோர்ந்து போக வேண்டியதுதான்...''

''என்னவெல்லாம் சொல்கிருய் நீ!..''

''என்ன?'' என்று கண்டிப்புடன் கேட்டான் பாஷ்கா.

''ஒன்றுமில்லை.''

''அப்படி வா வழிக்கு.'' பாஷ்கா முடுக்கு விசையை ஓசையுடன் மிதித்து லாரியை விரைவாகச் செலுத்தினுன்.

...பாஷ்கா பொறியாளனின் அறை சன்னலைத் தட்டிய போது அவன் இன்னும் விழித்துக் கொண்டிருந்தான்.

''யார் அது?''

''நான்.''

''நான் என்றுல்?''

''பாஷ்கா. பாவெல் யெகோரிச்.''

பொறியாளன் கதவைத் திறந்து பாஷ்காவை உள்ளே வர விட்டான். வியப்பை மறைக்காமல் அவனை உறுத்துப் பார்த்தான்.

காகிதங்கள் குவிந்து கிடந்த மேசையைத் தலையசைப் பால் சுட்டி, ''துயரக் கவிதைகள் எழுதிக் கொண்டிருக் கிருயோ?'' என்று வினவினுன் பாஷ்கா.

''எனக்குப் புரியவில்லை. கேள்...''

''புரிந்து கொள்வாய்.'' பாஷ்கா மேசை அருகே உட்கார்ந்து முழங்கையால் காகிதங்களை நகர்த்தினுன். ''நாஸ்தியாவைக் காதலிக்கிருயா?'' என்று கேட்டான்.

''கேள்!..'' பொறியாளன் முகம் சிவக்கத் தொடங்கியது.

''காதலிக்கிருய். அப்படியானுல் போய் அவளை இங்கே அழைத்து வா. அவள் லாரியில் உட்கார்ந்திருக்கிருள்.''

''எங்கே? எந்த லாரியில்?''

''வீதியில். என்மேல் நீ வீணுகப் பொருமைப்பட்டாய்: நல்ல பெண்கள் எனக்கு வாய்ப்பதில்லை.''

பொறியாளன் விரைவாக வெளியே போனுன். பாஷ்கா என்னும் பாவெல் யெகோரிச்சோ, தலையைக் கைகள் மேல் வைத்துக் கொண்டு கண்களை மூடிக் கொண்டான். திடீரென்று அவன் களைத்துப் போனுன். சந்தர்ப்பப் பொருத்தம் இல் லாமல் மறுபடி நினைவுக்கு வந்தன சலிப்பூட்டிய சொற்கள்: ''வாழ்க்கையில் பதினெட்டு வயது..'' நெஞ்சு கடுமையாக வலித்தது.

பொறியாளனும் நாஸ்தியாவும் அறைக்குள் வந்தார்கள்.

பாஷ்கா எழுந்தான். வாழ்த்துரை சொல்ல விரும்புபவன் போலச் சிறிது நேரம் அவர்களைப் பார்த்துக் கொண் டிருந்தான்.

''முடிந்ததா?'' என்று கேட்டான்.

''முடிந்தது'' என்று விடை அளித்தான் பொறியாளன்.

நாஸ்தியா புன்னகை செய்தாள்.

''அவ்வளவுதான்'' என்று கடுப்புடன் சொன்னான் பாஷ்கா. ''நலமாய் இருங்கள்.'' அவன் வாயில் பக்கம் போனான்.

''நீ எங்கே போகிறாய்? பொறு!..'' பொறியாளன் தடுத் தான்.

பாஷ்கா திரும்பிப் பார்க்காமல் வெளியே போய் விட் டான்.

பாஷ்கா அந்தக் கிராமத்தை விட்டுப் போய் விட்டான். அவன் ஸல்தோனுக்குப் போனான். ஒரு கடிதம் எழுதிப் புரோ கரவின் வீட்டுக் கதவு அடியில் நுழைத்தான். தான் விதைப் பில் மூன்று நாட்கள் நேர்மையாக வேலை செய்ததற்கான சான்றுக் கடிதம் அனுப்ப வேண்டிய லாரி நிலையத்தின் முக வரியை அதில் கொடுத்திருந்தான். தான் போவதால் புரோ கரவ் எப்படி வருத்தப்படுவார் என்பதை எண்ணிப் பார்த்து, முடிவில் இந்தச் சொற்களை எழுதியிருந்தான்: ''என்னை மன்னித்து விடும். ஆனால் நான் குற்றவாளி அல்ல.''

பாஷ்காவுக்குத் துயரம் பொங்கியது. அவன் இடை விடாமல் புகை பிடித்தான்.

சிறு தூறல் தொடங்கிற்று.

ஸல்தோனுக்கு முந்திய கடைசிக் கிராமமான இக்ரினே வோவில் எதிரே சாலையில் தென்பட்டன இரு மனித உருவங் கள். கைகளை ஆட்டின. பாஷ்கா லாரியை நிறுத்தினான்.

இளம் இராணுவ அதிகாரியும் ஒரு மங்கையும் ஓடி வந் தார்கள்.

''ஸல்தோன் வரை கொண்டு விடும். தயவு செய்து!'' என்ற இராணுவ அதிகாரி ஏதனாலோ மிக மகிழ்ச்சி கொண் டிருந்தான்.

''உட்காருங்கள்!''

மங்கை அறையில் உட்கார்ந்து இப்புறம் அப்புறம் திரும்பு வதும் உடையைத் தட்டிச் சரிப்படுத்திக் கொள்வதுமாக

இருந்தாள். லெப்டினெண்டு பின்பக்கம் துள்ளி ஏறிக் கொண்டான். இருவரும் பேசிக் கொள்ளத் தொடங்கினார்கள், கல கலவென்று சிரித்தார்கள்.

பாஷ்கா பெண்ணைச் சிறக்கணித்துப் பார்த்தான். அவள் அழகி. வெண்மையான பற்களும் பட்டு உதடுகளுமாக அழகான பொம்மை போல் இருந்தாள்! ஆனாலும் நாஸ்தியாவுக்கும் இவளுக்கும் ஏணி வைத்தால் கூட எட்டாது.

''எங்கே இப்படி, இரவு நேரத்தில்?'' என்று வினவினான் பாஷ்கா.

''விருந்துக்கு'' என்று சந்தோஷமாக விடை அளித்தாள் மங்கை. பின்பு அறையிலிருந்து தலையை நீட்டி, ''ஸாஷா, ஸாஷ்!.. அங்கே உனக்குச் சௌகரியமாய் இருக்கிறதா?'' என்று தன் நண்பனை விசாரித்தாள்.

''சொர்க்க போகம்!'' என்று லாரியின் பின் பகுதியிலிருந்து கத்தினான் லெப்டினெண்டு.

''விருந்துக்குப் பகல் வேளை போதவில்லையோ?'' என்று மறுபடி கேட்டான் பாஷ்கா.

''என்ன?'' என்று அவனை லேசாகப் பார்த்து விட்டு அவள் மீண்டும் கூவி அழைத்தாள்: ''ஸாஷா! ஸாஷ்!..''

''எல்லாரும் ஒரேயடியாகக் காதல் கொண்டு விட்டார்கள்'' என்று வாய்க்குள் முணுமுணுத்தான் பாஷ்கா. ''எல்லாருக்கும் பைத்தியம் பிடித்து விட்டது.'' அவன் மறுபடி நாஸ்தியாவை நினைத்துக் கொண்டான். சற்று நேரத்துக்கு முன் அவள் அவன் பக்கத்தில் உட்கார்ந்திருந்தாள்—வேற்றாள். இவளும் வேற்றாள்தான்.

''ஸாஷா! ஸாஷ்!..''

''ஸாஷா! ஸாஷ்!..'' என்று தனக்குள் வன்மத்துடன் நொடித்தான் பாஷ்கா. ''உன் ஸாஷாவுக்கு இப்போதே மகிழ்ச்சியில் தலைகால் தெரியவில்லை. அவன் போக்கில் விட்டால் லாரிக்கு முன்னால் ஓடுவான்.''

''அங்கே இப்போது என்ன நடக்கும் என்று எண்ணிப் பார்க்கிறேன்!'' என்று லாரியின் பின்பகுதியிலிருந்து கத்தினான் ஸாஷா.

மங்கை மேனி குலுங்கக் கெக்கலித்தாள்.

''இந்தப் பருவத்தில் மனிதர்கள் முறையான போக்கை விட்டு விசித்திரமாக நடந்து கொள்கிறார்கள்'' என்று கோபத்துடன் நினைத்தான் பாஷ்கா.

அடை மழை கொட்டத் தொடங்கிற்று.

''ஸாஷா! நீ எப்படி இருக்கிருய்?''

''ஒழுங்காக! கப்பலில் எல்லாம் ஒழுங்காய் இருக்கிறது!''

''அங்கே டயருக்கு அடியில் கித்தான் கிடக்கிறது. எடுத்துப் போர்த்துக் கொள்ளச் சொல்லு'' என்ருன் பாஷ்கா.

பெண் அறையிலிருந்து வெளியே விழாமல் மயிரிழை தப்பினுள்.

''ஸாஷா! ஸாஷ்!.. அங்கே டயருக்கு அடியில் ஏதோ கித்தான் கிடக்கிறதாம்!.. அதால் போர்த்துக் கொள்!''

''நல்லது! நன்றி!''

''நலமே இரு!'' என்று கூறிய பாஷ்கா சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு இடுங்கிய கண்களால் சாலையைப் பார்த்தவாறு சிந்தனையில் ஆழ்ந்தான்.

ஸ்தெபான் ராஸின் வேடத்தில்.

17ம் நூற்றாண்டில் நடந்த

விவசாயிப் போரின்

தலைவரான

இவரைப் பற்றி

ஷுக்ஷீன்

ஒரு நாவல் எழுதினார்.

அவருடைய பாத்திரத்தை



படைவீரன் பியோத்தர் லபாஹின்
("அவர்கள் தாய்நாட்டுக்காகப்
போரிட்டார்கள்").



"அவர்கள் தாய்நாட்டுக்காகப் போரிட்டார்கள்."
"ஏரியின் அருகே."
திரைப்படக் காட்சிகள்



வசீலி ஷுக்ஷீனும்
லீதியா ஃபெதசேயெவாவும்.
இவர் ஷுக்ஷீனுடைய
மனைவி, நண்பர்,
நடிகை.



“கலீனு கிராஸ்னயா”

படப்பிடிப்பின் போது



சொந்த ஊர் ஸ்ரோஸ்த்கியில் புல்லறுப்பின் போது மரீயா செர்கேயெவ்னு ஷுக்ஷீனு, எழுத்தாளரின் தாயார்

''என்ன சொல்கிருய், அம்மா? இளமையில் செய்வது போலச் செய், புறப்பட்டு வா. மாஸ்கோ நகரத்தைச் சுற்றிப் பார்க்கலாம், பொதுவாகவே சந்தோஷமாய் இருக்க லாம். வழிச் செலவுக்குப் பணம் அனுப்பு கிறேன். விமானத்தில் வா. அது மேல். மலிவும் கூட. உடனே தந்தி அடி, எப்போது உன்னைச் சந்திப்பது என்று எனக்குத் தெரிவதற்காக. முக்கிய மானது என்ன என்ருல், பயப்படாதே.''

மலானியா பாட்டி இதைப் படித்தாள், வறண்ட உதடு களைக் குவித்துக் கொண்டு சிந்தனையில் ஆழ்ந்தாள்.

''பாவெல் தன்னிடம் கூப்பிடுகிருன்'' என்று ஷூர்க்கா விடம் சொல்லி மூக்குக் கண்ணுடிக்கு மேலாக அவனைப் பார்த் தாள். (ஷூர்க்கா மலானியா பாட்டியின் பெண் வயிற்றுப் பேரன். பெண்ணின் மண வாழ்க்கை நன்ருக வாய்க்கவில்லை —அவள் இரண்டு மண முறிவுகளுக்குப் பின் மூன்ருவது கண வனுடன் வாழ்ந்து வந்தாள். ஷூர்க்காவைத் தற்போதைக்குத் தன்னிடம் விட்டு வைக்கும்படி மகளிடம் சொல்லி இணங்க வைத்திருந்தாள் பாட்டி. பேரன் மேல் அவள் அன்பு செலுத்தினுள், ஆனுல் அவனைக் கண்டிப்புடன் வளர்த்து வந்தாள்.)

ஷூர்க்கா மேசை அருகே உட்கார்ந்து வீட்டுப் பாடங் கள் செய்து கொண்டிருந்தான். பாட்டி சொன்னதைக் கேட்டுத் தோள்களைக் குலுக்கினுன்—கூப்பிட்டால் போயேன் என்ற பாவனையில்.

''உன் பள்ளிக்கூட விடுமுறை எப்போது?'' என்று பாட்டி கண்டிப்பாகக் கேட்டாள்.

ஷூர்க்கா காதுகளைக் கூராக்கிக் கொண்டான்.

''எந்த விடுமுறை? பனிக்கால விடுமுறையா?''

''வேறு என்ன, கோடை விடுமுறை இப்போது ஏது?''

''ஜனவரி முதல் தேதியிலிருந்து. ஏன்?''

பாட்டி மறுபடியும் உதடுகளைக் குவித்துக் கொண்டு எண்ணமிடலானுள்.

ஷூர்க்காவின் நெஞ்சு கலவரத்தாலும் மகிழ்ச்சியாலும் விம்மியது.

''ஏன்?'' என்று இன்னெரு தடவை கேட்டான்.

''ஒன்றும் இல்லை. நீ பாட்டுக்குப் பாடம் படி.'' பாட்டி முன்றானைப் பையில் கடிதத்தை வைத்துக் கொண்டு மேல் கோட்டு அணிந்து வீட்டை விட்டு வெளியே போனாள்.

அவள் எங்கே போகிறாள் என்று பார்ப்பதற்காக ஷூர்க்கா சன்னலுக்கு ஓடினான்.

வாயில் அருகே மலானியா பாட்டி அண்டை வீட்டுக் காரியைச் சந்தித்து அவளிடம் உரக்கச் சொல்லத் தொடங் கினாள்:

''பாவெல் மாஸ்கோவுக்குத் தன்னிடம் வந்து விருந்தாட அழைக்கிறான். என்ன செய்வது என்றே எனக்குத் தெரிய வில்லை. எண்ணிப் பார்க்கவே என்னால் முடியவில்லை. 'அம்மா, உனக்காக நான் ஒரேயடியாக ஏங்கிப் போனேன், வா' என் கிறான்.''

அண்டை வீட்டுக்காரி ஏதோ பதில் சொன்னாள். என்ன என்று ஷூர்க்காவின் செவிகளில் படவில்லை. ஆனால் பாட்டி அவளிடம் உரக்கக் கூறினாள்:

''அது தெரிந்ததுதானே. போகலாம்தான். பேரக் குழந் தைகளை இதுவரை பார்த்ததே இல்லை. போட்டோவில் பார்த் ததுதான். ஆனால் ரொம்பப் பயமாய் இருக்கிறது...''

அவர்கள் அருகே இன்னும் இரண்டு மாதர்கள் நின்றார் கள். பிறகு இன்னொருத்தி வந்தாள். அப்புறம் பின்னும் ஒருத்தி... விரைவில் மலானியா பாட்டியை நிறையப் பெயர் சூழ்ந்து கொண்டார்கள். அவளும் மறுபடி மறுபடி தன் கதையைச் சொல்லத் தொடங்கினாள்:

''பாவெல் மாஸ்கோவுக்கு, தன்னிடம் வரச் சொல்லிக் கூப்பிடுகிறான். என்ன செய்வது என்றே எனக்குத் தெரிய வில்லை...''

எல்லோரும் அவளுக்கு மாஸ்கோ போகும்படி யோசனை சொல்வது தெரிந்தது.

ஷூர்க்கா கைகளைப் பைகளில் நுழைத்துக் கொண்டு அறையில் நடை போடத் தொடங்கினான். அவனுடைய முகத் தோற்றம் சிந்தனையையும் கவலையையும் காட்டியது—பாட்டி யின் முகம் போலவே. மொத்தத்தில் அவன் பாட்டியை நிரம்ப ஒத்திருந்தான்—அவளுடையதே போன்ற ஒடிசலான தேகம், துருத்திய கன்ன எலும்புகள், அறிவு சுடரும் சிறு விழிகள். ஆனால் சுபாவத்தில் இருவரும் வெவ்வேறாக இருந் தார்கள். பாட்டி துடியும் விரைவும் உள்ளவள், கூப்பாடு

போடுபவள், எல்லாவற்றையும் தெரிந்து கொள்வதில் மிகுந்த ஆர்வம் உள்ளவள். ஷுரிக்காவும் விஷயங்களை அறிவதில் ஆர்வம் உள்ளவன்தான், ஆனால் அசடோ என்று எண்ணும் அளவுக்குக் கூச்சமும் அடக்கமும் உள்ளவன், முன் கோபி.

மாஸ்கோவுக்கு அனுப்ப வேண்டிய தந்தியை இருவரும் மாலையில் தயாரித்தார்கள். பாட்டி சொல்ல ஷுரிக்கா எழுதினான்.

''அன்புள்ள மகனே, பாவெல், நான் வர வேண்டும் என்று நீ ஆசைப்பட்டால் நான் வர முடியும், ஆனாலும் எனக்கு இந்த வயது காலத்தில்...''

''அழகுதான்!'' என்றான் ஷுரிக்கா. ''இப்படி யாராவது தந்தி எழுதுவார்களா?''

''பின்னே எப்படி எழுத வேண்டும் என்கிறாய்?''

''வருகிறோம். முற்றுப் புள்ளி. அல்லது, புத்தாண்டுவிழாவுக்குப் பிறகு வருகிறோம். முற்றுப் புள்ளி. கையெழுத்து: அம்மா. அவ்வளவுதான்.''

பாட்டிக்குக் கோபங்கூட வந்து விட்டது.

''ஆறாம் வகுப்பில் படிக்கிறாய், ஆனால் ஒன்றுமே புரியவில்லை உனக்கு. கொஞ்சமாவது புத்தி வர வேண்டாமோ!'' என்றாள்.

ஷுரிக்காவுக்கும் ரோசம் வந்து விட்டது.

''உன் இஷ்டம்! இந்த மாதிரி எழுதினால் நமக்குத் தந்திக் கட்டணம் என்ன ஆகும் தெரியுமா? பழைய கணக்குப்படி இருபது ரூபிள்—அதாவது, இப்போதையக் கணக்குப்படி இரண்டு ரூபிள்'' என்று கூறினான்.

பாட்டி உதடுகளைக் குவித்துக் கொண்டு யோசனை செய்தாள்:

''சரி, இப்படி எழுது: மகனே, நான் இங்கே சில பேரோடு கலந்து ஆலோசித்தேன்...''

ஷுரிக்கா பேனாவை ஒரு புறம் வைத்தான்.

''என்னால் முடியாது இது. நீ இங்கே சில பேரோடு கலந்து ஆலோசித்தாய் என்பதில் யாருக்கு அக்கறை? அஞ்சல் நிலையத்தில் நம்மைப் படு கேலி செய்வார்கள்.''

''சொல்கிறபடி எழுது!'' என்று உத்தரவிட்டாள் பாட்டி. ''மகனுக்காக இருபது ரூபிள் செலவிட நான் தயங்குவேனா என்ன?''

ஷுர்க்கா பேனவை எடுத்துக் கொண்டு, இரக்கம் காட்டும் பாங்கில் புருவங்களைச் சுருக்கியவாறு காகிதத்தின் பக்கம் குனிந்தான்.

''அன்புள்ள மகனே பாவெல். இங்கே அண்டை அயலாரோடு பேசினேன். போய் வா என்று எல்லோரும் யோசனை சொல்லுகிறார்கள். எனக்குத் தான் இந்த வயது காலத்தில் கொஞ்சம் பயமாய் இருக்கிறது...''

''அஞ்சலகத்தில் எப்படியும் மாற்றி எழுதுவார்கள்'' என்று குறுக்கிட்டான் ஷுர்க்கா.

''மாற்றி எழுதட்டும், பார்க்கிறேன்!''

''உனக்குத் தெரிந்தால்தானே.''

''மேலே எழுது: எனக்குக் கொஞ்சம் பயமாகத்தான் இருக்கிறது. ஆனாலும்... பரவாயில்லை. புத்தாண்டு விழாவுக்குப் பிறகு வருகிறோம். முற்றுப் புள்ளி. ஷுர்க்காவோடு. அவன் இப்போது பெரியவன் ஆகி விட்டான். மோசமில்லை, சொன்னதைக் கேட்கிற பிள்ளை...''

தான் பெரியவன் ஆகி விட்டான், சொன்னபடிக் கேட்கிறான் என்ற சொற்களை ஷுர்க்கா எழுதாமல் விட்டு விட்டான்.

''அவன் கூட வந்தால் எனக்கு அவ்வளவு பயமாய் இருக்காது. இப்போது விடை கொடு, மகனே. நானும் உங்களுக்காக ரொம்பத்தானே...''

ஷுர்க்கா எழுதினான் ''மிகவும் '' என்று.

''...ஏங்கிப் போனேன். உன் குழந்தைகளை ஒரு தரமாவது பார்ப்பேன். முற்றுப் புள்ளி. அம்மா.''

''கணக்குப் பார்ப்போம்'' என்று வன்மக் களிப்புடன் சொன்ன ஷுர்க்கா பேனவால் சொற்களைக் குத்தி வாய்க்குள் எண்ணத் தொடங்கினான்: ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு...''

பாட்டி அவன் முதுகுக்குப் பின்னால் நின்று எதிர்பார்த்தாள்.

''ஐம்பத்தெட்டு, ஐம்பத்தொன்பது, அறுபது! ஆயிற்றா? அறுபதை முப்பதால் பெருக்குவோம். ஆயிரத்து எண்ணூறா? சரிதானே? நூறால் வகுப்போம். பதினெட்டு ஆகிறது. இருபதே சொச்சம் ரூபிள்கள்!'' என்று வெற்றி முழக்கம் செய்தான் ஷுர்க்கா.

பாட்டி தந்தியை வாங்கிப் பையில் வைத்துக் கொண் டாள்.

''நானே அஞ்சலகத்துக்குப் போகிறேன். நீ தப்புக் கணக்கு போடுகிறாய். படித்தவனும்!''

''போயேன். அவ்வளவுதான் வரும். ஏதேனும் கொஞ்சம் கோப்பெக்குகள் கூடக் குறைய இருக்கலாம்.''

...பதினொரு மணி வாக்கில் அவர்கள் வீட்டுக்கு வந்தார் யெகோர் லிஸுனோவ். இவர் அண்டை வீட்டுக்காரர், பள்ளிக் கூட நிர்வாகி. அவர் வேலையிலிருந்து திரும்பியதும் தன் னிடம் வரச் சொல்லும்படி பாட்டி அவருடைய வீட்டாரைக் கேட்டுக் கொண்டிருந்தாள். யெகோர் நிறையப் பயணம் செய்திருந்தார், விமானத்தில் பறந்து அனுபவம் பெற்றிருந் தார்.

யெகோர் மேல் கோட்டையும் தொப்பியையும் கழற்றி விட்டு, வியர்த்த நரை முடியைக் கரடு தட்டிய கைகளால் தடவி விட்டுக் கொண்டார். பின்பு மேசை அருகே அமர்ந் தார். தீனிப் புல் மணமும் குதிரைச் சேண வாடையும் அவ ரிடமிருந்து அறையில் வீசின.

''அப்படியானால் விமானத்தில் பறக்கப் போகிறீர்களாக் கும்?''

பாட்டி நிலவறையிலிருந்து பீர் கலயத்தை எடுத்து வந் தாள்.

''ஆமாம், யெகோர். பறப்பது எப்படி என்ன என்று விவரமாகச் சொல்லு, வரிசைப் படி.''

''இதிலே சொல்ல என்ன இருக்கிறது?'' பாட்டி குவளை யில் பீர் ஊற்றியதை யெகோர் பேராசை இன்றி, ஓரளவு பெரியமனிதப்பாங்குகூடத் தோன்றும்படிப் பார்த்தார். ''நகரத்துக்கு பஸ்ஸில் போங்கள். அங்கிருந்து பிய்ஸ்க்— தோம்ஸ்க் ரயில் வண்டியில் நவஸிபீர்ஸ்க் போங்கள். விமா னங்களுக்கு டிக்கெட்டு கொடுக்கும் இடம் எங்கே இருக்கிறது என்று அங்கே விசாரியுங்கள். இல்லாவிட்டால் விமான நிலை யத்துக்கே நேராகப் போகலாம்...''

''பொறு! போகலாம், போகலாம் என்று பல்லவி பாடு கிறாயே! எப்படிச் செய்யலாம் என்று சொல்லாதே, எப்படிச் செய்ய வேண்டும் என்று சொல்லு. தவிர, கொஞ்சம் மெதுவாகப் பேசு. எல்லாவற்றையும் ஒரேயடியாகக் கொட்டி

அளந்து விட்டாயே.'' பாட்டி யெகோரின் முன் பீர்க் குவளையை வைத்து விட்டு அவரைக் கண்டிப்புடன் நோக்கிஞள்.

யெகோர் குவளையை விரல்களால் தொட்டுத் தடவிஞர்.

''அதாவது, நவஸிபீர்ஸ்க் போங்கள். விமான நிலேயத்துக்கு எப்படிப் போவது என்று உடனே விசாரியுங்கள். நினைவு வைத்துக் கொள், ஷூர்க்கா.''

''குறித்துக் கொள், ஷூர்க்கா'' என்று கட்டளையிட்டாள் பாட்டி.

ஷூர்க்கா நோட்டுப் புத்தகத்திலிருந்து வெற்றுத் தாளைக் கிழித்து, குறிப்பு எழுதிக் கொள்ளத் தொடங்கிஞன்.

''தல்மச்சோவோ போங்கள். மாஸ்கோவுக்கு விமான டிக்கெட்டுகள் எங்கே கொடுக்கிருர்கள் என்று அங்கே மறுபடி விசாரியுங்கள். டிக்கெட்டுகளை வாங்கிக் கொண்டு தூ-104 விமானத்தில் ஏறி உட்காருங்கள். ஐந்து மணி நேரம் சென்றதும் மாஸ்கோவில், நம் தாய் நாட்டின் தலைநகரில், இருப்பீர்கள்.''

வறண்ட சிறு முட்டியால் தலையை முட்டுக் கொடுத்துத் தாங்கியவாறு யெகோரின் பேச்சை வருத்தம் ததும்பக் கேட்டுக் கொண்டிருந்தாள் பாட்டி. அவர் எவ்வளவு அதிகம் பேசிஞரோ, இந்தப் பயணம் அவருக்கு எவ்வளவு எளியதாகத் தோன்றியதோ, அவ்வளவு அதிகக் கவலையைத் தோற்றுவித்தது பாட்டியின் முகம்.

''ஸ்வெர்திலோவ்ஸ்கில் நீங்கள் இறங்க வேண்டி வரும்...''

''எதற்காக?''

''வேண்டும். அங்கே நம்மைக் கேட்க மாட்டார்கள். இறங்கச் சொல்வார்கள், அவ்வளவுதான்.'' இனி பீர் குடிக்கலாம் என்று யெகோர் முடிவு செய்தார். ''ஊம்?.. உங்கள் சுகமான பயணத்துக்காக!''

''பொறு. ஸ்வெர்திலோவ்ஸ்கில் இறக்கி விடும்படி நாங்களே கேட்க வேண்டுமா, அல்லது அங்கே எல்லோரையும் இறக்கி விடுவார்களா?''

யெகோர் பீர் குடித்துத் திருப்தியுடன் தொண்டையைக் கனைத்து மீசையைத் தடவிக் கொண்டார்.

''எல்லோரையும். உன் வீட்டில் பீர் அருமை, மலானியா வசீலியெவ்ஞ. நீ எப்படித் தயாரிக்கிருய்? என் வீட்டுக்காரிக்குக் கற்றுக் கொடேன்...''

பாட்டி அவருக்கு இன்னொரு குவளை பீர் ஊற்றினாள்.

''கருமித்தனத்தை விட்டீர்களானால் பீரும் நன்றாய் இருக்கும்.''

''எப்படி?'' என்று விளங்காமல் கேட்டார் யெகோர்.

''இனிப்பு நிறையப் போடுங்கள். நீங்களோ எல்லாவற்றையும் மலிவாக, காட்டமாகச் செய்யப் பார்க்கிறீர்கள். வெறியச் சாற்றில் சர்க்கரையை நிறையப் போடுங்கள், அருமையான பீர் கிடைக்கும். புகையிலைச் சாற்றில் அதைக் கலப்பது வெட்கக் கேடு.''

''ஆமாம்'' என்று சிந்தனையுடன் சொன்னார் யெகோர். குவளையை உயர்த்தி, பாட்டியையும் ஷூர்க்காவையும் பார்த்து விட்டு பீரைப் பருகினார். ''ம்-ஆமாம்'' என்று மறுமுறை சொன்னார். ''நீங்கள் சொல்வது சரிதான், சந்தேகம் இல்லாமல். ஆனால் நவஸிபீர்ஸ்க் போனதும் கவனமாய் இருங்கள், அசாக்கிரதையாய் இராதீர்கள்.''

''என்ன அப்படி?''

''அட சும்மாதான்... எல்லாம் நடக்கக் கூடுமே.'' யெகோர் புகையிலைப் பையை எடுத்து, சிகரெட்டு சுருட்டிப் புகை இழுத்து மீசையின் அடி வழியே பெரிய புகைப் படலத்தை விட்டார். ''முக்கியமானது என்ன என்றால் தல்மச்சோவோ சேர்ந்ததும் மாஸ்கோவுக்கு டிக்கெட்டு கொடுக்கும் இடம் எது என்று திட்டமாகத் தெரிந்து கொண்டு டிக்கெட்டு வாங்குங்கள். இல்லாவிட்டால் விளாதிவஸ்தோக்குக்கும் விமானத்தில் போகலாம்.''

பாட்டி கலவரம் அடைந்து யெகோருக்கு மூன்றாவது குவளை பீர் ஊற்றினாள்.

யெகோர் அதை ஒரே மடக்கில் குடித்து விட்டுத் தொண்டையைக் கனைத்துக் கொண்டு தம் கருத்தை விளக்கலானார்:

''சில வேளைகளில் இப்படி நடப்பதுண்டு: ஒருவன் கிழக்கு டிக்கெட்டு மனைக்கு வந்து 'எனக்கு டிக்கெட்டு வேண்டும்' என்பான். எங்கே போவதற்கு என்று சொல்ல மாட்டான். அதனால் அவன் போக வேண்டியதற்கு நேர் எதிர்த் திசையில் பறப்பான். ஆகையால் எச்சரிக்கையாய் இருங்கள்.''

பாட்டி யெகோருக்கு நான்காவது குவளை பீர் ஊற்றினாள். அவர் ஒரேயடியாக இளகி விட்டார். மகிழ்ச்சி பொங்கப் பேசினார்:

''விமானத்தில் பறப்பது என்றால் சரியான நெஞ்சு உரம்

வேண்டும்! விமானம் கிளம்பும் போது நமக்கு மிட்டாய் தரு வார்கள்...''

''மிட்டாயா?''

''பின்னே இல்லாமல்? மறந்து போங்கள், கவனிக்கா தேயுங்கள் என்று சொல்வது போல... மெய்யாகவோ, இது எல்லாவற்றிலும் ஆபத்தான நேரம். அல்லது நம்மிடம் 'வாரை இறுக்கிக் கொள்ளுங்கள்' என்று சொல்வதாக வைத் துக் கொள்வோம். 'எதற்காக?' 'அப்படிச் செய்வது முறை.' ஹெஹ்ஹே... முறையாம். விமானம் குப்புறக் கவிழக் கூடும் என்று ஒளிக்காமல் சொல்லி விட வேண்டியதுதானே. அது இல்லாமல், முறையாம், முறை.''

''ஆண்டவனே, ஆண்டவனே!'' என்ருள் பாட்டி. ''அப் படியாஞல் அதில் பறப்பது எதற்காக?..''

''அட நம் ருஷ்யப் பழ மொழியில் சொல்வது போல ஓநாய்க்குப் பயந்தால் காட்டுக்கே போகக் கூடாது.'' யெகோர் பீர் கலயத்தை நோக்கிஞர். ''மொத்தத்தில் ஜெட் விமானங்கள் இருக்கின்றனவே, சந்தேகம் இல்லாமல் நம்பக மானவை. உந்து விசிறிகள் உள்ள விமானமோ எந்தக் கணத் திலும் உடைந்து விடலாம். அதோடு தீர்ந்தது காரியம்... தவிர, இந்த எஞ்சின்கள் அடிக்கடி எரிகின்றன. ஒரு தரம் நான் விளாதிவஸ்தோக்கிலிருந்து விமானத்தில் பறந்து கொண்டிருந்தேன்...'' யெகோர் நாற்காலியில் அதிக வசதி யாக இருந்து கொண்டார், புது சிகரெட்டு சுருட்டிப் புகைத் தார், மறுபடி பீர் கலயத்தைப் பார்த்தார். பாட்டி அசைய வில்லே. ''நாங்கள் பறந்து கொண்டிருந்தோமா, அப்போது நான் வெளியே பார்த்தேன்: எரிந்து கொண்டிருந்தது...''

''கர்த்தரே, கடவுளே!'' என்ருள் பாட்டி.

ஷுரிக்கா அங்காந்த வாயுடன் கேட்டுக் கொண்டிருந் தான்.

''ஆமாம். நல்லது, நான் இரைந்து கத்தினேன். விமானி ஓடி வந்தான்... ஊம், மொத்தத்தில் ஒன்றும் இல்லே. என்னே ஏற இறங்கப் பார்த்தான். 'என்ன நீர் பயணிகளேக் கலவரப் படுத்துகிறீர்? அங்கே எரிகிறது என்ருல் நீர் கவலேப்படாதே யும்...' என்று சொன்ஞன். இந்த விமானத்தின் பாங்கு அப் படி.''

ஷுரிக்காவுக்கு இது உண்மைக்கு மாருகப் பட்டது. நெருப்புத் தழலேக் கண்ட விமானி வேகத்திஞல் அதை

அணைப்பான், அல்லது வேறு வழியின்றி விமானத்தைத் தரையில் இறக்குவான் என்று அவன் எதிர்பார்த்தான். மாறாக அவனே யெகோரை அதட்டினானும். விந்தைதான்.

''எனக்கு ஒரு விஷயம் புரியவில்லை. பயணிகளுக்குப் பாரசூட்டுகள் ஏன் தரப்படுவதில்லை?'' என்று ஷூர்க்காவைப் பார்த்துப் பேச்சைத் தொடர்ந்தார் யெகோர்.

ஷூர்க்கா தோள்களைக் குலுக்கினான். பயணிகளுக்குப் பாரசூட்டுகள் கொடுக்கப்படுவதில்லை என்பது அவனுக்குத் தெரியாது. இது உண்மையானால் விந்தைதான் என்று நினைத்தான்.

யெகோர் சிகரெட்டுக் கட்டையைப் பூச்செடித் தொட்டியில் நுழைத்து விட்டு எழுந்து கலயத்திலிருந்து தாமே பீர் ஊற்றிக் கொண்டார்.

''ஆகா, உன்னுடைய பீர் இருக்கிறதே, மலானியா!''

''நீ ரொம்பத்தானே குடிக்காதே, வெறி ஏறிவிடப் போகிறது.''

''பீர் தானே, பரவாயில்லை...'' யெகோர் தலையை அசைத்து விட்டுக் குடித்தார். ''க்ஹூ! ஆனால் ஜெட் விமானங்கள் உண்டே, அவைகளும் ஆபத்தானவைதான். ஜெட் விமானம் பழுதானால் நேராகத் தரையில் விழும். உடனேயே... அப்புறம் எலும்புகளைக்கூடத் தேடிக் காண முடியாது. மனிதனிடம் மிஞ்சுவதெல்லாம் முன்னூறு கிராமுக்குள் அடங்கிவிடும். உடைகளையும் சேர்த்து...'' யெகோர் கண்களைச் சுரித்து, பீர் கலயத்தை உற்றுப் பார்த்தார். பாட்டி அதை எடுத்து முன்னறைக்குக் கொண்டு போனாள். யெகோர் இன்னும் சிறிது நேரம் உட்கார்ந்திருந்த பின் எழுந்தார். அவர் கால்கள் கொஞ்சம் தள்ளாடின.

''மொத்தத்தில் பயப்படாதீர்கள்!'' என்று உரக்கச் சொன்னார். ''ஆனால் விமானி அறையிலிருந்து தள்ளி—வால் பக்கத்தில்—உட்கார்ந்து பயணம் செய்யுங்கள். நல்லது, நான் போகிறேன்...''

அவர் சிரமத்துடன் வாயிற் புறம் சென்று மேல் கோட்டையும் தொப்பியையும் போட்டுக் கொண்டார்.

''பாவெல் செர்கேயெவிச்சுக்கு வணக்கம் தெரிவியுங்கள். ஆகா, உன் பீர் இருக்கிறதே, மலானியா! அருமை...''

யெகோர் அவ்வளவு விரைவில் குடி மயக்கத்துக்கு உள்ளானதில் பாட்டிக்குக் கோபம். சரியாகப் பேச முடியவில்லை என்பதால்.

''யெகோர், உனக்கு என்னவோ வலு குறைந்து விட்டது.''

''களைத்துப் போனதால் தான்.'' மேல் கோட்டின் கழுத்துப் பட்டையில் ஒட்டிக் கொண்டிருந்த வைக்கோலை அகற்றினார் யெகோர். ''கோடையில் தீனிப்புல்லைக் கட்டி எடுத்துப் போவோம் என்று நம் தலைவர்களிடம் சொன்னேன். அவர்கள் இசையவில்லை! இப்போது, இந்தப் புயலுக்குப் பிறகு, சாலைகள் எல்லாம் வெண்பனிக் குவியல்களால் நிறைந் திருக்கின்றன. இன்று பகல் பூராவும் பாடுபட்டோம், சிரமத் துடன் பக்கத்துப் போர் வரை போய்ச் சேர்ந்தோம். அந்தக் களைப்பு. அதோடு உன் பீர் அவ்வளவு அருமை...'' யெகோர் தலையை அசைத்து உரக்கச் சிரித்தார். ''நல்லது, நான் போகிறேன். ஒன்றும் இல்லை, பயப்படாதேயுங்கள், விமானத்தில் போங்கள். ஆனால் விமானி அறையிலிருந்து எட்டி உட்காருங்கள். மறுபடி சந்திப்போம்.''

''மறுபடி சந்திப்போம்'' என்றான் ஷூர்க்கா.

யெகோர் வெளியே போனார். உயரமான வாசற் படி களில் அவர் சாக்கிரதையாக இறங்கி முகப்பைக் கடந்து, வெளிக் கதவைக் கிறீச்சிடும்படித் திறந்து வீதியில் போய், தணிந்த குரலில் பாடியது கேட்டது:

''பரந்திருக்கிறது அகன்ற கடல்...''

பின்பு அவர் மௌனமானார்.

பாட்டி சிந்தனையும் கவலையும் ததும்ப இருண்ட சன் னலைப் பார்த்துக் கொண்டிருந்தாள். யெகோர் சொல்லித் தான் எழுதிக் கொண்ட குறிப்புக்களை ஷூர்க்கா மறுபடி படித்துப் பார்த்தான்.

''பயமாய் இருக்கிறது, ஷூர்க்கா'' என்றாள் பாட்டி.

''எல்லாருந்தான் பறக்கிறார்கள்...''

''ரயிலில் போவதே மேல் அல்லவா?''

''ரயிலில் போனால் என் விடுமுறை பூராவும் பயணத்தில் கழிந்து விடும்.''

''ஆண்டவனே ஆண்டவனே!'' என்று பெருமூச்சு விட் டாள் பாட்டி. ''பாவெலுக்குக் கடிதம் எழுதுவோம். தந் தியை ரத்து செய்து விடுவோம்.''

ஷூர்க்கா நோட்டுப் புத்தகத்திலிருந்து இன்னொரு தாளைக் கிழித்தான்.

''அப்படியானால் நாம் விமானத்தில் போகப் போவ தில்லையோ?

''பறப்பது எங்கே? பயங்கரம், என் அப்பனே! அப்புறம் மிஞ்சுவதெல்லாம் முன்னூறு கிராம் தானும்...''

ஷுர்க்கா சிந்தனையில் ஆழ்ந்தான்.

''எழுது: அன்புள்ள மகனே பாவெல். இங்கே தெரிந்த ஆட்களிடம் நான் கலந்து ஆலோசித்தேன்...''

ஷுர்க்கா காகிதத்தின் பக்கம் குனிந்தான்.

''இந்த விமானங்களில் மனிதர்கள் எப்படிப் பறக்கிறார்கள் என்று அவர்கள் எங்களுக்கு விவரமாகச் சொன்னார்கள்... ஷுர்க்காவும் நானும் கோடையில் ரயிலில் வருவதாக முடிவு செய்திருக்கிறோம். இப்போதே கூட ரயிலில் வரலாம் தான், ஆனால் ஷுர்க்காவுக்குப் பள்ளிக்கூட விடுமுறை ரொம்பக் குறைவு...''

ஷுர்க்கா ஓரிரு விநாடிகள் தாமதித்த பின் தொடர்ந்து எழுதினான்:

''பாவெல் மாமா, இப்போது நான் என் தரப்பில் எழுதுகிறேன். பாட்டியைக் கலவரப்படுத்தியவர் யெகோர் லிஸுனோவ் மாமா. இவர் எங்கள் பள்ளிக்கூட நிர்வாகி, உங்களுக்கு ஒரு வேளை நினைவு இருக்கும். உதாரணமாக, அவர் ஒரு நிகழ்ச்சியை விவரித்தார். விமான சன்னலுக்கு வெளியே பார்த்தாராம், எஞ்சின் எரிந்து கொண்டிருந்ததாம். இது உண்மையாய் இருந்தால் விமானி வழக்கமாகச் செய்வது போல வேகத்தை அதிகமாக்கி நெருப்பை அணைத்திருப்பார். யெகோர் மாமா ஆவி வெளியேற்றக் குழாயில் தழலைப் பார்த்துக் கலவரக் கூச்சல் கிளப்பி இருப்பார் என்று நான் நினைக்கிறேன். இதில் பயப்படுவதற்கு ஒன்றும் இல்லை என்று பாட்டிக்கு எழுதுங்கள், தயை செய்து. ஆனால் நான் உங்களுக்கு எழுதியதைத் தெரிவிக்காதீர்கள். இல்லாவிட்டால் கோடையிலும் அவள் புறப்பட மாட்டாள். தோட்டத்தில் காய்கறிகள் விளைந்து விடும், பன்றிகளைச் சீராட்ட வேண்டும், கோழிகள், வாத்துகள் வேறே. அவள் ஒருபோதும் நகர மாட்டாள். நாங்கள் இன்னமும் கிராமவாசிகள் தாமே. எனக்கோ, மாஸ்கோவைப் பார்க்க ஒரே ஆசையாய் இருக்கிறது. பள்ளிக்கூடத்தில் பூகோள வகுப்பிலும் வரலாற்று வகுப்பிலும் மாஸ்கோவைப் பற்றிப் படித்துக் கொண்டிருக்கிறோம். ஆனால், உங்களுக்கே தெரியும், இதனால் திருப்தி ஏற்படவில்லை. யெகோர் மாமா சொன்ன இன்னொரு சேதி, பயணிகளுக்குப் பாரசூட்டுகள் தருவதில்லை என்பது. இது மிரட்டல்.

ஆனுல் பாட்டி நம்புகிருள். பாவெல் மாமா, தயை செய்து அவளுக்கு எழுதுங்கள், அவள் வெட்கப்படும்படி. உங்கள் மேல் அவளுக்குக் கொள்ளை அன்பு ஆயிற்றே. 'என்ன அம்மா இது, உங்கள் மகன் விமானி, சோவியத் யூனியனின் வீரன், பல தடவைகள் பரிசுகள் பெற்றவன். அப்படி இருக்க அற்பப் பயணி விமானத்தில் பறப்பதற்கு நீங்கள் பயப்படு கிறீர்களே! அதிலும் எப்போது? நாங்கள் ஒலித் தடையை ஏற்கெனவே கடந்து விட்ட சமயத்தில்' என்று பாட்டிக்கு எடுத்துச் சொல்லுங்கள். நீங்கள் இப்படி எழுதினுல் அவள் அதே நொடியில் விமானத்தில் பறப்பாள். உங்கள் மேல் அவ ளுக்கு ஒரே பெருமை. நீங்கள் அதற்குத் தகுதி உள்ளவர் தாம், சந்தேகம் இல்லை. எனக்குந்தான் உங்கள் மேல் பெருமை. ஆனுல் மாஸ்கோவைப் பார்க்க எனக்கு ஒரே ஆசை. நல்லது, இப்போது விடை பெற்றுக் கொள்கிறேன். வணக்கம். ஷூர்க்கா.''

இதற்கிடையே பாட்டி சொல்லிக் கொண்டு போனுள்:

''... இலையுதிர் கால வாக்கில் வருகிருேம். அதற்குள் குடைக் காளான்கள் முளைத்து விடும். ஊறுகாய் போட வாக்காக இருக்கும். பழக் கூழும் காய்ச்சலாம். மாஸ்கோவில் தான் எல்லாவற்றையும் கடையில் வாங்க வேண்டுமே. கடைப் பண்டம் வீட்டில் நான் செய்வது போல இருக்காது. வேறு சேதி இல்லை, மகனே. உன் வீட்டுக்காரியையும் குழந்தை களையும் ஷூர்க்காவும் நானும் கேட்டதாகச் சொல்லு. இப்போதைக்கு விடை கொடு. எழுதினுயா?''

''எழுதி விட்டேன்.''

பாட்டி காகிதத்தை வாங்கி உறையில் இட்டு, தானே முகவரி எழுதினுள்:

''மாஸ்கோ, லெனின்ஸ்கி வீதி, வீடு எண் 78, பிரிவு 156.

''சோவியத் யூனியனின் வீரர் லியுபாவின் பாவெல் இக்னுத்தியெவிச்சுக்கு.

''சைபீரியாவில் வசிக்கும் அவருடைய தாயாரிட மிருந்து.''

முகவரியை எப்போதும் அவளே எழுதினுள். அப்போது கடிதம் கட்டாயமாகப் போய்ச் சேரும் என்று எண்ணினுள்.

''அவ்வளவுதான். ஏங்காதே, ஷூர்க்கா. கோடையில் போவோம்.''

''நான் ஒன்றும் ஏங்கவில்லை. எதற்கும் நீ கொஞ்சங்

கொஞ்சமாக ஏற்பாடுகள் செய். ஒருவேளை விமானத்தில் பறக்க நீ முடிவு செய்யலாமே.''

பாட்டி பேரன் மேல் கண்ணோட்டினுள், ஆனுல் ஒன்றும் சொல்லவில்லை.

அடுப்புப் பரண் மேல் இருந்த படுக்கையில் அவள் புரண்டதும் மெதுவாகப் பெரு மூச்சு விட்டதும் ஏதோ கிசுகிசுத்ததும் இரவில் ஷுர்க்காவுக்குக் கேட்டன.

ஷுர்க்காவும் தூங்கவில்லை. எண்ணத்தில் ஆழ்ந்திருந்தான். அணித்தான வருங்காலத்தில் வாழ்க்கையில் அசாதாரணமான நிகழ்ச்சிகள் எத்தனையோ நடக்க இருந்தன. அம் மாதிரி நிகழ்ச்சிகள் பற்றி முன் ஒரு போதும் அவன் கனவு கூடக் கண்டதில்லை.

''ஷுர்க்கா!'' என்று அழைத்தாள் பாட்டி.

''ஊம்?''

''பாவெலே, நிச்சயம் கிரெம்ளினுக்குள் போக விடுவார்கள் இல்லையா?''

''கட்டாயம். ஏன்?''

''ஒரு தரமாவது அதற்குள் போனுல்... அதைப் பார்த்தால் நன்ருயிருக்கும்.''

''இப்போது அங்கே எல்லோரையும் விடுகிருர்கள்.''

பாட்டி சிறிது நேரம் பேசாதிருந்தாள்.

''எல்லாரையும் ரொம்பத்தான் விட்டு விடுவார்களாக்கும்'' என்று அவநம்பிக்கை தொனிக்கக் கூறினுள்.

''நிக்கலாய் வசீலியெவிச் எங்களுக்குச் சொன்னுர்.''

இன்னும் ஒரு நிமிடம் இருவரும் பேசாதிருந்தார்கள்.

''நீயும் சரியான ஆசாமிதான், பாட்டி. எவ்வளவோ துணிச்சல் உள்ளவள், இப்போது எதற்கோ பயந்து விட்டாயே'' என்று அதிருப்தியுடன் சொன்னுன் ஷுர்க்கா. ''எதற்குப் பயந்தாய், ஊம்?''

''சரி, சரி, தூங்கு, அஞ்சா நெஞ்சா'' என்று உத்தரவிட்டாள் பாட்டி. ''முதலில் நீதான் வெருவிப் போவாய்.''

''பயப்பட மாட்டேன் என்கிறேன், பந்தயம் கட்டுவோமா?''

''சரி, சரி, தூங்கு. இல்லாவிட்டால் நாளைக்கும் பள்ளிக் கூடம் போகச் சரியான நேரத்தில் விழித்துக் கொள்ள மாட்டாய்.''

ஷுர்க்கா மௌனத்தில் ஆழ்ந்தான்.

**ஸ்தெபானின் காதல்**

வசந்த காலத்தில், ஏப்ரல் மாதத்தில், ஸ்தெபான் யெமெல்யானவ் காதல் கொண்டான். கன்னி நிலத்தவள் ஏல்லா மீது. அவளை அவன் இரண்டே தடவைகள்தான் பார்த்திருந்தான். ஒரு தரம் அவளை நகரத்திலிருந்து கிராமத்துக்குத் தன் லாரியில் கொண்டு விட்டான். ஒன்றுமில்லை. அக்கம் பக்கமாக உட்கார்ந்து பேசாதிருந்தார்கள். நொடிகளில் ஒன்றரைடன் லாரியைத் தூக்கித் தூக்கிப் போட்டது... பெண் ஸ்தெபான் பக்கம் சாய்ந்தாள். ''இப்படிச் செய்வதை நானே விரும்பவில்லை என்பது உங்களுக்குக் கட்டாயம் புரியும்'' என்று சொல்ல நினைப்பவள் போல் ஒவ்வொரு முறையும் கூச்சத்துடன் அவனைப் பார்த்தாள், இருக்கையின் ஓரத்துக்கு நகர்ந்து கொண்டாள். ஸ்தெபானே, பொருட்படுத்தவில்லை. பெண்ணை அவன் பார்க்கக் கூட இல்லை. ''அமூர் ஆற்றின் அலைகள்'' என்ற பாட்டின் மெட்டை வாய்க்குள் சீழ்க்கை அடித்தவாறு மின்கலத்தைப் பற்றி எண்ணமிட்டுக் கொண்டிருந்தான் (அவனுடைய லாரியின் மின்கலத்தில் ஆற்றல் குறைந்திருந்தது).

கிராமத்தை நெருங்கினார்கள். பெண் கைப் பையைத் திறந்து பணம் எடுக்க முற்பட்டாள்.

ஸ்தெபானின் கன்னங்கள் லேசாகச் சிவந்தன.

''அட விடுங்கள்...''

''ஏன்?'' பசிய, தெளிந்த விழிகளின் பார்வையை அவன் மேல் வீசினாள் பெண். ''என்ன?''

''ஒன்றும் இல்லை.'' ஸ்தெபான் லாரியை முடுக்கிப் படு விரைவாக ஓட்டிப் போய் விட்டான்.

''இவ்வளவு அழகானவர்களும் இருக்கிறார்களே!'' என்று பெண்ணைப் பற்றி நினைத்துக் கொண்டான். அவ்வளவுதான். பின்பு அவளை மறந்து விட்டான்.

அல்தாய் பிரதேசத்தின் கடினமான சாலைகளில் வாரக் கணக்காக லாரி ஓட்டினான். கிடைத்த இடத்தில் இரவைக் கழித்தான். வேறு பெண்களை—அழகானவர்கள், அவ்வளவு அழகு இல்லாதவர்கள், எல்லா வகையானவர்களையும்—கண்டான். உலகத்தில் பெண்களுக்குப் பஞ்சமா என்ன? எல்லோ

ரையும் பற்றி எண்ணத் தொடங்கினுல் மண்டை வீங்கி விடும்.

ஏப்ரல் வந்தது.

ஒரு சனிக் கிழமையன்று ஸ்தெபான் ஊர் திரும்பினுன். நீராவிக் குளியறையில் குளித்தான், பூத்தையல் வேலே செய்த சட்டையையும் புதிய, மென்மையான குருமத் தோல் சோடுகளேயும் போட்டுக் கொண்டான், வீட்டில் காய்ச்சிய கெட்டியான பீர் ஒரு குவளே பருகினுன், நாடகம் பார்ப்பதற்காகப் பொழுதுபோக்குக் கழகத்துக்குப் போனுன்.

சொந்த கிராமத்துக்காரர்கள் நடிக்க இருந்தார்கள். சொந்த ஆட்கள் நடித்த போது ஸ்தெபானுக்கு நிரம்பப் பிடித்திருந்தது. சுவாரசியமான விஷயம். ஒருவனே எத்தனேயோ ஆண்டுகளாக அறிந்திருக்கிருேம். பொழுதுபோக்குக் கழகத்துக்கு வருகிருேம். பார்த்தால், அதே கிரீஷா நவசேலவ், நீண்ட தாடியும் மூஞ்சியுமாக மேடைமேல் ஓடியாடுகிருன், கடூரமான குரலில் கத்துகிருன்:

''உன்னே உயிரோடு புதைத்து விடுவேன், இன்னுனே!'' என்று.

இந்த மாதிரி சந்தர்ப்பங்களில் ஸ்தெபான் எப்போதும் கெக்கலித்தான். அக்கம் பக்கத்தில் இருந்தவர்கள் உஷ் ஷென்று சீறி, அவனுக்கு ஒன்றுமே புரியவில்லே என்ருர்கள்.

ஸ்தெபான் மேடைக்குப் பக்கத்தில் உட்கார்ந்து பார்க்கத் தொடங்கினுன். பார்க்கிருனே, அவன் நகரத்திலிருந்து ஏற்றி வந்த அதே பெண் மேடையில் தோன்றினுள். அதே மாதிரி அழகாக இருந்தாள். ஆனுல் அமைதியும் ஏதோ ஒரு விதத்தில் நிரம்பப் பெருமிதமும் உள்ளவளாகக் காணப்பட்டாள். தலே சற்றே பின் சாய்ந்திருந்தது, சணல் நிறப் பின்னல் இடுப்பு வரை தொங்கியது. சிவப்புச் சோடுகள் அணிந்திருந்தாள். மெதுவாக நடந்தாள், தலேயை மெதுவாகத் திருப்பினுள், ஆனுல் குரலில் ஏதோ சொந்தம் தொனித்தது. ஸ்தெபான் எதனுலோ கிளர்ச்சி அடையத் தொடங்கினுன். அவளே அவன் உடனே அடையாளம் கண்டு கொண்டான். ஆனுல் அவள் அவ்வளவு அழகானவள் என்று அவன் நினேக்கவில்லே. அதாவது, அவள் அழகானவள் என்று அறிந்திருந்தான், ஆனுல் இவ்வளவு அழகானவள் என்று எண்ணவில்லே.

பிறகு மேடைக்கு வந்தான் துடுக்கான ஓர் இளேஞன், வாஸ்கா செமியோனவ், கூட்டுப்பண்ணேக் கணக்கன். ஹாட்டும் மூக்குக் கண்ணுடியும் அணிந்து அவனும் நிரம்பப் பெரு

மிதத்துடன் இலகினுன். வேறு சமயமாய் இருந்தால் இந்த சந்தர்ப்பத்தில் ஸ்தெபான் கட்டாயம் கடகடவென்று சிரித்திருப்பான். ஆனுல் இப்போது அவனுக்குச் சிரிப்பு வரவில்லை. அவன் பெண்ணைப் பார்த்தவாறு, இந்த வாஸ்காவுடன் அவள் என்ன செய்யப் போகிருள் என்று தெரிந்து கொள்வதற்காகக் காத்திருந்தான். பெண்ணின் கண்கள் பளிச்சிட்டதையும் அவள் எதற்கோ அஞ்சியவள் போல மேனி முழுவதையும் குறுக்கிக் கொண்டதையும் அவன் கண்டான். ஸ்தெபானுக்கு அவள் மேல் இரக்கமாய் இருந்தது.

''நீ எதற்காக வந்தாய்?'' என்று கேட்டாள் அவள்.

''நீ இல்லாமல் என்னுல் வாழ முடியாது!'' என்று இந்த முட்டாள் வாஸ்கா ஹால் முழுதிலும் கேட்கும்படி உரக்கச் சொன்னுன்.

''போய் விடு'' என்ருள் பெண். ஆனுல் அவள் அதைச் சொன்ன விதம், ''போகாதே'' என்பது போலத் தொனித்தது.

''நான் போக மாட்டேன்'' என்று அவளுக்கு இன்னும் கிட்டத்தில் வந்தான் வாஸ்கா.

ஸ்தெபான் பெஞ்சு விளிம்பைக் கைகளால் இறுகப் பற்றிக் கொண்டான். இந்த வாஸ்கா இவ்வளவு லகுவில் போய் விட மாட்டான் என்று அவன் அறிந்திருந்தான். அவன் கண் மூடிக் கண் திறப்பதற்குள், இதெல்லாம் எதில் போய் முடியும் என்று எண்ணிப் பார்ப்பதற்குள், கணக்கப் பிள்ளை பெண்ணின் தோளை லாகவமாகத் தழுவி, இடது கை மேல் அவளைச் சற்றே சாய்த்து முத்தமிட்டு விட்டான். முத்தத்துக்குப் பின் பெண்ணின் உதடுகளை ஸ்தெபான் பார்த்தான். அவை சிறிது வீங்கி, லேசாக ஈரம் படிந்து பாதி திறந்திருந்தன. நாணமும் மகிழ்ச்சியும் ததும்பிய புன்னகையில் நடுங்கின. ஸ்தெபானின் கண்கள் இருண்டன. அவன் எழுந்து பொழுதுபோக்குக் கழகத்திலிருந்து வெளியேறினுன்.

வெளியே தூணில் சாய்ந்து கொண்ட அவனுல் வெகு நேரம் தன் நிலைக்கு வர முடியவில்லை.

''ஏன்தான் இப்படி?..'' என்று எண்ணமிடலானுன்.

...மூன்று நாட்கள் ஸ்தெபான் தன் வசமின்றி வளைய வந்தான். (லாரியைச் செப்பனிடும் நிலையத்தில் நிறுத்தி இருந்தான்.) அந்தப் பெண்ணின் பெயர் ஏல்லா என்றும் அவள்

வரோனெழ் நகரத்தைச் சேர்ந்தவள் என்றும் டிராக்டர் குழுவில் கணக்குத் தணிக்கையாளியாக வேலை செய்வதாக வும் விசாரித்துத் தெரிந்து கொண்டான். அவ்வளவுதான். நாடகத்தில் நடிக்கும் போது மட்டுமீறிக் கைமிஞ்ச வேண் டாம் என்று வாஸ்கா செமியோனவிடம் சொல்ல நினைத் தான், ஆனல் உரிய நேரத்தில் அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டான். இது வெறும் நடிப்புத்தானே, உண்மை அல் லவே. இதைப் பெரிதுபடுத்திஞல் ஆட்கள் கேலி செய்வார் கள்.

ஒரு நாள் மாலையில் ஸ்தெபான் தன் குருமத் தோல் சோடுகளுக்குப் பளபளப்பாக மெருகேற்றி அணிந்து கொண்டு... ஏல்லாவின் இருப்பிடத்துக்குப் புறப்பட்டான் (அவள் முதிய கூக்ஸின் தம்பதிகளின் வீட்டில் வசித்து வந் தாள்). வீட்டு வாயில் வரை போன ஸ்தெபான் சற்று நேரம் தயங்கி நின்று விட்டுத் திரும்பி அப்பால் போய் விட்டான். கிராமத்துக்கு வெளியே, ஆற்றங்கரைக்குப் போஞன். ஈரத் தரையில் உட்கார்ந்து கைகளால் முழங்கால்களைக் கட்டிக் கொண்டு தலையை அவற்றின் மேல் கிடத்தியவாறு பொழுது புலரும் வரை உட்கார்ந்திருந்தான். எண்ணமிட்டான்.

அந்த நாட்களில் அவன் இளைத்துப் போஞன். ஆழ்ந்த, கடுமையான ஏக்கம் அவனுடைய கண்களில் குடிகொண்டது. அவன் அனேகமாகச் சாப்பிடவில்லை. ஒன்றன் பின் ஒன்ருகச் சிகரெட்டுகளைப் புகைத்தவாறு ஓயாமல் சிந்தித்த வண்ண மாய் இருந்தான்...

"எதற்காக நீ இப்படி?" என்று அவனிடம் கேட்டார் தகப்பஞர்.

"சும்மா தான்..." ஸ்தெபான் சிகரெட்டுத் துணுக்கைச் சோட்டிஞல் மிதித்து அணைத்து விட்டு, எங்கோ ஒரு புறம் பார்த்தவாறு மறு சிகரெட்டை எடுப்பதற்காகப் பைக்குள் கையை விட்டான்.

இந்த நாட்களில் அவன் ஒரு தரம் கூட ஏல்லாவைப் பார்க்கவில்லை. பொழுதுபோக்குக் கழகத்துக்குப் போவதை நிறுத்தி விட்டான்.

நான்காம் நாள் தகப்பஞரிடம் தெரிவித்தான்:

"மணம் செய்து கொள்ள விரும்புகிறேன்."

"அப்படியா? யாரைக் கட்டிக் கொள்ள விரும்புகிருய்?"

என்று கேட்டார் ஸ்தெபானுடைய தகப்பஞர் யெகோர் செவெரியானிச்.

''இந்த... புதிய பெண்ணை... கணக்குத் தணிக்கை யாளியை...'' என்று தணிவாகக் கூறிஞன் ஸ்தெபான், தந்தையை நேரே பார்க்காமல் சிடுசிடுப்புடன் சன்னலுக்கு வெளியே நோக்கியவாறு.

யெகோர் செவெரியானிச் சிந்தனை செய்தார்.

''உனக்கும் அவளுக்கும் பழக்கம் உண்டா?''

''ஆ-ஆ...'' என்று குழறிஞன் ஸ்தெபான். ''கிடையாது.''

''நான் பெண் பேசப் போக மாட்டேன்'' என்று கண்டிப் பாகச் சொன்ஞர் யெகோர்.

''ஏன்?''

''வயது காலத்தில் அவமானப்பட நான் விரும்பவில்லை. இந்த மாதிரிப் பெண் பேசுவது என்ன என்பது எனக்குத் தெரியும். நான் போவேன், பெண்ணுக்கோ, பாவம், ஒன்றுமே தெரியாது. முதலில் அவளோடு பேசி முடிவு செய்து கொள். எல்லாரும் செய்வது போல, கொஞ்சம் அளவளாவு. அப்புறம் பெண் கேட்கப் போவோம். இல்லாவிட்டால்... ஸ்தெபான், எப்போதுமே நீ ஆய்ந்தோர்ந்து பாராமல் காரி யம் செய்கிருய். நானும் உனக்கு எவ்வளவோ சொல்லிச் சொல்லிப் பார்த்து விட்டேன், எல்லாம் வீண்.''

யெகோரின் தகப்பஞர் செவெரியான் தாத்தா இந்தப் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தார். உடம்பு சரியில்லாத தால் அவர் அடுப்புப் பரண் மேல் படுத்திருந்தார்.

''பாருங்கள் ஐயா, எப்பேர்ப்பட்ட துரை மகஞர் கிளம்பி இருக்கிருர் என்று! பெண் பேசப் போக மாட்டாராம்'' என்று கோபத்துடன் சொன்ஞர். ''உன் மணப் பெண்ணை வீடு வரை கொண்டு விட உனக்குப் பதிலாக நான் போனேனே, அதை மறந்து விட்டாயோ?''

யெகோர் செவெரியானிச் சிடுசிடுப்புடன் முகத்தைச் சுளித்து, சிகரெட்டு பற்ற வைத்துக் கொண்டார். நெடு நேரம் பேசாதிருந்தார். என்னத்தைப் பேசுவது? இளம் பருவத்தில் அவரும் ஸ்தெபான் போலவே பெண்ணை ஏறெடுத்துப் பார்க்கவே கூசிஞர்.

''என்ஞல் போக முடியுந்தான்'' என்று பேசத் தொடங் கிஞர். ''ஆஞல்... அவள் உனக்கு வாழ்க்கைப்பட மாட்டாள் என்று நினைக்கிறேன்.''

''வாழ்க்கைப்படுவாள்!'' என்றார் செவெரியான் தாத்தா. ''இந்த மாதிரிப் பையனுக்கு எந்தப் பெண்ணும் வாழ்க்கைப் படுவாள்.''

ஸ்தெபான் நெஞ்சு சில்லிடுவதை உணர்ந்தான். ''வாழ்க்கைப்பட மாட்டாள் என்று ஏன் நினைக்கிறீர்?'' என்று தந்தையிடம் கேட்டான்.

''அவள் நகரத்துப் பெண் ஆயிற்றே.ஃ சைத்தானுக்கே வெளிச்சம் அவர்களுக்கு என்ன வேண்டும் என்பது. நீ பின்தங்கியவன் என்பாள்.''

''நீயேதான் பின்தங்கியவன், யெகோர்'' என்று மறுபடி விளாசினார் செவெரியான் தாத்தா. ''இப்போதெல்லாம் பெண்கள் இதைப் பார்ப்பதில்லை. இப்போது பெண்கள் முன்னைவிடப் புத்திசாலிகள் ஆகி விட்டார்கள். நான் வய தானவன், இருந்தாலும் இதை அறிவேன்.''

வியாழக் கிழமை காலை முதல் தகப்பனாரும் மகனும் பெண் பேசப் போவதற்கு ஏற்பாடுகள் செய்யலானார்கள்.

ஸ்தெபான் பூத்தையல் போட்ட சட்டையை மறுபடி அணிந்து, கண்ணாடியின் முன் நீண்ட நேரம் நின்று, படியாத முரட்டுத் தலை மயிரை வாரிக் கொண்டான்.

யெகோர் செவெரியானிச் வலியால் முகத்தைச் சுளித்த வாறு, வளையாத கரு விரல்களால் புதிய சராயின் வழுவழுப் பான பொத்தானைப் பிடித்துக் குறுகலான துளையில் படு சிரமத்துடன் நுழைத்து மாட்டினார்.

''தைக்கிறார்கள் பார், படுபாவிகள்!'' என்று திட்டினார். ''என்ன செய்தாலும் சரி, நுழைய மாட்டேன் என்கிறது. இது நாசமாய்ப் போக.''

ஸ்தெபான் தலை வாரிக் கொண்டு இன்னும் எப்படிச் சிங்காரித்துக் கொள்வது என்று யோசனை செய்தவாறு அறை நடுவே நின்றான்.

''டை கட்டிக் கொள்'' என்று யோசனை சொன்னார் தாத்தா.

''பூத்தையல் சட்டைக்கு அது இசையாது'' என்று விளக் கினான் ஸ்தெபான்.

முடிவில் தயாரானார்கள்.

யெகோர் செவெரியானிச் பெரிய உள்ளங்கையால் பின் மண்டையைத் தொட்டுக் குழப்பத்துடன் தந்தையைப் பார்த் தார்.

''வோத்காவைக் கொண்டு போகவா வேண்டாமா? இப்போது இவர்களுடைய வழக்கங்கள் எல்லாம் புது மாதிரியாக மாறி இருக்கின்றனவே, ஒன்றுமே விளங்கவில்லை.''

தாத்தா செவெரியான் சற்று யோசனை செய்தார்.

''புட்டியைப் பையில் வைத்துக் கொள். தேவைப்பட்டால் கையோடு இருக்கும்'' என்று சொன்னார்.

போனார்கள்.

வெயிலொளியும் கலகலப்பும் நிறைந்த பகல். ஓடைகள் பெருகின. வானம் நீர்க் குட்டங்களில் பிரதிபலித்தது. அதன் நீலத் துணுக்குகள் கரு நிலத்தின் மேல் இங்கும் அங்கும் மகிழ்ச்சியுடன் பளிச்சிட்டன. ஏப்ரல் வழிகளில் களி பொங்கக் கும்மாளம் போட்டுக் கொண்டிருந்தது.

பேசாமல் நடந்தார்கள். சோடுகளில் சேறு படிந்து விடக் கூடாது என்பதற்காக நீர்க் குட்டங்களை எச்சரிக்கையாகச் சுற்றிச் சென்றார்கள்.

கூக்ஸின் தம்பதிகள் பெரிய வீடு கட்டிக் கொண்டிருந்தார்கள்.

முதல் இரண்டு அறைகளில் ஒருவரும் இல்லை. யெகோர் செவெரியானிச் சோர்வு அடைந்தார். கிழவர் கூக்ஸினிடம் பேச்சு கொடுப்போம், உரையாடலின் போது, ''நாங்கள் உங்களிடம் வந்திருப்பது ஒரு காரியமாக...'' என்று சொல்வோம் என்று எண்ணி இருந்தார். கிழவனர் அவருக்குக் கட்டாயம் உதவி இருப்பார். இப்போதோ நேரே அந்தப் பெண்ணின் அறைக்குப் போக வேண்டும்.

தகப்பனரும் மகனும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டு அந்த அறைக்கு நடந்தார்கள்.

யெகோர் சுட்டு விரலால் கதவை எச்சரிக்கையாகத் தட்டினர்...

''வாருங்கள்!'' என்ற பதில் அறையிலிருந்து வந்தது.

ஸ்தெபானின் இதயம் வலியுடன் துள்ளியது.

யெகோர் செவெரியானிச் கதவின் ஒரு பாதியை மெதுவாகத் திறந்து, சிரமத்துடன் அறைக்குள் புகுந்தார். ஸ்தெபான் அவர் பின்னே சென்றன். நிலே அருகே நின்றார்கள்.

அவர்களுக்கு நேர் எதிரே மேசை அருகில் வாஸ்கா செமியோனவ் உட்கார்ந்திருந்தான். அவன் பக்கத்தில் நெருக்கமாக உட்கார்ந்திருந்தாள் ஏல்லா.

தேநீர் பருகிக் கொண்டிருந்தார்கள். வாஸ்கா கோட்டு

இல்லாமல் மஞ்சள் பட்டுச் சட்டை அணிந்து, லேசாக ஒளி வீசும் அளவுக்கு மழித்த முகத்துடன் விளங்கினுன். சொந்த வீட்டில் இருப்பவன் போல விட்டாற்றியாக உட்கார்ந்திருந் தான். அவன் கொஞ்சம் சாய்ந்து கொண்டு கூட இருந்த தாகத் தோன்றியது. ஸ்தெபானேயும் அவனுடைய தகப் பனுரையும் பரிவும் மட்டித்தனமும் ததும்ப நோக்கினுள்.

ஏல்லா இருக்கையிலிருந்து அனுயாசமாகத் துள்ளி எழுந்து, விருந்தினருக்கு நாற்காலிகள் போட்டாள்.

''வாருங்கள், தயவு செய்து உட்காருங்கள்.''

யெகோர் செவெரியானிச் வாஸ்கா மீது கண்ணேட்டி விட்டு உள்ளே வந்து அமர்ந்தார். பின்பு மகனைத் திரும்பிப் பார்த்தார். ஸ்தெபானின் கன்னமெல்லாம் கன்றிச் சிவந்து காந்தியது. தரையில் வேரூன்றி விட்டவன் போல நின்முன்.

''உட்காருங்கள், என்ன நிற்கிறீர்கள்?'' என்று குதூகல மாக மொழிந்தாள் ஏல்லா. ''நீங்கள் என்ன, இவரைப் பார்த்ததே இல்லையோ?''

ஸ்தெபான் உட்கார்ந்து, தொப்பியை முழங்கால்கள் மேல் வைத்துக் கொண்டான்.

சிறிது நேரம் பேசாதிருந்தார்கள்.

ஏல்லாவுக்குச் சிரிப்பு வந்தது. அவள் ஸ்தெபானேயும் யெகோரையும் வாஸ்காவையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தாள். வாஸ்காவுக்கும் ஒன்றும் புரியவில்லை.

''வந்த காரியத்தைச் சொல்லுங்கள், தோழர்களே'' என்று ஸ்தெபான் பக்கம் திரும்பி, ''எனக்கு உங்களை நினைவு இருக்கிறது'' என்று மகிழ்ச்சியுடன் கூறினுள் ஏல்லா. ''ஒரு தரம் நகரத்திலிருந்து உங்கள் லாரியில் பயணம் செய்தேன். நீங்கள் அப்போது ஒரே கோபமாக இருந்தீர்கள்.''

ஸ்தெபான் வேதனையுடன் புன்னகை செய்தான்.

வாஸ்காவோ கிண்டலாகப் பேசுவது அவசியம் என்று நினைத்தான்.

''சவாரிகள் பிடிக்கிறுற்போல் இருக்கிறதே, ஸ்தெபான் யெகோரிச்? மோசம்!..''

யெகோர் செவெரியானிச் வாஸ்காவின் மழமழப்பான முகத்தை இன்னெரு தரம் பார்த்து விட்டு எருது போலத் தலையைத் தாழ்த்திக் கொண்டு மறைக்காமல் சொன்னுர்:

''நாங்கள், அம்மா, உன்னைப் பெண் பேச வந்திருக் கிறேம்.''

எதிர்பாராமையால் ஏல்லா வாயைச் சற்று திறந்தாள்.

''எப்படி?..''

''ஊம், பெண் பேசுகிற வழக்கப்படிதான்! இவன்தான் என் மகன்'', யெகோர் ஸ்தெபானின் பக்கம் தலையசைப் பால் சுட்டினார். ''நீ இவனுக்கு வாழ்க்கைப்பட வேண்டும் என்று இவன் ஆசைப்படுகிறான், அதாவது நீ சம்மதித்தால்.''

ஏல்லா ஸ்தெபான் மேல் கண்ணோட்டினாள்.

அவன் இரத்தம் கட்டிப் போகும் அளவுக்கு முட்டிகளை இறுக்கி முழங்கால்கள் மேல் வைத்து அவற்றைக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தான். அவனுடைய நெற்றியில் முத்து முத்தாக வியர்வை துளித்தது. அவன் அதைத் துடைக்க வில்லை.

''அதாவது கலியாணமா?..'' என்று கேட்ட ஏல்லா முகம் சிவந்தாள்.

''வேறு என்ன?'' என்று பெருமூச்சு விட்டான் ஸ்தெ பான். பின்பு வாஸ்காவின் விழிகளை நோக்கினான். வாஸ்கா கெக்கலி கொட்டியவாறு நாற்காலியில் அசைந்தாடினான். பிறகு அவன் ஏல்லாவைக் கண் கொட்டாமல் பார்த்தான். அவள் மேசை அருகே நின்றாள். நாணத்தால் சிவந்தவளாய், உடையில் ஒட்டிய தூசியை வெண்மையான விரல்களால் கவனமாக அகற்றினாள்.

''நேரம் ஆக்கி விட்டாய், ஸ்தெபான்'' என்று உரக்கக் கூறிய வாஸ்கா மறுபடி நாற்காலியில் அசைந்தாடினான். ''தாமதம் செய்து விட்டாய்'' என்றான்.

இந்தத் தடவை ஸ்தெபான் அவன் மேல் பார்வை செலுத்தவில்லை. கண்ணை எடுக்காமல், கோரிக்கையுடனும் ஆழ்ந்த முறையிலும் ஏல்லாவை நோக்கியவாறு காத்திருந் தான். அவனுடைய கூச்சம் எதனாலோ போய் விட்டது.

ஏல்லா திடீரெனத் தலையை நேரே நிமிர்த்தினாள், பசிய, தெளிந்த விழிகளால் ஸ்தெபானைப் பார்த்தாள். நாணமும் கொஞ்சலும் கண்டனமும் ஏற்பும், அவற்றோடு கூடவே, வருணிக்க முடியாத வனப்பும் கூச்சமும் புகலின்மையும் உள்ள ஒன்றும் அந்தப் பார்வையில் இருந்தன. ஸ்தெபானின் நெஞ்சு களி துள்ளியது. அவர்களுக்கு இடையே என்னதான் பிறந்து விட்டது என்றோ, ஏன் பிறந்தது என்றோ யாராலும் விளக்கி இருக்க முடியாது. இதைப் புரிந்து கொண்டவர்கள் அவர் கள் இருவர் மட்டுமே. அவர்களுங்கூடப் புரிந்து கொள்ள வில்லை. உணர்ந்தார்கள்.

இந்த நேரம் பார்த்து வாஸ்கா உளறித் தொலேத்தான்:

''நாங்கள் விரைவில் மணம் செய்து கொள்ளப் போகிருேம், ஸ்தெபான்.''

இந்தச் சொற்கள் படு அசட்டுத்தனமாக ஒலித்ததால், இப்படிப் பேசி இருக்க வேண்டாம் என்று அவனே நினேத்துக் கொண்டான்.

யெகோர் செவெரியானிச் எழுந்து அறைக்கு வெளியே போகப் புறப்பட்டார், ஆனுல் ஏல்லா திடீரென்று சுய நினேவுக்கு வந்தவள் போலத் திடுக்கிட்டு, ஓரளவு அவசரம் கூடப் பட்டுக் கொண்டு சொன்னுள்:

''எங்கே கிளம்பி விட்டீர்கள்? நீங்கள் பெண் பேச வந்த அழகு இதுதானு? நான் உங்களுக்கு இன்னும் ஒன்றும் சொல்லவில்லேயே.''

அவள் விரைவில் தன்னேக் கட்டுப்படுத்திக் கொண்டாள். ஸ்தெபானே அவள் பார்க்கவில்லே, ஆனுல் ஸ்தெபான்... அவள் தன்னேப் பார்க்கிருளா இல்லேயா என்பது ஸ்தெபானுக்கு முக்கியம் அற்றதாக இருந்தது. நாணத்தாலும் மகிழ்ச்சியாலும் அவன் உள்ளம் நிறைந்து பொங்கியது. அவனே இடத்திலிருந்து கிளப்பவோ போய் விடுமாறு கட்டாயப் படுத்தவோ எந்தச் சக்தியாலும் அப்போது முடிந்திராது.

யெகோர் செவெரியானிச் நின்ருர். வாஸ்கா முகம் சிவந்து குழப்பத்துடன் உட்கார்ந்தான். எதையோ புரிந்து கொள்ளத் தொடங்கியதால் அவனுக்கு நெஞ்சு பகீரென்றது.

''உட்காருங்கள். தேநீர் பருகுவோம், வாருங்கள்'' என்ருள் ஏல்லா.

தொடக்கத்தில் ஏல்லா தடுமாறினுள். பின்பு தன்னம்பிக்கையும் முதலில் இருந்ததற்கு மாருன வேறு வகை மகிழ்ச்சியும் ததும்பப் பேசத் தொடங்கினுள். இந்த மகிழ்ச்சியில் உறுதி தொனித்தது.

அப்போது கட்டாயமாக நடக்கவிருந்த ஒன்றை எல்லோரும் எதிர்பார்த்தார்கள்.

''ஒருவேளே, நான் போய் விடுவதே மேலோ?'' என்று உரக்க வினவினுன் வாஸ்கா. ரோசத்தால் அவன் குரல் நடுங்கியது. வாஸ்கா அழிந்து போனுன். முற்ருக, அறவே மடிந்து போனுன். தன்னேக் காப்பாற்றிக் கொள்ள அவன் முயற்சி கூடச் செய்யவில்லே.

''அப்படித்தான் நான் நினேக்கிறேன்'' என்று ஸ்தெ

பானும் உரக்கச் சொன்னுன். அவன் கொஞ்சம் அவசரப்பட்டு விட்டான். அப்படி அவனும் சொல்லியிருக்க வேண்டாம்... ஆனுல் வேறு எதுவும் செய்வதற்கில்லே. அவர்கள் இரண்டு பேர் இருந்தார்கள். ஒருவன் போக வேண்டி இருந்தது. இரு வரும் முரட்டுத்தனமாக நடந்து கொண்டார்கள். யாராவது ஒருவனே ஏல்லா மன்னிக்க வேண்டியதாயிற்று.

வாஸ்கா இம்முறையும் ஸ்தெபான் மீது பார்வை செலுத்த வில்லே. ஏல்லாவைப் பார்த்தான். ஏல்லா மறுபடி முகம் சிவந்து யெகோர் செவெரியானிச்சை நோக்கினுள். அவரோ, இன்னமும் அறை நடுவில் நின்றவாறு மூவரையும் ஒருவர் மாற்றி ஒருவராகப் பார்த்துக் கொண்டிருந்தார். அங்கே நடப்பது என்ன என்பதை அவரால் அறவே புரிந்து கொள்ள முடியவில்லே. ஏல்லா மகிழ்வின்றி நகைத்தாள்.

''நல்ல நிலேமைதான் போங்கள்! யாரேனும் உதவி செய்யக் கூடாதோ? ஊம், எதற்காக நீங்கள் நிற்கிறீர்கள்? உட்காருங்களேன்!''

அவள் காலால் லேசாகத் தரையில் அடிக்கக் கூடச் செய் தாள். அவளுக்குச் சங்கடமாக இருந்தது.

வாஸ்கா நாற்காலியிலிருந்து எழுந்தான். கோட்டைப் போட்டுக் கொள்ளத் தொடங்கினுன். எதனுலோ மிக மெது வாக அதை அணிந்து கொண்டான். கடைசியில் எப்போது அதைப் போட்டு முடிப்பான் என்று எதிர்பார்த்து எல்லோ ரும் காத்திருந்தார்கள்.

''அட பாவமே, ஸ்தெபான், எனக்கு உன் மேல் இரக்க மாய் இருக்கிறது'' என்முன் வாஸ்கா.

பின்பு அறையிலிருந்து போனுன். நிலேயில் நின்று இன்னெரு தரம் திரும்பிப் பார்த்தான். வன்மமும் களிப்பு மாக எல்லோர் மேலும் கண்ணேட்டினுன், வெளியே போய்க் கதவைப் படீரென்று சாத்தினுன்.

சற்று நேரம் அறையில் நிசப்தம் நிலவியது.

ஸ்தெபான் நெற்றி வியர்வையை மெதுவாகத் துடைத்துக் கொண்டான். புன்னகை செய்தான்.

''இல்லே, நீங்கள் எப்படி வேண்டுமோ செய்யுங்கள், ஆனுல் நான் இப்போது குடிக்கப் போகிறேன்'' என்று கூறி மேசை அருகே சென்முர் யெகோர் செவெரியானிச். ''இந்த மாதிரிப் பெண் பேசியதால் நான் களேத்துக் கூடப் போய் விட்டேன்'' என்முர்.

## இரண்டு கிழவர்கள்

இரவில் மழை விட்டு விட்டுத் தூறிக் கொண்டிருந்தது. தொலை வில் இடி இடித்த வண்ணமாய் இருந் தது... ஆனல் காலை புதிய உற்சாகத் துடன் பொலிந்தது. சூரியன் மூடுபனிப் போர்வைகளை உதறி விட்டு உயரே எழுந் தது. உருகிய வெள்ளி நடுங்கிய ஈர இலைகளில் தாரைகளாகப் பெருகிற்று. தாழ் நிலங்களில் செறிந்திருந்த மூடுபனிப் படலங்கள் விருப்பின்றித் தரையை விட்டுப் பிரிந்து மேலே கிளம்பின.

சாவைப் பற்றி அமைதியாகச் சிந்தனை செய்வது கிழவர் களின் வழக்கம். வாழ்க்கையில் மறைந்துள்ள, வியப்பூட்டு கிற, நிலையான அழகு முழுவதும் அப்போதுதான் மனித னுக்குப் புலனுகிறது. இறுதியில் மனிதர்கள் வாழ்க்கையைத் தெவிட்டத் தெவிட்ட, வேதனையுடன் நுகர்ந்து தீர்க்க வேண் டும், பின்பு போய்விட வேண்டும் என்று இறைவன் விரும்பு கிருன் போல் இருக்கிறது.

அவர்கள் போயும் விடுகிருர்கள். களைத்த குதிரைகளின் வெதுவெதுப்பான கடிவாளங்கள் கிணுகிணுப்பது போன்று தணிவாக மெல்லென ஒலிக்கின்றன போகிறவர்களின் காலடி கள். வாழ்வது நன்ருக, வேதனை எடுக்கும் அளவுக்கு நன்ருக இருந்தது. போகாமலே இருக்க முடிந்தால்!

ஈரப் பாதையில் நடந்து கொண்டிருந்தார் நரைத்த கிழ வர் ஒருவர். பசு மாட்டுக்காகப் புல் அறுக்கப் போய்க் கொண் டிருந்தார்.

கிராமம் பின்னே, மேடுகளுக்கு மறு புறம் மறைந்து விட்டது. கிழவர் போய்க் கொண்டிருந்த இடம் குச்சுகூரி எனப்பட்டது. இது குன்றுகள் நிறைந்த பிரமாண்டமான பள்ளத்தாக்கு—மலையடிவாரம். அடுத்த மேட்டின் மேல் ஏறியதும் பள்ளத்தாக்கு முழுவதும் பார்வைக்குத் தென் பட்டது. பள்ளத்தாக்கை மூன்று புறங்களில் சூழ்ந்திருந்தன மோனத்திலிருந்த மலைகள். கட்டுப்பாடில்லாத பசிய நிலப் பரப்பு. நெடுங்காலமாக இங்கே புல்லறுப்பு நடந்து வந்தது.

குன்றுகளின் மேல் தளதளவென்று செழித்து மண்டி யிருந்த புல் குதிரையின் வயிறு வரை வளர்ந்திருந்தது. கீழே சதுப்புச் சமதரையும் காடும். அங்கே குளிராய் இருந்தது. காட்டின் உள்ளே மட்கல் மணம் வீசியது. அங்கே தரை

யிலிருந்து, செம்பழுப்பு எண்ணெய் நிலத்திலிருந்து, பொங்கின தெளிந்த குளிர் நீர் ஊற்றுக்கள். அந்த நீர்தான் என்ன ருசி! அங்கே சற்று நேரம் உட்கார ஆசை உண்டாயிற்று. அரை இருட்டும் குளிருமாக இருந்தது. எதனுலோ ஏக்கமும் தனிமை உணர்வும் ஏற்பட்டன. நாம் இருக்கிறோமா இல்லையா என்பது பற்றி அசட்டையாய் இல்லாதவர்கள்—நமக்காகக் கவலைப்படுபவர்கள்—இருக்கத்தான் செய்தார்கள்... ஆனு லும்... என்னதான் இது? நமக்கே விளங்கவில்லை: நம்முடைய அனுபவிக்கும் சக்திக்கு மிஞ்சிய இந்த அழகு எதற்காக வழங்கப்பட்டிருக்கிறது? இதை வைத்துக் கொண்டு நாம் என்ன செய்திருக்க முடியும்?.. இதன் அருகாக நடந்தோம், அவசரப்பட்டோம், இதைக் கவனிக்காமலே போய்விட் டோமே என்பதுதான் துயரம் அளித்தது.

ஆனுல் வெளிச்சத்துக்கு வந்ததும் நமது ஏக்கத்துக்காகவே வருத்தம் உண்டாயிற்று. புலர் போதுக்கு முந்தியது போன்று அமைதியும் மென்மையும் வாய்ந்த ஒன்று இப்போதுதான் உள்ளத்தில் புகுந்தது போலத் தோன்றியது. களி பொங்கி யது, இந்தக் களிப்பை அகத்தில் எடுத்துச் செல்ல விருப்பம் உண்டாயிற்று, பிற்பாடும் ஆனந்தப்படும் பொருட்டு. ஆனுல் இல்லை, எத்தனையோ விதமான எண்ணங்கள் குறுக்கிட்டதால் ஆனந்தப்பட மறந்து விட்டோம்.

சூரியன் இன்னும் உயரே எழும்பியது. மூடுபனிப் படலங் கள் எழுந்து சிதறிப் போயின. நிலம் மெல்லிய ஆவி கிளப்பி யது. இந்த ஆவி வெளிச்சத்தை மறைக்கவில்லை. ஆனுல் அதைத் தரையிலிருந்து பிடுங்கி உயரே கொண்டு சென்றது போல் இருந்தது.

பிர்ச் இலைகள் உலர்ந்து விட்டன, ஆயினும் நீராடிய இளம் தளதளப்பை இன்னும் வைத்திருந்தன, பிரகாசமாகப் பளிச்சிட்டன. கண்ணுக்குத் தெரியாத பட்சிகளின் மெல்லிய சீழ்க்கைகள் மட்டுமே காலையின் பெருத்த நிசப்தத்தை ஊடுருவி ஒலித்தன.

வெப்பம் ஏறிக் கொண்டு போயிற்று. மலைச் சரிவு களிலிருந்து இன்னும் ஈரமாய் இருந்த பள்ளத்தாக்கில் பெருகியது வெப்பம். தரையோ, தனது பசிய ஆற்றல்களின் மிகுதியால் மயக்கும் மணம் கமழ்ந்தது.

முதியவர் நடையை விரைவுபடுத்தினுர், ஆனுல் நடக்கை யிலேயே களைத்துப் போகும் அளவுக்கு அல்ல. சக்தி

கொஞ்சந்தான் எஞ்சி இருந்தது, அதைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமே.

கால்நடையாகவும் குதிரை மேலும் இந்த வழியில் அவர் நிறையப் பயணம் செய்திருந்தார்—வாழ்நாள் முழுதும். இதன் ஒவ்வொரு திருப்பத்தையும் அறிந்திருந்தார். எங்கே குதிரையை விரைவாக ஓட விடலாம், எங்கே அதன் விரைவை மட்டுப்படுத்த வேண்டும்—அதுவும் காலே முதலே விரும்பிய விதத்தில் தன் சக்தியைச் செலவிட்டு விட்டு, பிறகு அரைகுறைச் சக்தியுடன் வேலே செய்யக் கூடாதே—என்பது அவருக்குத் தெரிந்திருந்தது. இப்போது குதிரை இல்லே. வாழ்நாளில் தம்மிடம் இருந்த எல்லாக் குதிரைகளேயும் அவர் நினேவு வைத்திருந்தார். யாராவது கேட்க விரும்பினுல் ஒவ்வொரு குதிரையின் சுபாவத்தையும் வழக்கங்களேயும் விவரிக்க அவரால் முடியும். தம்முடைய குதிரைகளே நினேத்துக் கொண்ட போது அவர் உள்ளம் மௌனமாக வேதனேப்பட்டது. சிறப்பாகக் கடைசிக் குதிரையை எண்ணி வருந்தினுர். அதை அவர் விற்கவோ மாற்ருகக் கொடுக்கவோ இல்லே. ஜிப்சிகள் அதைத் திருடவும் இல்லே. சொந்தக்காரன் சவாரி செய்கையில் அது மரித்தது.

இது நடந்தது முப்பத்து மூன்ரும் ஆண்டில். கிழவனுர் (அப்போது அவர் கிழவர் அல்ல, திறமை வாய்ந்த விவசாயி அனீசிம் குவாசவ். ஊரார் அவரை அனீசிம்கா என்று அழைத்து வந்தார்கள்) கூட்டுப்பண்ணேயில் சேர்ந்திருந்தார், குதிரையேறி வயல்களேச் சுற்றி வந்து மேற்பார்க்கும் வேலே செய்து வந்தார். அந்தக் காலத்தில் கடும் பஞ்சம் ஏற்பட்டது. மக்கள் களேப் பூண்டுகளேத் தின்ருர்கள், காஞ்சொறியை வெந்து சூப் தயாரித்தார்கள், அடி களங்களில் துடைப்பங்களால் பெருக்கிச் சேகரித்த முந்திய ஆண்டுத் தானியத்தால் நஞ்சு ஊட்டப் பெற்ருர்கள், புதிய அறுவடைக்காகக் காத்திருந்தார்கள். கோடை காலத்தை ஓட்டுவது அவசியமாய் இருந்தது. நம்பிக்கை எல்லாம் பசுக்கள் மேல் இருந்தது. சோகையால் ஊதிப்போன குழந்தைகளுக்குப் பெற்ரேர் நச்சுக் கொல்லியாகப் பாலேப் பருகக் கொடுத்தார்கள்.

கிராமத்து மேய்ப்பன் வலு இல்லாதவன். புல் அறுப்புக் காலத்தில் ஒரு நாள் அவன் பசுக்களே விரட்டிச் சென்றவன், ஒரேயடியாகச் சோர்ந்து போய் உணர்விழந்து விழுந்து

விட்டான். எவ்வளவு நேரம் அவன் அங்கே கிடந்தானே, ஆண்ட வனுக்கே வெளிச்சம். நீண்ட நேரம் என்று அப்புறம் சொன்னான். அதற்குள் பசுக்கள் மூவிலைப் புல்லை வயிருர மேய்ந்தன... பின் மாலையில் அவன் அவைகளைக் கிராமத்துக்கு ஓட்டிக் கொண்டு வந்தான். அவற்றின் வயிறுகள் உப்பி இருந்தன. ''காப்பாற்றுங்கள், இவை மூவிலைப் புல்லை மட்டுமீறித் தின்று விட்டன!..'' என்று முதலில் எதிர்ப்பட்ட மனிதனிடம் கத்தி முறையிட்டான் மேய்ப்பன். அவ்வளவு தான், தொடங்கி விட்டது அமளி!.. பெண்கள் அரற்றினார்கள், ஆண்கள் விலவிலத்துப் போனார்கள். அவர்கள் சாட்டைகளை எடுத்துக் கொண்டு மாடுகளை வீதிகள் வழியே விரட்டத் தொடங்கினார்கள். விபத்து நேர்ந்து விட்டது, கிராமம் முழுவதும் ஓலமிட்டது. பசுக்கள் விழுந்தன, மனிதர்களுக்கு மூச்சு திணறியது, அவர்களும் விழுந்தார்கள். அனீசிமிடம் குதிரை இருந்தது (அனீசிமுக்கு வயலைச் சுற்றி வந்து கண் காணிக்கும் வேலை தரப்பட்ட போது முன்பு அவருக்குச் சொந்தமாய் இருந்த குதிரை மீஷ்கா கூட்டுப்பண்ணையால் அவருக்குக் கொடுக்கப்பட்டது). நிலைமையைக் கண்ட அனீசிம் மீஷ்கா மேல் ஏறிக் கொண்டு தாமும் மாடுகளை விரட்டத் தொடங்கினார். ஊர்க்காரர்கள் இரவு முழுவதும் பசுக்களை ஓட்டிக் கொண்டிருந்தார்கள். விடியும் தறுவாயில் மீஷ்கா அனீசிமுக்கு அடியில் ஈழை இழுக்கத் தொடங்கி முன்னங் கால்களை மடித்து விழுந்தது. அனீசிம் எவ்வளவுதான் பாடு பட்டும் குதிரையைப் பிழைக்க வைக்க அவரால் முடியவில்லை. அனீசிம் அழுதார், குதிரைக்காகத் துக்கம் கொண்டாடினார்... பொதுச் சொத்துக்குத் தீங்கு செய்ததாக அவர் மேல் குற்றம் சாட்டப்பட்டது. ஒன்றரை மாதம் போல வட்டாரச் சிறையில் இருந்தார். அப்புறம் ஒன்றுமில்லை, விஷயம் சரியாகி விட்டது.

இதோ கடைசியில் வந்து விட்டது கிழவனரின் இடம். படிப்படியாகச் சரிந்து சென்ற பள்ளம் பாதைக்கு அருகில் இருந்தது. கீழே சமதரையும் காடும் நீர் ஊற்றும் இருந்தன.

சூரிய பிம்பம் அதற்குள் மேலே எழுந்து விட்டது. முதியவர் இன்று நேரம் தாழ்த்து விட்டார்.

புதிதாக உப்பிலிட்ட வெள்ளரிக்காயுடன் கொஞ்சம் ரொட்டியை மளமளவென்று தின்று விட்டு, அரிவாள் அலகை நேராக்கி, கல்லினல் அதன் முனையைத் தீட்டினார்.

புல் அறுப்பதைக் காட்டிலும் இனிய வேலே எதுவும் இல்லே. தவிரவும், கிழவனுர் தனியே புல் அறுப்பதை விரும் பினுர். ஒரு பகலுக்குள் என்னவெல்லாம் எண்ணங்கள் மனத் தில் எழுந்தன!

அரிவாள் சாறு நிறைந்த புல்லேச் சீழ்க்கை ஒலியுடன் அறுத்துத் தள்ளியது. புல் நடுங்கித் தரையில் சாய்ந்தது. முன்னுல் ஒரு மூன்று அடி தூரத்தில் தலேயைத் தூக்கிற்று ஒரு பாம்பு... பின்பு புல்லில் ஊர்ந்தது. அதன் விகுவுள்ள, அருவருப்பூட்டும் உடல் பளபளத்து நெளிந்தது. கிழவனுர் மனத்தில் பழைய நினேவுகள் மீண்டும் எழுந்தன. ஒருதரம், இளமைப் பருவத்தில் அவர் குதிரையை நல்ல வேகமாக ஓட்டிச் சென்ருர். திடீரென்று பாம்பை உணர்ந்ததாலோ கண்டதாலோ மிரண்டு குதிரை ஒரு புறம் துள்ளி விலகியது. அனீசிம் பிறந்தது முதல் குதிரைச் சவாரியே செய்ததில்லே போல விழுந்து விட்டார். அவருடைய பிட்டம் நேரே பாம்பின் மேல் பட்டது. இதன் பின் ஒரு வாரம் வரை அவருக்குக் கழிச்சல் நிற்கவே இல்லே.

வாழ்ந்து தீர்த்த வாழ்க்கையின் ஆழத்திலிருந்து ஒளி வீசுபவையும் நெஞ்சுக்கு இனியவையுமான தொலே தூர நாட் களே நினேவு மேலும் மேலும் கிளப்பிக் கொண்டு வந்தது. சந்தடியற்ற ஏரியின் கலங்கிய கட்டுக்கிடைத் தண்ணீரில் அடித் தரையிலிருந்து தூய நீர் ஊற்றுக்கள் இப்படித்தான் பொங்குகின்றன. உதாரணமாக, பாம்புகள்... அந்தக் காலத் தில் கிராமத்தில் இருந்தார் குதேல்கா தாத்தா. ஒரு பாம்பைக் கொல்பவனுக்கு நாற்பது பாவங்கள் தொலேயும் என்று அவர் பையன்களிடம் சொன்னுர். பாம்பை நெருப்பில் எறிந் தால் அதன் வயிற்றில் ஏராளமான கால்களேக் காணலாம் என்ருர். பையன்கள் தங்கள் பாவங்களே உற்சாகமாகப் போக்கிக் கொண்டார்கள். பாம்புகளே எரிக்கவும் செய்தார் கள். நெருப்பில் பாம்பு துள்ளிய போது, அதன் வயிற்றின் மேல் வெள்ளே நிறத்தில் சிறிய உறுப்புக்கள் மிக நிறையக் காணப்பட்டன. ''பார்த்தாயா! இதோ அவை!'' என்று பையன்கள் ஆரவாரித்தார்கள். எல்லோரும் கால்களேக் கண் டார்கள்.

மதியத்துக்குள் புல்லின் ஈரம் முழுவதும் காய்ந்து போயிற்று. அது வரை கிழவனுர் புல் அறுத்துக் கொண்டிருந் தார். வெயில் சுள்ளென்று பொசுக்கியது. சூடான அப்பத்தை

யாரோ தலை மேல் வைத்து விட்டாற் போல் இருந்தது'

புல் அறுவை ஆன வெற்றிடத்தைப் பார்வையிட்டு, ''ஆண்டவன் அருள்!'' என்றார் கிழவர். நிறைய வெட்டி இருந் தார். உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்கியது.

புல்லைப் பார்வையிடுவதற்காக இங்கே வந்த போதே தக்க தருணத்தில் தாம் கட்டியிருந்த குடிசைக்குள் போனார். இப்போது அவசரப்படாமல் நன்றாகச் சாப்பிடலாம்.

குடிசையில் வாடிய புல்லின் வெதுவெதுப்பான கடு நெடி அடித்தது. அற்ப ஈ ஒன்று காதைத் துளைக்கும்படி எங்கோ ரீங்காரம் இட்டுக் கொண்டிருந்தது. தத்துக்கிளிகளின் ஒரு சீரான, களைப்பற்ற, வறண்ட கரகரப்பொலி வெப்பமுள்ள நிசப்தத்தை நிறைத்துக் கொண்டிருந்தது. இவற்றோடு வெள்ளி வானம்பாடிகள் இன்னமும் வானத்திலிருந்து இசையைப் பொழிந்தவாறு காற்றில் சறுகிக் கொண்டிருந்தன.

இன்பமாய் இருந்தது! கடவுளே, எவ்வளவு இன்பமாய் இருந்தது!.. தான் இன்பம் அனுபவிப்பதை இந்த மாதிரி ஒருவன் உணரும்படி இன்பமாய் இருப்பது அரிது. நமக்குத் துன்பம் ஏற்படும் போது, ''எங்கோ, யாரோ இன்பமாய் இருக்கிறார்கள்'' என்று நாம் நினைக்கிறோம். ஆனால் நமக்கு இன்பமாய் இருக்கும் போது, ''எங்கோ, யாருக்கோ துன்பம் ஏற்பட்டிருக்கும்'' என்று நாம் எண்ணுவதில்லை. நமக்கு இன்பமாய் இருக்கிறது, அவ்வளவுதான்.

முதியவர் தோய்த்த துணியைப் புல்லின் மேல் விரித் தார். வெள்ளரிக்காய்கள், ரொட்டி முதலியவற்றை அதன் மேல் ஒழுங்காக வைத்தார்... ஊற்றுக்குப் போனார். அங்கே துணி அடைப்பானால் இறுக அடைக்கப்பட்ட பால் புட்டி தண்ணீரில் வைத்திருந்தது. முதியவர் ஓடையின் பக்கம் குனிந்து, மெத்தென்ற ஈரக் கரையில் கைகளை ஊன்றிக் கொண்டு நீண்ட நேரம் நிதானமாக நீரைப் பருகினார். நுண் ணிய வெண் மணல் மணிகள் செம்பழுப்பு அடித்தரையில் ஒன்றன் பின் ஒன்றாக உருண்டு ஓடுவதைக் கண்டார்.

''உயிருள்ளவை போல'' என்று எண்ணிக் கொண்டார் முதியவர். சிரமத்துடன் எழுந்து, புட்டியை எடுத்துக் கொண்டு குடிசைக்குப் போனார். ஹாட் அணிந்து கைத்தடி வைத்திருந்த ஒரு கிழவர் குடிசையின் அருகில் வெட்டு மரக் கட்டை மேல் உட்கார்ந்து புகை பிடித்துக் கொண்டிருந் ததைக் கண்டார்.

''வணக்கம் தெரிவிக்கிறேன்'' என்று முகமன் கூறினுர் ஹாட்டுக்காரர். ''ஆள் இருந்ததைப் பார்த்தேன். இளைப் பாறுவதற்காகக் கொஞ்சம் உட்கார்ந்தேன். உங்களுக்குத் தடை இல்லையே?''

''தடை எதற்காக? இப்படி வாரும். இங்கே வெக்கை அவ்வளவு கடுமை இல்லை'' என்ருர் அனீசிம்.

''வெக்கையாகத்தான் இருக்கிறது'' என்ற ஹாட்டுக்காரரும் குடிசைக்குள் வந்து புல் மேல் அமர்ந்தார். ''கொஞ்சம் வெக்கைதான்'' என்ருர்.

''நல்ல சராய் போட்டிருக்கிருரே... பச்சைக் கறைப் படுமே'' என்று எண்ணிக் கொண்டார் அனீசிம்.

''வேண்டுமானுல் சாப்பிட வாருமேன்?'' என்று அழைத்தார்.

''நன்றி, நான் சற்று முன்புதான் சாப்பிட்டேன்'' என்ற ஹாட்டுக்காரர் அனீசிமைக் கூர்ந்து பார்த்தார். அவருக்கு எக்கச்சக்கமாகக் கூட இருந்தது. ''புல் அறுக்கிறீரோ?''

''ஆமாம். நீர் இந்தப் பக்கத்துக்காரர் இல்லை போலிருக்கிறதே?''

''இந்தப் பக்கத்து ஆள்தான்.''

அனீசிம் விருந்தினரை நோட்டமிட்டவர், ஒன்றும் சொல்லவில்லை.

''அந்த மாதிரி இல்லையோ?''

''ஏன் இல்லை? இப்போது எல்லாம் சகஜம்தான்.'' அனீசிம் வெள்ளரிக்காயை வெடுக்கென்று கடித்துத் தின்னலானுர்... விருந்தாளியின் பார்வையைக் கண்டு கொண்டார். அந்த மனிதர் துணியின் மேல் இருந்த விவசாயியின் எளிய உணவு மீது கண்ணேட்டினுர். ''பசிக்கிறது போலும்'' என்று நினைத்தார் அனீசிம்.

''சாப்பிட வாரும்'' என்று மறுபடி சொன்னுர்.

''நீர் சாப்பிடும். உமக்கு இன்னும் பாதி நாள் வேலை செய்தாக வேண்டும். உழைக்க வேண்டுமே.''

''இங்கேதான் நிறைய இருக்கிறதே!''

நகரத்து முதியவர் ஹாட்டைக் கழற்றினுர். அவருடைய வழுக்கை மண்டை பளபளத்தது. அவர் கொஞ்சம் நகர்ந்து ஒரு வெள்ளரிக்காய் எடுத்துக் கொண்டு ரொட்டியை விண்டார்.

''உம்மிடம் செய்தித்தாள் இல்லையோ?'' என்று கேட்டார் அனீசிம்.

''எதற்காக?'' என்று வியந்தார் விருந்தாளி.

''சராயைக் கறைப்படுத்திக் கொள்கிறீரே. நல்ல சராய் ஆயிற்றே.''

''அதுவா... அட கிடக்கிறது, விடும். ஆகா, வெள்ளரிக் காய் பிரமாதம்!..''

''என்ன?''

''பிரமாதம்!''

''இந்தப் பக்கத்துக்காரர் என்று சொல்லுகிறீர்?.. எந்த ஊர்?''

''இதோ, கிட்டத்தில்தான்...''

விருந்தாளி இந்தப் பக்கத்து ஆள் என்பதில் அனீசிமுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. மெய்யாகவே அவர் அந்த மாதிரி இருக்கவில்லை.

''இப்போது நான் இங்கே வசிக்கவில்லை, ஆனால் பிறந்தது இங்கேதான்.''

''அப்படியா. விருந்தாளியாக வந்திருக்கிறீரோ?''

''பிறந்த இடத்தைப் பார்த்துப் போக வேண்டும்... சாவு நெருங்குகிறது. உமக்கு எந்த ஊர்?''

''லெபியாழியே. இதோ இந்தப் பாதையில் இருக்கிறது...''

''மனைவியும் நீரும் மட்டும் தனியாய் இருக்கிறீர்களோ?''

''ஆமாம்.''

''குழந்தை குட்டிகள் உண்டா?''

''இருக்கிறார்கள். மூன்று பேர். இன்னும் இரண்டு பேர் யுத்தத்தில் கொல்லப்பட்டார்கள்.''

''இந்த மூன்று பேரும் எங்கே? நகரத்திலா?''

''மகன் கோல்யா நகரத்தில் இருக்கிறான். பெண்கள் வாழ்க்கைப்பட்டு விட்டார்கள். ஒருத்தி செபுர்லாக்கில் கூட்டுப்பண்ணை வேலைக் குழுத் தலைவனுக்கு. இன்னொருத்தி இன்னும் தொலைவில்.'' இரண்டாவது மகள் வாழ்க்கைப் பட்டிருப்பது ருஷ்யனுக்கு அல்ல என்பதை முதியவர் சொல்லவில்லை. ''நீனா வசந்தத்தில் வந்திருந்தாள்... அவளுடைய பிள்ளைகள் பெரியவர்கள் ஆகி விட்டார்கள்.''

''கோல்யா எந்த நகரத்தில் இருக்கிறான்?''

''அட அவன் நகரத்தில் இருப்பதாகப் பெயர், ஆனால்

இருப்பது கிடையாது. அவனுடைய வேலை ஒழுங்கில்லாதது. ஓயாமல் பயணம் செய்கிறான். அவர்கள் இரும்பு தேடுகிறார்கள்.''

''அது எந்த நகரமோ?''

''லெனின்கிராது. எங்களுக்கு எழுதுகிறான், பணம் அனுப்புகிறான்... ஆகவே வசதியாக வாழ்கிறான். அவனும் இங்கே வர ஆசைப்படுகிறான், ஆனால் ஒழிவுதான் கிடைப்பதில்லை. ஒருவேளை வருவான்.''

நகர முதியவர் கொஞ்சம் பால் குடித்து விட்டுக் கைக் குட்டையால் வாயைத் துடைத்துக் கொண்டார்.

''நன்றி. நன்றாகச் சாப்பிட்டேன்.''

''என்ன பிரமாதம்.''

''புல் அறுக்கப் போகிறீரா?''

''இல்லை, கொஞ்சம் பொறுக்கிறேன். வெயில் கொஞ்சம் தாழட்டும்.''

''கோல்யா எப்போது பிறந்தான்?'' என்று விருந்தாளி கேட்டார்.

''இருபதாம் ஆண்டில்'' என்று பதிலளித்த அனீசிம், ''இவர் எதற்காக எல்லாவற்றையும் விசாரிக்கிறார்?'' என்று அப்போதுதான் நினைத்தார். விருந்தாளி மீது பார்வை செலுத்தினார்.

அந்த மனிதர் மகிழ்வின்றியும் அதே சமயம் ஒரே ஏக்கம் இல்லாமலும் குறுநகை செய்தார்.

''அப்படியாக்கும் சேதி, ஊர்க்காரரே'' என்றார்.

''வேடிக்கையான ஆள்'' என்று எண்ணிக் கொண்டார் அனீசிம். ''வயதாகி விட்டது, வேடிக்கையான போக்குகள் ஏற்படுந்தானே.''

''உம் உடல்நிலை எப்படி?'' என்று மேலும் தூண்டித் துளைத்தார் நகரத்தார்.

''இப்போதைக்கு ஆண்டவன் அருள்கிறான்... தலைதான் வலிக்கிறது. எங்கள் ஊர்க்காரர்களில் பாதிப் பேர் தலைவலியால் தொல்லைப்படுகிறார்கள், இளைஞர்கள்கூட.''

''சொந்தக்காரர்கள் யாராவது இருக்கிறார்களா? சகோதரர்கள், சகோதரிகள்...''

''இல்லை, ரொம்ப காலமாகவே...''

''காலமாகி விட்டார்களோ?''

''சகோதரிகள் இறந்து போனார்கள். சகோதரன் முதல் யுத்தத்திற்குப் போனவன் இன்னும் வரவில்லை.''

''கொல்லப்பட்டானு?''

''அப்படித்தான் இருக்கும். யுத்தத்துக்குப் போனவர்கள் வராதது எதனுல்?''

நகர முதியவர் சிகரெட்டு பற்ற வைத்துக் கொண்டார். அடுக்குகளாக அமைந்த நீலப் புகைத் தாரை வாயிலுக்குச் சென்றது. இங்கே குடிசையில், பசிய நிழலில், புகை துலக்க மாகத் தென்பட்டது. ஆனுல் வெளிச்சமான வெளியில், காற்று கொஞ்சங்கூட இல்லாவிடினும், அது உடனே எங்கோ மறைந்து விட்டது. தத்துக்கிளிகள் சிலம்பின. புதர்களில் மறைந்தவாறு சீழ்க்கை அடித்தன பறவைகள். இசையில் வல்ல கொண்டைக் குருவிகள் நிலத்தின் வெதுவெதுப்பான நெஞ்சில் தங்கள் முடிவற்ற பிர்க்காக்களைப் பொழிந்தன.

குடிசை வாயில் அருகே வளர்ந்த உயரமான புல் மீது ஊர்ந்து ஏறிற்று புள்ளியிட்ட பொன் வண்டு. விடாப்பிடி யாக, அச்சமின்றி ஏறிக் கொண்டு போயிற்று... கிழவர்கள் அதன் மேல் பார்வை செலுத்தத் தலைப்பட்டார்கள். வண்டு உச்சி வரை ஏறி, புல் நுனியில் சற்று ஊசலாடியது, சிறகு களை விரித்தது, புற்களுக்கு மேல் பக்க வாட்டில் போலப் பறந்து போய் விட்டது.

''ஆக, நாம் நம் வாழ்க்கையை வாழ்ந்து தீர்த்து விட் டோம்'' என்று குரலை உயர்த்தாமல் சொன்னுர் நகரத்து முதியவர்.

அனீசிம் திடுக்கிட்டார். இந்தச் சொற்கள் வியப்பூட்டும் அளவுக்குப் பழக்கமானவையாக ஒலித்தன. சொற்களே அல்ல, அவை சொல்லப்பட்ட தோரணை. இந்த மாதிரிச் சொல்லி வந்தார் தகப்பனுர், சிந்தனையில் ஆழ்ந்த போது, அரிதாகப் புலப்படும் குறுநகையுடன், லேசான வியப்புடன். அவராய் இருந்தால் மேற்கொண்டு ''உன் ஆத்தாளை...'' என்று சில வசவுகளையும் சேர்த்திருப்பார். கொஞ்சலாக.

''ஏக்கமாய் இல்லையா, ஊர்க்காரரே?''

''ஏக்கப்பட்டாலும் படாவிட்டாலும் பயன் என்ன?''

''இந்த மாதிரி வேளையில் மனிதனுக்கு உதவ ஏதாவது வேண்டுமே?''

''உமக்கு எங்காவது வலிக்கிறதா என்ன?''

''நெஞ்சில். கொஞ்சம் போல. வருத்தமாய் இருக்கிறது. வாழ்க்கை தெவிட்டவில்லை, அலுக்கவில்லை. அதாவது, வேறு விதமாய்ச் சொன்னுல், நான் தயாராகவில்லை.''

''கெக்கே!.. வாழ்க்கை எப்போதாவது தெவிட்டுமா? நிலத் தாயின் மடியில் படுக்க யாருக்குத்தான் விருப்பம்?'

''தற்கொலை செய்து கொள்பவர்கள் இருக்கிறார்களே...''

''அவர்கள் நோயாளிகள். மட்டுமீறிய உழைப்பால் மனிதன் முறிந்து போகிறான். பார்ப்பதற்கு ஒன்றும் இல்லை போலத் தோன்றுகிறது, ஆனால் உள்ளுக்குள் அவன் வாழவில்லை. என்னமோ நச்சரிக்கிறீரே.''

''தவிர முடிவு வரை யோசனை செய்யவும் இல்லை, எதனாலோ... எனக்கே புரிகிறது, அசட்டுத்தனம் என்று. கிடைத்த இன்பங்கள் எல்லாவற்றையும் பற்றி வெகு காலத்துக்கு முன்பே தீர ஆலோசித்து விட்டேன்.'' நகரத்தார் சற்று நேரம் பேசாதிருந்தார். பின்பு சொன்னார்: ''இதோ இந்த அமைதியை இழக்க வருத்தமாய் இருக்கிறது... நிறைய ஓடிச் சாடி விட்டேன். ஆனால் இடத்தை விட்டுக் கொடுக்க வேண்டுமே. இல்லையா?''

''ஆமாம். ஹெ-ஹே!.. விட்டுக் கொடுக்க வேண்டும் தான்.''

''முடிந்தால் எங்காவது நிலையாக வாழ்க்கையை அமைத்துக் கொள்ளலாம், மற்றவர்கள் நம்மை மறந்து விடாதபடி, முடிந்தால் ஓர் இருநூறு வயது வாழலாம். ஊம்?'' முதியவர் குதூகலமாக வாய்விட்டுச் சிரித்தார். இந்தச் சிரிப்பில் சஞ்சலம் உண்டாக்கும் அளவுக்குப் பழக்கமான ஒன்று தொனித்தது. ''எல்லாம் இதே போல இருந்து வரும்படிச் செய்யலாம். ஊம்?''

''சலித்துப் போகும், ஒருவேளை.''

''எனக்கு என்னவோ ஒருபோதும் சலித்துப் போக மாட்டேன் என்கிறது!''

''நீர் சாவைப் பற்றி முன் கூட்டியே நினைக்காதேயும், உமக்கு அச்சம் உண்டாகாது. வரும் போது வரட்டுமே... எத்தனை நாள் நோய்வாய்ப்படப் போகிறோம்! ஒரே வாரத்தில் ஆட்கள் கடையைக் கட்டி விடுகிறார்களே.''

''ஆமாம்...''

''நீர் வரப் போவதை எப்போதும் ஊகித்துக் கொண்டிருக்கிறீர். நானோ, இடைவிடாமல் பின்னே திரும்பிப் பார்க்கிறேன். இதுவும் மோசம். நிம்மதி குலைவதுதான் கண்ட பலன்.''

''நடந்தவற்றை நினைத்துப் பார்க்கிறீரோ?''

''ஆமாம்.''

''இது நல்லது.''

''நல்லதாவது. மனம் கவலையால் நிறைந்து விடுகிறதே. எதற்காக இது?''

''இல்லை, இது நல்லது. உமக்கு என்ன நினைவு வருகிறது? பிள்ளைப் பருவமா?''

''அதிகமாக—பிள்ளைப் பருவம்தான்.''

''எதையாவது விவரமாகச் சொல்லுமேன்! போக்கிரித் தனம் செய்தீர்களோ?''

''எனக்கு அண்ணன் இருந்தான், கிரீன்கா. படு போக்கிரி அவன்.'' அனீசிம் நினைவுபடுத்திக் கொண்டு புன்னகைத் தார். ''இந்தக் குறும்பு எல்லாம் எங்கிருந்துதான் வந்ததோ அவனுக்கு!.. யுத்தத்திலும் மற்றவர்களுக்கு முன்னால் பாய்ந் திருப்பான், கட்டாயம்...''

''என்ன குறும்பு செய்தான் அவன்?'' என்று ஆர்வம் பொங்க வினவினார் நகரத்து முதியவர். ''இளைப்பாறிக் கொண்டுதானே இருக்கிறீர் இப்போது, தயவு செய்து சொல்லுமேன்.''

''ஹெஹ்!..'' அனீசிம் தலையை ஆட்டி நீண்ட நேரம் மௌனமாய் இருந்தார். ''சரியான படுக்காளி அவன்.... எங்கள் அண்டை வீட்டுக்காரர் யெகோர் சலீஷெவ் ஒரு தரம் தம்முடைய காய்கறித் தோட்டத்தில் எங்களைப் பிடித்து விட்டார், ஊம், நன்றாக விளாறினார். நாங்கள் கெட்ட காரி யம் செய்தோம், அதற்கு அவர் தண்டித்தார். தர்பூசனி இன்னும் பழுக்காமல் இருந்தது. நாங்கள் தர்பூசனிக் காய் களைத் தின்றதைக் காட்டிலும் அதிகமாகப் பாழ்படுத் தினோம். இரவில்தான் கண்ணுக்குத் தெரியாதே. நாங் கள் காய்களை முழங்காலில் அடித்து விண்டோம், கடித் தோம், பழுக்கவில்லை என்று தெரிந்ததும் எறிந்து விட்டோம். இதற்காகத்தான் அண்டை வீட்டுக்காரர் தண்டித்தார். தொலித்துப் போட்டு விட்டார்.அப்புறம் தகப்பனார் வேறு பூசை போட்டார். கிரீன்காவுக்கு ஆத்திரம் பொங்கிற்று. என்ன செய்தான் தெரியுமோ? அன்று எங்கள் வீட்டில் பன்றியை அறுத்திருந்தார்கள். கிரீன்கா அதன் இரைப்பைச் சவ்வை எடுத்துச் சாம்பலில் புரட்டினான்... சவ்வை உப்பச் செய்வது எப்படி, தெரியுமா?''

''தெரியும்.'' •

''சரி, அதைக் காயப்போட்டு, ஊதி உப்பச் செய்தான். பயங்கரமான மூஞ்சியை அதன் மேல் வரைந்தான்...'' அனீசிம் பக்கென்று சிரித்தார். ''அந்த மாதிரி முகரைக்கட்டையை அவன் எங்கேதான் பார்த்தானே?.. ஆக, நாங்கள் இரவு வருவதற்காகக் காத்திருந்தோம், பின்பு யெகோரின் வீட்டு முகப்புக்கு ஓசைப்படாமல் போய், சவ்வு மூஞ்சியை நிலைச் சட்டத்தில் தொங்க விட்டோம்...காலையில் யெகோர் கதவைத் திறந்து வெளியே வந்தார். அந்த மூஞ்சி நேராக அவர் முகத்தைப் பார்த்தது... அவருக்குக் குலை பதறிப் போயிற்று. கதவை அறைந்து சாத்தி விட்டு வீட்டுக்குள் பதுங்கி விட்டார். பின்பு, 'காப்பாற்றுங்கள்! என் வீட்டு முகப்பில் பேய் நிற்கிறது!' என்று புகைக் குழாய் வழியே ஓலமிட்டார்.''

நகரத்து முதியவர் கடகடவென்று உரக்கச் சிரித்தார். கண்ணீர் பொங்கும் வரை சிரித்துக் கொண்டிருந்தார்...

''நொறுங்கிப் போனர் அந்த ஆள். ஊம்? ஹ-ஹா!..''

''ஆமாம். அப்புறம் ஊர்க்காரர்கள் அவருக்கு 'பேய் கண்ட யெகோர்க்கா' என்றே பெயர் சூட்டி விட்டார்கள்.''

''நாங்கள் கொஞ்சம் பெரியவர்கள் ஆன பிறகு நடந்ததைக் கேளும். அப்போது ஊர்க்காரர்கள் புல் அறுத்துக் கொண்டிருந்தார்கள்... எங்கள் ஊர்க்காரர் மிக்கொலாய் ரகோதின் தந்திரக்காரப் பேர்வழி. பிறத்தியார் பொருளைச் சூறையாடுவதில் கெட்டிக்காரர். அவர் மாலையில் அண்ணனிடம் சொன்னர்: 'கிரீன்கா, யாருடைய குதிரையிலாவது—என்னுடையதில் வேண்டுமானலும்—சேணம் கட்டி ஏறிக் கொண்டு கிராமத்துக்குப் போ. யாருடைய கோழிகளையாவது பிடித்துக் கொண்டு வா. கோழிக்கறி சாப்பிட ஆசையாய் இருக்கிறது.' கிரீன்கா நெடு நேரம் யோசிக்காமல் குதிரைக்குச் சேணம் கட்டி ஏறிக் கொண்டு கிராமத்துக்குப் போனன். கொஞ்ச நேரத்துக்குப் பிறகு ஐந்து கோழிகளைத் தலைகளைத் திருகிப் போட்டு விட்டு எடுத்து வந்தான். நாங்கள் எல்லோரும் மகிழ்ச்சி அடைந்தோம். அவைகளை உடனே சமைத்தோம்... விரும்பிய வகையில் சமைக்க எங்களுக்கு முடிந்தது. மிக்கொலாய் சாப்பிட்டார், அருமையாகக் கறி சமைத்திருப்பதாக எங்களைப் பாராட்டினர். 'சபாஷ் கிரீன்கா' என்று மெச்சினர். 'மிக்கொலாய் மாமா, சாப்பிடும். உம்முடைய கோழிகள்தாம் இவை. தாராளமாகச் சாப்பிடும்' என்றுன் கிரீன்கா.''

இரண்டு கிழவர்களும் உளமாரச் சிரித்தார்கள். நகரத்தார் சிகரெட்டு பற்ற வைத்துக் கொண்டார்.

''அப்புறம் அவர் திட்டி நொறுக்கினுரே பார்க்க வேண்டும்!.. ஆனுல் என்ன செய்வது? அவரேதாமே அனுப்பினுர்.''

''ஆம்...'' என்று கண்களைத் துடைத்துக் கொண்டார் நகர முதியவர். பின்பு எண்ணத்தில் ஆழ்ந்தார்.

அவரவர் தம் தம் எண்ணங்களில் ஆழ்ந்தவர்களாக இருவரும் நீண்ட நேரம் மௌனமாய் இருந்தார்கள். குடிசைக்கு வெளியிலோ, வாழ்க்கை ஓய்வின்றிக் கணகணத்தது, சூடேறிக் கொண்டு போயிற்று. மேலும் மேலும் தனித்து ஒதுங்கிய நிலையிலும் புரிந்து கொள்ள முடியாத வகையிலும் தன் எழிலை வெயிலில் திறந்து காட்டிக் கொண்டிருந்தது அது.

''நல்லது, போய் வேலையைப் பார்க்கிறேன்'' என்ருர் அனீசிம். ''வெயில் கொஞ்சம் போலத் தணிந்திருக்கிறது.''

''வெக்கையாய் இருக்கிறதே இன்னும்...''

''பரவாயில்லை.''

''பசு வைத்துக் கொள்வது கட்டாயமாகத் தேவையோ?''

''பின்னே இல்லாமல்?''

அனீசிம் புல் அரிவாளை எடுத்து, சாணைக் கல்லால் தீட்டினுர். அறுத்த புல் வரிசைகள் மீது கண்ணேட்டினுர். நன்ருக வேலை செய்திருக்கிருேம் என்று மனநிறைவு கொண்டார். நகர முதியவரோ, அவரைப் பார்த்துக் கொண்டிருந்தார்... கவனமாக. ஏக்கத்துடன்.

''நல்லது, போகிறேன்'' என்று மறுபடி சொன்னுர் அனீசிம்.

''சரி, போம்'' என்ருர் நகரத்தார். ''அதோடு... எனக்கும் விடை கொடும்.'' அனீசிமின் கண்களை இன்னெரு தரம் நேரிட்டு நோக்கினுர், மேற்கொண்டு ஒன்றும் சொல்லாமல் கையை இறுகப் பற்றிக் குலுக்கினுர். பின்பு பாதையை நோக்கி மலையில் விரைவாக நடந்தார். பாதையைச் சேர்ந்ததும் திரும்பிப் பார்த்தவாறு சிறிது நின்ருர். அப்புறம் மேலே சென்ருர். திருப்பத்திற்கு அப்பால் மீண்டும் மறைந்து விட்டார்.

கிழவனுர் வெகு நேரம் வரை புல் அறுத்துக் கொண்டிருந்தார்.

பிறகு வீட்டுக்குப் போனுர்.

வீட்டில் மனைவி அவரை எதிர்பார்த்து ஆவலுடன் காத்திருந்தது தெரிந்தது.

''நம் வீட்டுக்கு ஒரு மனிதர் வந்தார்!'' என்று முதியவர் வாயிலுக்குள் புகுந்ததும் புகாததுமாகச் சொல்லத் தொடங்கினாள் அவள். ''நீளமான மோட்டார் வண்டியில். உன்னைப் பற்றி விசாரித்தார். 'உங்கள் வீட்டுக்காரர் எங்கே?' என்று கேட்டார்.''

அனீசிம் நிலையருகே உட்கார்ந்து தம் மூட்டையைத் தரையில் வைத்தார்...

''ஹாட் போட்டிருந்தாரா? ரொம்ப வயதான ஆள்...''

''ஆமாம், ஹாட்டு போட்டிருந்தார். சூட்டு மாட்டிக் கொண்டிருந்தார்... பள்ளி ஆசிரியர் போல.''

கிழவர் கால்களுக்கு அடியில் தரையை நோக்கியவாறு நீண்ட நேரம் பேசாதிருந்தார். பகலில் சற்று முன்பு அவரை வியப்பில் ஆழ்த்திய விந்தையான ஒற்றுமை இப்போதுதான் நினைவுக்கு வந்தது. இப்போதுதான் அது ஞாபகம் வந்தது! ஆனால்... அப்படி இருக்குமா?''

''நம் கிரீன்காதான் வந்திருந்தானே? நீ எதையும் குறிப்பாகக் காணவில்லையா?''

''ஆண்டவன் உன்னைக் காக்க!.. மூளை புரண்டு விட்டது உனக்கு. பரலோகத்திலிருந்து வந்தானா என்ன?''

நெஞ்சின் எல்லா வித ஊகங்களையும் பெண்சாதியிடம் சொல்லாதிருப்பதே மேல். புரிந்து கொள்ள மாட்டாள். அந்த மட்டி இளம் பெண்ணாய் இருக்கும் போது படு அசட்டுத்தனமான சொற்களைக்கூட வெட்கப்படாமல் அவளிடம் சொல்லலாம், நம்புவாள். வயதான பெண்சாதியிடம் தற்செயலான எண்ணத்தை வெளியிட்டாலும், சரி, மடத்தனம் செய்து விட்டோம் என்று அக்கணமே உணர்வோம்.

''அவர் போய் விட்டாரோ?''

''போய் விட்டார். மதியத்துக்குப் பிறகு நடந்தது இது...''

''கிரீன்காவா என்ன? அவனேதான் வந்திருந்தானா?''

கிழவர் இரவு முழுவதும் கண் உறங்கவில்லை. எண்ணமிட்டவாறு இருந்தார். கிரீன்கா அல்ல, அவனைப் போன்றவர் என்று காலையில் முடிவு செய்தார்.

ஒருவனைப் போல இருப்பவர்கள் கொஞ்சமா என்ன? தவிர, தான் இன்னான் என்று ஒப்புக் கொள்ள அவனுக்கு

என்ன தடை? நெஞ்சின் பழைய புண்களை வீணே கிளற வேண்டாம் என்று இருந்து விட்டானே? அவன் சிறு வயது முதலே ஒரு மாதிரியான ஆள்...

''வந்தவன் கிரீன்காவா என்ன?''

ஒரு வாரம் கழித்து முதியவர்களுக்கு ஒரு தந்தி வந்தது:

''அனீசிம் ஸ்தெபானவிச் குவாசவுக்கு.

உங்கள் சகோதரர் கிரிகோரி ஸ்தெபானவிச் பன்னிரண்டாம் தேதி காலமானார். உங்களுக்குத் தெரிவிக்கச் சொல்லி இருந்தார். குவாசவ் குடும்பத்தார்.''

வந்தவன் அண்ணன். கிரீன்கா.

**வாழ விருப்பம்** காட்டுத் திறப்பு வெளி குன்றின் மேல் இருந்தது, திறப்பு வெளியில் இருந்தது மர வீடு. வீடு என்பது பெயருக்குத்தான். ஒரு பதின்மூன்று-பதினன்கு கட்டைகள் அடுக்கிய களஞ்சிய அறை போன்றது, அதில் ஒரு சாளரம். நடை கிடையாது, கூரைகூடக் கிடையாது. சைபீரியக் காடான தைகாவில் இந்த மாதிரி மர வீடுகளைப் பண்டைக் காலம் முதல் யார் கட்டுகிருர்கள்?.. வசந்தத்தில் யாரேனும் ஆட்கள் வருவார்கள், சம உயரமுள்ள தேவதாரு மரங்களை வெட்டி வீழ்த்துவார்கள், பட்டைகளை உரிப்பார்கள்... இலையுதிர்காலம் நெருங்கும் தறுவாயில், பருவ நிலை நன்ருயிருக்கும் போது, மூன்று, நான்கு பெயர் மரங்களைத் துண்டு போட்டு ஒரு வாரத்தில் வீடு அமைத்துக் கொள்வார்கள். அருகாமையில் களிமண்ணும் கற்களும் கிடைக்கும்—அவற்ருல் அடுப்பு கட்டி, கூரையில் புகை போக்கி வைத்து, பலகைக் கட்டில்கள் தயாரிப்பார்கள். சந்தோஷமாக வாழலாம்.

இந்த மாதிரி மர வீட்டுக்குள் பனிக் காலத்தில் போனுல் ஒரு பூதரைக் காண முடியாது. சுவர்கள் மேலும் பொருத்து துளைகளிலும் உள்ளங்கைப் பருமனுக்கு உறைந்த ஆவி அடையிலிருந்து கட்டுக்கிடையான புகையின் ஈர வாடை வீசும். ஆனுல் அடுப்பில் விறகுக் கட்டைகள் எரிந்து சடசடக்கத் தொடங்குகின்றன... இளகும் களிமண்ணின் அடர்ந்த ஈர மணம் பரவுகிறது. சுவர்களிலிருந்து நீர்த்துளிகள் சொட்டுகின்றன. நச்சுக் கரியாவி சூழ்கிறது. அடுப்பு நிறைய விறகுகளைத் திணித்து விட்டுக் கொஞ்ச நேரம் வெளியே போய் முன்னேற்பாடாக விறகு வெட்டி வைத்துக் கொள்வது நல்லது... அரை மணி சென்றதும் வீட்டில் கதகதப்பாய் இருக்கும், மூச்சு முட்டாது. மேல் கோட்டைக் கழற்றிவிட்டு அடுப்பில் இன்னும் நிறைய விறகுகளைச் செருகலாம். சுவர்கள் லேசாக ஆவி விடும், அடுப்பிலிருந்து வெக்கை அடிக்கும். ஒரு மாதிரி அமைதியான இன்பம், மகிழ்ச்சி மனிதனை ஆட்கொள்ளும். ''ஆகா!.. இது அல்லவா வாழ்க்கை!'' என்று சொல்ல விருப்பம் உண்டாகும். இப்போது அனேகமாக எல்லா இடங்களும் உலர்ந்திருக்கின்றன, ஆனுல் படுக்கைப் பலகைகள் இன்னமும் குளிர்கின்றன. பரவாய் இல்லை, விரை

வில் அவையும் கதகதப்பாகி விடும். இப்போதைக்கு அவற்றின் மேல் மேல் கோட்டுகளைப் பரப்பி, உணவுப் பண்ட மூட்டையைத் தலைக்குயரம் வைத்துக் கொண்டு படுத்து, அடுப்பின் பக்கம் கால்களை நீட்டிக் கொள்ளலாம். தூக்கம் கண்ணைச் செருகுகிறது. உடம்பு ஓய்ந்து வருகிறது. எழுந்திருந்து அடுப்பில் இன்னும் விறகுகளைச் செருகச் சோம்பலாய் இருக்கிறது. ஆனால் செருகுவது அவசியம்.

கணகணத்துச் சிவந்த மரக்கரி அடுப்பில் மலையாய்க் குவிந்திருக்கிறது. விறகுக் கட்டைகள் போட்டதுமே குப்பென்று பற்றி எரிகின்றன—பிர்ச் மரப் பட்டைகள் போல. இங்கேயே, அடுப்புக்கு முன்னே இருக்கிறது வெட்டுமரத் துண்டு. அதன் மேல் உட்கார்ந்து சிகரெட்டு பற்ற வைத்துக் கொண்டு எண்ணமிடலாம். தனியாய் இருக்கையில் நன்ருகச் சிந்தனை செய்ய முடிகிறது. இருட்டாய் இருக்கிறது. அடுப்பு இடுக்குகள் வழியாக மட்டுமே வெளிச்சம் வருகிறது. இந்த வெளிச்சம் தரை மேலும் சுவர்கள் மீதும் விட்டத்திலும் நர்த்தனமாடுகிறது. என்னவெல்லாமோ நினைவுகள் கிளர்கின்றன? காதல் கன்னியை முதல் தடவை வீடு வரை கொண்டு விட்டது நினைவுக்கு வருகிறது. அவள் அருகாக நடந்தவாறு மடையன் போல வாயை மூடிக் கொண்டிருந்தது நினைவுக்கு வருகிறது... உட்கார்ந்து வாய்க்குள் சிரித்துக் கொள்வது நமக்கே தெரியவில்லை. சைத்தானுக்கே வெளிச்சம்—ஏனோ இன்பம் ததும்புகிறது!

ஒரே கதகதப்பு. தேநீர் தயாரிக்கலாம். பாளமாக இறுக்கிய பச்சைத் தேயிலையால். அது புல் மணம் வீசும், கோடை நாட்களை நினைவுபடுத்தும்.

...கிழவன் நிக்கீதிச் கருக்கலில் அடுப்புக்கு எதிரே இந்த மாதிரி அமர்ந்து சுங்கான் புகைத்துக் கொண்டிருந்தான்.

மர வீட்டில் வெப்பமாக இருந்தது. வெளியிலோ கூதல். நிக்கீதிச்சின் உள்ளத்தில் மகிழ்ச்சி நிறைந்திருந்தது. சிறு வயது முதற்கொண்டு அவன் தைகாவில் நெடுகச் சுற்றி இருந்தான். வேட்டையாடி வந்தான். அணில்களைச் சுட்டான். சில சந்தர்ப்பங்களில் பெருங் கரடியையும் சுட்டு வீழ்த்தியது உண்டு. இதற்காக மேல் கோட்டின் இடது பையில் பெருங் குண்டுத் தோட்டாக்கள் ஐந்தாறு எப்போதும் வைத்திருந்தான். தைகா அவனுக்குப் பிடித்திருந்தது. சிறப்பாகக் குளிர் காலத்தில். அளவில்லாத நிசப்தம் கொஞ்

சம் நசுக்குவது போல இருந்தது. ஆனல் தனிமை வதைக்க வில்லை, கட்டற்றவன் ஆக்கியது. நிக்கீதிச் கண்களை இடுக்கிக் கொண்டு சுற்றும் பார்வை செலுத்தினன். இந்தப் பெரிய வெண்மை அரசில் தனியாட்சி செலுத்துபவன் தான் ஒரு வனே என்று அறிந்தான்.

...நிக்கீதிச் உட்கார்ந்து புகை பிடித்துக் கொண்டிருந் தான்.

வெளியே ஸ்கீகள் வெண்பனியில் சரசரத்தன. பின்பு ஓசை அடங்கிப் போயிற்று. யாரோ சாளரத்தின் வழியே உள்ளே பார்த்தது போல் இருந்தது. பின்பு ஸ்கீகள் மறுபடி கிரீச்சிட்டுச் சரசரத்தன—வாசலுக்கு வந்தன. யாரோ கழி யால் கதவை இரண்டு தரம் தட்டினுர்கள்.

''யாராவது இருக்கிறுர்களா?''

இளமையான குரல் கடுங்குளிராலும் நீண்ட நேர மௌனத் தாலும் கம்மிக் கரகரத்திருந்தது. மனிதன் தனக்குத் தானே பேசிக் கொள்ள முடியாதே.

''வேட்டைக்காரன் அல்ல'' என்று புரிந்து கொண்டான் நிக்கீதிச். வேட்டைக்காரன் கேட்டுக் கொண்டிருக்க மாட் டான், உள்ளே வந்து விடுவான், அவ்வளவுதான்.

''நான் இருக்கிறேன்!''

கதவின் மறு புறம் இருந்தவன் ஸ்கீகளைக் கழற்றிச் சுவர் மேல் சார்த்தினன். வாயிற்படிகளில் அவனுடைய கால்கள் நெறுநெறுத்தன... கதவு சற்று திறந்தது. உள்ளே வந்த நெடிய இளைஞனை வெள்ளை நீராவிப் படலத்தில் நிக்கீதிச் சால் நன்ருகப் பார்க்க முடியவில்லை. இடைவாரால் இறுக்கிய கோட்டும் பஞ்சுச் சராயும் பழைய இராணுவத் தொப்பியும் அணிந்திருந்தான் அவன்.

''இங்கே யார்?''

''மனிதன்.'' நிக்கீதிச் சிருயைக் கொளுத்தித் தலைக்கு மேல் உயர்த்தினன். சிறிது நேரம் இருவரும் ஒருவரை ஒரு வர் மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

''தனியாகவா இருக்கிருய்?''

''ஆமாம்.''

இளைஞன் அடுப்பருகே போய், கையுறைகளைக் கழற்றிக் கமுக்கட்டில் இடுக்கிக் கொண்டு கைகளை அடுப்பின் பக்கம் நீட்டினன்.

''கடுங்குளிர், அதைச் சைத்தான் கொண்டு போக...''

''குளிர் கடுமைதான்''' என்ற நிக்கீதிச் இளைஞனிடம் துப்பாக்கி இல்லாததை அப்போதுதான் கவனித்தான். இல்லை, இவன் வேட்டைக்காரன் அல்ல. பார்வைக்கு அப்படித் தெரியவில்லை. முகத்திலும் சரி, உடையிலும் சரி. ''மார்ச்சு மாதம் இன்னமும் குளிராய்த்தானே இருக்கும்'' என்றான்.

''மார்ச்சாவது ஒன்றாவது? இப்போது ஏப்ரல் அல்லவா?''

''அது புதிய கணக்குப்படி. பழைய கணக்குப் பிரகாரம் இப்போது மார்ச்சு மாதம். எங்கள் வட்டாரத்தில் சொல்லுவார்கள், 'மார்ச்சு, இரட்டை உடுப்பால் போர்த்து' என்று. நீயோ, லேசான உடை போட்டிருக்கிறாய்.'' இளைஞனிடம் துப்பாக்கி இல்லாதது பற்றிக் கிழவன் ஒன்றும் சொல்லவில்லை.

''பரவாயில்லை'' என்ற இளைஞன், ''நீ தனியாகத்தான் இருக்கிறாயா?'' என்று கேட்டான்.

''தனியாகத்தான் இருக்கிறேன். இதை நீ ஏற்கெனவே கேட்டு விட்டாயே.''

இளைஞன் இதற்கு எதுவும் சொல்லவில்லை.

''குந்து. இதோ தேநீர் தயாரிப்போம்.''

''கொஞ்சம் சூடுபடுத்திக் கொள்ளுகிறேன்...'' இளைஞன் பேசிய விதம் சைபீரிய வட்டாரத்தைச் சேர்ந்ததாய் இல்லை. ருஷ்யப் பேச்சு. இளைஞனைப் பற்றிய விவரங்களை அறியக் கிழவனுக்கு ஒரே ஆவலாய் இருந்தது. ஆனால் எடுத்த எடுப்பில் கேள்விகள் கேட்டுத் துளைக்கக் கூடாது என்ற நெடுங்கால வழக்கம் ஆவலைக் காட்டிலும் வலியதாக இருந்தது.

இளைஞன் கைகளைச் சூடுபடுத்திக் கொண்டு சிகரெட்டு புகைத்தான்.

''உன் வீட்டில் நன்றாய் இருக்கிறது. கதகதப்பாக.''

அவன் சிகரெட்டு பிடித்துக் கொண்டிருந்த போது நிக்கீதிச் அவனை நன்றாக நோட்டமிட்டான். அழகான வெளிறிய முகம், அடர்த்தியான இமை மயிர். ஆர்வத்துடன் புகையை இழுத்தான். அவன் வாயைச் சிறிது திறந்த போது இரண்டு முன் பற்கள் தங்கத்தால் ஆனவை என்பது தெரிந்தது. முகத்தில் மயிர் வளர்ந்திருந்தது. திருத்தமான தாடி கன்னங்களில் சற்றுச் சுருட்டையாக இருந்தது... ஆள் மெலிந்தவன்... கிழவனின் பார்வையைச் சந்தித்ததும் எரிந்து கொண்டிருந்த நெருப்புக் குச்சியை உயர்த்தி அவனைக் கூர்ந்து பார்த்தான்.

பின்பு நெருப்புக் குச்சியை எறிந்து விட்டான். அவனுடைய பார்வை நிக்கீதிச்சின் நினைவில் பதிந்தது: நேரானது, துணிவுள்ளது... அதோடு ஒரு வகையில் ''ஆறிப் போனது'', உணர்ச்சி வேகம் இல்லாதது. நிக்கீதிச் அந்த மாதிரி மதிப்பிட்டான். கூடவே, ''இந்த வகை ஆட்களைக் கன்னிகள் விரும்புகிறார்கள்'' என்றும் தொடர்பு இன்றி எண்ணிக் கொண்டான்.

''குந்து, ஏன் நட்டமாய் நிற்கிறாய்?''

இளைஞன் முறுவலித்தான்.

''இப்படிச் சொல்வது சரி அல்ல, பெரியவரே. 'உட்கார்ந்து கொள்' என்று சொல்ல வேண்டும்.''

''நல்லது, உட்கார்ந்து கொள். குந்து என்று ஏன் சொல்லக் கூடாது? எங்கள் பக்கத்தில் சொல்லுவார்களே.''

''உட்கார்ந்து கொள்ளலாம். இன்னும் யாரும் வர மாட்டார்களோ?''

''இப்போது யார் வரப் போகிறார்கள்? நேரம் ஆகி விட்டது. அப்படியே வந்தாலும் போதுமான இடம் இருக்கிறது.'' நிக்கீதிச் வெட்டு மரத் துண்டில் ஒதுங்கிக் கொண்டான். இளைஞன் அருகே உட்கார்ந்து, கைகளை மறுபடி நெருப்பின் பக்கம் நீட்டினான். அவை தொழிலாளியின் கைகள் அல்ல. ஆனால் இளைஞன் வலுவுள்ளவன் என்பது தெரிந்தது. அவனுடைய புன்னகையும் நிக்கீதிச்சுக்குப் பிடித்தது. துடுக்கானது அல்ல, சகஜமானது, அளவறுத்தது. அதோடு இந்தத் தங்கப் பற்கள் வேறு... அழகான இளைஞன். தாடியை மழித்து நல்ல உடை அணிவித்தால் பள்ளி ஆசிரியர் போல் இருப்பான். நிக்கீதிச் பள்ளி ஆசிரியர்களிடம் பெருத்த அன்பு வைத்திருந்தான்.

''நீ என்ன, புவி இயலாளா?'' என்று வினவினான்.

''யார்?'' என்று விளங்காமல் கேட்டான் இளைஞன்.

''அதுதான் என்கிறேன்... இந்த இவர்கள், தைகாவில் தேடுகிறார்களே...''

''ஓ-ஓ... ஆமாம்.''

''துப்பாக்கி இல்லாமல் எப்படி வந்தாய்? ஆபத்து.''

''என்னவர்களிடமிருந்து பின் தங்கி விட்டேன்'' என்று விருப்பம் இல்லாமல் சொன்னான் இளைஞன். ''உன் ஊர் தூரமோ?''

''ஒரு நூற்றைம்பது கிலோமீட்டர்.''

இளைஞன் தலையை அசைத்து, விழிகளைப் பாதி மூடிக் கொண்டு, வெப்பத்தை அனுபவித்தவாறு சிறிது நேரம் அப் படியே உட்கார்ந்திருந்தான். பின்பு உடலைக் குலுக்கிக் கொண்டு பெருமூச்சு விட்டான்.

''களைத்துப் போனேன்.''

''ரொம்ப நேரமாகத் தனியே நடக்கிருயோ?''

''ரொம்ப நேரமாக. உம்மிடம் குடிக்க ஒன்றும் இல்லையா?''

''இருக்கிறது.''

இளைஞன் உற்சாகம் அடைந்தான்.

''நல்லது! இல்லாவிட்டால் நெஞ்சே குளிரில் நடுங்கு கிறது. ஒரேயடியாய் விரைத்துக்கூடப் போய் விடலாம். ஏப் ரலாம், ஏப்ரல்...''

நிக்கீதிச் வெளியே போய், கொழுப்பு வைத்திருந்த பையை எடுத்து வந்தான். விட்டத்தில் தொங்கிய லாந்தரைப் பொருத்தினுன்.

''தைகாவில் தனியாய் இருப்பது எப்படி என்று உங் களுக்குக் கொஞ்சமாவது கற்றுக் கொடுத்திருந்தார்களானுல் நல்லது... இல்லாவிட்டால் வெறுமே அனுப்பி விடுகிருர்கள், உங்களுக்கு எப்படித் தெரியும்? போன வருஷம் நான் ஒரு வனது உடலைக் கண்டேன். வசந்த காலத்தில் பனி இளகி உடல் வெளிப்பட்டது. அவனும் இளவட்டம்தான். அவனும் தாடி வைத்திருந்தான். கம்பளியைப் போர்த்திருந்தான், அவ்வளவு தான், விரைத்துப் போய் விட்டான்.'' நிக்கீதிச் கொழுப்பைப் பலகைக் கட்டிலின் முனையில் வைத்துக் கூறு போட்டான். ''என்னைத் தனியாக விடு, நான் குளிர் காலம் பூராவும் வாழ்வேன், முனக மாட்டேன். குண்டுகள் மட்டும் இருந்தால் போதும். அதோடு நெருப்புப் பெட்டியும் வேண் டும்.''

''மர வீட்டில் எப்படியும் புகுந்து கொள்வீர்.''

''இது இருக்கும் போது வெண்பனியில் நான் எதற்காகக் கிடந்து புரள வேண்டும்? எனக்கே கெடுதல் செய்து கொள் பவன் அல்ல நான்.''

இளைஞன் இடைவாரை அவிழ்த்துக் கோட்டைக் கழற் றினுன்... வீட்டில் நடந்தான். அகன்ற தோள்கள், வடி வமைந்த மேனி. உடம்பில் சூடு ஏறி, பார்வையில் உற்சாகம் வந்திருந்தது. கதகதப்பான இடத்துக்கு வந்து உயிருள்ள

மனிதனைக் கண்டதில் அவன் பெரு மகிழ்ச்சி அடைந்திருந்தது தெரிந்தது. இன்னொரு சிகரெட்டு பற்ற வைத்துக் கொண்டான். சிகரெட்டு நல்ல மணம் வீசிற்று. நகரத்து மனிதர்களுடன் பேசுவது நிக்கீதிச்சுக்குப் பிடித்தது. தைகாவில் கையாலாகாதவர்களாக இருந்ததற்காக அவர்களை அவன் இகழ்ந்தான். சில சந்தர்ப்பங்களில் ஏதேனும் தேட்டக் குழுவுக்கு வழி காட்டியாக இருந்து சம்பாதித்தான். மனதுக்குள் குழுவினரை எள்ளி நகையாடினுன், ஆனுல் அவர்களுடைய உரையாடல்களைக் கேட்பது அவனுக்குப் பிடித்திருந்தது. தானும் அவர்களோடு உவப்புடன் உரையாடினுன். தனியாக விட்டால் இன்னும் கண் திறக்காத விலங்குக் குட்டிகள் போல மடிந்து போவார்கள், என்றுலும் அவர்கள் தன்னுடன் அன்பும் பெரியமனிதப் பாங்கும் ததும்ப உரையாடியது அவன் உள்ளத்தை நெகிழ்வித்தது. குழுவில் இரண்டு-மூன்று பெண்கள் இருந்த போது இன்னும் சுவாரசியமாக இருந்தது. அவர்கள் பொறுத்துக் கொண்டார்கள், குறை சொல்லவில்லை. அவர்கள் ஆண்கள் மாதிரியே இருக்க முயன்றுர்கள். மற்றவர்கள் உதவி செய்வதை அவர்கள் விரும்பவில்லை. எல்லோரும் கூட்டமாகப் படுத்து உறங்கினுர்கள். ஆனுலும் மோசமில்லை, ஒழுங்கீனமாக நடந்து கொள்ளவில்லை. கிராமத்தார் இது மாதிரி இருந்தால் பாவம் நடக்காமல் தப்ப முடியாது. ஆனுல் இவர்கள் பரவாயில்லை. இவ்வளவுக்கும் அவர்களில் சில பெண்களைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம் போலிருந்தது. குறுகிய சராய், பிடிக்கப் பிடிக்க ஏதேனும் ஜாக்கெட்டு. கொசுக்களிடமிருந்து தப்புவதற்காகத் தலைக்குட்டை. பொம்மைகள் போல கொழுமொழுவென்று இருந்தார்கள். பையன்களோ, சட்டை செய்யவில்லை, இப்படித்தான் இருக்க வேண்டும் போல.

''யாரைத் தேடுகிறீர்கள்?''

''எங்கே?''

''நடமாடுகிறீர்களே, அதனுல் கேட்டேன்.''

இளைஞன் வாய்க்குள் சிரித்துக் கொண்டான்.

''அதிர்ஷ்டத்தை.''

''அதிர்ஷ்டம்... அது தம்பீ, மீன் போலே, வழுக்கலானது. பிடித்து விட்டோம் என்று நினைப்போம். அது நம் கையில் இருப்பது போல் இருக்கும், ஆனுலும் பிடியில் சிக்காது.'' நிக்கீதிச் மறைபொருளாகப் பேசும் மனநிலையில்

இருந்தான், நகரவாசிகளிடம் வழக்கமாகப் பேசுவது போல. அவர்கள் காது கொடுத்துக் கேட்கும் போது பேசப் பேச அவனுக்கு அலுக்காது. கவனமாகக் கேட்டவாறு அவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்வார்கள். அதோடு அவர் களில் ஒருவன் நோட்டுப் புத்தகத்தை எடுத்துப் பென்சிலால் எதையாவது எழுதிக் கொள்வான். இரவு முழுவதும் வேண்டு மானுலும் இந்த மாதிரிப் பேசிக் கொண்டிருக்க நிக்கீதிச் சால் முடியும். ஆர்வத்தோடு கேட்பவர்கள் இருந்தால் போதும். சொந்தக் கிராமத்தவர்கள் உளறுவாயன் என்று பெயர் சூட்டினுர்கள், இவர்களோ, உற்றுக் கேட்பார்கள். பிரியமாய் இருக்கும். அவனுக்கே சில வேளைகளில் தோன் றும், பேச்சு நன்ருக வருகிறது, அது நாசமற்றுப் போக என்று. வளவள என்று பேசிக் கொண்டு போவான், முன்பு பாதிரி கதை விடுவானே, அது போல. ஆனுல் மரங்களை நினைத் தால் அவன் உள்ளம் பதறும். ''மரத்தைத் தொடாதே. கோடரியால் அதை வீணுகத் துணிக்காதே, துணித்தால் அது பட்டுப் போகும். மரம் பட்டுப் போனுல் நீயும் மடிந்து போவாய்—ஏக்கம் கவ்வும், நீ மடிந்து போவாய். இந்த ஏக்கம் எங்கிருந்து வருகிறது என்று அனுமானிக்கக் கூட உன்னுல் முடியாது'' என்பான். ''இன்னெரு வகையான ஆட்கள் உண்டு: துப்பாக்கிகளுடன் நகரத்திலிருந்து வரு வார்கள், சடார்படார் என்று இடமும் வலமுமாகச் சுட்டுத் தள்ளுவார்கள். குண்டு எதன் மேல் பட்டாலும் சரி. பெண் விலங்கோ ஆண் விலங்கோ எது ஆனுலும் கொன்று தீர்க்க வேண்டும் அவர்களுக்கு. இந்த மாதிரிச் செய்பவர்களுடைய கைகளை முறித்து விட வேண்டும். பெண் கரடியை நீ கொன் ருயே, அதற்கு இரண்டு குட்டிகள். அவை செத்துப் போகும். இப்போது ஒரு தோல் உனக்குக் கிடைத்தது. கொஞ்சம் பொறுத்தால் மூன்று கிடைக்கும். புத்தி கெட்ட செய்கை இது—மிருகங்களைக் கொல்வதில் இன்பம் பெறுவது. இந்த மாதிரி ஆட்கள் இருக்கிருர்கள். நீ அதிர்ஷ்டம் என்கிருய்'' என்று பேச்சைத் தொடர்ந்தான் நிக்கீதிச்.

ஆனுல் இளைஞன் பேச்சைக் கேட்க விரும்பவில்லை. அவன் சன்னல் அருகே போய் நெடு நேரம் இருட்டில் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தான். நினைவு வந்ததும் சொன்னுன்:

''எப்படியும் வசந்தம் விரைவில் வந்து விடும்.''

''வரும். எங்கும் போய் விடாது. உட்கார். ஏதோ இருப்பதைத் தின்போம்.''

பாத்திரத்தில் வெண்பனியை இளக்கி ஸ்பிரிட்டைக் கலந்து குடித்தார்கள். குளிரில் உறைந்த கொழுப்பைத் தொட்டுக் கொண்டார்கள். மனதில் இன்பம் பொங்கியது. நிக்கீதிச் அடுப்பில் விறகு செருகினன். இளைஞனே மறுபடி சன்னலோரத்துக்குப் போனன். சன்னல் கண்ணுடி மேல் உறைந்த பனிப் படலத்தில் வாயால் ஊதி வட்டமாக ஒரு இடத்தைத் தெளிவாக்கி அதன் வழியே இரவில் பார்வை செலுத்திய வண்ணமாய் இருந்தான்.

''இப்போது அங்கே யாரைக் காண முடியும்?'' என்று வியந்தான் நிக்கீதிச். அவனுக்குப் பேச ஆசையாய் இருந்தது.

''விடுதலையை'' என்று சொல்லிப் பெருமூச்சு விட்டான் இளைஞன். ஆனல் அது துயரப் பெருமூச்சு அல்ல. விடுதலையைப் பற்றி அவன் சொன்னதிலும் உறுதியும் வன்மமும் பிடிவாதமும் தொனித்தன. சன்னல் பக்கமிருந்து தள்ளாடித் திரும்பினன்.

''இன்னும் குடிக்கக் கொடும், பெரியவரே'' என்றன். கறுப்பு சாட்டின் சட்டையின் கழுத்துப்பட்டைப் பொத்தானைக் கழற்றினன். அகலமான கையால் மார்பில் ஓசையுடன் அறைந்து தடவிக் கொண்டான். ''நெஞ்சு கேட்கிறது.''

''சாப்பிடேன். இல்லாவிட்டால் வெறும் வயிற்றில் வெறி தலைக்கு ஏறிவிடும்.''

''ஏருது. எனக்கு ஏருது'' என்று கூறி முதியவனின் கழுத்தைப் பரிவுடன் இறுகக் கட்டிக் கொண்டு பாடினன் இளைஞன்:

> ''விரைத்திடும் குளிர் ஈரிப்பு
> மிகுந்திடும் இறப்பறைக்கு
> நரைத்தலைக் கிழவன் வந்தான்...''

பின்பு அன்பு ததும்ப முறுவலித்தான். இளைஞனின் விழிகளில் தெளிந்த மகிழ்ச்சி ஒளி சுடர்ந்தது.

''குடிப்போம் வாரும், நல்ல மனிதரே!''

''தனிமையில் ஏங்கிப் போய் விட்டாய்'' என்று நிக்கீதிச்சும் புன்னகைத்தான். நேரம் ஆக ஆக இளைஞன் மேல் அவனுக்குப் பற்று மிகுந்து கொண்டு போயிற்று. இளமை

யும் வலிவும் அழகும் உள்ளவன். மடிந்து போயிருப்பான். ''இந்த மாதிரி இருந்தால் நீ மாய்ந்து போகக் கூடும், தம்பீ. தைகாவில் துப்பாக்கி இல்லாமல் இருப்பது படு மோசம்.''

''மடிய மாட்டோம், பெரியவரே. இன்னும் வாழ்ந்திருப் போம்!''

இவ்வாறு மறுபடி உறுதியோடு சொன்னன். அவனுடைய கண்கள் கண நேரம் எங்கோ மிக மிகத் தொலேவில் நோக் கின. பின்பு மீண்டும் ''ஆறிப் போயின''... அவன் எதைப் பற்றி எண்ணமிட்டான் என்பது புரியவில்லே. எதையோ நினேவு கூர்ந்தவன் போலக் காணப்பட்டான். ஆனல் அதை நினேவுபடுத்திக் கொள்ள அவனுக்கு விருப்பம் இல்லே. கிளாசை வாயில் கவிழ்த்து ஒரே மடக்கில் அடியொட்டக் குடித்துத் தீர்த்து விட்டுத் தொண்டையைக் கனேத்துக் கொண்டான். தலேயைச் சுழற்றினன். கொழுப்புத் துண்டைச் சவைத்தான். சிகரெட்டு பற்ற வைத்துக் கொண்டான். இருப்பு கொள்ளாமல் எழுந்தான்.அகல அடி வைத்து வீட்டில் நடந்தான். நட்ட நடுவில் நின்று இடுப்பில் கைகளே வைத்து உடம்பை நிமிர்த்தான். பின்பு மீண்டும் எங்கோ தொலேவில் பார்வை செலுத்தத் தொடங்கினன்.

''வாழ விருப்பம், பெரியவரே'' என்றன்.

''வாழ எல்லாருக்குந்தான் விருப்பம். எனக்கு விருப்பம் இல்லே என்று நினேக்கிருயோ? இதோ எனக்கு...''

அழகான பெரிய இளேஞன் முதியவன் சொன்னதைக் கேளாமல், பிடிவாதமும் களி நிறைந்த வன்மமும் தொனிக்க ''வாழ விருப்பம்!'' என்று திரும்பக் கூறினன். ''உமக்குத் தெரியாது வாழ்க்கை. அது...'' என்று எதையோ எண்ணிப் பற்களே நெறு நெறுத்தான். ''அது அன்புக்கு உகந்தது. இனிமையானது! அருமையானது'' என்றன்.

குடி மயக்கத்தில் இருந்த நிக்கீதிச் இஹிஹி என்று இளித் தான்.

''வாழ்க்கையைப் பற்றி நீ பேசுவது எவளோ பெண்ணேப் பற்றிப் பேசுவது போல இருக்கிறது'' என்றன்.

''பெண்கள் மலிவுச் சரக்கு'' என்று கூறினன் இளேஞன். பிடிவாதமும் துணிவும் களிப்பும் நிறைந்த உணர்ச்சியால் அவனுக்குச் சூடேறியது. கிழவனுக்குச் செவி சாய்க்காமல் தானே பேசினன். கிழவனுக்கோ இளேஞன் சொல்வதைக் கேட்க இப்பேரது விருப்பம் உண்டாயிற்று. இளேஞனின்

ஆதிக்கச் சக்தி அவனையும் ஆட்கொள்ளத் தொடங்கி விட்டது.

''பெண்கள் இருக்கிறார்களே... உண்மைதான். ஆனாலும் அவர்கள் இல்லாமலும்...''

''அவளை, அருமையானவளைப் பிடித்துக் கொள்வோம்'' என்ற இளைஞன் கைகளை முன்னே நீட்டி முட்டிகளை இறுக்கிக் கொண்டான். ''அந்த இனியவளின் குரல்வளையைப் பிடிப்போம்... நினைவு இருக்கிறதா உனக்கு, 'பேராசிரியன்' கோல்யாவை? மறந்து போனாயோ?'' இளைஞன் யாருடனோ பேசினான், அந்த நபர் தன்னை ''மறந்ததனால்'' பெரு வியப்பு அடைந்தான். ''கோல்யாவை மறந்து விட்டாயோ?.. ஆனால் கோல்யா உன்னை நினைவு வைத்திருக்கிறான். கோல்யா உன்னை மறக்கவில்லை.'' அவன் மகிழ்ந்தானா, அல்லது யாரையேனும் வன்மத்துடன் பழி வாங்க நினைத்தானா என்பது தெளிவாய் இல்லை. ''நான் இதோ இருக்கிறேன். தேவி, இரண்டு அன்பு வார்த்தைகள் சொல்லுகிறேன், வா. உன்னைப் புண்படுத்த மாட்டேன். ஆனால் நீ எனக்கு எல்லாவற்றையும் தருவாய். எல்லாவற்றையும்! நான் எடுத்துக் கொள்வேன்!..''

''மெய்யாகவே ஒரு பெண் உனக்கு இவ்வளவு ஆத்திரம் ஊட்டி விட்டாளா என்ன?'' என்று கேட்டான் வியப்படைந்த நிக்கீதிச்.

இளைஞன் தலையைக் குலுக்கினான்.

''இந்தப் பெண்ணின் பெயர் விடுதலை. உமக்கும் அவளைத் தெரியாது, பெரியவரே. நீர் விலங்கு. இங்கே காட்டில் உமக்கு மகிழ்ச்சியாய் இருக்கிறது. ஆனால் பெரிய நகரத்தில் விளக்குகள் எப்படி எரிகின்றன என்பது உமக்குத் தெரியாது. அவை கவர்ந்து இழுக்கின்றன. அங்கே இருக்கிறார்கள் இனிய, நல்ல மனிதர்கள். அவர்கள் இருப்பிடங்களில் இதமான வெப்பமும் மென்மையும் நிலவுகின்றன. இசை ஒலிக்கிறது. அவர்கள் மரியாதை உள்ளவர்கள், சாவைக் கண்டு நிரம்ப அஞ்சுகிறார்கள். நான் நகரத்தில் உலாவுகிறேன், அது முழுவதும் எனக்குச் சொந்தம். அவர்கள் மட்டும் அங்கே இருப்பானேன், நான் இங்கே தவிப்பானேன்? புரிகிறதா?''

''நீ ஆயுள் பூராவும் இங்கே இருக்கப் போவதில்லையே...''

''உமக்குப் புரியவில்லை'' என்று ஆழ்ந்த தோரணையில் கண்டிப்புடன் சொன்னான் இளைஞன். ''நான் அங்கே இருக்க வேண்டும், ஏனென்றால் நான் யாருக்கும் அஞ்சவில்லை. நான்

சாவையும் அஞ்சவில்லை. ஆகையால் வாழ்வு எனக்கே சொந்தம்.''

கிழவன் தலையை அசைத்தான்.

''தம்பீ, எனக்கு விளங்கவில்லை நீ எதற்காக இப்படிச் சொல்கிறுய் என்று.''

இளைஞன் பலகைக் கட்டில்களின் அருகே போய், கிளாசு களை நிரப்பினுன். திடீரென்று அவன் களைத்துப் போனவன் போல் காணப்பட்டான்.

''நான் சிறையிலிருந்து தப்பி வந்திருக்கிறேன், பெரிய வரே'' என்று எந்த உணர்ச்சியையும் காட்டாமல் சொன் ஞன். ''குடிப்போமா?''

நிக்கீதிச் இளைஞனுடைய கிளாசில் தன் கிளாசை இயந்திர ரீதியில் இடித்துக் கொண்டான். இளைஞன் குடித்தான். கிழ வனை நோக்கினுன்... அவனே இன்னமும் கிளாசைக் கையில் பிடித்திருந்தான். இளைஞனை ஏற இறங்க நோட்டமிட்டான்.

''என்ன?''

''இது எப்படி?''

''குடியும்'' என்ருன் இளைஞன். இன்னும் சிகரெட்டு பிடிக்க விரும்பினுன், ஆனுல் பாக்கெட்டு காலியாக இருந்தது. ''உம்முடையதைக் கொடும்'' என்ருன்.

''என்னிடம் இலைத் தூள்தான் இருக்கிறது.''

''எதுவானுலும் பரவாயில்லை.''

சிகரெட்டுகளைப் பொருத்திக் கொண்டார்கள். இளைஞன் வெட்டு மரத் துண்டின் மேல் நெருப்பின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான்.

நெடு நேரம் பேசாதிருந்தார்கள்.

''பிடித்து விடுவார்களே'' என்று சொன்ஞன் நிக்கீதிச். அவனுக்கு இளைஞன் மேல் இரக்கம் உண்டாயிற்று என்று சொல்வதற்கில்லை. ஆனுல் அந்தப் பெரிய, அழகிய இளைஞன் காவலுடன் இட்டுச் செல்லப்படுவதை நிக்கீதிச் எண்ணிப் பார்த்தான். அவனுடைய இளமை, அழகு, வலிமை ஆகிய வற்றின் மீது முதியவனுக்கு இரக்கம் உண்டாயிற்று. பிடித்து விடுவார்கள், அதோடு ஆட்டம் முடிந்து விடும். பாழாய்ப் போய் விடுவான். அவனுடைய அழகால் ஒருவருக்கும் துன் பமோ இன்பமோ உண்டாகாது. எதற்காகத்தான் இருந்தது அது? ''வீண்'' என்று அறிவு நிதானத்தோடு கூறினுன்.

''என்ன?''

''ஓடுகிறுயே, அது. இப்போதெல்லாம் முந்திய காலம் இல்லை. பிடித்து விடுவார்கள்.''

இளைஞன் பேசாதிருந்தான். சிந்தனையில் ஆழ்ந்தவனுக நெருப்பைப் பார்த்துக் கொண்டிருந்தான். குனிந்தான். அடுப்பில் விறகைச் செருகினுன்.

''தண்டனைக் காலம் முடியும் வரை இருந்திருக்க வேண் டும்... தப்பினது வீண்.''

''விடும் இந்தப் பேச்சை!'' என்று வெடுக்கென்று இடை முறித்தான் இளைஞன். அவனுக்கும் விந்தையான முறையில் மயக்கம் தெளிந்து விட்டது. ''எனக்குச் சொந்த மூளை இருக் கிறது''.

''அது தெரிந்த சங்கதிதான்'' என்று ஒப்புக் கொண்டான் நிக்கீதிச். ''நீ ரொம்ப தூரம் போக வேண்டுமோ?''

''கொஞ்ச நேரம் பேசாதிரும்.''

''தாயார் தகப்பனுர் இருப்பார்கள் கட்டாயம்'' என்று இளைஞனது பின்மண்டையைப் பார்வையிட்டவாறு எண்ணிக் கொண்டான் நிக்கீதிச்.''இந்த நாய்ப் பயல் வந்ததும் ஆனந்தப் படுவார்கள்.''

ஒரு ஐந்து நிமிடம் பேசாதிருந்தார்கள். கிழவன் சுங் கானில் இருந்த சாம்பலைத் தட்டிவிட்டு மறுபடி புகையிலை நிறைத்தான். இளைஞன் நெருப்பையே பார்த்துக் கொண் டிருந்தான்.

''உம்முடைய கிராமம் வட்டார மையமா இல்லையா?'' என்று திரும்பாமலே கேட்டான்.

''வட்டார மையமாவது ஒன்றுவது? எங்கள் ஊரிலிருந்து வட்டார மையம் தொண்ணூறு கிலோமீட்டர் தொலைவு. நீ மடிந்து போவாய். குளிர் காலத்தில், தைகாவில்...''

''ஒரு மூன்று நாட்கள் உம் வீட்டில் தங்கி இருக்கிறேன், பலம் திரட்டிக் கொள்கிறேன்'' என்றுன் இளைஞன். அவன் அனுமதி கேட்கவில்லை, வெறுமே தெரிவித்தான்.

''இரேன், எனக்கென்ன. தண்டனைக் காலம் இன்னும் நிறைய பாக்கி இருக்கிறதோ, உன்னுல் பொறுக்க முடிய வில்லை?''

''நிறைய.''

''எதற்காகக் கிடைத்தது தண்டனை?''

''இந்த மாதிரிக் கேள்விகளை யாரிடமும் ஒரு போதும் கேட்காதேயும், பெரியவரே.''

நிக்கீதிச் அணையும் தறுவாயில் இருந்த சுங்கானை இழுத்துக் கனிய வைத்துப் புகைத்தான், இருமத் தொடங்கினுன். இருமிக் கொண்டே சொன்னுன்:

''எனக்கென்ன!.. பிடித்து விடுவார்களே என்றுதான் இரக்கமாய் இருக்கிறது...''

''அப்படி ஒன்றும் நேராது. எல்லாம் நலமே முடியும். என்னை லேசில் பிடித்து விட முடியாது. வாரும் உறங்கு வோம்.''

''படு. நான் விறகுகள் எரிந்து தீரும் வரை காத்திருக் கிறேன்—புகை போக்கியை மூடுவதற்காக. இல்லாவிட்டால் விடிவதற்குள் குளிரில் விரைத்துப் போவோம்.''

இளைஞன் பலகைக் கட்டிலில் கோட்டை விரித்து விட்டு, தலைக்குயரம் எதை வைத்துக் கொள்வது என்று விழிகளால் தேடினுன். நிக்கீதிச்சின் துப்பாக்கி சுவர் மேல் தொங்கு வதைக் கண்டு அருகே போய் அதை எடுத்துப் பார்வையிட்டு விட்டு மாட்டினுன்.

''பழங் காலத்தது.''

''பரவாயில்லை. இப்போதைக்கு உதவுகிறது. அதோ அந்த மூலையில் கனத்த நமுதாத் துண்டு கிடக்கிறது. அதை விரித்துக் கொள். கோட்டைத் தலைக்குயரம் வைத்துக் கொள். காலை இப்படி அடுப்பின் பக்கம் நீட்டிக் கொள். விடிவதற்குள் எப்படியும் ஆறிப் போகும்.''

இளைஞன் நமுதாவை விரித்துப் படுத்து உரக்கப் பெரு மூச்சு விட்டான்.

''சிறு தாஷ்கந்து'' என்று எதற்காகவோ சொன்னுன். ''என்னிடம் உமக்குப் பயமாய் இல்லையா, பெரியவரே?'' என்று கேட்டான்.

''உன்னிடமா?'' என்று வியந்தான் முதியவன். ''உன் னிடம் எதற்காகப் பயப்பட வேண்டும்?''

''ஊம்... நான் சிறை முகாமில் இருந்தவன் ஆயிற்றே. கொலைக் குற்றத்திற்காகத் தண்டனை பெற்றிருக்கலாமே.''

''கொலைக் குற்றத்துக்கு ஆண்டவன் உன்னைத் தண்டிப் பான், மனிதர்கள் அல்ல. மனிதர்களிடமிருந்து தப்பலாம், ஆனுல் அவனிடமிருந்து தப்ப முடியாது.''

''நீர் தெய்வ நம்பிக்கை உள்ளவரோ? பழைய ருஷ்யக் கிறிஸ்தவ மரபைச் சேர்ந்த கெர்ழாக்கோ ஒருவேளை?''

''கெர்ழாக்கா?.. கெர்ழாக் உன்னேடு வோத்கா குடிப் பாளு எங்கேயாவது?''

''அது சரி. ஆனுல் ஆண்டவனைப் பற்றி என்னிடம் பேசாதே யும்... இந்த மாதிரிப் பேச்சுக்களைக் கேட்டாலே எனக்குக் குமட்டுகிறது.'' இளைஞன் சோம்பலுடன், ஓரளவு கம்மிய குரலில் பேசினுன். ''உங்களுடைய இந்தக் கிறிஸ்துவை நான் எங்கேயாவது சந்தித்தால் அந்த இடத்திலேயே அவன் குடலை வகிர்ந்து விடுவேன்.''

''எதற்காக?''

''எதற்காகவா?.. கட்டுக் கதைகள் சொன்னுன், பொய் பேசினுன் என்பதற்காக. நல்ல மனிதர்கள் கிடையாது! அவனே, நல்லவன் ஆயிற்று, பொறுத்துக் கொள்ளும்படிக் கற்பித்தான். கடைகெட்டவன்!'' இளைஞனின் குரலில் சற்று முன்பு இருந்த உறுதியும் வன்மமும் மறுபடி தொனிக்கலா யின. முந்திய களிப்புதான் குரலில் இல்லை. ''யார் நல்ல வன்? நானு? நீரா?''

''என்னை எடுத்துக் கொண்டால் வாழ்நாளில் யாருக்கும் எந்த விதமான தீங்கும் நான் செய்யவில்லை...''

''ஆனுல் விலங்குகளைக் கொல்கிறீரே! அவன் கற்பித்தானு என்ன?''

''மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சு போடு கிருயே. மனிதன் வேறே, விலங்கு வேறே.''

''உயிர்ப் பிராணி என்று நீங்களே சொல்லுகிறீர்களே, பன்றிப் பயல்களா!''

நிக்கீதிச் இளைஞனுடைய முகத்தைப் பார்க்கவில்லை. ஆனுல் அது அவன் கண்களில் பதிந்திருந்தது, தாடியுடன், வெளிறியதாக. இவ்வளவு நல்ல, இவ்வளவு நேர்த்தியான முகம் உள்ளவனும் விதியால் மீள வகை இன்றித் தாக்கி ஊனமாக்கப்பட்டவனும் ஆகிய மனிதனின் வெறி கொண்ட குரல் மர வீட்டின் வெதுவெதுப்பான நிசப்தத்தில் மட்டித் தனமாக ஒலித்தது.

''நீ எதற்காக என் மேல் கோபம் கொண்டிருக்கிருய்?''

''புளுகாதேயுங்கள்! மனிதர்களை ஏமாற்றுதேயுங்கள், பக்தர் வேஷம் போடும் வஞ்சகர்களா. பொறுக்கும்படி உங் களுக்கு உபதேசிக்கப்பட்டிருக்கிறதா? பொறுத்துக் கொள் ளுங்கள். ஆனுல் நீங்கள் செய்வது என்ன? பிரார்த்தனை முடிந் ததும் முடியாததுமாகச் சராயைக் கழற்றி விட்டுப் பெண்

பிள்ளை மேல் விழுகிறீர்கள், அசிங்கங்களா. எனக்கு வாய்ப்பு கிடைத்தால் புதிய கிறிஸ்துவைக் கற்பனை செய்வேன். மூஞ்சியில் அறையக் கற்பிப்பவனாக. 'புளுகுகிறாயா, இந்தா, வாங்கிக் கொள், இழி பிறவி!' என்பவனாக.''

''கெட்ட பேச்சு பேசாதே!'' என்று கடுமையாகச் சொன்னான் நிக்கீதிச். ''நல்ல ஆள் என்று நினைத்து உன்னை உள்ளே வர விட்டால், நீ குலைக்கத் தொடங்கி விட்டாய். சிறையில் அடைத்ததால் மனத்தாங்கல் கொண்டு விட்டானாம்! அடைப்பதற்குக் காரணம் இருந்தது என்று ஆகிறது. குற்றவாளி யார்?''

''ம்-ம்.'' இளைஞன் பற்களை நெறுநெறுத்தான், ஆனால் பேசவில்லை.

''நான் பாதிரி அல்ல, இது மாதாகோயிலும் அல்ல, நீ உன் வன்மத்தை எல்லாம் கக்குவதற்கு. இது சைபீரியப் பெருங்காடு—தைகா. இங்கே எல்லோரும் ஒரே மாதிரி. இதை நினைவு வைத்துக் கொள். இல்லாவிட்டால் உன் விடுதலையைப் பெற மாட்டாய்—மண்டையை உடைத்துக் கொள்வாய். ஆட்டுக்கு எதிரே வீரன், வீரனுக்கு எதிரே ஆடு என்று இங்கே மக்கள் சொல்லுவார்கள். தட்டிப் பேச ஆள் இல்லா விட்டால் தம்பி சண்டப் பிரசண்டன். வல்லவனுக்கு வல்லவன் வையகத்தில் உண்டு. உன்னை விடத் துணிந்தவன் யாராவது இருப்பான். இந்த மாதிரி ஒரு காரணமும் இல்லாமல் ரோசப்பட்டாயானால் அவன் உனக்குக் காட்டுவான், விடுதலையை எங்கே தேட வேண்டும் என்று.''

''கோபிக்காதேயும், பெரியவரே'' என்று சமாதானப் படுத்தும் விதத்தில் சொன்னான் இளைஞன். ''வாழ்வது எப்படி என்று சிலர் கற்பிப்பதை வெறுக்கிறேன். நெஞ்சு கொதிக்கிறது! ஊரில் அகப்பட்ட அசிங்கத்தை எல்லாம், புழுக்களை எல்லாம் மூக்கில் நுழைத்து, 'இதோ பாருங்கள், நல்லவர்களே, இப்படியாக்கும் வாழ வேண்டும்' என்கிறார்கள். இதை நான் வெறுக்கிறேன்!'' என்று அனேகமாகக் கத்தினான். ''நான் இந்த மாதிரி வாழப் போவதில்லை. புளுகுகிறார்கள்! பிண நாற்றம் அடிக்கிறது! துப்புரவான, கழுவப்பட்ட இறந்தவர்கள் மேல் நாம் எல்லோரும் இரக்கம் காட்டுகிறோம், அன்பு கொள்கிறோம். நீ உயிருள்ளவர்களை நேசி, அழுக்கானவர்களை. உலகத்தில் புனிதமானவர்கள் கிடையாது! நான் அவர்களைக் கண்டதில்லை. எதற்காக அவர்களைக் கற்பனை செய்ய வேண்

டும்?'' இளைஞன் முழங்கைகளை ஊன்றி எழுந்தான். அவனுடைய முகம் இருட்டில் ஒரு மூலையில் புள்ளி போல மங்கலாகத் தெரிந்தது. கண்கள் வன்மத்துடன் பயங்கரமாகச் சுடர்ந்தன.

''கொஞ்சம் சூடு ஆறினதும் புரிந்து கொள்வாய். நல்லவர்கள் இல்லாதிருந்தால் வாழ்க்கை வெகு காலத்துக்கு முன்பே நின்று போயிருக்கும். மனிதர்கள் ஒருவரை ஒருவர் தின்று தொலைத்திருப்பார்கள், அல்லது வெட்டித் தீர்த்திருப்பார்கள். இதை எனக்கு எந்தக் கிறிஸ்துவும் உபதேசிக்கவில்லை, நானே அப்படி நினைக்கிறேன். ஆனால் புனிதமானவர்கள் இல்லை என்றாயே, அது சரிதான். நானே மோசமானவன் அல்ல. நான் கெட்டவன் என்றோ தீயவன் என்றோ ஒருவனும் சொல்ல மாட்டான். ஆனாலும் இளவட்டமாய் இருந்த போது... கொஞ்ச தூரத்தில், சதுப்பு நிலத்துக்கு அப்பால் கெர்ழாக்குகளின் மடம் ஒன்று இருந்தது. அதில் ஒரு குடும்பம் வசித்தது. கிழவரும் கிழவியும் மகளும். மகளுக்கு சுமார் இருபத்தைந்து வயது இருக்கும். பெரியவர்கள் அப்படிக் கிழவர்களாய் இல்லை. எனக்குத்தான் அப்போது அவர்கள் கிழவர்களாகத் தோன்றினார்கள். பிறகு அவர்கள் எங்கேயோ போய் விட்டார்கள். ஆயிற்று. நான் சொல்ல வந்தது இது: அவர்களுக்கு ஒரு மகள் இருந்தாள். அவர்கள் தெய்வ பக்தர்கள். அவர்களுடைய பக்திக்கு எல்லை கிடையாது. மனிதர்களிடமிருந்து ஒதுங்கி விட்டார்கள்—பாவத்திலிருந்து தூர விலகுவதற்காக. அந்த மகளைத்தான் நான் ஒரு நாள் நைச்சியம் பண்ணி, பிர்ச் மரச் சோலைக்கு இட்டுப் போய்... வந்து... காரியத்தை முடித்து விட்டேன். நல்ல பெண். ஆரோக்கியசாலி. குழந்தை உண்டாகி விட்டது. நானோ, மணமானவன்...''

''இந்த அழகில் கெடுதல் ஒன்றும் பண்ணவில்லை என்று வேறு சொல்கிறீரே.''

''ஆக, நானும் புனிதமானவன் இல்லை என்று இதனால் தெரிகிறது. நான் பலாத்காரம் செய்யவில்லை தான், சரசம் செய்து காரியத்தைச் சாதித்துக் கொண்டேன் என்பது உண்மையே. ஆனாலும்... குழந்தையை உண்டாக்கி விட்டேனே. நினைத்துப் பார்க்கையில் இரக்கம் உண்டாகிறது. குழந்தை இப்போது பெரியவன், என்னைத் திட்டுகிறான் என்று நினைக்கிறேன்.''

''நீர் மனிதனுக்கு வாழ்வு அளித்தீர்—அவனைக் கொல்ல வில்லை. அவளையும் காப்பாற்றினீர் என்றே சொல்ல வேண் டும். ஒருவேளை அவள் இதற்குப் பிறகு தாயார் தகப்பனாரிட மிருந்து பிரிந்திருப்பாள். இல்லாவிட்டால் தங்கள் பிரார்த் தனைகளால் அவர்கள் அவளைப் பைத்தியமாக அடித்திருப் பார்கள், அவள் எங்கேயாவது கிளையில் சுருக்குப் போட்டுக் கொண்டு தொங்கியிருப்பாள், அவ்வளவுதான். ஆண் உறவை ஒரு தரங்கூட அறியாமலே போயிருப்பாள். நல்ல காரியம் செய்தீர், வருத்தப்படாதேயும்.''

''நல்லதோ கெட்டதோ, நடந்தது இதுதான். நல்லது என்று சொல்ல முடியாது.''

''இன்னும் மிஞ்சி இருக்கிறதா?''

''ஸ்பிரிட்டா? கொஞ்சம் போல இருக்கிறது. குடி. எனக்கு வேண்டாம்.''

இளைஞன் குடித்தான். மறுபடி தொண்டையைக் கனைத்துக் கொண்டான். எதையும் கடித்துக் கொள்ள விரும்ப வில்லை.

''நிறையக் குடிக்கிறுயே?''

''இல்லை. இது... குளிரில் ஒரேயடியாக விரைத்துப் போனேன், அதனுல்தான். குடிக்கிற முறை இது அல்ல, பெரிய வரே. அழகாகக் குடிக்க வேண்டும். சங்கீதம்... நல்ல சிக ரெட்டுகள், ஷாம்பேன்... பெண்கள். இரைச்சல் இல்லாமல், நாகரிகமாக.''

இளைஞன் மீண்டும் கனவுகளில் ஆழ்ந்தான். படுத்து, கைகளைத் தலைக்குப் பின்னே வைத்துக் கொண்டான். ''குடிக் கேளிக்கைகளை இகழ்ந்து அருவருக்கிறேன். அவற்றில் ஈடுபடு பவர்கள் மனிதர்கள் அல்ல, ஆடுமாடுகள். ம்-ம், எப்படி அழகாக வாழலாம்! சாவுக் கன்னியுடன் ஒரே இரவில் ஏழு தரம் நான் சூதாடினேன், தெரிந்ததா? அவள் தன் எலும்புக் கையால் என்னை வருடி நெற்றியில் முத்தமிட வந்தாள். நான் களைத்துப் போனேன். பின்பு இளைப்பாறினேன். நான் இன்பம் அனுபவித்தேன். அரசாங்க வழக்குரைஞர்கள் எல்லோரை யும் விட அதிகமாக நான் வாழ்க்கையை நேசிக்கிறேன். ஆபத்து என்கிறீரோ? நான் ஒப்புக் கொள்கிறேன். நெஞ்சு சில்லிட்டுப் போகட்டும், ஆட்டு வால் போல நடுங்கட்டும். நான் நேரே நடப்பேன். இடறி விழ மாட்டேன், திரும்பவும் மாட்டேன்.''

''இதற்கு முன் நீ என்ன வேலே பார்த்தாய்?'' என்று கேட்டான் நிக்கீதிச்.

''நானு? சப்ளே ஏஜெண்டாக. பொதுவாகச் சொன்ஞல் நான் விஞ்ஞானியாக இருந்தேன். 'கொலராடோ வண்டு என்பது என்ன, அதனுடன் எப்படிப் போராட வேண்டும்' என்ற விஷயத்தில் உதவிப் பேராசிரியஞக இருந்தேன்.'' இளேஞன் பேச்சை நிறுத்திஞன். நிமிட நேரம் சென்றதும், ''அவ்வளவுதான், பெரியவரே... நான் போகிறேன்'' என்று தூக்கக் குரலில் சொன்ஞன்.

''உறங்கு.''

நிக்கீதிச் குட்டைச் சூட்டுக் கோலால் அடுப்புத் தணலேக் கிளறிஞன், சுங்கானில் புகையிலே நிறைத்துக் கொண்டு இளே ஞனேப் பற்றி எண்ணமிடலாஞன். வாழ்க்கையின் விபரீ தத்தைப் பார். இவனிடம் எல்லாம் இருக்கிறது: அழகன், தேக திடம் உள்ளவன். மூளேயும் மோசமில்லாதது என்று தெரி கிறது... ஆஞலும்... என்ன? மேற்கொண்டு என்ன ஆகும்? காடுகளில் ஓடித் திரிவதா? இல்லே, நகரம்தான் இவர்களேப் புகலற்ற நிலேமையில் தள்ளுகிறது. நகரத்தில் உள்ளவர்கள் எல்லாருக்குமே மூளே பிசகி விட்டது. நிக்கீதிச்சின் மூன்று பேரப் பிள்ளேகளும் பெரிய நகரத்தில் வசித்து வந்தார்கள். இரண்டு பேர் படித்துக் கொண்டிருந்தார்கள், ஒருவன் வேலே செய்து வந்தான், மணமானவன். இந்த ஆளேப் போல அவர் கள் பெருமை அடித்துக் கொள்ளவில்லே, ஆஞல் நகரம் அவர் களேக் கவர்ந்து இழுத்தது. கோடையில் இங்கு வந்த போது அவர்களுக்குச் சலிப்பாய் இருந்தது. நிக்கீதிச் துப்பாக்கிகள் வாங்கிக் கொடுத்து, தைகாவுக்கு இட்டு வந்து, அவர்கள் குதூகலம் அடைவார்கள், மனமார இளேப்பாறுவார்கள், படிப்பில் களேத்த மூளேகளேக் காற்ருட விடுவார்கள் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். தங்களுக்கு நன்ருய் இருப் பதாக அவர்கள் நடித்தார்கள், ஆஞல் நிக்கீதிச்சுக்குச் சங் கடமாய் இருந்தது. பேரர்களேச் சந்தோஷப்படுத்துவதற்கு அவனிடம் வேறு ஒன்றும் இல்லே. தான் அவர்களே ஏமாற்றி விட்டது போன்ற உணர்வால் அவன் தொல்லேப்பட்டான். அவர்களுடைய மனத்தில் இருந்தது நகரம் ஒன்றுதான். இதோ பலகைக் கட்டிலில் படுத்திருக்கிருனே, இவன் நகரத் துக்குப் போக வேண்டும் என்று வெறி கொண்டவன் போலத் துடிக்கிருன். இவன் இடத்தில் இருப்பவன் முடிந்த அளவு

தொலைவில் போய், அகழறை தோண்டிக் கொண்டு ஒரு ஐந்து ஆண்டுக் காலம் தலை மறைவாய் இருக்க வேண்டும், அதாவது சிறை முகாமில் குந்தி இருக்க முடியாவிட்டால். ஆனால் இவனோ, மறுபடி நகரத்துக்கே போகத் துடிக்கிறான். அங்கே ஒவ்வோர் அடியிலும் இவன் பிடிபடக் கூடும். இவனுக்கும் தெரியும் பிடிபடுவோம் என்று, ஆனாலும் போகிறான். ''அப்படி என்னதான் சக்தி இருக்கிறது இந்த நகரத்துக்கு? நல்லது, நான் கிழவன், நான் மொத்தம் மூன்று தரந்தான் நகரத்துக்குப் போயிருக்கிறேன், எனக்குப் புரியவில்லை... ஒப்புக் கொள்கிறேன். அங்கே குதூகலமாய் இருக்கும், விளக்குகள் நிறைய. ஆனால் எனக்குப் புரியாதபடியால் நான் அதைப் பழிப்பதும் இல்லை. அங்கே இருக்க ஆசையாய் இருக்கிறதா? தாராளமாக இருந்து கொள்ளுங்கள். எனக்கு இங்கே நன்றாய் இருக்கிறது. ஆனால் நடப்பது என்ன என்றால் அவர்கள் நகரத்திலிருந்து இங்கே வந்து மூக்கை விடைக்கிறார்கள், சலிப்பாய் இருக்கிறது, ஏக்கமாய் இருக்கிறது என்று. கொஞ்சம் நன்றாகக் கூர்ந்து பாரேன்! கவனித்துப் பாரேர நீ, எறும்பு எப்படி வாழ்கிறது என்று. அல்லது அகழெலியையோ வேறு எந்தப் பிராணியையேனுமோ எடுத்துக் கொள்!.. ஆவலைத் தணித்துக் கொள்வதற்காகக் கூர்ந்து கவனி. பிறகு எண்ணிப் பார், வாழ்க்கையைப் பற்றி உனக்கு நிறையத் தெரியுமா தெரியாதா என்று. நகரத்தைப் பற்றி நீங்கள் எனக்குக் கதை சொல்வீர்களோ?.. நான் எனக்குத் தெரிந்ததைச் சொல்லத் தொடங்கினாலோ? ஆனால் எனக்கு யாரும் செவி சாய்க்க மாட்டார்கள். உங்களையோ, வியந்து நோக்குவார்கள், நகரவாசிகள் ஆனதால். எனக்கோ, நீ நகரவாசி, நாகரிகமான பூட்சுகள் மாட்டிக் கொண்டு நடைபாதையில் பகட்டுகிறாய் என்பது ஒரு பொருட்டே இல்லை. இவனுந்தான் பகட்டித் தீர்த்திருக்கிறான். அழகான வாழ்க்கைக்காக ஒரு பதினைந்து வருஷம் வாங்கிக் கட்டிக் கொண்டிருப்பான். கடையில் கன்னம் வைத்துத் திருடியிருப்பான், வேறு ஒன்றும் இல்லை. ஒரு தரம் வெளிச்சம் போட்டு விட்டுக் குப்புற விழுந்திருக்கிறான். மறுபடியும் ஆபத்தை விலைக்கு வாங்குகிறான். தானாகவே. இதன் அர்த்தம் ஒன்றுதான்: நகரம் இல்லாமல் இவனால் இருக்க முடியாது. மறுபடியும் ஏதாவது கடையைக் குறி வைத்திருக்கிறான். ஷாம்பேனும்... எங்கிருந்து வருமாம் இந்த ஷாம்பேன்? மடையர்கள்... உங்களைத்

தின்று தீர்த்து விடும் நகரம், எலும்புகள் சகிதம். மடையர் கள் மேல் இரக்கமாகவும் இருக்கிறது. எதுவும் செய்யவும் முடியாது. நிரூபிக்க முடியாது.''

அடுப்பில் விறகுகள் எரிந்து தீர்ந்து விட்டன. நிக்கீதிச் காத்திருந்தான். சாம்பலில் கடைசிக் கங்குகள் அணைந்து போனதும் புகைபோக்கியை மூடி விளக்கை அணைத்து விட்டு இளைஞன் பக்கத்தில் படுத்தான். அவன் ஆழ்ந்து சீராக மூச்சு விட்டுக் கொண்டிருந்தான். கையைத் தனக்கு அடியில் இசை கேடாக நுழைத்துக் கொண்டிருந்தான். நிக்கீதிச் கையைச் சரிப்படுத்திய போது அவன் அசையக்கூட இல்லை.

''ஒரேயடியாகக் களைத்துப் போய் விட்டான்'' என்று எண்ணமிட்டான் நிக்கீதிச். ''முரட்டுப் பிடிவாதம் பிடித் தான்... ஆனால் யார் கட்டாயப்படுத்துகிறார்கள்? அட அசடு களா!''

...நள்ளிரவுக்குப் பின் மர வீட்டுக்கு அருகே வெளியில் இரைச்சல் கேட்டது. இரண்டு அல்லது மூன்று ஆண்களின் குரல்கள் காதுக்கு எட்டின.

இளைஞன் விர்ட்டென்று துள்ளி எழுந்தான்—உறங்கவே இல்லை போல. நிக்கீதிச்சும் தலையைச் சற்று நிமிர்த்தினான்.

''யார் இவர்கள்?'' என்று சட்டெனக் கேட்டான் இளை ஞன்.

''சைத்தானே அறிவான்.''

இளைஞன் பலகைக் கட்டிலிலிருந்து துள்ளி எழுந்து கதவை நோக்கிப் பாய்ந்தான், உற்றுக் கேட்டான், சுவற்றில் தட்டித் தடவினான்—துப்பாக்கியைத் தேடினான். நிக்கீதிச் ஊகத்தால் இதைத் தெரிந்து கொண்டான்.

''இந்தா, மடத்தனம் பண்ணாதே! இன்னும் மோசமான விபத்தில் மாட்டிக் கொள்வாய்'' என்று தணிவாகச் சீறினான்.

''யார் இவர்கள்?'' என்று மறுபடி கேட்டான் இளைஞன்.

''தெரியாது என்கிறேனே.''

''உள்ளே விடாதேயும். கதவைப் பூட்டும்.''

''மடையா. மர வீட்டில் யார் கதவைப் பூட்டுவார்கள்? பூட்டுவதற்கு ஒன்றும் கிடையாதே. படு, அசையாதே.''

''ஊம், தாத்தா!..''

இளைஞன் சொல்ல வந்ததை முடிக்க நேரமில்லை. யாரோ வாயிற்படியில் ஏறி நாதாங்கியைத் தேடினார்கள். இளைஞன்

பாம்பு போலக் கட்டிலில் விழுந்து ஊர்ந்த வண்ணம் கிசு கிசுத்தான்:

''பெரியவரே, ஆண்டவன் பெயராலும் பேயின் பெயரா லும் சாத்தான் பெயராலும் ஆணையிடுகிறேன்: காட்டிக் கொடுத்தீரோ... உம்மை வேண்டிக் கொள்கிறேன், கிழவரே. ஆயுள் முழுவதும்...''

''படு'' என்று அதட்டினான் நிக்கீதிச்.

கதவு விரியத் திறந்தது.

''ஆகா!'' என்றது ஆழ்ந்த கட்டைக் குரல். ''நான்தான் சொன்னேனே, யாரோ இருக்கிறார்கள் என்று. கதகதப்பாக இருக்கிறது. உள்ளே வாருங்கள்!''

நிக்கீதிச் கட்டிலிலிருந்து இறங்கி, ''கதவைச் சாத்தேன்!'' என்று கோபத்துடன் சொன்னான். ''சந்தோஷப்படுகிறான், வெப்பமாய் இருக்கிறது என்று! கதவை இன்னும் விரியத் திற, ஒரே வெதுவெதுப்பாய் இருக்கும்'' என்று நொடித் தான்.

''எல்லாம் ஒழுங்காய் இருக்கிறது'' என்றது கட்டைக் குரல். ''இடம் வெதுவெதுப்பாய் இருக்கிறது, வீட்டுக்காரன் இன்முகத்தோடு உபசரிக்கிறான்.''

நிக்கீதிச் விளக்கைப் பொருத்தினான்.

இன்னும் இருவர் உள்ளே வந்தார்கள். ஒருவனை நிக்கீதிச் அறிந்திருந்தான். அவன் வட்டார மிலீஷியாத் தலைவன். வேட்டைக்காரர்கள் எல்லோரும் அவனை அறிந்திருந்தார் கள். வேட்டைக்காரர் சீட்டுகள் விஷயமாக வதைத்து எடுத் தான், கட்டணம் செலுத்தும்படிக் கட்டாயப்படுத்தினான்.

''நீ யெமெல்யானவ்தானே?'' என்று கேட்டான் மிலீஷி யாத் தலைவன். நெடிய, பருத்த மேனியனான அவனுக்குச் சுமார் ஐம்பது வயது இருக்கும். ''சரியா?''

''ஆமாம், தோழர் புரத்தோகின்.''

''நல்லது!.. விருந்தாளிகளை ஏற்றுக் கொள்.''

மூவரும் மேலுடைகளைக் கழற்றத் தொடங்கினார்கள்.

''வேட்டையாடவா?'' என்று கேட்டான் நிக்கீதிச். அவ னுடைய கேள்வியில் இடும்பு தொனித்தது. வெளியிலிருந்து வரும் இந்தத் துப்பாக்கிக்காரர்களை அவனுக்குப் பிடிக்க வில்லை. வெறுமே இரைச்சல் போட்டு விட்டுப் போய்விடு வார்கள்.

''உடம்புக்குக் கொஞ்சம் பயிற்சி கொடுக்க வேண்டும்.

ஆமாம், இந்த ஆள் யார்?'' என்று பலகைக் கட்டிலில் படுத்திருந்த இளைஞனைக் கண்டு வினவினான் மிலீஷியாத் தலைவன்.

''புவி இயலான். குழுவிலிருந்து பின்தங்கி விட்டான்'' என்று வேண்டா வெறுப்பாக விளக்கினான் நிக்கீதிச்.

''வழி தவறி விட்டானோ?''

''ஆமாம்.''

''எங்களுக்கு ஏனோ தகவல் இல்லை. எங்கே போனார்களாம், சொன்னானா?''

''சொல்லுவது என்னத்தை? அரும் பாடு பட்டு வாயைத் திறந்தான். குளிரில் அப்படி விரைத்துப் போயிருந்தான். ஸ்பிரிட் குடிக்கக் கொடுத்தேன். இப்போது பிணம் போலக் கிடந்து உறங்குகிறான்.''

மிலீஷியாத் தலைவன் நெருப்புக் குச்சியைக் கிழித்து இளைஞனுடைய முகத்தருகே கொண்டு போனான். இளைஞனது ஒரு தசைகூட அசையவில்லை. சீராக மூச்சு விட்டுக் கொண்டிருந்தான்.

''அளவில்லாமல் குடிக்க வைத்திருக்கிறாய் இவனை'' என்றான் தலைவன். அவனுடைய தீக்குச்சி அணைந்து விட்டது. ''எங்களுக்கு ஏன் ஒரு தகவலும் கிடைக்கவில்லை, ஊம்?''

''ஒருவேளை தகவல் தெரிவிக்க இன்னும் நேரம் போதவில்லையோ என்னவோ'' என்று சொன்னான் வந்தவர்களில் ஒருவன்.

''அட இல்லை. இவன் ரொம்ப நேரமாக அலைகிறான் என்பது தெரிகிறதே. எவ்வளவு நேரமாகத் தனியே நடக்கிறான் என்று இவன் சொல்லவில்லையா?''

''இல்லை'' என்று பதில் அளித்தான் நிக்கீதிச். ''பின்தங்கி விட்டதாகச் சொன்னான், அவ்வளவுதான்.''

''தூங்கிக் களையாறட்டும். நாளைக்கு விசாரிப்போம். அப்புறம் என்ன, தோழர்களே, தூங்குவோமா?''

''தூங்குவோம்'' என்று இசைந்தார்கள் மற்ற இருவரும். ''இடம் போதுமா?''

''இடம் போதும்'' என்று உறுதியாகச் சொன்னான் மிலீஷியாத் தலைவன். ''போன தடவையும் நாங்கள் ஐந்து பேர் இருந்தோம். விடிவதற்குள் அனேகமாக முடங்கிப் போனோம், ஏனென்றால் அடுப்பில் எரித்த விறகு குறைவு. குளிரோ, மைனஸ் ஐம்பது டிகிரி சென்டிகிரேடு இருந்தது.''

மேலுடைகளைக் களைந்து விட்டு அவர்கள் கட்டிலில் படுத்

தார்கள். நிக்கீதிச் இம்முறையும் இளேனுன் பக்கத்தில் படுத்துக் கொண்டான்.

வந்தவர்கள் தங்கள் வட்டார விவகாரங்கள் பற்றி இன்னும் கொஞ்சம் பேசிக் கொண்டிருந்து விட்டு மௌனமானுர்கள்.

விரைவில் எல்லோரும் உறங்கி விட்டார்கள்.

...சுவற்றில் சன்னல் கண்ணுக்குப் புலப்படத் தொடங்கியதும் தொடங்காததுமாக நிக்கீதிச் விழித்துக் கொண்டான். இளேனுனேப் பக்கத்தில் காணவில்லே. நிக்கீதிச் பலகைக் கட்டிலிலிருந்து ஓசைப்படாமல் இறங்கினுன். பைகளில் துழாவி நெருப்புப் பெட்டியை எடுத்தான். கெட்டது எதையும் எண்ண அவனுக்கு இன்னும் நேரம் இல்லே. தீக்குச்சியைக் கிழித்தான்... இளேனுனேயோ, அவனுடைய கோட்டையோ, நிக்கீதிச்சின் துப்பாக்கியையோ எங்கும் காணேம். நெஞ்சில் சுரீர் என்று வலி எடுத்தது.

''போய் விட்டான். துப்பாக்கியையும் எடுத்துக் கொண்டு விட்டான்.''

நிக்கீதிச் சத்தமின்றி உடை அணிந்து கொண்டான், மூலேயில் சார்த்தியிருந்த மூன்று துப்பாக்கிகளில் ஒன்றை எடுத்துக் கொண்டான், தோட்டாக்களும் பெருங் குண்டுகளும் இருக்கின்றனவா என்று பையில் தடவிச் சரி பார்த்தான். சந்தடி செய்யாமல் கதவைத் திறந்து வெளியேறினுன்.

பொழுது அப்போதுதான் புலர்ந்திருந்தது. இரவுக்குப் பின் குளிர் குறைந்திருந்தது. மூடுபனிப் படலம் புலரொளியின் மெல்லிய வண்ணத்தைப் போர்த்திருந்தது. ஐந்து அடிகளுக்கு அப்பால் எதுவும் இன்னமும் பார்வைக்குப் புலப்படவில்லே. இளவேனில் மணம் கமழ்ந்தது.

நிக்கீதிச் ஸ்கீகளே மாட்டி இறுக்கிக் கொண்டு, சற்றே பழுப்பேறிய வெண்பனி மேல் துலக்கமாகப் பதிந்திருந்த ஸ்கீத் தடத்தில் சென்முன்.

''தெரு நாய்க்குப் பிறந்த பயலடா நீ, சிறையிலிருந்து தப்பி வந்த கடைத்தேருக் கழிசடை'' என்று தணிந்த குரலில் வாய்விட்டுத் திட்டினுன். ''போய் வேண்டுமானுல் தொலே, நீ பாழாய்ப் போக, ஆனுல் துப்பாக்கியை எதற்காக எடுக்க வேண்டும்? துப்பாக்கி இல்லாமல் நான் இங்கே என்ன செய்வேன் என்று மூளேயைச் செலுத்தி எண்ணிப் பார்த்தாயா? உங்கள் எல்லோருக்கும் வேண்டிய துப்பாக்கிகளேச் சேகரித்து

வைப்பதற்கு நான் என்ன, ஆயிரம் ஆயிரமாகவா சம்பாதிக்கிறேன்? நீயோ அதை எப்படியும் எங்காவது எறிந்து விடத்தானே போகிறாய், கயவாளிப் பயலே? தைகாவிலிருந்து வெளியேறி விட்டால் போதுமே உனக்கு. நானோ, இங்கேயே குந்தி இருப்பேன், கைகளைக் கட்டிக் கொண்டு, துப்பாக்கி இல்லாமல். மனிதர்களுக்கு வெட்கமில்லை, மானமும் இல்லை.''

கொஞ்சங் கொஞ்சமாக வெளிச்சம் ஆகத் தொடங்கியது. பகல் மப்பு மந்தாரமும் வெதுவெதுப்புமாக இருக்கும் என்று தோன்றியது.

ஸ்கீத் தடம் கிராமத்துக்கு எதிர்ப் புறமாகச் சென்றது.

''ஆட்களுக்குப் பயப்படுகிறாயோ? அட அற்பன்களா... 'அழகான வாழ்க்கை'யாம். கிழவனிடம் உள்ள கடைசித் துப்பாக்கியை எடுத்துக் கொள்வது மோசம் இல்லை, செய்யக் கூடியதுதான் என்று நினைத்தாய் போலும். ஆனால் என்னிடமிருந்து நீ தப்ப மாட்டாய், அருமைப் பையா. நீங்கள் இளைஞர்கள் தாம் என்றாலும் நான் இந்த மாதிரி ஏழு பேரைச் சுழற்றி அடிப்பேன்.''

கிழவனுக்குப் பிரமாதக் கோபம் வந்து விடவில்லை, ஆனால் மனத்தாங்கலாய் இருந்தது. ஒருவனை வரவேற்றுக் குடிக்கவும் சாப்பிடவும் கொடுத்துக் குளிரைப் போக்கினால் அவன் துப்பாக்கியை எடுத்துக் கொண்டு போய் விட்டான். அப்புறமும் அவனைக் கயவன் என்று சொல்லாமல் எப்படி இருப்பது?

நிக்கீதிச் இதற்குள் ஒரு மூன்று கிலோமீட்டர் கடந்திருந்தான். அனேகமாக நல்ல வெளிச்சம் ஆகி விட்டது. ஸ்கீத் தடம் முன்னே வெகு தூரம் வரை கண்ணுக்குத் தெரிந்தது.

''அதிகாலையில் எழுந்து விட்டான். எப்படி ஓசைப்படுத்தாமல் நழுவி விட்டான்!''

ஓரிடத்தில் இளைஞன் சிகரெட்டுப் பொருத்துவதற்காக நின்றிருந்தான். ஸ்கீத் தடத்தின் மருங்கில் கழியை ஊன்றிய குழிவு இருந்தது. புகையிலைத் தூளும் எரிந்த தீக்குச்சியும் வெண்பனி மேல் கிடந்தன.

''புகையிலைப் பையையும் கையாடி இருக்கிறான்!'' என்று கோபத்துடன் துப்பினான் நிக்கீதிச். ''கயவாளிப் பயல் என்றால் கடைகெட்ட கயவாளிப் பயல்!'' வேகத்தை அதிகமாக்கினான்.

...பள்ளத் தாக்கில் கீழே தொலைவில் இளைஞன் போவதை நிக்கீதிச் கண்டான்.

இளைஞன் சீராக அடி வைத்து சென்றான். அவசரப்படாமல்

ஓசிந்தாடியவாறு நடந்தான். முதுகுக்குப் பின் இருந்தது துப்பாக்கி.

''ஸ்கீகளில் நடக்கத் தெரிந்தவன்'' என்று மனதுக்குள் குறித்துக் கொள்ளாமல் இருக்க நிக்கீதிச்சால் முடியவில்லை. சரிவான நீண்ட மேட்டின் உச்சி தன்னை இளைஞனிடமிருந்து மறைக்கும் விதத்தில் அதைச் சுற்றிச் சென்று இளைஞனை மறிப்பதற்காக ஸ்கீத் தடத்தை விட்டு விலகி ஓடினான். இளைஞனை எங்கே சந்திப்போம் என்பதை அவன் உத்தேசமாக அறிந்திருந்தான். அந்த இடத்துக்குப் போகும் வழியில் அகல மற்ற திறப்பு வெளி இருக்கும். இளைஞன் அதைக் கடந்து மறுபடி காட்டில் புகுவான்... அப்போதுதான் நிக்கீதிச் அவனுக்கு எதிர்ப்படுவான்.

''இப்போது நான் உன்னைப் பார்க்கிறேன்'' என்று ஓரளவு வன்மக் களிப்புடன் வாய்க்குள் சொல்லிக் கொண்டான் நிக்கீதிச். விரைவாகச் சறுக்கிச் செல்வதற்காகக் கழிகளை முழு பலத்துடன் அழுத்தினான். விந்தை, ஆனால் இளைஞனுடைய அழகான முகத்தை இன்னொரு தரம் பார்க்க அவனுக்கு மிகுந்த விருப்பம் உண்டாயிற்று. ஆர்வத்தைத் தூண்டும் அளவுக்குக் கவர்ச்சியான ஒன்று அந்த முகத்தில் இருந்தது. ''அவன் தன்னுடைய அழகான வாழ்க்கைக்கு இவ்வளவு ஆசையுடன் திரும்புகிறான் என்றால் அப்படித்தான் செய்ய வேண்டும் போலும். யோசித்துப் பார்த்தால், இங்கே அவன் செய்வதற்கு என்ன இருக்கிறது? மடிந்து போவான். பாழும் வாழ்க்கை, இதை எப்படிப் புரிந்து கொள்வது?'' என்று எண்ணமிட்டான் நிக்கீதிச்.

திறப்பு வெளியின் அருகே நிக்கீதிச் காட்டிலிருந்து எச்சரிக்கையுடன் எட்டிப் பார்த்தான். திறப்பு வெளியில் ஸ்கீத் தடம் இன்னும் பதியவில்லை. இளைஞனை அவன் முந்தி விட்டான். விரைவாகத் திறப்பு வெளியைக் கடந்து, இளைஞன் உத்தேசமாக வெளிப்படக் கூடிய இடத்தைத் தெரிந்து, புதர் மறைவில் உட்கார்ந்து குண்டுகளைச் சரி பார்த்து விட்டு எதிர்பார்க்கலானான். தன் வசமின்றியே, அனுபவமுள்ள வேட்டைக்காரனின் கண்களால் துப்பாக்கியைப் பார்வையிட்டான். துலா நகரில் தயாரான புதிய துப்பாக்கி. பளபளத்தது, துப்பாக்கி எண்ணெய் கடு நெடி அடித்தது. ''வேட்டைக்குக் கிளம்பி இருக்கிறார்கள், ஆனால் துப்பாக்கி இப்படி மணம் வீசக் கூடாது என்பதை எண்ணிப் பார்க்க

வில்லே. வேட்டையின் போது புகை பிடிப்பதையும் மறந்து விட வேண்டும், வாயிலிருந்து நாற்றம் அடிக்காமல் இருப்பதற்காகத் தேநீரால் வாயைக் கழுவிக் கொப்புளிக்க வேண்டும். உடைகளும் அறை வாடை அடிக்காதிருப்பதற்காக அவற்றைக் களைந்து விட்டு வெளியே தொங்கிய உடைகளைப் போட்டுக் கொள்ள வேண்டும். வேட்டைக்காரர்களாம்— கண்ணராவி!''

இளைஞன் திறப்பு வெளிக் கோடியில் வெளிப்பட்டான், நின்றான். இரு புறங்களிலும் பார்வை செலுத்தினன். இன்னும் சற்று நேரம் தயங்கி நின்றவன், திறப்பு வெளியின் குறுக்காக மிக மிக வேகமாக ஓடினன். அப்போது அவனுக்கு எதிரே வந்தான் நிக்கீதிச்.

''நில்! கைகளைத் தூக்கு!'' என்று அவன் உரக்க உத்தர விட்டான், இளைஞனை ஒரேயடியாகத் திடுக்கிட வைப்பதற்காக. இளைஞன் தலையைச் சட்டென நிமிர்த்தினன். அவனுடைய கண்களில் திகில் தெரிந்தது.அவன் கைகளை உயர்த்தப் போனவன், நிக்கீதிச்சை அடையாளம் கண்டுகொண்டான். ''ஒருவருக்கும் பயப்பட மாட்டேன் என்கிருய், ஆனல் உனக்கு உடனே கழிச்சல் எடுத்து விட்டதே'' என்ருன் நிக்கீதிச்.

இளைஞன் விரைவில் அச்சத்தைப் போக்கிக் கொண்டான். தனது கவர்ச்சிப் புன்னகையை ஓரளவு வலிந்து வருவித்துக் கொண்டு முறுவலித்தான்.

''இந்தாரும், பெரியவரே... பலே ஆள் ஐயா நீர். சினிமாவில் வருகிற மாதிரி... நீர் நாசமாய்ப் போக. இப்படிச் செய்தால் நெஞ்சு வெடித்து விடலாமே'' என்ருன்.

''இப்போது நான் சொல்வதைக் கேள்'' என்று காரியப் பாங்காக உத்தரவிடத் தொடங்கினன் நிக்கீதிச். ''துப்பாக்கியைக் கழற்ருதே. கைகளைப் பின்னே கொண்டு போய்த் துப்பாக்கிப் பூட்டைக் கழற்றி ஒடித்துத் தோட்டாக்களை வெளியே போடு. பையில் இருப்பவை எல்லாவற்றையும் வெளியே போடு. என்னிடம் பதினறு தோட்டாக்கள் மிஞ்சி இருந்தன. எல்லாவற்றையும் வெண்பனி மேல் எறி. நீ ஒரு பக்கம் விலகு. வேடிக்கை செய்யப் பார்த்தாயோ, சுடுவேன். கண்டிப்பாகச் சொல்லுகிறேன்.''

''போதும் விளையாட்டு, பெரியவரே. எனக்கு என்னவோ இப்போது கேலி செய்யப் பிடிக்கவில்லே.''

''வெட்கங்கெட்டவனே, திருட்டுப் பயலே.''

''நீர் தாமே சொன்னீர், காட்டில் துப்பாக்கி இல்லாமல் இருப்பது அறிவீனம் என்று.''

''நான் இங்கே அது இல்லாமல் என்ன செய்வதாம்?''

''நீர் உம் இடத்தில் இருக்கிறீர்.''

''அட கொடு அப்பா. என் இடமாம். என் இடத்தில் என்ன, தொழிற்சாலையா இருக்கிறது?''

இளைஞன் பைகளிலிருந்து தோட்டாக்களை வெளியே போட்டான். நிக்கீதிச் எண்ணிஞன்—பதிஞன்கு. பின்பு இளைஞன் கைகளைப் பின்புறம் மடக்கி, கீழ் உதட்டைக் கடித்துக் கொண்டு, கண்களைச் சுரித்தவாறு கிழவனைக் கூர்ந்து பார்த்தான். அவனும் இளைஞன் மேல் வைத்த கண்ணை வாங்கவில்லை. துப்பாக்கிக் குதிரையைச் சுடத் தயாராகக் கைகளில் பிடித்து அதன் குழாய் இளைஞன் மார்புக்கு நேராக இருக்கும்படி வைத்துக் கொண்டிருந்தான்.

''என்ன சுணங்குகிருய்?''

''வெளியே எடுக்க முடியவில்லை...''

''நகங்களால் மாட்டிப் பிடி... அல்லது துப்பாக்கி அடிக்கட்டையை முட்டியால் இடி.''

முதலில் ஒரு தோட்டாவும் பின்பு மற்றதும் விழுந்தன.

''நல்லது. இப்போது விலகிப் போ. அதோ, அங்கே.''

இளைஞன் கீழ்ப்படிந்தான்.

நிக்கீதிச் தோட்டாக்களைத் திரட்டி மேல் கோட்டுப் பைகளில் போட்டுக் கொண்டான்.

''துப்பாக்கியை என்னிடம் எறி. நீ மட்டும் அசையாதே.''

இளைஞன் துப்பாக்கியைக் கழற்றிக் கிழவனிடம் எறிந்தான்.

''நிற்கும் இடத்தில் இப்போது உட்கார், புகை பிடிப்போம். புகையிலைப் பையையும் என்னிடம் போடு. புகையிலைப் பையையும் திருடிக் கொண்டாயே...''

''எனக்குப் புகை பிடிக்க விருப்பம்.''

''எனக்கு எனக்கு என்றே ஓயாமல் பல்லவி பாடுகிருய். பேய்ப் பயலே, அடுத்தவனைப் பற்றி நீ நினைக்கவில்லை! நான் எதைப் புகைப்பேனும்?''

இளைஞன் சிகரெட்டு பற்ற வைத்துக் கொண்டான்.

''நான் கொஞ்சம் புகையிலைத் தூள் எடுத்துக் கொள்ளலாமா?''

''எடுத்துக் கொள். நெருப்புப் பெட்டி இருக்கிறது அல்லவா?''

''இருக்கிறது.''

இளைஞன் கொஞ்சம் புகையிலைத் தூள் தனக்கு எடுத்துக் கொண்டு, பையைக் கிழவனிடம் எறிந்தான். கிழவனும் சிகரெட்டு பற்ற வைத்துக் கொண்டான்.

ஒருவரிடமிருந்து ஒருவர் சுமார் ஐந்து அடி விலகி உட்கார்ந்திருந்தார்கள்.

''போய்விட்டார்களா அவர்கள்?... இராத்திரி வந்தவர்களைத்தான் கேட்கிறேன்.''

''உறங்குகிறார்கள். உறங்குவதில் அவர்கள் சூரர்கள். வேட்டையாட வரவில்லை, சும்மா போக்குக் காட்டுகிறார்கள். காற்றாட உலாவ விருப்பம் அவர்களுக்கு. தங்கள் வட்டாரத்தில் ரொம்ப உலாவிவிட முடியாது—எல்லோரும் பார்த்துக் கொண்டிருப்பார்களே. அதனால்தான் ஊரார் கண்களில் படாதபடி இங்கே வருகிறார்கள்.''

''யார் அவர்கள்?''

''அதிகாரிகள்...கெட்டித்த துப்பாக்கிகளை வீணே எடுத்து வருகிறார்கள்.''

''ம்-அப்படியா...''

''நீ என்ன நினைத்தாய், என்றால் உன்னை எட்டிப் பிடிக்க முடியாது என்றா?''

''நான் ஒன்றுமே நினைக்கவில்லை. ஆமாம், அவர்களில் ஒருவரை உமக்குத் தெரியும். யார் அவர்? குலப் பெயரைச் சொல்லி அழைத்தீரே... புரத்தோகின் என்றோ என்னவோ.''

''அந்த ஆள் சமூகக் காப்புறுதி அலுவலகத்தில் வேலை செய்கிறார். என் வீட்டுக்காரியின் பென்ஷனுக்கு ஏற்பாடு செய்யப் போயிருந்தேன். அங்கே இவரைக் கண்டேன்...''

இளைஞன் ஆராயும் விழிகளால் முதியவனைக் கூர்ந்து நோக்கினான்.

''உடல்நல விடுதிகளுக்கு அனுமதிச் சீட்டுகள் எழுதித் தருகிறார்களே அந்த அலுவலகமா இது?''

''ஆமாம்.''

''மழுப்புகிறீர், கிழவனாரே. என்னைச் சிறையில் தள்ளப் பார்க்கிறீரா என்ன? ஒரு துப்பாக்கிக்காக...''

''உன்னைச் சிறையில் தள்ளி எனக்கு என்ன இழவு ஆக வேண்டும்?'' என்று உளமாரச் சொன்னான் நிக்கீதிச்.

''துப்பாக்கியை விலைக்குக் கொடுமேன். என்னிடம் பணம் இருக்கிறது.''

''மாட்டேன்'' என்று உறுதியாகக் கூறினான் நிக்கீதிச். ''மாலையிலேயே நல்ல படியாகக் கேட்டிருந்தால் விலைக்குக் கொடுத்து இருப்பேன். ஆனால் எப்போது நீ பன்றித்தனம் பண்ணினாயோ, கொடுக்க மாட்டேன்.''

''அவர்கள் விழிக்கும் வரை காத்திருக்க என்னால் முடிய வில்லையே.''

''இரவில் என்னை வெளியே அழைத்து, 'இந்த மாதிரி விஷயம், பெரியவரே. இந்த ஆட்களோடு பேச எனக்கு அறவே விருப்பம் இல்லை. துப்பாக்கியை விலைக்குக் கொடும், நான் போய் விடுகிறேன்' என்று சொல்லி இருக்கலாமே. நீயோ... திருடினாய். எங்கள் வட்டாரத்தில் திருடியவன் கைகளை வெட்டி விடுவார்கள்.''

இளைஞன் முழங்கைகளை முழங்கால்கள் மேல் ஊன்றி, தலையைக் கைகள் மேல் சாய்த்துக் கொண்டான். கம்மிய குரலில் சொன்னான்:

''நேற்று காட்டிக் கொடுக்காததற்கு நன்றி.''

''எப்படியும் நீ விடுதலை அடைய முடியாது.''

''ஏன்?''

''சைபீரியா முழுவதையும் கடப்பது விளையாட்டா என்ன!''

''இருப்புப் பாதை வரை போனால் எனக்குப் போதும். அங்கே ரயில் ஏறுவேன். ஆவணங்கள் இருக்கின்றன. இங்கே தான் துப்பாக்கி இல்லை... இங்கேதான் மோசம். விலைக்குக் கொடுமேன், ஊம்?''

''மாட்டேன், கேட்கக்கூடச் செய்யாதே.''

''நான் இப்போது புது வாழ்வு தொடங்குவேன்... நீர் எனக்குக் கை கொடுமேன், பெரியவரே...''

''ஆவணங்கள் உனக்கு எங்கே கிடைத்தன? யாரையாவது தீர்த்துக் கட்டியிருப்பாய், அப்படித்தானே?''

''ஆவணங்களையும் மனிதர்கள் தயாரிக்கிறார்கள்.''

''கள்ளப் பத்திரங்கள். போலி ஆவணங்கள் வைத்திருந் தால் பிடிக்க மாட்டார்கள் என்று நினைக்கிறாயோ?''

''நீர் என்னைப் பற்றி... சொந்தத் தாயார் போலக் கவலைப் படுகிறீர். பிடித்து விடுவார்கள், பிடித்து விடுவார்கள் என்று கிளிப் பிள்ளை மாதிரித் திருப்பித் திருப்பிச் சொல்லிக்

கொண்டிருக்கிறீர். பிடிக்க மாட்டார்கள் என்கிறேன் நான்.''

''ஆமாம், நீ நாணயமாக உழைத்துச் சம்பாதிக்கப் போகிருய் என்ருல் ஷாம்பேன் குடிக்க உனக்கு வக்கு ஏது?..''

''நேற்றைக்கு நான் வாய்க்கு வந்ததை உளறினேன், அதைக் கூட்டாக்காதேயும். குடி மயக்கத்தில் இருந்தேன்.''

''அட அசடுகளா...'' கிழவன் காட்டமுள்ள மஞ்சள் எச்சிலை வெண்பனி மேல் உமிழ்ந்தான். ''நீங்கள் இளவட்டங்கள், இனிமேல்தான் முழு வாழ்க்கையும் வாழ வேண்டும் நீங்கள். ஆனால் உங்களுக்கோ... இருப்புக் கொள்ளவில்லை... இந்த இதுகள் இருக்கின்றனவே... வெறி பிடித்த நாய்கள் போல ஓடிக் கொண்டிருக்கிறீர்கள். ஓர் இடத்தில் நிலைத்து வாழ உங்களால் முடியவில்லை. கடும் பட்டினி தாங்காமல் தான் திருடக் கிளம்பினுயோ? கொழுப்பெடுத்து அலைகிறீர்கள், கடைத்தேருச் சென்மங்களா. வாழ்க்கையின் சிரமங்களை நீங்கள் என்ன கண்டீர்கள்?...''

''எப்படிச் சொல்வது, பெரியவரே...''

''குற்றம் யார் மேல், சொல்லேன்?''

''போதும் இந்தப் பேச்சு, விடும்'' என்ருன் இளைஞன். ''கேளும்...'' என்று கலவரத்துடன் கிழவனை நோக்கினுன். ''அவர்கள் இதோ விழித்துக் கொள்வார்கள், துப்பாக்கி இருக்காது, நாம் இருவரும் இருக்க மாட்டோம்... தேடக் கிளம்புவார்களோ?''

''அவர்கள் வெயில் வரும் வரை விழித்துக் கொள்ள மாட்டார்கள்.''

''உமக்கு எப்படித் தெரியும்?''

''தெரியும். ராத்திரி அவர்களே குடித்திருந்தார்கள். வீட்டில் கதகதப்பு. அயர்த்தி விடும். மதியம் வரை உறங்குவார்கள். அவர்களுக்கு அவசரம் ஒன்றும் இல்லை.''

''ம்-மாமாம்'' என்று ஏக்கத்துடன் சொன்னுன் இளைஞன். ''சரியான சங்கடம்.''

வெதுவெதுப்பான கனத்த வெண்பனி அடர்ந்த பெரும் படலங்களாகத் திடீரென்று பெய்யலாயிற்று.

''உனக்கு வாய்ப்பானது''. நிக்கீதிச் மேலே பார்த்தான்.

''எது?'' என்று இளைஞனும் மேலே பார்த்தான்.

''வெண்பனிதான்... எல்லாத் தடங்களையும் அழித்து விடும்.''

இளைஞன் உள்ளங்கையை வெண்பனியில் நீட்டி நெடு

நேரம் வைத்துக் கொண்டிருந்தான். பனிச் சிதல்கள் உள்ளங் கையில் இளகி விட்டன.

''இளவேனில் விரைவில் வரும்...'' என்று பெருமூச்சு விட்டான்.

நிக்கீதிச் இளைஞனைக் கூர்ந்து பார்த்தான். இந்த வட்டா ரங்களில் மிக மிக அபூர்வமான ஆளைக் கடைசியில் உறுதி யாக நினைவில் பதித்துக் கொள்ள அவன் விரும்பியது போல் இருந்தது. இளைஞன் தன்னந்தனியாக, இரவில்... துப்பாக்கி இல்லாமல் போவதை எண்ணிப் பார்த்தான்.

''எப்படி இரவைக் கழிப்பாயாம்?''

''நெருப்பு மூட்டிப் பக்கத்தில் குந்தி இருப்பேன்... உறங்கு வது எப்படி?''

''கோடையிலாவது தப்பி ஓடப் படாதோ? எல்லாம் சுளுவாய் இருக்குமே.''

''ஓடச் சுளுவாய் இருக்கும் போது அங்கே விண்ணப்பங் கள் ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை. வயிற்றுப்பாட்டைத் தீர்ப்பதுதான் கஷ்டம். ஒரு கிராமத்திலிருந்து இன்னொரு கிராமம் போய்ச் சேர்வதற்குள் குடல் முதுகோடு ஒட்டிக் கொள்கிறது. சரி, கிடக்கிறது. உம்முடைய விருந்தோம் பலுக்கு நன்றி.'' இளைஞன் எழுந்தான். ''போம். இல்லா விட்டால் விழித்துக் கொண்டு விடுவார்கள் உம்முடைய இவர்கள்...''

கிழவன் தயங்கினான்.

''என்ன தெரியுமா... நிலைமையிலிருந்து தப்ப ஒரு வழி இருக்கிறது'' என்று மெதுவாகச் சொல்லத் தொடங்கினான். ''நான் உனக்குத் துப்பாக்கி தருகிறேன்... நீ நாளை ராத்திரி இரண்டு, மூன்று மணி வாக்கில் என்னுடைய கிராமத்துக்குப் போ...''

''ஊம்?''

''ஊம் போடாதே. போ. கோடி வீடு ஒன்றின் கதவைத் தட்டு. துப்பாக்கியைக் கண்டெடுத்தேன் என்று சொல்லு... அல்லது... இல்லை, எப்படிச் செய்வது?.. நீ துப்பாக்கியை வைக்கும்படியாக. எங்கள் கிராமத்திலிருந்து ரயிலடிக்கு நேரான சாலை போகிறது—ஒரு இருபது கிலோமீட்டர். அங்கே பயம் இல்லை. லாரிகள் போகின்றன. விடிவதற்குள் ரயில் நிலையம் சேர்ந்து விடுவாய். ஆனால் அங்கே ஒரு சிற்றூர் வரும். அதிலிருந்து, அதாவது சிற்றூரிலிருந்து இன்னொரு சாலை

இடது பக்கம் போகிறது. நீ அதில் போகாதே. அது வட்டார மையத்துக்குப் போகும் பாதை. நீ நேரே நட.''

''பெரியவரே...''

''பொறு! துப்பாக்கியை என்ன செய்வது? கண்டெடுத்தேன் என்ருயாஞல் ஆட்கள் கலவரப்படுவார்கள், என்னேத் தேடக் கிளம்புவார்கள். துப்பாக்கியை ஒரேயடியாகக் கொடுக்கவும் வருத்தமாய் இருக்கிறது. அது பழையதுதான் என்ருலும், இதோ இந்த மாதிரி மூன்று துப்பாக்கிகள் கூட அதற்கு மாற்ருக எனக்கு வேண்டாம்.'' நிக்கீதிச் புதிய துப்பாக்கியைக் காட்டிஞன்.

இளேஞன் முதியவனே நன்றியுடன் நோக்கிஞன். தன் கண்களில் நன்றி இன்னும் அதிகம் தெரிய வேண்டும் என்று அவன் முயன்றதாகத் தோன்றியது.

''நன்றி, பெரியவரே.''

''எதற்கு நன்றி? துப்பாக்கியை நான் எப்படிப் பெறுவேன்?''

இளேஞன் எழுந்து கிழவன் அருகே போய், பக்கத்தில் குந்திஞன்.

''இதோ யோசனே செய்வோம்... நான் அதை எங்காவது ஒளித்து வைக்கிறேன், நீர் அப்புறம் எடுத்துக் கொள்ளும்.''

''எங்கே மறைத்து வைப்பாய்?''

''ஏதேனும் வைக்கோல் போரில், கிராமத்துக்கு அருகாமையில்.''

நிக்கீதிச் சிந்தனே செய்யலாஞன்.

''ராத்திரி வேளேயில் அங்கே எது உனக்குத் தெளிவாகத் தெரியும்?.. இதைக் கேள்: ஓரத்து வீட்டுக் கதவைத் தட்டு. மஸாயெவ் யெபீம் வீடு எது என்று விசாரி. உனக்குக் காட்டுவார்கள். அவன் என் ஞானச் சகோதரன். யெபீமிடம் போய், நிக்கீதிச்சைத் தைகாவில் சந்தித்ததாகவும் அவன் புவி இயலாரைப் பாம்புப் பள்ளத்துக்குக் கூட்டிப் போனதாகவும் சொல்லு. தோட்டாக்கள் தீர்ந்து விட்டபடியால் துப்பாக்கியை வீணுகச் சுமக்க வேண்டாம் என்று அதை உன்னிடம் சேர்க்கச் சொல்லி என்னிடம் ஒப்படைத்தான் என்று சொல்லு. நாளே நின்று என்னே எதிர்பார்க்கும்படியும் நான் புவி இயலாரை அழைத்துச் சென்ற விவரத்தை அவன் ஒருவருக்கும் தெரிவிக்க வேண்டாம் என்றும் கேட்டுக்கொள். பணம் சம்பாதித்துக் கொண்டு வருவான், இரண்டு பேரும் சேர்ந்து

குடிப்பீர்கள், இல்லாவிட்டால் அவன் வீட்டுக்காரி எல்லாப் பணத்தையும் உடனே பிடுங்கிக் கொள்வாள் என்று சொல்லு. நினைவில் வைத்துக் கொண்டாயா? இப்போது ஒரு லிட்டர் வோத்காவுக்கு என்னிடம் பணம் கொடு. இல்லாவிட்டால் பிற்பாடு யெபீமிடமிருந்து தப்ப முடியாது. இப்போது நலமே போ. தோட்டாக்கள் உனக்கு... ஒரு ஆறு உருப்படி தருகிறேன். கையோடு காவலாக இரண்டு பெருங் குண்டுத் தோட்டாக்களும் தருகிறேன். செலவழிக்காவிட்டால் கிராமத்துக்குக் கொஞ்சம் தொலைவில் வெண்பனியில் எறிந்து விடு. யெபீமிடம் கொடுக்காதே. அவன் தந்திரக்காரன். ஏதோ கோளாறு என்று மோப்பம் பிடித்து விடுவான். எல்லாவற்றையும் நினைவில் வைத்துக் கொண்டாயா?''

''வைத்துக் கொண்டேன். ஆயுள் பூராவும் உம்மை மறக்க மாட்டேன், பெரியவரே.''

''நல்லது... கிராமத்துக்கு இந்த மாதிரிப் போ: சூரியன் உதித்ததும் நீ அதை எப்படியும் காண்பாய். முதலில் அது உனக்கு இடது பக்கத்தில் இருக்கட்டும். சூரியன் மேலே ஏறிய பிறகும் அது இடது பக்கமே இருக்கும்படிப் பார்த்துக் கொள். பொழுது சாயும் தறுவாயில் அது உன் முதுகுப் புறத்தில், ஒரு சொல்லுக்கு வலது காதின் பக்கம் இருக்கும்படித் திரும்பு. அப்புறம் நேரே நட. சரி, நடைப் பயணத்துக்கு முன்னல் புகை பிடிப்போம்...''

புகை பிடித்தார்கள்.

திடீரென்று பேச விஷயமே இல்லாமல் தீர்ந்து விட்டது. சுற்று நேரம் குந்தி இருந்த பின் எழுந்தார்கள்.

''விடை பெற்றுக் கொள்கிறேன், பெரியவரே, நன்றி.''

''சரி, போ.''

இருவரும் வெவ்வேறு திசைகளில் போகப் புறப்பட்டார்கள், ஆனுல் நிக்கீதிச் நின்று இளைஞனைக் கூவி அழைத்தான்:

''கேளு!.. நீ தம்பீ, மாட்டிக் கொள்ளாமல் மயிரிழை தப்பினுய். அந்தப் புரத்தோகின் இருக்கிருனே, அவன் மிலீஷியாத் தலைவனுக்கும். நல்ல வேளை நேற்று நீ விழித்துக் கொள்ளவில்லை... இல்லாவிட்டால் அவனிடமிருந்து விடுபடுவது உனக்கு முடிந்திராது. படு தந்திரக்காரச் சைத்தான்.''

இளைஞன் ஒன்றும் பேசாமல் கிழவனைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

'' 'எங்கிருந்து வருகிருய்? எங்கே போகிருய்?' என்று

உன்னைத் துளைத்து எடுத்திருப்பான். காகிதங்கள் எவற்றாலும் பயன் இருக்காது.''

இளைஞன் பேசாதிருந்தான்.

''நல்லது, நட.'' நிக்கீதிச் பிறத்தியானுடைய துப்பாக்கியைத் தோளில் மாட்டிக் கொண்டு திறப்பு வெளியின் குறுக்காகத் திரும்பிச் சென்றான், மர வீட்டை நோக்கி. திறப்பு வெளி முழுதையும் அவன் அனேகமாகக் கடந்து விட்டான்... திடீரென்று காதுக்கு மேலே உலர்ந்த கிளை செவிடாக்கும்படியாகச் சடசடத்தது போன்ற ஓசையைக் கேட்டான். அதே கணத்தில் பின்னாலிருந்து முதுகிலும் பிடர்த் தலையிலும் பல முட்டிகள் வலிவாக இடித்து முன்னே நெட்டித் தள்ளியது போல் இருந்தது. அவன் வெண்பனியில் முகம் குப்புற விழுந்தான். மேற்கொண்டு எதையும் அவன் கேட்கவோ உணரவோ இல்லை. ஒருவன் அவன் மேல் வெண்பனியை அள்ளிப் போட்டதையும் ''இது மேலானது, பெரியவரே, அதிக நம்பகமானது'' என்று சொன்னதையும் அவன் கேட்கவில்லை.

...சூரியன் உதித்த போது இளைஞன் திறப்பு வெளியிலிருந்து தொலைவில் இருந்தான். அவன் சூரியனைப் பார்க்கவில்லை. அதற்கு முதுகைக் காட்டியவாறு, திரும்பிப் பார்க்காமல் நடந்தான். முன்னே பார்வை செலுத்திக் கொண்டிருந்தான்.

ஈர வெண்பனி காற்றில் தணிவாகச் சரசரத்தது.

தைகா விழித்து எழுந்தது. காட்டின் அடர்ந்த வசந்த கால மணம் சற்றே மயக்கம் ஊட்டித் தலையைக் கிறங்க வைத்தது.

**ஓநாய்கள்** ஞாயிற்றுக் கிழமை அதிகாலை யில் இவான் தெக்திரேவின் வீட்டுக்கு வந்தான் அவனுடைய மாமன் நலூம் கிரேச்செத்தவ். இன்னும் முதுமை அடையாத இந்தத் துடியான ஆள் தந்திரக்காரன், கவர்ச்சி உள்ளவன். இவானுக்கு மாமனைப் பிடிக்காது. நலூமோ, மகள் மேல் இரக்கம் கொண்டு இவானைப் பொறுத்து வந்தான்.

''உறங்குகிருயோ?'' என்று உற்சாகமாகப் பேசத் தொடங்கினுன் நலூம். ''கெக்கே!.. இப்படித் தூங்கிஞல் சொர்க்க சாம்ராஜ்யத்தையே கோட்டை விட்டு விடுவாய். வணக்கம்.''

''எனக்கு அங்கே போகப் பெருத்த ஆசை கிடையாது. நான் அவசரப்படவில்லை.''

''வீண். எழுந்திரேன்... போவோம் ஸ்லெட்ஜில் விறகு வெட்டி வர. வேலைக் குழுத் தலைவனிடம் இரண்டு குதிரை ஸ்லெட்ஜுகள் கேட்டுக் கொண்டு வந்திருக்கிறேன். இலவசமாக அல்லதான், ஆனுல் அவன் தொலைகிருன், நமக்கு விறகு வேண்டும்.''

இவான் படுத்தபடியே சற்று யோசனை செய்தான்... பின்பு உடை அணியத் தொடங்கினுன்.

''இளைஞர்கள் நகரத்துக்குப் போகிருர்களே, அது எதனுல் தெரியுமா?'' என்று பேச்சை ஆரம்பித்தான். ''எதனுல் என்ருல், அங்கே அளவுமானப்படி வேலை செய்தால் போதும், விட்டாற்றியாக வளைய வரலாம். மனிதனை இளைப்பாற விடுகிருர்கள் அங்கே. இங்கேயோ என்ருல், சபிக்கப்பட்டவன் போல, ஓய்வு பகலிலும் கிடையாது, இரவிலும் கிடையாது, ஞாயிற்றுக் கிழமைகளிலும் கிடையாது.''

''நீ என்ன, விறகு இல்லாமல் உட்கார்ந்திருக்கச் சொல்லுகிருயா?'' என்று கேட்டாள் இவானின் மனைவி நியூரா. ''இவனுக்காகக் குதிரையைக் கேட்டுக் கொண்டு வந்தாயிற்று, இன்னமும் இவனுக்குத் திருப்தி இல்லை'' என்ருள்.

''நகரத்திலும் வேலை செய்ய வேண்டுமாம், நான் கேள்விப்பட்டேன்'' என்ருன் மாமன்.

''வேண்டும். தண்ணீர்க் குழாய்க்குப் பள்ளம் தோண்ட நான் சந்தோஷமாகப் போவேன்.ஒரு தரம் குழாய் அமைத்து

விட்டால் அப்புறம் தொல்லை இல்லை. தண்ணீரும் வெப்ப வசதியும் கிடைத்துக் கொண்டிருக்கும்.''

''ஒரு புறம் பார்த்தால் குழாய் நல்லதுதான், சந்தேகம் இல்லாமல். ஆனால் மறு புறம், சங்கடம். ஏனென்றால் அந்த நிலைமையில் நீ ஒரேயடியாக உறங்கிப் போவாய். சரி, போதும், கிளம்புவோம்.''

''காலை ஆகாரம் சாப்பிடுகிறாயா?'' என்று கேட்டாள் மனைவி.

இவான் வேண்டாம் என்று விட்டான். அவனுக்குப் பசிக்க வில்லை.

''இரவில் குடித்தாயோ?'' என்று தூண்டித் துளைத்தான் நஹூம்.

''ஆமாம், பிரபுவே!''

''அப்படி-யா-ஆ... இந்த அழகில் தண்ணீர்க் குழாய் என்கிறாயே... ஊம், போவோம் வா.''

வெயிலொளி வீசிய தெளிந்த பகல். வெண்பனி கண்கள் கூசும்படி தகதகத்தது. காட்டில் நிசப்தமும் அசாதாரண அமைதியும் குடி கொண்டிருந்தன.

நெடுந் தூரம்—ஓர் இருபது கிலோமீட்டர் தொலைவு—போக வேண்டி இருந்தது. பக்கத்தில் மரம் வெட்ட அனு மதி இல்லை.

நஹூம் முன்னே சென்றவன் ஓயாமல் சிடுசிடுத்துக் கொண் டிருந்தான்:

''சைத்தானுக்கே வெளிச்சம் எதற்காக என்று. காட்டை விட்டு மறு காட்டுக்குப் போக வேண்டுமாம்—விறகுக்காக.''

இவான் ஸ்லெட்ஜில் உறங்கி வழிந்தான். ஸ்லெட்ஜ் ஒரு சீராகச் சருகிச் சென்றது அவனைத் தாலாட்டியது.

காட்டிலிருந்து திறப்புக்கு வந்தார்கள். திறந்த பள்ளத் தில் இறங்கி மலை மேல் ஏறத் தலைப்பட்டார்கள். மலையின் உச்சியில் நீலச் சுவர் போல மறுபடி நின்றது காடு.

அனேகமாக மலை உச்சியை அடைந்து விட்டார்கள்... அப்போது, பாதைக்குச் சற்று தூரத்தில் கண்டார்கள் ஓநாய் களை. ஐந்து. காட்டிலிருந்து வெளியே வந்து நின்றவாறு எதிர் பார்த்துக் கொண்டிருந்தன.

நஹூம் குதிரையை நிறுத்தி, தணிந்த குரலில் ராகம் போட்டு ஆபாசமாகத் திட்டத் தொடங்கினான்:

''அட உங்கள் ஆத்-தாளை... கருஞ் சாம்பல் கண்மணி களா. நிற்கிறீர்கள் பார், வரிசையாக.''

இவானுடைய குதிரை இளையது, பயந்த சுபாவம் உள்ளது. அது பின்வாங்கி, நுகத்தடிக்கு வெளியே காலை வைத்து விட்டது. இவான் கடிவாள வார்களை இழுத்து அதைத் திருப் பினன். குதிரை செருமிற்று, கால்களால் அடித்தது. நுகத் தடியைத் தாண்ட அதனல் முடியவில்லை.

ஓநாய்கள் மலையிலிருந்து இறங்கத் தலைப்பட்டன.

நலூம் அதற்குள் குதிரையைத் திருப்பி இருந்தான்.

''ஊம், என்ன நீ?'' என்று கத்தினன்.

இவான் ஸ்லெட்ஜிலிருந்து குதித்து, குதிரையைச் சிர மத்துடன் நுகத்துக்குள் தள்ளினன்... பின்பு ஸ்லெட்ஜில் விழுந்தான். குதிரை தானே திரும்பி நாற்கால் பாய்ச்சலில் விரைந்தது.

அதற்குள் நலூம் தொலைவில் இருந்தான்.

குதிரையைச் சவுக்கால் விளாறியவாறு, ''கொள்ளையடிக் கிருர்கள்!'' என்று விலவிலத்துப் போய் வீரிட்டான்.

ஓநாய்கள் ஸ்லெட்ஜுகளை வழி மறிப்பதற்காக மலை யிலிருந்து சாம்பல் உருண்டைகள் போல விகுவாகப் பாய்ந்து வந்தன.

''கொள்ளையடிக்கிருர்கள்!'' என்று அலறினன் நலூம்.

''இவனுக்கு என்ன, மூளை பிசகி விட்டதா? யார் யாரைக் கொள்ளையடிக்கிருர்கள்?'' என்று தன் வசமின்றிச் சிந்தித் தான் இவான். அவன் அரண்டு போயிருந்தான், ஆனுலும் விந்தையான முறையில், அச்சத்தோடு கூடவே பெருத்த ஆவலும் அவனை அரித்தது, மாமனை நகையாடவும் அவனுக்கு விருப்பம் உண்டாயிற்று. எனினும் விரைவில் ஆவல் அகன்று விட்டது. வேடிக்கையாகவும் இருக்கவில்லை. ஓநாய்கள் ஸ்லெட்ஜுக்கு ஒரு நூறு மீட்டர் தொலைவிலிருந்த பாதையை எட்டி விட்டன. சங்கிலித் தொடர் போல நீண்டவாறு ஸ்லெட்ஜை விரைவாக நெருங்கத் தொடங்கின. இவான் ஸ்லெட்ஜின் முன்பகுதியை இறுகப் பற்றிக் கொண்டு ஓநாய் களைப் பார்த்தான்.

முன்னல் பாய்ந்து வந்தது பெரிய உடலும் அகன்ற மார்பும் கரிந்த மூஞ்சியும் உள்ள ஓநாய்... இப்போது அது ஸ்லெட்ஜிலிருந்து பதினைந்து, இருபது மீட்டர்தான் தள்ளி இருந்தது. ஓநாய்க்கும் காவல் நாய்க்கும் இருந்த வேற்றுமை

இவானுக்கு வியப்பு அளித்தது. ஓநாய்களை இவ்வளவு கிட்டத்தில் அவன் முன்பு பார்த்ததில்லை. அவை காவல் நாய்கள் போன்றவை, அளவில்தான் பெரியவை என்று எண்ணி இருந்தான். ஓநாய் வேறானது, காட்டு விலங்கு என்பதை இப்போதுதான் இவான் புரிந்து கொண்டான். கொடியதிலும் கொடியதான நாயைக் கூட அச்சமோ, பரிவோ, மனிதனின் திடீர்க் கூச்சலோ, எதுவோ கடைசிக் கணத்தில் நிறுத்தி விட முடியும். இந்தக் கரிந்த மூஞ்சி விலங்கையோ, சாவு ஒன்றால் தான் நிறுத்த முடிந்தது. அது உறுமவில்லை, அச்சுறுத்தவில்லை... அது இரையை விரட்டியது. அதன் மஞ்சள் நிற வட்ட விழிகளின் பார்வையும் நேராகவும் எளிதாகவும் இருந்தது.

இவான் ஸ்லெட்ஜில் கண்ணோட்டினான். ஒன்றுமே, சிறு கழி கூட, இல்லை. இரண்டு கோடரிகளும் மாமனுடைய ஸ்லெட்ஜில் இருந்தன. இங்கே ஒரு பக்கத்தில் புல் கட்டும் கையில் சாட்டையும் மட்டுமே இருந்தன.

''கொள்ளையடிக்கிறார்கள்!'' என்று கூச்சலிட்டான் நஹூம்.

உண்மையான திகில் இவானைப் பற்றிக் கொண்டது.

முன்னே வந்தது தலைமை ஓநாய் போலும். அது குதிரை மேல் கண் வைத்தவாறு ஸ்லெட்ஜைக் கடந்து செல்லத் தலைப்பட்டது. அது சுமார் இரண்டு மீட்டர் கிட்டத்தில் இருந்தது... இவான் சற்று எழுந்து, இடது கையால் ஸ்லெட்ஜ் விளிம்பைப் பிடித்துக் கொண்டு சாட்டையால் தலைமை ஓநாயை விளாறினான். இதை எதிர்பார்க்காத ஓநாய் பற்களைக் கடகடத்து ஒரு புறம் தாவியது. பாய்ச்சலிலிருந்து விலகி விட்டது... பின்னே விரட்டிக் கொண்டு வந்தன மற்றவை. இந்தக் கும்பல் முழுதும் விரட்டிலிருந்து விலகித் தலைவனைச் சுற்றிச் சுழன்றன. அது பின் கால்களில் அமர்ந்து பற்களால் ஒன்றையும், அடுத்ததையும் தாக்கிற்று... மறுபடி முன்னே பாய்ந்து ஸ்லெட்ஜைச் சுளுவாக எட்டி விட்டது. இவான் தயாராகி, தருணம் பார்த்திருந்தான்... தலைமை ஓநாயை இன்னொரு தடவை விளாற விரும்பினான். ஆனால் அது ஸ்லெட்ஜைக் கடந்து மேலும் முன்னே போகலாயிற்று. மற்றோர் ஓநாயும் கும்பலிலிருந்து ஒரு புறம் விலகி ஸ்லெட்ஜை மறு பக்கத்தில் கடந்து செல்ல முற்பட்டது. இவான்

பற்களைக் கடித்து முகத்தைச் சுளித்தான்... ''முடிவு. சாவு.'' முன்னே பார்வை செலுத்தினன்.

''நில்-லும்!'' என்று உரக்க ஓலமிட்டான். ''மாமா!.. கோடாலியைக் கொடும்!'' என்றான்.

நலூம் குதிரையைச் சவுக்கால் விளாறினன். பின்னே கண்ணோட்டியவன், ஓநாய்கள் மருமகனைச் சூழ முற்படுவதைக் கண்டு சட்டென முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

''கொஞ்சம் பொறும்,மாமா!.. கோடாலியைக் கொடும்! நாம் தற்காத்துக் கொள்வோம்!..''

''கொள்ளையடிக்கிறார்கள்!''

''நிறுத்தும், நாம் தற்காத்துக் கொள்வோம்!.. கொஞ்சம் நிறுத்தித் தொலையுமேன், இழி பிறவி!''

''அவற்றுக்கு எதையாவது போடு!'' என்று கத்தினன் நலூம்.

தலைமை ஓநாய் குதிரைக்குச் சரியாக வந்து அதன் மேல் பாய்வதற்குத் தக்க தருணம் பார்த்துக் கொண்டிருந்தது. பின்னல் ஓடி வந்து கொண்டிருந்த ஓநாய்கள் மிக மிகக் கிட்டத்தில் இருந்தன. மிகச் சிறு நிறுத்தம் ஏற்பட்டாலும் அவை ஓடுகிற ஓட்டத்திலேயே ஸ்லெட்ஜ் மீது பாய்ந்து விடும், அதோடு எல்லாம் முடிந்து விடும். இவான் புல் கட்டை எறிந்தான். ஓநாய்கள் அதை ஏறெடுத்தும் பார்க்கவில்லை.

''மாமா, நாய்ப் பயலே, கொஞ்சம் நிறுத்து. கோடாலியைப் போடு!''

நலூம் திரும்பிப் பார்த்தான்.

''இவான்!.. பார், போடுகிறேன்!''..

''நீ கொஞ்சம் நிறுத்து!''

''பார், போடுகிறேன்!'' என்று பாதை ஓரத்தில் கோடரியைப் போட்டான் நலூம்.

இவான் அளவு பார்த்தான்... ஸ்லெட்ஜிலிருந்து குதித்து, கோடரியை எடுத்துக் கொண்டான்... குதிக்கையில் மூன்று பின்புற ஓநாய்களை அவன் கலவரப்படுத்தி விட்டான். அவை ஒரு பக்கம் விலகி, ஓட்ட வேகத்தைத் தணித்து, மனிதன் மேல் பாய ஆயத்தமாயின. ஆனல் அதே கணத்தில் காலடியில் கெட்டியான இறுகு பனிப் பாளத்தை உணர்ந்த தலைமை ஓநாய் பாய்ந்தது. குதிரை திடுக்கிட்டுத் துள்ளி விலகிக் குதித்தது, வெண்பனிக் குவியலில்... ஸ்லெட்ஜ் குப்புறக் கவிழ்ந்து விட்டது. நுகத்தடிகள் நுக வாரை முறுக்கவே,

அது குதிரையின் கழுத்தை நெரிக்கத் தொடங்கிற்று. குதிரைக்கு ஈழை இழுக்கலாயிற்று. அது நுகத்தடிகளில் அடித்தது. மறு பக்கத்திலிருந்து இரையை எட்டிய ஓநாய் குதிரைக்கு அடியில் தாவி, கூரிய உகிர்கள் உள்ள முன்காலினல் அடித்து அதன் வயிற்றை நெடுக்காகக் கிழித்து விட்டது.

பின்தங்கிய மூன்று ஓநாய்களும் இரை மேல் பாய்ந்தன.

இன்னும் வெட்டி வெட்டி உதைத்துக் கொண்டிருந்த குதிரையின் இறைச்சியை மறு கணமே ஐந்து ஓநாய்களும் கிழித்துப் பிய்த்தன, கண்களைக் கூசச் செய்யும்படி வெள்ளை வெளேறென்று இருந்த வெண் பனி மேல் ஆவி பறக்கும் கருஞ்சிவப்புக் குடல் சுருள்களைத் தலைக்கு ஒரு பக்கமாக இழுத்தன, உறுமின. தலைமை ஓநாய் தன் மஞ்சள் நிற வட்ட விழிகளால் மனிதன் மேல் இரண்டு தரம் நேராகப் பார்வை செலுத்தியது...

எல்லாம் பயங்கர வேகத்துடனும் எளிமையாகவும் நடந்து விட்டபடியால் கனவு போலத் தோன்றியது. கோடரியும் கையுமாக நின்ற இவான் ஓநாய்களைக் குழப்பத்துடன் பார்த்தான். தலைமை ஓநாய் இன்னும் ஒரு முறை அவன் மேல் கண்ணேட்டியது... வெற்றி கொண்டாடிய அந்தத் துடுக்கான பார்வை இவானுக்கு எரிச்சல் ஊட்டியது. அவன் கோடரியை ஓங்கி, முடிந்த வரை உரக்கக் கூச்சலிட்டவாறு ஓநாய்களின் மேல் பாய்ந்தான். அவை விருப்பின்றிச் சில தாவடிகள் விலகி ஓடி, குருதி படிந்த வாய்களை நக்கியவாறு நின்றன. இந்த வேலையை அவை முழு முயற்சியுடனும் ஈடுபாட்டுடனும் செய்ததைப் பார்த்தால், கோடரி ஏந்திய மனிதனை அவை ஒரு பொருட்டாகவே மதிக்கவில்லை போலத் தோன்றியது. ஆனல் தலைமை ஓநாய் நேராகக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தது. தனக்குத் தெரிந்த மிக மிகப் பயங்கரமான சொற்களால் அதைத் திட்டி நொறுக்கினன் இவான். கோடரியை ஓங்கியவாறு அதன் பக்கம் அடி எடுத்து வைத்தான்... தலைமை ஓநாய் இடத்தை விட்டு அசையவில்லை. இவானும் நின்று விட்டான்.

''நீங்கள் கெலித்து விட்டீர்கள். இரையெடுங்கள், இழி பிறவிகளா'' என்று சொல்லி விட்டு, கிராமத்தை நோக்கி நடந்தான். கிழித்துப் பிய்க்கப்பட்டிருந்த குதிரையைப் பாராதிருக்க முயன்றன்.ஆனலும் தாங்க முடியாமல் பார்த்து விட்டான்... இரக்கத்தினல் இருதயம் சுருங்கியது, மாமன்

மேல் கடுங்கோபம் பொங்கிற்று. பாதையில் விரைவாக அடி வைத்து நடந்தான்.

''சரி, பொறு!.. பொறு, காட்டுகிறேன் உனக்கு, கேடு கெட்ட பாம்புப் பயலே, நாம் தற்காத்துக் கொண்டிருக்க லாம், குதிரையும் பிழைத்திருக்குமே, தன்னலம் பிடித்த பதரே.''

நவூம் திருப்பத்துக்கு அப்பால் மருமகனுக்காகக் காத் திருந்தான். அவன் உயிரோடு, சேதமில்லாமல் வந்ததைக் கண்டு உளமார்ந்த மகிழ்ச்சி அடைந்தான்.

''உயிரோடு இருக்கிருயா? ஆண்டவன் அருள்!'' என்ருன். ஆனுலும் அவன் மனத்துக்குள் கலவரம் ஏற்பட்டது.

''உயிரோடு இருக்கிறேன்!'' என்று பதிலளித்த இவான். ''நீயும் உயிர் பிழைத்து விட்டாய் அல்லவா?'' என்ருன்.

மருமகனின் குரலில் தீங்கு தொனித்ததை நவூம் உணர்ந் தான். எதற்கும் தயாராய் இருக்கலாம் என்று ஸ்லெட்ஜின் பக்கம் நடந்தான்.

''ஊம், அவை என்ன செய்கின்றன அங்கே?..''

''உனக்கு வணக்கம் தெரிவிக்கின்றன, தன்னலமிப் பயலே!..''

''எதற்காக நீ? இப்படி ஏன் குலைக்கிருய்?..''

''நான் உன்னை அடிக்கப் போகிறேன், குலைக்க அல்ல.''

இவான் ஸ்லெட்ஜை நெருங்கினுன். நவூம் குதிரையைச் சாட்டையால் அடித்தான்.

''நில்லு!'' என்று கத்திய இவான் ஸ்லெட்ஜின் பின்னே ஓடினுன். ''நில்லடா, புல்லுருவி!''

நவூம் குதிரையைச் சாட்டையால் விளாறினுன்... தொடங் கியது இன்னொரு ஓட்டப் போட்டி. மனிதன் மனிதனைப் பிடிப் பதற்காக விரட்டினுன்.

''நில்லு. உன்னைத்தான் சொல்கிறேன்!'' என்று கத் திஞன் இவான்.

''கிறுக்குப் பயலே!'' என்று பதிலுக்குக் கத்தினுன் நவூம். ''என்னை எதற்காகக் கோபிக்கிருய்? உனக்கு மூளை புரண்டு விட்டதா என்ன? இதற்கும் எனக்கும் என்ன சம்பந்தம்?'' என்ருன்.

''சம்பந்தம் இல்லையோ? நாம் அவற்றை அடித்து விரட்டி இருக்கலாம். ஆனுல் நீ துரோகம் செய்து விட்டாய்!..''

''அட எப்படி அடித்து விரட்டி இருக்கலாம்? நீ என்ன?''

''துரோகம் செய்து விட்டாய், பாம்புப் பயலே! நான் உனக்குப் பாடம் கற்பிக்கிறேன்! என்னிடமிருந்து நீ தப்ப மாட்டாய். நல்லபடியாக நின்று விடு. தனிமையில் நான் உன்னைத் தொலித்துப் போட்டால் உனக்கு அவ்வளவு மானம் போகாது. இல்லாவிட்டால் எல்லாருக்கும் எதிரில் உன்னை உரித்துப் போடுவேன். நடந்ததை எல்லாம் சொல்லவும் செய்வேன்... நின்று விடு நல்லபடியாக!''

''இதோ, நின்று விடுகிறேன், காத்துக் கொண்டிரு!'' நலும் குதிரையைச் சவுக்கால் விளாறினான். ''எலும்பு கறவிப் பேய்ப் பயலே... எங்கிருந்துதான் நீ எங்கள் தலையில் வந்து விடிந்தாயோ!''

''நலமாகச் சொல்கிற யோசனையைக் கேள்: நின்று விடு!'' இவானுக்கு மூச்சு இரைக்கத் தொடங்கிற்று. ''உனக்குத் தான் நல்லது. தொலித்துப் போடுவேன், ஆனால் ஒருவருக்கும் சொல்ல மாட்டேன்.''

''சைத்தானே, அம்மணமாக வந்த உன்னைச் சொந்தக் காரனாக மதித்து ஏற்றுக் கொண்டேன், நீயே என்னைக் கோடாலியால் வெட்டவா வருகிறாய்? வெட்கம், மானம் இருக்கிறதா இல்லையா?''

''இதோ நையப் புடைக்கிறேன், அப்புறம் வெட்கத்தைப் பற்றிப் பேசுவோம். நின்று விடு!'' இவான் மெதுவாக ஓடினான், இதற்குள் நிரம்பப் பிந்தி விட்டான். முடிவில் விரட்டுவதையே நிறுத்தி விட்டு, மெதுவாக நடக்கலானான்.

''உன்னைப் பிடித்து விடுவேன், நீ எங்கும் போய் விட முடியாது!'' என்று மாமனின் பின்னிருந்து கத்தினான்.

தன் வீட்டில் இவான் ஒருவரையும் காணவில்லை. கதவில் பூட்டு தொங்கியது. அவன் அதைத் திறந்து வீட்டுக்குள்ளே போனான். அலமாரியில் தேடினான்... தலைக்கு நாள் குடித்தது போக மிஞ்சி இருந்த வோத்கா புட்டியைக் கண்டான். கிளாசில் ஊற்றிக் குடித்து விட்டு மாமன் வீட்டுக்குப் புறப்பட்டான்.

நுகத்திலிருந்து அவிழ்க்கப்பட்ட குதிரை மாமனின் வீட்டுக்கு முன் நின்று கொண்டிருந்தது.

''வீட்டில் இருக்கிறான்'' என்று திருப்தியுடன் சொல்லிக் கொண்டான் இவான்.

கதவை இடித்தான். அது பூட்டப்படவில்லை. பூட்டி இருக்கும் என்று இவான் எதிர்பார்த்தான். வீட்டுக்குள் போனான்...

அவனுக்காக ஆட்கள் காத்திருந்தார்கள். மாமனும் இவானின் மனைவியும் மிலீஷியாக்காரனும் வீட்டில் உட்கார்ந்திருந்தார் கள். மிலீஷியாக்காரன் புன்னகை செய்தான்.

''என்ன அப்பா, இவான்?''

''அப்படி-யாக்கும்... அதற்குள் அதிகாரிகளிடம் சொல்லி விட்டாயோ?'' என்று மாமனைப் பார்த்துக் கேட்டான் இவான்.

''ஆமாம், ஆமாம், சொல்லி விட்டேன். நீ என்ன, வெறி யேறக் குடித்தாயிற்று அதற்குள்?''

''கொஞ்சம் போலச் சாப்பிட்டேன்... பேச்சு சரளமாய் வர வேண்டும் என்பதற்காக.'' இவான் முக்காலியில் உட் கார்ந்தான்.

''இவான், எதற்காக நீ இப்படி? பைத்தியம் பிடித்து விட் டதா என்ன உனக்கு? என்ன நீ?'' என்று எழுந்தாள் நியூரா.

''உன்னுடைய செல்ல அப்பாவுக்குப் பாடம் கற்பிக்க விரும்பினேன்... மனிதனாக இருப்பது எப்படி என்று.''

''அட விடு அப்பா இவான்'' என்று பேசத் தொடங் கினான் மிலீஷியாக்காரன். ''ஏதோ கெடுதல் நடந்து விட்டது, இரண்டு பேரும் பயந்து போனீர்கள்... இப்படி நடக்கும் என்று யார்தான் எதிர்பார்த்தார்கள்? உற்பாதம்.''

''நாங்கள் சுளுவாக அடித்து விரட்டி இருக்கலாம். அப் புறம் நான் தனியாக இருந்தேன் அவற்றோடு...''

''நான்தான் கோடாலியை உனக்காகப் போட்டேனே, இல்லையா? நீ கேட்டாய், நான் போட்டேன். நான் இன்னும் என்ன செய்ய வேண்டும் என்று நினைத்தாய்?''

''ரொம்பக் கொஞ்சம். நீ மனிதனாக இருக்க வேண்டும் என்று நினைத்தேன். நீயோ, சுயநலப் பேய். உனக்கு நான் எப்படியும் பாடம் கற்பிக்கத்தான் போகிறேன்.''

''பாடம் கற்பிக்கிற ஆளைப் பாரப்பா! உதவாக்கரைப் பயலே... உரித்த கோழி போல அம்மணமாக எங்கள் வீட் டுக்கு வந்து ஒண்டினான், இருந்ததை எல்லாம் போட்டுக் கொண்டான், போதாக்குறைக்குப் பயம் வேறு காட்டு கிறான். அதோடு எல்லாவற்றின் மேலும் அதிருப்தி. இங்கே தண்ணீர்க் குழாய் இல்லையாம், ஐயாவுக்கு!''

''விஷயம் அது அல்ல நலும். தண்ணீர்க் குழாய்க்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?'' என்றான் மிலீஷியாக்காரன்.

''கிராமத்திலே மோசமாம்!.. நகரத்திலே மேலாம்'' என்று தொடர்ந்தான் நலூம். ''அப்படியானல் எதற்காக இங்கே ஒட்டிக்கொண்டிருக்கிருய்?உன்னுடைய அதிருப்தியைக் காட்டுவதற்காகவா? மக்களைத் தூண்டி விடுவதற்காக வா?''

''அட நாய் மகனே!'' என்று திகைப்புடன் கூறினன் இவான். பின்பு எழுந்தான்.

மிலீஷியாக்காரனும் எழுந்தான்.

''விடுங்களப்பா! போவோம் வா, இவான்...''

''இந்த மாதிரித் தூண்டி விடுகிறவர்கள் எங்கே அனுப் பப்படுகிருர்கள், தெரியும் அல்லவா?'' என்று விடாமல் தொடர்ந்தான் நலூம்.

''தெரியும்! ஆற்றுப் பனிப்பாளத் துளையில் தலைகீழாக...'' என்று மாமனை நெருங்கினன் இவான்.

மிலீஷியாக்காரன் இவானைக் கையைப் பிடித்து வீட்டுக்கு வெளியே இழுத்துப் போனன். வெளியே நின்று சிகரெட்டு பற்ற வைத்துக் கொண்டார்கள்.

''ஊம், இவன் புல்லுருவியா இல்லையா? என் மேலேயே பழி சாட்டி விட்டானே'' என்று ஒரே திகைப்புடன் சொன்னன் இவான்.

''அட விடப்பா நீ அவனை!''

''மாட்டேன். இவனை நான் தொலித்துப் போட்டாக வேண்டும்.''

''தண்டனையும் வாங்கிக் கட்டிக் கொள்வாய்! இந்த அசிங் கத்துக்காக.''

''எங்கே இழுக்கிருய் என்னை?''

''போவோம் வா. எங்கள் இடத்தில் இரவைக் கழி... கோபம் ஆறட்டும். இல்லாவிட்டால் உனக்கே கேடு செய்து கொள்வாய். இவனேடு சச்சரவிடாதே.''

''இல்லை. இந்த ஆள்... இவனும் ஒரு மனிதனு?''

''கூடாது, இவான், கூடாது. அடிபிடியால் நீ எதையும் நிரூபிக்க முடியாது.''

கிராமக் காவல் மனையின் திசையில் நடந்தார்கள்.

''அங்கே உன்னல் அடிக்க முடியவில்லையோ?'' என்று திடீரெனக் கேட்டான் மிலீஷியாக்காரன்.

''அவனை நான் எட்டிப் பிடிக்கவில்லை! என்னல் முடிய வில்லை'' என்று எரிச்சலோடு கூறினன் இவான்.

''அதுதான்... இனி அவ்வளவுதான். இப்போது கூடாது.''

''குதிரை போனது வருத்தமாய் இருக்கிறது.''

''ஆமாம்...''

பேச்சை நிறுத்தினார்கள். நெடு நேரம் மௌனமாக நடந்தார்கள்.

''கேள், என்னைப் போக விடு'' என்று இவான் நின்றான். ''ஞாயிற்றுக் கிழமை நான் அங்கே என்ன செய்யப் போகிறேன்? அவளை நான் தொட மாட்டேன்.''

''அட கூடாது, போவோம் வா. போவோம் வா. இல்லாவிட்டால் அப்புறம் உன்னால் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாது... உனக்கு இரங்கி இதைச் சொல்லுகிறேன். போவோம், வா, சதுரங்கம் விளையாடுவோம்... உனக்குச் சதுரங்கம் விளையாட வரும், அல்லவா?''

இவான் சிகரெட்டுத் துணுக்கை வெண்பனியில் துப்பி விட்டு வேறொரு சிகரெட்டு எடுப்பதற்காகப் பையில் கையை விட்டான்.

''விளையாட வரும்'' என்றான்.

**பழமையும்**
**புதுமையும்**

கிழவனர் நலூம் யெவ்ஸ்திகி னேயிச் குடித்த மறு நாள் ஏற்படும் தலைவலியால் நோயுற்று, அடுப்புப் பரண் மேல் படுத்து முனகிக் கொண்டிருந்தார்.

மாதத்தில் ஒரு தரம்—பென்ஷன் வாங்கியதும்—நலூம் தாத்தா தவருமல் வெறியேறக் குடித்தார். அதன் பின் மூன்று நாட்கள் படுத்த படுக்கையாகக் கிடந்தார். ஆபாசச் சொற்களால் கடவுளை வைது திட்டினர்.

''பேய்கள் என்னமாய் உலக்கைகளால் இடிக்கின்றன, ஆண்டவனுடைய ஆத்தாளே... என் வாழ்வு முடிந்தது...''

புத்தகங்கள் பரப்பி இருந்த மேசை அருகே உட்கார்ந்து பாடம் படித்துக் கொண்டிருந்தான் யூரா. அவன் எட்டாம் வகுப்பு மாணவன், நலூம் தாத்தாவின் வீட்டில் குடியிருந்தான்.

''செத்துக் கொண்டிருக்கிறேன், யூரா, சிலுவையாரின், ஆண்டவனுடைய ஆவியின், ஆத்தாளே...''

''வெறியேறக் குடித்திருக்கக் கூடாது.''

''இதைப் பற்றிப் பேச உனக்கு இன்னும் வயது பற்ருது.''

மௌனம். யூரா பேனவால் சரசரவென்று எழுதிக் கொண்டு போனன்.

கிழவனருக்குப் பேச வேண்டும் போல் இருந்தது. அதனல் நோவு கொஞ்சம் குறைந்தது.

''வெறியேறக் குடிக்கா விட்டால் நான் வேறு என்ன செய்வதாம்? மாதம் ஒரு தரமாவது நான் கொண்டாட வேண்டாமா?..''

''எதற்காக?''

''நான் என்ன, மனிதன் இல்லையோ?''

''ஹ்ம்...பண்ணையடிமை முறை வழக்கில் இருந்த காலத்துப் பேச்சு இது.'' யூரா நாற்காலியில் சாய்ந்து கொண்டு வீட்டுக்காரரை ஏளனத்துடன் பார்த்தான். ''மனிதன் கட்டாயம் குடிக்க வேண்டும் என்று அந்தக் காலத்தில்தான் மக்கள் எண்ணி வந்தார்கள்.''

''பண்ணையடிமை முறை இருந்த காலத்தைப் பற்றி உனக்கு எப்படித் தெரியும்?'' கிழவனர் வேதனையுடனும்

ஆவல் ததும்பவும் பரண் மேலிருந்து நோக்கினர். யூரா தனது விஷய ஞானத்தால் அவரைச் சில வேளைகளில் வியப்பில் ஆழ்த்தினன். பெரியவர் தோல்வியை ஒப்புக் கொள்ளவில்லை என்றாலும் சிறுவனுடைய பேச்சைக் கேட்க விரும்பினர். ''நீ நேற்றுப் பிறந்த பயல். இதெல்லாம் உனக்கு எப்படித் தெரியும்?''

''பாடத்தில் படித்தோம்.''

''பள்ளி ஆசிரியர்களா சொன்னார்கள்?''

''ஆமாம்.''

''ஆனால் அவர்களுக்கு எப்படித் தெரியும்? உங்கள் பள்ளியில் ஒரு கிழவன் கூடக் கிடையாதே.''

''அவர்கள் கற்றிருக்கிறார்கள். புத்தகங்களில் எழுதி இருக்கிறதே...''

''புத்தகங்களிலா... மனிதனுக்குக் குடித்த பின் மண்டையிடி எதனால் வருகிறது என்று அவர்களுக்கு ஒருவேளை தெரிந்திருக்குமோ?''

''உடம்பில் நச்சு நோய். வெறிய எண்ணெயால் உண்டாவது.''

''எதில் இருக்கிறது எண்ணெய்? வோத்காவிலா?''

''ஆமாம்.''

நலும் தாத்தா நொய்ந்து போயிருந்தாலும் தம் வசமின்றிச் சிரித்தார்:

''படித்துக் கிழித்து விட்டீர்கள்.''

''வேண்டுமானால் வாய்பாட்டை உமக்குக் காட்டுகிறேன். காட்டட்டுமா? இதோ கண் கூடாக நிரூபிக்கிறேன்...'' யூரா வேதி இயல் பாட புத்தகத்தை எடுக்கப் போனன். ஆனால் கிழவனார் தலையைக் கைகளால் இறுகக் கட்டிக் கொண்டு முனகத் தொடங்கினர்.

''ஓ-ஓ... மறுபடியும் இடிக்கிறது! ஒரேயடியாக, இது நாசமாய்ப் போக...''

''அப்படியானால் தலைவலி தீர்வதற்காகக் கொஞ்சம் வோத்கா குடியும். எதற்காக வதைபட வேண்டும்?''

கிழவனார் இந்த யோசனையைக் காதிலேயே போட்டுக் கொள்ளவில்லை. அவர் குடித்திருப்பார் தாம், ஆனால் பணம் செலவழிக்க அவருக்கு வருத்தமாய் இருந்தது. மொத்தத்தில் அவர் படு கஞ்சர். வசதியாக வாழ்ந்தார், பென்ஷன் மோசம் இல்லை, நகரத்திலிருந்து பிள்ளைகளும் பெண்ணும்

உதவி செய்து வந்தார்கள். அவருடைய பனிப் பதன நில வறையில் இல்லாத உணவுப் பண்டமே கிடையாது. முந்திய வருஷத்துப் பன்றி இறைச்சி வதக்கல், உப்பிலிட்ட வெள்ளரிக் காய், முட்டைக்கோசு, தர்பூசனிப் பழம், குடைக் காளான் கள்... பெரிய சிறிய தொட்டிகள், மிடாக்கள், பீப்பாய்கள் ஆகியவை அறை முழுவதிலும் நிறைந்திருந்தன. உக்கிராணத் தில் ஒன்றரை மூட்டை அருமையான கோதுமை மாவு இருந்தது, அரை மணங்குக்கு மேல் வாட்டிய தொடைக் கறிதொங்கியது. காய்கறித் தோட்டத்தில் முந்திய ஆண்டு உருளைக் கிழங்கு ஒரு கிடங்கு நிறைய இருந்தது. அதை அவர் பன்றிகளுக்கும் வாத்துக்களுக்கும் கோழிகளுக்கும் இரை யாகப் போட்டு வந்தார். உடம்பு சரியாய் இருந்த நாட்களில் அவர் விடியுமுன்பே எழுந்து பகல் முழுவதும், இருட்டும் வரையில் வீட்டு வேலைகளில் ஈடுபட்டிருந்தார். அடிக்கடி நிலவறையில் இறங்கி, படியில் உட்கார்ந்து நெடு நேரம் எண்ணங்களில் ஆழ்ந்திருந்தார். ''உருப்படாப் பிசாசுகள். இப்போது இங்கே இருக்கக் கூடாதோ!'' என்று எண்ணிய வராக மேலே வெளிச்சத்துக்கு வந்தார். அவர் எண் ணியது மகன்களையும் மகளையும் பற்றி. கிராமத்தை விட்டு நகரத்துக்குப் போய் விட்டதற்காக அவர்களை அவர் வெறுத்தார்.

யூராவின் நிலைமையோ வேறு. அவன் பக்கத்துக் கிராமத் தில் வசிப்பவன். அங்கே பத்தாண்டுப் பள்ளி கிடையாது. அவனுக்குத் தகப்பனர் இல்லை. தாயாருக்கோ, அவனைத் தவிர இன்னும் மூன்று குழந்தைகள். தகப்பனர் வெட்டு மரங்களை ஆற்றில் செலுத்துகையில் மூழ்கி இறந்து போனர். மற்ற மூன்று குழந்தைகளும் யூராவுக்கு இளையவர்கள். தாயார் சக்திக்கு மீறிப் பாடுபட்டு உழைத்து வந்தாள். யூரா பத்தாண்டுப் பள்ளிப் படிப்பை முடிக்க வேண்டும் என்பது அவளுடைய ஆசை. யூராவும் பத்தாண்டுப் பள்ளிப் படிப்பை முடிக்க விரும்பினன். தவிர, அதன் பின் மருத்துவக் கல்லூரி யில் சேர அவன் ஆசைப்பட்டான்.

கிழவனர் யூராவின் ஏழ்மையைக் கவனிக்காதவர் போல நடந்து கொண்டார். அவனிடமிருந்து மாதம் ஐந்து ரூபிள் வாங்கி வந்தார். சமையலோ, கிழவனர் தனியாகவும் யூரா தனியாகவும் செய்து வந்தார்கள். சில வேளைகளில் மாதம் முடியும் தறுவாயில் யூராவிடம் உணவுப் பண்டங்கள் தீர்ந்து

விடும். யூரா வறட்டு ரொட்டியைத் தின்னும் போது கிழவனார் அவனை நீண்ட நேரம் கோணலாகப் பார்ப்பார். பின்பு கேட்பார்:

''எல்லாம் தீர்ந்து விட்டதா?''

''ஆமாம்.''

''நான் தருகிறேன்... அப்புறம் கொண்டு வந்து கொடுத்து விடு.''

''சரி.''

கிழவனார் ஒரு இரண்டு கிலோ சாமை நிறுத்துக் கொடுப்பார். யூரா பொங்கல் சமைப்பான்.

காலை வேளைகளில் அடுப்பருகே பேசிக் கொள்வார்கள்.

''எப்படியும் முடிவு வரை படிக்க விருப்பமோ?''

''ஆமாம். அறுவை மருத்துவன் ஆகப் போகிறேன்.''

''இன்னும் எத்தனை?''

''எட்டு. ஏனென்றால் மருத்துவப்படிப்பு ஆறு ஆண்டுகள், மற்றவற்றைப் போல ஐந்து அல்ல.''

''கால்கள் ஓய்ந்து போகும் நீ அறுவை மருத்துவத்தை நெருங்குவதற்குள். உன் தாயாருக்கு எங்கேயிருந்து இவ்வளவு பணம் கிடைக்கப் போகிறது?''

''எனக்கு உதவிச் சம்பளம் கிடைக்கும். பையன்கள் படிக்கிறார்களே... எங்கள் கிராமத்தைச் சேர்ந்த இரண்டு பேர் அப்படிப் படிக்கிறார்கள்.''

கிழவனார் நெருப்பைப் பார்த்தவாறு பேசாதிருந்தார். தம் மக்களை நினைத்துக் கொண்டார் என்பது தெரிந்தது.

''ஆமாம், நகரத்தில் அப்படி என்ன வைத்திருக்கிறது, நீங்கள் அங்கே போகத் துடிக்கிறீர்கள்?''

''கல்வி கற்பதற்காக... 'துடிக்கிறோம்'. அறுவை மருத்துவன் ஆன பிறகு கிராமத்திலும் வேலை செய்யலாம். எனக்கு கிராமம் அதிகமாகக் கூடப் பிடித்திருக்கிறது.''

''அவர்களுக்குச் சம்பளம் ரொம்ப நிறையவோ?''

''யாருக்கு? அறுவை மருத்துவர்களுக்கா?''

''ஆமாம்.''

''மாறாக அவர்களுக்குச் சம்பளம் குறைவு. எல்லோரையும் விட. இப்போது கொஞ்சம் கூடுதல் ஆகி இருக்கிறது, உண்மைதான், ஆனாலும்...''

''அப்படியானால் எந்த இழவுக்காக இத்தனை ஆண்டுகள் உயிரைக் கொடுத்துப் பாடுபட வேண்டும்? லாரி ஓட்டக்

கற்றுக் கொண்டு வேலை செய்யேன். அவர்கள் எவ்வளவு நிறையச் சம்பாதிக்கிறார்கள், தெரியுமா? மேற்கொண்டு வெட்டு மரம் ஏற்றி வந்து யாருக்காவது கொடுக்கிறார்கள், அரசாங்கப் பண்ணைத் தீனிப் புல்லை ஏற்றிப் போகிறார்கள். எல்லாம் பணம். உன் அம்மாவுக்கும் நீ ஒத்தாசை செய்ய லாம். உன்னைத் தவிர மூன்று குழந்தைகளை அவள் வளர்க்க வேண்டுமே.''

யூரா சற்று நேரம் பேசாதிருந்தான். தாயாரையும் தம்பிகளையும் பற்றிய நினைவு நெஞ்சை வேதனைப்படுத்திற்று. சந்தேகம் இல்லாமல் அம்மா பாடு கஷ்டந்தான்... கிழவனார் மேல் யூராவுக்கு எரிச்சல் மண்டியது.

''நாங்கள் பிழைத்துக் கொள்வோம். யாரும் இதைப் பற்றிக் கவலைப்படத் தேவை இல்லை'' என்று வெடுவெடுத் தான்.

''தெரிந்த சங்கதி'' என்று ஒப்புக் கொண்டார் கிழவனார். ''இந்தக் கல்வி போதனையால் உங்கள் மூளைகள் குழம்பி இருக் கின்றன. அதனால்தான் ஓரிடத்தில் நிலைக்காமல் அலைந்து திரி கிறீர்கள், இந்த...'' என்று உவமை காட்ட வந்தவர், சரி யான சொல் கிடைக்காததால், ''இந்த இதுகள் போல...'' என்று மழுப்பினார். ''ஒருவித போதனையும் இல்லாமல் முன் காலத்தில் மக்கள் வாழ்ந்தார்களே. ஒன்றும் கெட்டுப் போக வில்லை, ஆண்டவன் அருளினால்: ஆட்கள் பட்டினி கிடந்து விடவில்லை'' என்றார்.

''உங்கள் மூளையில் ஒன்றுதான் இருக்கிறது: 'முன் காலத் தில்'!''

''இல்லாவிட்டால்... பறவைக் கப்பல்கள் கட்டியிருக் கிறார்களே, அசிங்கங்கள்...''

''உமக்குக் கட்டை வண்டி அதிகம் பிடிக்கிறதோ? இல்லா விட்டால் அடுப்புப் பரணில் படுத்துக் கிடப்பதோ?''

''கட்டை வண்டிக்கு என்ன குறைச்சல்? அதிலே நான் புறப்பட்டால் என்னவானாலும் இடம் போய்ச் சேர் வோம் என்று எனக்குத் தெரியும். நீ உன்னுடைய ஆகாயக் கப்பலிலிருந்து கொஞ்சம் புரண்டாலும் சுக்குச் சுக்காக நொறுங்கிப் போவாய், ஒரு எலும்பு கூட முழுதாக மிஞ்சாது.''

இப்படி ஒவ்வொரு நாள் காலையிலும் அவர்கள் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருப்பார்கள். யூரா பள்ளிக்கூடம்

போகும் வரை பேச்சு தொடரும். கிழவனுருக்கு வாய்விட்டுப் பேசுவது இன்றியமையாததாய் இருந்தது. அதன் பின் நாள் முழுதும் அவர் மௌனமாய் இருந்தார். யூராவுக்கோ, கிழவனுரின் சலிப்பூட்டும் முணுமுணுப்பு எரிச்சல் உண்டாக்கினுலும், புதுமைக்கு—விமானத்துக்கும் கல்விப் பயிற்சிக்கும் நகரத்துக்கும் நூல்களுக்கும் திரைப்படத்துக்கும் பிறவற்றுக்கும்—ஆதரவாகப் பேசுவதில் மன நிறைவு ஏற்பட்டது.

விந்தையானது என்ன என்ருல் கிழவனுருக்குக் கடவுள் நம்பிக்கையும் இல்லாததுதான்.

''வேலை வெட்டி கிடையாது, தெண்டனிட்டு விழத் தலைப் படுகிருர்கள், நரம்பு நோயாளிகள்'' என்று மத நம்பிக்கை உள்ளவர்களை விளாசினுர். ''உழைக்க வேண்டும், அப்போது செல்வச் செழிப்பு தானே ஏற்படும்'' என்பார்.

ஆனுல் உழைப்பது என்பது அவருடைய கருத்துப்படி தனக்காக மட்டுமே, தன்னுடைய வயலில், தன் காய்கறித் தோட்டத்தில்,வேலை செய்வதுதான்.முன் காலத்தில் செய்தது போல. அவரையொத்த வயதுள்ள முதியவர்கள் தேனீப் பண்ணை மேற்பார்வையாளர்களாகவும் குதிரையேறி வயல் களைச் சுற்றி வந்து கவனிப்பவர்களாகவும் காவலாளிகளாக வும் இன்னமும் முடிந்த வரை பாடுபட்டு வந்தார்கள். ஆனுல் அவர் வெகு காலமாகக் கூட்டுப் பண்ணை வேலையிலிருந்து ஒதுங்கி விட்டார்.

''பணக்கார நிலச் சொந்தக்காரர்களான குலாக்குகளின் போக்கு உம்மிடம் ஓரளவு இருக்கிறது'' என்று ஒரு தரம் எரிச்சலுடன் சொன்னுன் யூரா.

கிழவனுர் இதற்கு வெகு நேரம் பதில் பேசவில்லை. பின்பு விளங்காத வகையில் சொன்னுர்:

''எழுந்திரு, பாழும் பழிக்கப்பட்டவனே!..'' இவ்வாறு சொல்லி விட்டு முதலில் ஒரு துளையிலிருந்தும் பிறகு மறு துளையிலிருந்தும் ஓசையுடன் மூக்கைச் சிந்தினுர். சட்டைத் தலைப்பால் மூக்கைத் துடைத்துக் கொண்டார். ''நீ அவர் களிடம் கமிசாராக இருந்திருப்பாய். அப்போது இளவட்டங் கள் கமிசார்களாக இருந்தார்கள்'' என்று பேச்சை முடித் தார்.

யூராவுக்கு இதனுல் உச்சி குளிர்ந்து விட்டது.

''பாழும் அல்ல, சாபத்தால்'' என்று திருத்தினுன்.

''என்னுடைய போக்கைப் பற்றி... எங்கேயாவது உளறி

வைக்காதே, சொல்லி விட்டேன். இல்லாவிட்டால் ஆட்கள் வந்து காய்கறித் தோட்டத்தைக் குறுக்கி விடுவார்கள். என்னிடம் சுமார் அரைக்கால் ஏக்கர் கூடுதலாக இருக்கிறது...''

''ரொம்பத்தான் வேண்டும் எனக்கு.''

கடவுளைப் பற்றிய பேச்சுக்கு அடிக்கடி திரும்பினார்கள்.

''அவரைப் பற்றி உங்கள் ஆட்கள் என்ன சொல்லுகிறார்கள்?''

''யாரைப் பற்றி?''

''கடவுளைப் பற்றித்தான்.''

''ஒன்றுமே சொல்லவில்லை. கடவுள் இல்லையே.''

''அப்படியானால் இத்தனை பெயர் ஏன் வழிபாடு செய்கிறார்கள்?''

''நீர் எதற்காக ஓயாமல் அவரைக் குறிப்பிடுகிறீர்? உமக்குத்தான் நம்பிக்கை கிடையாதே?''

''என்னை ஒப்பிடுகிறாயா? நான் திட்ட அல்லவா செய்கிறேன்.''

''ஆனாலும் கடவுள் பேரைச் சொல்லித்தானே?''

கிழவனார் சங்கடத்தில் மாட்டிக் கொண்டார்.

''நான் ஒருவன் மட்டும் அப்படிக் குலைக்கிறேனா என்ன? எப்போது எல்லோரும் கடவுளை நினைக்கிறார்களோ, அப்போது நானும் நினைக்கலாம் என்று ஆகிறது...''

''அசட்டுத் தனம், உம் வயதில் வெட்கப்பட வேண்டிய விஷயம்.''

''உணர்வு கொஞ்சம் மரத்துப் போய் விட்டது, சிலுவை நாசமாய்ப் போக. மூளையில் எல்லாம் குழம்பி விட்டது'' என்றார் முதியவர்.

யூராவுக்கு மேற்கொண்டு பேச விருப்பம் இல்லை. பாடம் படிக்க வேண்டி இருந்தது.

''யாரைப் பற்றி இப்போது படித்துக் கொண்டிருக்கிறாய்?''

''வானவியல்'' என்று சுருக்கமாக வறண்ட குரலில் பதிலளித்த யூரா, தனக்குப் பேசும் எண்ணம் இல்லை என்பதை அதன் மூலம் காட்டிக் கொண்டான்.

''இது எதைப் பற்றி?''

''விண்வெளியைப் பற்றி. நம் விண்வெளிப் பயணிகள் பறக்கிறார்களே, அந்த இடத்தைப் பற்றி.''

''யார், ககாரிஞ?''

''ககாரின் மட்டும் அல்ல... நிறையப் பெயர்.''

''அவர்கள் எதற்காகப் பறக்கிருர்கள் அங்கே? ஏன்?''

''அழகுதான்!'' என்று நொடித்து மறுபடி நாற்காலியில் சாய்ந்து கொண்டான் யூரா. ''நல்ல ஆள் ஐயா நீர்! அவர் கள் அடுப்புப் பரணில் படுத்துக் கிடப்பது மேல் என்று நினைக் கிறீரா என்ன?''

கிழவனுருக்கு ரோசம் வந்து விட்டது. ''நீ என்ன, இந்த அடுப்பைப் பற்றிக் கொண்டு விட்டாய்? என் வயது வரை வாழ்ந்திரு, அப்புறம் பேசு'' என்ருர்.

''நான் உம் மனத்தைப் புண்படுத்துவதற்காகச் சொல்ல வில்லே. ஆனுல் மனிதர்கள் விண்வெளியில் எதற்காகப் பறக் கிருர்கள் என்று கேட்கிறீரே, அதைச் சொன்னேன்...''

''அப்படியாஞல் விளக்கமாகச் சொல்லு. உனக்கு எதற் காகப் படிப்பு சொல்லிக் கொடுக்கிருர்கள்? கிழவன் மேல் நீ எரிந்து விழ வேண்டும் என்பதற்காகவா?''

''நல்லது, கேளும். முதலாவதாக,விண்வெளியை வெற்றி கொள்ளுவது...அவசியம்.வேளே வரும்,மனிதர்கள் சந்திரனில் இறங்குவார்கள். இன்னும் கொஞ்ச காலத்திற்குப் பின் வெள்ளிக்குப் பறந்து போவார்கள். வெள்ளியிலும் ஒருவேளே மனிதர்கள் வசிக்கலாம். அவர்களேப் பார்ப்பது சுவாரசிய மாய் இருக்குமா இருக்காதா?''

''அவர்களும் நம்மைப் போன்றவர்கள்தாஞே?''

''இது எனக்குத் திட்டமாகத் தெரியாது. ஒருவேளே கொஞ்சம் பயங்கரமாக இருப்பார்கள், ஏனென்ருல் அங்கே வளி மண்டலம் இங்கே உள்ளது போன்றதில்லே. அதிகமாக அழுத்தும்.''

''சண்டைக்கு வேறு கிளம்புவார்கள்.''

''எதற்காக?''

''ஊம், எதற்காகப் பறந்து வந்தீர்கள் என்பார்கள்.'' கிழவனுருக்குப் பேச்சில் சுவாரசியம் வந்து விட்டது. ''அழையா விருந்தாளி தத்தாரியனேக் காட்டிலும் மோசம்'' என்ருர்.

''சண்டைக்குக் கிளம்ப மாட்டார்கள். அவர்களும் மகிழ் வார்கள். நம்மில் யார் அதிக அறிவு உள்ளவர்கள் என்பது இன்னும் தெரியாத விஷயம். ஒருவேளே அவர்களாய் இருக் கலாம். அப்படியாஞல் நாம் அவர்களிடம் கற்போம். பிறகு,

இயந்திர நுணுக்கம் இன்னும் வளர்ச்சி அடைந்ததும் நாம் மேலே பறப்போம்...'' மனித குலத்தின் இந்த வருங்கால வாய்ப்பு யூராவுக்கே கவர்ச்சியாக இருந்தது. அவன் நாற்காலி யிலிருந்து எழுந்து வீட்டில் நடமாடத் தொடங்கினன். ''பூமியைப் போன்ற கோள்கள் எத்தனை இருக்கின்றன என்பது நமக்கு இன்னும் தெரியாது! அவை பத்து லட்சக் கணக்காக இருக்கலாம்! எங்கும் பிராணிகள் வாழ்கின்றன. நாம் ஒருவர் கோளுக்கு மற்றவர் பறந்து போய் வருவோம்... விளைவாக உருவாகும்... பிரபஞ்ச மனித குலம். எல்லோரும் ஒரு நிகராக இருப்போம்.''

''ஒருவரை ஒருவர் மணந்து கொள்ளப் போகிறீர்களா என்ன?''

''நான் சொல்லுவது கல்வியைப் பற்றி! மனிதர்கள் போன்ற வர்கள் ஒருகால் எங்காவது இருக்கலாம். நாம் அவர் களிடம் கற்போம். ஒருவேளை அவர்கள் எல்லாக் கண்டுபிடிப்புக் களையும் வெகு காலத்துக்கு முன்பே செய்திருக்கலாம், நாமோ முதல் அடி வைப்புக்கள் மட்டுமே செய்து கொண் டிருக்கிறோம். சுவர்க்கம் என்று மதத்தால் குறிக்கப்படும் கடவுள் அரசு அப்போது உருவாகும். நீர் அடுப்புப் பரண் மேல் இருந்த படியே உம்முடைய மகன்களைப் பார்க்க விரும்புவதாக வைத்துக் கொள்வோம். காட்சிப் பெட்டி விசையைப் போட்டு வேண்டிய அலையில் திருப்பினல் அவர் கள் இங்கே இருப்பார்கள். நீங்கள் உரையாடலாம். பெண் வீட்டுக்குப் பறந்து போய், பேரனைக் காண ஆசையாய் இருந் தால் கூரை மேல் ஏறிச் சிறிய ஹெலிகாப்டரை முடுக்கினல் போதும். கொஞ்ச நேரத்தில் பெண் வீடு சேர்ந்து விடலாம். பேரன்... அவனுக்கு என்ன வயது?''

''எட்டாவது நடக்கிறது.''

''பேரன் உமக்குப் போரும் சமாதானமும் என்ற தல்ஸ் தோயின் நாவலைப் படித்துக் காட்டுவான், ஏனென்றல் வளர்ச்சி அதிக விரைவாக நிகழும். மருத்துவம் முன்னேற்றம் அடைந்திருக்கும், மனிதர்கள் நூறு, நூற்றிருபது வயது வாழ்வார்கள்.''

''இப்போது நீ... கதை விடுகிருய்.''

''ஏன்? இப்போதே இந்தப் பிரச்சினை தீர்க்கப்பட்டு வரு கிறது. நூற்றிருபது வயது சகஜமாக மதிக்கப்படுகிறது. நம் மிடம் தேவையான விவரங்கள்தான் இல்லை. ஆனல் நட்சத்

திரக் கூட்டத்தில் பக்கத்துக் கோள்வாசிகளிடமிருந்து அவற்றைப் பெறுவோம்.''

''நூற்று இருபது வயது வாழ நீங்களே வகை செய்ய முடியாதா?''

''இப்போதைக்கு நம்மால் முடியாது. இது மெதுவான நிகழ்முறை. எப்போதாவது அந்த வயதை நாம் எட்டி விட லாம். ஆனால் இது சீக்கிரத்தில் நடக்காது. நட்சத்திர மண்ட லத்துக்குப் பறக்கக் கூடிய விண்வெளிக் கப்பல் இன்னும் விரைவில் கட்டப்பட்டு விடும். அங்கே இந்தப் பிரச்சினை ஒருவேளை தீர்க்கப்பட்டிருக்கலாம். ஏதாவது மருந்து கண்டு பிடிக்கப்பட்டிருக்கலாம்...''

''நூற்று இருபது வயது வாழ நமக்கே பிடிக்காது. அலுத்துப் போய் விடும்.''

''உமக்குப் பிடிக்காதிருக்கலாம். மற்றவர்கள் சந்தோஷ மாக விரும்பலாம். அந்த மாதிரி மருந்து கட்டாயம் தயா ராகும்...''

''மருந்தாம்... குடித்த பின் வரும் மண்டைக் குத்தைப் போக்க ஏதாவது மருந்து கண்டுபிடித்தால் அதுவே நல்லது. இல்லாவிட்டால் மண்டை இருக்கிறதே, இந்த... சாராயம் காய்ச்சும் பாத்திரம் மாதிரித் தளபளக்கிறது.''

''குடிக்கக் கூடாது.''

''அட போடா!..''

சற்று மௌனமாய் இருந்தார்கள்.

யூரா பாட நூல்களைப் படிக்க முற்பட்டான்.

''உங்கள் வாயில் ஒரு வார்த்தைதான் எப்போதும்: 'நடக்கும்! நடக்கும்!..' '' என்று மறுபடி தொடங்கினார் கிழவனார். ''வெட்டிப் பேச்சாளிகள் நீங்கள். நீ இருக்கிறாயே, பதினாறு ஆண்டுகள் படிக்கப் போகிறாய். ஒருவன் சாகக் கிடக்கிறான் என்று வைத்துக் கொள். நீ அவனுக்கு என்ன செய்வாய்?''

''எதையாவது அறுத்து அகற்றுவேன்.''

''அவனுக்குச் சாக வேளை வந்து விட்டது என்றால் நீ எதை அறுத்து எடுப்பாய்?''

''இந்த மாதிரி... குழப்பமான கேள்விகளுக்கு நான் பதில் சொல்ல மாட்டேன்.''

''பதில் சொல்ல வகையில்லை, அதனால்தான் பதில் சொல்ல மாட்டேன் என்கிறீர்கள்.''

''வகையில்லையோ?.. இதோ இந்த மனிதர்களுக்கு!..'' யூரா புத்தகக் குவியலைக் கிளறி எடுத்துக் காட்டினன். ''இதோ இந்த மனிதர்களுக்குக் கூடப் பதில் சொல்ல வகை இல்லையோ? நீர் ஒரு புத்தகத்தையாவது படித்தீரா?''

''அங்கே படிப்பதற்கு ஒன்றும் இல்லை. ஒரே புளுகு.''

''சரி!'' யூரா துள்ளி எழுந்து மறுபடி அறையில் நட மாடத் தொடங்கினன். ''முன்னே பிளேகு நோய் இருந்தது, அல்லவா?'' என்று கேட்டான்.

''வாந்திபேதியா?''

''சரி, வாந்திபேதியைத்தான் சொல்லுமேன்.''

''இருந்தது. எங்கள் ஊரில் இருபத்து...''

''இப்போது எங்கே அது? இருக்கிறதா?''

''வரவே வேண்டாம், ஆண்டவனே! ஒருவேளை மறுபடி வரலாம்...''

''அதுதானே சங்கதி, வராது. அதை ஒழிக்க நாம் கற்று விட்டோம். அப்புறம் கேளும். முன்னல் உம்மை வெறி நாய் கடித்தால் உமக்கு என்ன ஆகி இருக்கும்?''

''பைத்தியம் பிடித்திருக்கும்.''

''செத்தும் போயிருப்பீர். இப்போதோ, நாற்பது ஊசி கள், அவ்வளவுதான். மனிதன் பிழைத்து விடுவான். க்ஷய ரோகம் தீர்க்க முடியாத நோயாக இருந்தது அல்லவா? இப் போது பாருங்கள்: ஆறு மாதம் சிகிச்சை, அப்புறம் மனிதன் நிகுநிகுவென்று வளைய வருகிறன்! இதை எல்லாம் கண்டு பிடித்தது யார்? விஞ்ஞானிகள்! 'புளுகாம்...' புரியா விட்டால் பேசாமலாவது இருக்கலாமே?''

யூராவின் இந்தத் திடீர்த் தாக்கினல் கிழவனருக்கும் ஆவேசம் வந்து விட்டது.

''நல்லது. அப்படியே வைத்துக் கொள்வோம். நாய் விஷ யம் சரி. ஆனல் பாம்பு கடித்தாலோ?.. எங்கே இருந்தார் கள் உன் டாக்டர்கள், முன் காலத்தில்? இருக்கவில்லை அவர் கள். மந்திரம் போடும் பெண்பிள்ளை இருந்தாள். கிசுகிசுப் பாள், விஷம் இறங்கி விடும். அவள் எந்தக் கல்லூரியிலும் படித்தவள் இல்லையே.''

''அந்தக் கடி சாவு விளைப்பதாக இல்லை. அவ்வளவுதான்.''

''அட போ அப்பா. பாம்பு உன்னை ஒரு தரம் எங்காவது தீண்டி விடுகிறது என்று வைத்துக் கொள்...''

''தாராளமாக! நான் அதற்கு முன் ஊசி போட்டுக் கொள்

கிறேன். பிறகு அது எத்தனை தரம் வேண்டுமானாலும் கடிக்கட்டுமே—நான் புன்னகைதான் செய்து கொண்டிருப்பேன்.''

''வீண் பெருமை அடித்துக் கொள்கிறாய்.''

''அட இதோ இருக்கிறார்களே, இந்-தோ!'' என்று மறுபடி புத்தகத்தைக் காட்டினான் யூரா. ''மனிதர்கள் தங்கள் மேல் சோதனை செய்து பார்த்துக் கொண்டார்கள்! ஒன்று தெரியுமா உமக்கு? அகாதமீஷியன் பாவ்லவ் சாகக் கிடந்த போது மாணவர்களைக் கூப்பிட்டு, தாம் எப்படிச் சாகிறார் என்பதைச் சொல்லி எழுதுவித்தார்.''

''அது எப்படி?''

''இப்படி. 'இப்போது என் கால்கள் குளிரால் மரத்துப் போய்க் கொண்டிருக்கின்றன, எழுதுங்கள்' என்றார். அவர்கள் எழுதினார்கள். பின்பு கைகள் உணர்வு அற்றுப் போயின. 'கைகள் வழங்கவில்லை' என்று அவர் சொன்னார்.''

''அவர்கள் எழுதினார்களோ?''

''எழுதினார்கள். பிறகு இருதயத் துடிப்பு நிற்கத் தொடங்கிற்று. அவர் அதைச் சொல்லி 'எழுதுங்கள்' என்றார். மாணவர்கள் அழுது கொண்டே எழுதினார்கள்.'' கண்ணீர் சுரந்து யூராவின் கண்களையும் கரித்தது. அவன் சொன்ன கதை கிழவனாரையும் கடுமையாகப் பாதித்தது.

''அப்புறம்?..''

''அப்புறம் இறந்து போனார். அவர் கடைசி நிமிடம் வரை சொல்லிக் கொண்டு போனார், ஏனென்றால் அது விஞ்ஞானத்துக்கு வேண்டி இருந்தது. நீங்களோ, உங்கள் இந்தப் பெண்பிள்ளைகளோடு இன்னும் ஆயிரம் ஆண்டுகள் அறியாமையில் வாழ்ந்திருப்பீர்கள்... 'முன் காலத்தில் இருந்தது! முன் காலத்தில் இருந்தது!' என்று சொல்லிக் கொண்டு. இந்த மாதிரி இருந்ததா முன் காலத்தில்!'' யூரா மின் இணைப்புக் குமிழை நெருங்கி, வானொலி விசையைப் போட்டான். பாடகி ஒருத்தி பாடினாள். ''எங்கே அவள்! இங்கே இல்லையே அவள்?''

''எவள்?''

''பாடுகிறாளே... அவள்.''

''அது கம்பி வழியாக வருகிறது...''

''இல்லை. வானொலி அலைகள் இவை! 'கம்பி வழியாக' வாம்! கம்பி வழியாக வருவது நம் கிராமத்தில் மட்டுந்தான்.

அவளோ, சகலீன் தீவிலோ எங்கேயோ பாடுகிறுள். அங்கு வரை கம்பி போட்டிருக்கிறதோ?''

''கம்பிகள்தான். போன வருஷம் நான் வான்யாவைப் பார்க்கப் போயிருந்தேன். இருப்புப் பாதை நெடுகிலும் கம்பிகள் தொங்கியதைப் பார்த்தேன். தூண்கள் மேலே.''

யூரா கையை வீசினுன்.

''உமக்கு விளக்கிக் கட்டாது. எனக்குப் பாடம் படிக்க வேண்டும். போதும்.''

''அதற்கென்ன, படியேன்.''

''நீர் என் கவனத்தைத் திருப்புகிறீர்.'' யூரா மேசை அருகே அமர்ந்து காதுகளைக் கைகளால் பொத்திக் கொண்டு படிக்கத் தொடங்கினுன்.

வீட்டில் நீண்ட நேரம் மௌனம் நிலவியது.

''அவருடைய படம் இருக்கிறதா?'' என்று கேட்டார் கிழவனுர்.

''யாருடைய படம்?''

''அந்த விஞ்ஞானி, சாகக் கிடந்தாரே, அவருடையது.''

''அகாதமீஷியன் பாவ்லவுடையதா? இதோ.''

யூரா கிழவனுரிடம் புத்தகத்தைக் கொடுத்து, பாவ்லவைக் காட்டினுன். கிழவனுர் ஆழ்ந்த தோற்றத்துடன் விஞ்ஞானியின் படத்தை நீண்ட நேரம் பார்த்துக் கொண்டிருந்தார்.

''ரொம்ப வயதானவர்.''

''அவர் முதுமையிலும் உற்சாகமாக இருந்தார், வெறியேறக் குடிக்கவில்லை... சில ஆட்கள் மாதிரி.'' யூரா புத்தகத்தை வாங்கிக் கொண்டான். ''அப்புறம் அடுப்புப் பரணில் கிடந்து புரளவில்லை, ஆபாசமாகத் திட்டவில்லை. ஓய்ந்து விழும் வரையில் அவர் எறி கட்டை விளையாட்டு ஆடினுர். மறிவினைகளை நிரூபிப்பதற்காக எத்தனை நாய்களை அறுத்துப் பார்த்தார் தெரியுமா?.. நரம்பு மண்டலம் என்பது அவர் கற்பித்ததுதானே. உமக்கு இப்போது ஏன் தலை நோகிறது?''

''குடித்ததனுல். பாவ்லவ் சொல்லாமலே தெரியும் எனக்கு.''

''குடித்ததனுல் என்பது சரிதான். ஆனுல் உம்முடைய நரம்பு மண்டலத்தை நீர் நேற்று மந்திக்கச் செய்து விட்டீர், நிறுத்தி வைத்திருந்தீர். இன்றைக்கோ, அது... நேராகிக்

கொண்டிருக்கிறது. உம்மிடம் ஆக்க நிலே மறிவினே உருவாகி இருக்கிறது. பென்ஷன் கிடைத்ததும் அரை லிட்டர் வோத்கா குடித்தாக வேண்டும். இது இல்லாமல் இப்போது உம்மால் இருக்க முடியவில்லே.'' குடிப்பதால் அவருக்கு ஏற்படும் எல்லாக் கேடுகளேயும் எல்லா விளேவுகளேயும் அமைதியாக, மனதில் உறைக்கும்படி தன்னுல் எடுத்துச் சொல்ல முடிகிறது என்ற இனிய உணர்ச்சியை யூரா திடீரென உணர்ந்தான். கிழவனுர் கேட்டுக் கொண்டிருந்தார். ''ஆகவே, என்ன செய்ய வேண்டும்? இந்த மறிவினேயைப் போராடி அகற்ற வேண்டும். அஞ்சலகத்தில் பென்ஷன் வாங்கியதும் நேரே வீட்டுக்கு வாரும்... கால்கள் தாமாகவே கடைப் பக்கம் திரும்பும். நீர் அதைக் கடந்து நேரே போம். அல்லது வேறு சந்தில் நுழைந்து விடும்.''

''இன்னும் மோசமாகத் தொல்லேப்படுவேன்.''

''ஒரு, இரண்டு, மூன்று தடவைகள் சங்கடப்படுவீர், அப்புறம் பழகி விடுவீர். கடையின் பக்கமாக அமைதியாய்ப் போவீர், கேலியாக நகைப்பீர்.''

கிழவனுர் உடம்பை நிமிர்த்திஞர், நடுங்கும் விரல்களால் ஒரு சிகரெட்டு சுருட்டிப் பற்ற வைத்துக் கொண்டார், புகையை இழுத்தார், இருமத் தொடங்கிஞர்.

''ஐயோ, உன் ஆத்தாளே... க்ஹோஹ்!.. எல்லாவற்றையும் புரட்டி எடுக்கிறது, சைத்தான். இப்படி வர வேண்டுமா!''

யூரா மறுபடியும் பாடம் படிப்பதில் முனேந்தான்.

கிழவனுர் தொண்டையைக் கனேத்துக் கொண்டு அடுப்புப் பரண் மேலிருந்து இறங்கிஞர், நமுதா சோடுகளேயும் மென் மயிர்த் தோல் கோட்டையும் போட்டுக் கொண்டார், கத்தியை எடுத்துக் கொண்டு வெளியே போனுர்.

''இவர் எங்கே போகிருர்?'' என்று எண்ணிஞன் யூரா.

கிழவனுரை வெகு நேரம் வரை காணேம். கத்தியும் கையுமாக அவர் எங்கே போனுர் என்று பார்ப்பதற்காக யூரா வெளியே செல்ல நினேத்தான், அதற்குள் அவரே வந்து விட்டார். அவருடைய கைகளில் இருந்தது உள்ளங்கைப் பருமனை வாட்டிய இறைச்சித் துண்டு.

''ரொட்டி இருக்கிறது அல்லவா?'' என்று கடுத்தமான குரலில் கேட்டார்.

''இருக்கிறது. ஏன்?''

''இந்தா, இறைச்சியோடு சேர்த்துச் சாப்பிடு. இல்லா விட்டால் எல்லாருடைய நூல்களையும் கற்பதற்குள் பிஞ்சி லேயே வெம்பிப் போவாய்.''

யூரா குழப்பங்கூட அடைந்தான்.

''என்னால் திருப்பித் தரவே முடியாதே. எங்களிடம் இல்லை இது...''

''சாப்பிடு. அடுப்பில் தேநீர்க் கெண்டி இருக்கிறது. இன்னும் சூடு ஆறி இருக்காது, ஒருவேளை... சாப்பிடு.''

யூரா அடுப்பிலிருந்து தேநீர்க் கெண்டியை எடுத்து, இன்னும் சூடாய் இருந்த தேநீரைக் குவளையில் ஊற்றிக் கொண்டான், ரொட்டியையும் இறைச்சியையும் கூறு போட்டுத் தின்னத் தொடங்கினான். கிழவனார் சிரமத் துடன் மறுபடி அடுப்புப் பரண் மேல் ஏறி அங்கிருந்து யூராவைப் பார்வையிட்டார்.

''இறைச்சி எப்படி இருக்கிறது?''

''நன்றாய் இருக்கிறது! முதல் தரம்.''

''இரை போடத் தெரிந்திருக்க வேண்டும். பன்றிக்குத் தான் சொல்கிறேன். சிலர் அசட்டுத்தனமாக இளையுதிர் காலத் திலேயே அதை மட்டுமீறி இரை எடுக்க வைக்கிறார்கள். பயனாக வெறும் கொழுப்புதான் சேர்கிறது, இறைச்சி அறவே இருப்பதில்லை. வேறு சிலர் நேர் எதிராக, பட்டினி போடு கிறார்கள், பன்றி இறைச்சியுள்ளதாக வளரும் என்று. வெறும் கொழுப்பு எல்லாருக்கும் பிடிப்பதில்லையே. வெட்டுகிறார் கள். இறைச்சியும் இருப்பதில்லை, கொழுப்பும் இருப்பதில்லை. பன்றிக்கு இரை இந்த மாதிரிப் போட வேண்டும்: ஒரு வாரம் நன்றாகத் தீனி வைக்க வேண்டும், பிறகு அரைப் பட்டினி போட வேண்டும். மறுபடி ஒரு வாரம் ஊட்டம் போட வேண் டும், திரும்பவும் குறைப் பட்டினியாய் வைக்க வேண் டும்... அப்போதுதான் பன்றியின் உடம்பு அடுக்கடுக்காகப் படியும்: ஓர் அடுக்கு கொழுப்பு, மறு அடுக்கு இறைச்சி, இப்படி, உப்புக் கண்டம் போடவும் தெரிந்திருக்க வேண் டும்...''

யூரா அவருடைய பேச்சைக் கேட்டவாறே பனிப் பதனம் செய்து நறு மணம் கமழ்ந்த இறைச்சியை ஆர்வத்துடன் தின்றான். அது மெய்யாகவே அபூர்வ ருசி உள்ளதாக இருந் தது.

''ஆகா, அற்புதம்! நன்றி.''

''வயிறு நிறைந்ததா?''

''ஆமாம்.'' ரொட்டியையும் தேநீர்க் கெண்டியையும் யூரா மேசை மேலிருந்து அகற்றினன். இறைச்சி மிஞ்சி இருந் தது. ''இதை எங்கே வைப்பது?'' என்று கேட்டான்.

''முன்னறையில் பீப்பாயில் வை. சாயங்காலம் இன்னும் எடுத்துச் சாப்பிடு.''

யூரா இறைச்சி வதக்கலை முன்னறையில் வைத்து விட்டு வந்து, வயிற்றைத் தட்டி, மகிழ்ச்சியோடு சொன் ஞன்:

''இப்போது பாடம் நன்ருக மூளையில் ஏறும்... இல்லா விட்டால்... வந்து... உட்கார்ந்திருக்கிறேன், தலை லேசாகச் சுற்றுகிறது.''

''அதுதானே'' என்று மறுபடி மல்லாக்கப் படுத்தார் கிழவர். ''ஐயோ, உன் ஆத்தாளே!.. படுக்க வேண்டியது தான், மறுபடி மண்டையிடி தொடங்கி விடுகிறது'' என்று முனகினர்.

''ஒருவேளை, நான் போய் வோத்கா வாங்கி வரட்டுமா?'' என்று கேட்டான் யூரா.

கிழவஞர் சற்று நேரம் பேசாதிருந்தார்.

''வேண்டாம், விடு... தானே சரியாகி விடும். அப்புறம், கொஞ்ச நேரம் கழிந்த பிறகு கோழிகளுக்கு இரை தெளி, பசு மாட்டுக்கு இரவில் தீனி போடு. வெளிக் கதவுகளைப் பூட்ட மறக்காதே.''

''சரி. ஆக, நாம் இன்னும் என்ன படிக்க வேண்டி இருக் கிறது? பூகோளம். இதோ... ஒரு நொடியில் படித்து முடித்து விடுவோம்.'' யூராவின் உள்ளம் களி துள்ளியது. வயிருரச் சாப்பிட்டாயிற்று. பாடங்களை அனேகமாகப் படித்து முடித் தாகி விட்டது. மாலையில் ஸ்கீ செய்யலாம்.

''ஆமாம், அந்த ஆளுக்கு, சொந்தக்காரர்கள் யாரும் இல்லையா என்ன?'' என்று திடீரெனக் கேட்டார் கிழவஞர்.

''எந்த ஆளுக்கு?'' என்று புரியாமல் வினவினன் யூரா.

''அந்த அகாதமீஷியனுக்குத்தான். மாணவர்கள் மட்டுந் தாஞ இருந்தார்கள்?''

''பாவ்லவைக் கேட்கிறீரா? உறவினர்கள் இருந்திருப்பார் கள். எனக்கு நிச்சயமாகத் தெரியாது. நாளைக்குப் பள்ளிக் கூடத்தில் விசாரிக்கிறேன்.''

''பிள்ளை குட்டிகளாவது இருந்தார்களா?''

''இருந்திருப்பார்கள். நாளைக்குக் கேட்டுச் சொல்கிறேன்.''

''கட்டாயம் இருந்திருப்பார்கள். சொந்தக்காரர்கள் யாருமே இல்லை என்றால் சொல்லி எழுதுவிக்க ரொம்ப முடிந்து விடாது. ஒண்டிக் கட்டையாய் இருப்பது மோசம்.''

யூரா மறுக்க முற்படவில்லை. ''மாணவர்கள்தாம் இருந்தார்களே!'' என்று சொல்லி இருக்கலாம். ஆனால் அவன் சொல்ல வேண்டாம் என்று இருந்து விட்டான்.

''சந்தேகம் இல்லாமல், ஒண்டிக் கட்டையாய் இருப்பது மோசந்தான்'' என்று ஒப்புக் கொண்டான்.

ஒவ்வோர் இரவிலும் இப்படியே!
ஊர் கொஞ்சம் அடங்கி ஆட்கள்
உறங்க வேண்டியதுதான் தாமதம்,
அவன் தொடங்கினான்... புல்லுருவிப்
பயல், ஊர்க் கோடியிலிருந்து ஆரம்பித்து
நடந்தான். நடந்து கொண்டே அக்கார்டியன்
வாசித்தான்.

அவனுடைய அக்கார்டியன் வாத்தியமும் தனி வகையானது. அது இசைக்கவில்லை, வீரிட்டு அலறிற்று.

ஊர்க்காரர்கள் நீனா கிரேச்செத்தவாவிடம் சொன்னார்கள்: ''அட நீ சீக்கிரமாக இவனுக்கு வாழ்க்கைப்படேன்! இந்தப் பேய் மகன் எங்களை வாழ விடாமல் அடிக்கிறானே.''

நீனா மர்மப் புன்னகை செய்தாள்.

''நீங்கள் காதில் போட்டுக் கொள்ளாதேயுங்கள். தூங்கி விடுங்கள்'' என்றாள்.

''வீட்டு சன்னல்களுக்கு நேரே இவன் எக்காளமிடும் போது உறங்குவது எப்படியாம்? ஆற்றங்கரைக்குப் போய்த் தொலைய மாட்டேன் என்கிறானே, கிறுக்குப் பேய்ப்பயல், இங்கேயே அல்லவா கழுத்தை அறுக்கிறான்! வேண்டுமென்றே போல.''

கோல்கா மலாஷ்கின் பருஉதடன், பாங்கின்றி நெட்டையான ஒடிசல் மேனியன். தன் சிறு கண்களால் ஊர்க்காரர்களைத் துடுக்காகப் பார்த்து அலட்சியமாகச் சொன்னான்:

''அக்கார்டியன் வாசிக்க எனக்கு உரிமை உண்டு. இதற்குக் குற்றச் சட்டத்தில் எந்த தண்டனையும் கிடையாது.''

கூட்டுப்பண்ணைத் தலைவர் மத்வேய் ரிஸான்த்செவின் வீடு கோல்கா சந்திலிருந்து வெளிவந்து வீதியில் திரும்பும் இடத்தில் அமைந்திருந்தது. ஆகவே அக்கார்டியன் சந்திலிருந்தே முழங்கத் தொடங்கி வீட்டைச் சுற்றிப் போயிற்று. அப்புறமும் வெகு நேரம் வரை அது காதுக்கு எட்டிக் கொண்டிருந்தது.

அது சந்தில் ஒலிக்கத் தொடங்கியதுமே மத்வேய் கட்டிலில் உட்கார்ந்து, கால்களைத் தரையில் வைத்துக் கொண்டு கூறினார்:

''அவ்வளவுதான். நாளைக்கே கூட்டுப்பண்ணையிலிருந்து விலக்கி விடுகிறேன். ஏதாவது குற்றம் கண்டுபிடித்துச் சீட்டைக் கிழித்து விடுகிறேன்.''

ஒவ்வோர் இரவும் அவர் இப்படிச் சொன்னாரே தவிர, கோல்காவை விலக்கவில்லை. பகலில் கோல்காவைச் சந்தித்ததும், ''நீ என்ன, இன்னும் ரொம்ப காலம் ராத்திரி வேளைகளில் வெட்டியாகத் திரியப் போகிறாயா? பகல் முழுதும் உழைத்த பிறகு ஆட்கள் இளைப்பாறுகிறார்கள், நீ அவர்களை எழுப்பி விடுகிறாயே, சேகண்டி தட்டீ!'' என்று கேட்டார்.

''எனக்கு உரிமை உண்டு'' என்று மறுபடி சொன்னான் கோல்கா.

''காட்டுகிறேன் பார் உனக்கு உரிமையை! வாங்கித் தருகிறேன் பார் உனக்கு உரிமையை!''

அவ்வளவுதான். இதோடு பேச்சு முடிந்து விட்டது.

ஒவ்வோர் இரவும் கட்டிலில் அமர்ந்து கொண்டு மத்வேய் உறுதி கூறினார்:

''நாளைக்கு விலக்கி விடுகிறேன்.''

அதன் பிறகு வெகு நேரம் உட்கார்ந்த வண்ணம் எண்ணமிட்டார்... அக்கார்டியன் வீதிக்குள் போய் விட்டது, அது காதில் படவும் இல்லை, ஆனாலும் அவர் உட்கார்ந்திருந்தார். நாற்காலியில் தொங்கிய சராயைத் துழாவி, அதன் பையிலிருந்து சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டார்.

''கரியாக்கினது போதும்'' என்று முணுமுணுத்தாள் அவருடைய மனைவி அலியோனா.

''தூங்கு'' என்று சுருக்கமாகச் சொன்னார் மத்வேய்.

அவர் என்ன எண்ணமிட்டார்? வெறுமேதான் இப்படி... எதைப் பற்றியும் இல்லை. வாழ்க்கை நினைவுக்கு வந்தது. திட்டமான நிகழ்ச்சி எதுவும் அல்ல, தெளிவற்ற துணுக்குகள். இந்த இரவு நிலவினால் வெளிச்சமாய் இருந்தது, அக்கார்டியன் வாத்தியம் ஒலித்தது, குளிர் காற்றோடு கூடவே காஞ்சிரையின் கசப்பு மணமும் காய்கறித் தோட்டத்திலிருந்து திறந்த சன்னல் வழியே அறைக்குள் வீசிற்று. மத்வேயுக்கு இன்னோர் இரவு துலக்கமாக நினைவுக்கு வந்தது. அது இருண்ட இரவு. தகப்பனாருடனும் தம்பி குஸ்மாவுடனும் அவர் குச்சுகூரி என்னும் புல்லறுக்கும் இடத்துக்குப் போயிருந்தார். அந்த இடம் கிராமத்திலிருந்து சுமார் பதினைந்து கிலோமீட்டர் தூரத்தில் இருந்தது. இரவில் குஸ்மாவுக்கு

ஈழை இழுக்கத் தொடங்கிற்று. பகலில் நல்ல வெக்கையில் வியர்த்து வடிந்து கொண்டு ஊற்றுத் தண்ணீரைக் குடித்ததால் ராத்திரி அவனுக்குத் தொண்டை அடைத்துக் கொண்டது. தகப்பனூர் மத்வேயை எழுப்பி, இக்ரியேன்காவை (எல்லாவற்றிலும் துடியான குதிரையை) பிடித்து அதிலேறி ஊருக்குப் போய்ப் பால் கொண்டுவரும்படிக் கூறினூர்.

''அதற்குள் நான் இங்கே நெருப்பு மூட்டி வைக்கிறேன்... நீ கொண்டுவரும் பாலைக் காய்ச்சுவோம். பயலுக்குச் சூடாகக் குடிக்கக் கொடுக்க வேண்டும்,இல்லாவிட்டால் இவன் நம்மை விட்டுப் போனூலும் போய் விடுவான்'' என்றூர்.

குதிரைகள் மேய்ந்து கொண்டிருந்த இடத்தைச் சத்தத்தைக் கொண்டு ஊகித்து, இக்ரியேன்காவுக்குக் கடிவாளமிட்டு ஏறி, அதன் விலாக்கலைக் கம்பளித் தலைக் கயிற்றூல் விளாறியவாறு கிராமத்துக்கு விரட்டிச் சென்றூன் மத்வேய். ஆக... இப்போது மத்வேயுக்கு வயது அறுபதை நெருங்கிக் கொண்டிருந்தது. அப்போதோ, பன்னிரண்டு-பதின்மூன்று இருக்கும். இந்த இரவு இப்போதும் அப்படியே கண் முன் நின்றது. குதிரையும் மனிதனும் ஒன்றூக இணைந்து காரிருளி கடுகி விரைந்தார்கள். அவர்கலை விரைந்து எதிர்கொண்ட இரவு, பனித் துளிகளால் நலைந்த புற்களின் கடு நெடியை முகத்தில் அடித்தது. இனந் தெரியாத காட்டுத்தனமான பெருங்களிப்பு பையலை ஆட்கொண்டது. குருதி மூலையில் பாய்ந்து கணகணத்தது. குதிரைச் சவாரி பறப்பு போல இருந்தது. தரையிலிருந்து கிளம்பிப் பறப்பது போன்ற பிரமை உண்டாயிற்று. சுற்று முற்றும் எதுவும்—தரையோ, வானமோ, குதிரையின் தலையோகூட—தென்படவில்லை, காதுகளில் இரைச்சல் மட்டும் கேட்டது. பிரமாண்டமான இரவு உலகு மட்டும் நகர்ந்து எதிரே பாய்ந்து வந்தது. தம்பிக்கு உடம்பு மோசமாய் இருப்பதை அப்போது மத்வேய் நினைக்கவே இல்லை. அவன் எதைப் பற்றியுமே எண்ணவில்லை. உள்ளம் களி துள்ளியது, உடலின் ஒவ்வொரு தசைநாரும் உயிர்த்துத் துடித்தது... நுகர்வாற்றலை மீறிய இன்பம் பெருக்கெடுத்த, விரும்பத்தக்க, அரிய கணம் அது.

...அப்புறம் நேர்ந்தது துயரம். அப்புறம் அவன் பாலைக் கொண்டு போனூன். தகப்பனூர் சிறுவலை மார்போடு அணைத்துக் கொண்டு நெருப்பைச் சுற்றி ஓடியவாறு அவலைத் தாலாட்டுபவர் போலச் சொல்லிக் கொண்டிருந்தார்:

''அடே மகனே... நீ என்ன இப்படி? கொஞ்சம் பொறு. கொஞ்சம் பொறு. இதோ பாலைக் காய்ச்சுவோம், இதோ தாராளமாக மூச்சு விடுவாய், என் கண்ணு மகனே... இதோ மத்வேய் பாலைக் கொண்டுவந்து விட்டான்!..''

ஆனால் சிறுவன் குஸ்மாவுக்கு அதற்குள் மூச்சுப் போய், உடம்பு நீலம் பாரித்து விட்டது.

மத்வேயுக்குப் பின்னால் தாயார் வந்த போது குஸ்மா பிணமாகி இருந்தான். தகப்பனார் கைகளால் தலையைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்து லேசாக அசைந்தாடிய வண்ணம் கம்மிய குரலில் நீளமாக முனகினார். மத்வேய் வியப்புடனும் ஏதோ விந்தையான ஆவலுடனும் தம்பி மீது கண்ணோட்டினான். நேற்றுக்கூடத் தம்பியும் அவனும் தீனிப் புல்லில் கொட்டம் அடித்தார்கள், இப்போதோ, முன்னே கிடந்தான் நீலம் பாரித்து வெளிறிய அறிமுகம் அற்ற வேற்றுச் சிறுவன்.

...ஆனால் விந்தைதான்: பாழும் அக்கார்டியன் இந்த நிகழ்ச்சியை நினைவில் உயிர்ப்பித்தது ஏனோ? இந்த இரவை? அப்புறம் முழு வாழ்க்கை வாழ்ந்தாயிற்றே. மணம், கூட்டுப் பண்ணை அமைப்பு, யுத்தம் என்று எத்தனையோ நிகழ்ச்சிகள். இன்னும் எத்தனை எத்தனையோ விதமான இரவுகள் மட்டும் கொஞ்சமாகவா வந்து போயின? ஆனால் ஏனோ எல்லாம் நினைவுத் திரையிலிருந்து அழிந்து விட்டன, மங்கி விட்டன. வாழ்நாள் முழுவதும் மத்வேய் தேவையான செயல்களைச் செய்து வந்தார். கூட்டுப்பண்ணையில் சேர வேண்டும் என்று சொன்னார்கள், சேர்ந்தார். மணம் செய்து கொள்ளும் வேளை வந்தது, மணந்து கொண்டார். அலியோனாவும் அவரும் குழந்தைகள் பெற்று வளர்த்தார்கள்... யுத்தம் மூண்டது, மத்வேய் போர் முனைக்குச் சென்றார். காயமடைந்து மற்ற உழவர்களுக்கு முன்னால் வீடு திரும்பினார். ''மத்வேய், கூட்டுப்பண்ணைத் தலைமைப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும், வேறு யாரும் இல்லை'' என்று ஊரார் சொன்னார்கள். ஏற்றுக் கொண்டார். எப்படியோ கொஞ்சங் கொஞ்சமாக இந்தக் காரியத்தில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டு விட்டார். ஊராரும் அவருக்குப் பழகி விட்டார்கள். அப்போது முதல் இந்தச் சள்ளை பிடித்த வேலையிலேயே உழன்று வந்தார். வாழ்நாள் முழுதும் வேலை, வேலை, வேலைதான் மூளையில் இருந்தது. யுத்தத்திலும்கூட வேலை. எல்லாக் கவலைகளும் மகிழ்ச்சிகளும் துயரங்களும்கூட வேலையோடு தொடர்பு

கொண்டிருந்தன. உதாரணமாக, தன்னைச் சுற்றிலும் ''காதல்'' என்ற சொல் ஒலித்ததைக் கேட்ட போது அவர் அதைக் கொஞ்சங்கூடப் புரிந்து கொள்ளவில்லை. உலகத்தில் காதல் என்பது இருப்பதை அவர் புரிந்து கொண்டார், அவரே ஒரு காலத்தில் அலியோனுவைக் காதலித்தார் போலும் (மங்கைப் பருவத்தில் அவள் அழகாயிருந்தாள்), ஆனால் இதைப் பற்றி அவர் மேற்கொண்டு ஏதேனும் அறிந் திருந்தார் என்று சொல்வதற்கில்லை. மற்றவர்களும் பாசாங்கு செய்கிறார்கள் என்று நினைத்தார். காதலைப் பற்றிப் பாட்டுக் கள் பாடுகிறார்கள், காதலினால் துன்பப்படுகிறார்கள், துப்பாக்கி யால் சுட்டுக் கொள்கிறார்கள் என்று கூட அவர் கேள்விப்பட் டார். இவர்கள் பாசாங்கு செய்யவில்லை என்றால், மனிதர் களுக்கு இது வழக்கம் ஆகி விட்டதோ என்னவோ. காதலைப் பற்றிப் பேச வேண்டும், ஆகவே பேசுவோம் காதலைப் பற்றி. மொத்தத்தில் விஷயம் எல்லாம் மணம் செய்து கொள்ள வேண்டும் என்பதுதான்! இவன் இருக்கிறானே, கோல்கா, காதலிக்கிறானா என்ன? சந்தேகம் இல்லாமல் அவனுக்கு நீனுவைப் பிடித்திருக்கிறது. அவள் மேனி நலம் வாய்ந்தவள், நிகுநிகுப்புள்ளவள். அவனுக்கு மணம் செய்து கொள்ளும் பருவம் வந்து விட்டது, அதனால்தான் இரவு வேளை களில் நடமாடுகிறான் மடமட்டி, அக்கார்டியனை முழக்கிக் கொண்டு. நடமாடாமல் என்ன செய்வான்? இளவட்டம், நெஞ்சிலே உரம் குமிழி இடுகிறது... எப்போதுமே இப்படி இருந்து வந்தது. நல்ல வேளை, இப்போது வாலிபர்கள் பெண் களுக்காக அடித்துக் கொள்வதில்லை. முன் காலத்தில் அடித்துக் கொண்டார்கள். மத்வேய் தாமே பல தடவைகள் சண்டை போட்டிருந்தார். அதிலும் விஷயம் இப்படித் தானே: முட்டிகள் தினவெடுத்தன, பலமும் நிறைய இருந் தது. எங்கேயாவது அதைச் செலவிட வேண்டுமே.

கட்டிலில் உட்கார்ந்து இந்த மாதிரி எண்ணமிடுகையில் ஒரு முறை மத்வேய் பொறுக்க மாட்டாமல் மனைவியை இடித் தார்.

''இந்தா!.. விழித்துக் கொள். உன்னிடம் ஒன்று கேட்க விரும்புகிறேன்...'' என்றார்.

''என்ன வேண்டும் உனக்கு?'' என்று வியந்தாள் அலி யோனா.

''நீ எப்போதாவது காதலித்தது உண்டா? என்னையோ வேறு யாரையேனுமோ? அது முக்கியமல்ல.''

அலியோனு வியப்படைந்து நேடு நேரம் பேசாமல் படுத்திருந்தாள்.

''நீ குடித்திருக்கிருயா என்ன?''

''அட இல்லை என்கிறேன்! நீ என்னைக் காதலித்தாயா அல்லது... வெறுமே வழக்கம் காரணமாக வாழ்க்கைப் பட்டாயா? நான் ஆழ்ந்த முறையில் கேட்கிறேன்.''

கணவர் குடிக்கவில்லை என்பதை அலியோனு கண்டுகொண்டாள், ஆனுல் மறுபடியும் நீண்ட நேரம் பேசாதிருந்தாள். அவளுக்கும் தெரியவில்லை, மறந்து விட்டாள்.

''என்ன காரணத்தால் இந்த மாதிரி எண்ணங்கள் உனக்கு ஏற்பட்டிருக்கின்றன?'' என்று கேட்டாள்.

''அட ஒரு விஷயத்தைப் புரிந்துகொள்ள விரும்புகிறேன். அது நாசமாய்ப் போக. ஏதோ என் நெஞ்சிலே... ஒரு மாதிரி... படபடக்கத் தொடங்கி இருக்கிறது. எதுவோ காய்ச்சல் மாதிரி.''

''காதலித்தேன், சந்தேகம் இல்லாமல்!'' என்று உறுதியாகச் சொன்னுள் அலியோனு. ''காதலிக்காவிட்டால் வாழ்க்கைப்பட்டிருக்கவும் மாட்டேன். மீன்கா கரலியோவ் எனக்காக எப்படிக் குட்டிக் கரணம் போட்டான், தெரியுமா! மாட்டேன் என்று விட்டேனே. ஆமாம், நடு நிசியில் காதல் நினைவு எதற்காக வந்தது உனக்கு? வீண் பேச்சுப் பேசத் தலைப்பட்டிருக்கிருயோ?''

''அட சே!'' என்று ரோசத்துடன் சொன்னுர் மத்வேய். ''உறங்கு.''

''நாளைக்குப் பசு மாட்டை மந்தைக்கு ஓட்டிப் போ, நான் சொல்ல மறந்து விட்டேன். விடியுமுன்னே காட்டுப் பழங்கள் பறிக்க மற்றப் பெண்களோடு போவதாக முடிவு செய்திருக்கிறேம்.''

''எங்கே?'' என்று எச்சரிக்கையுடன் கேட்டார் மத்வேய்.

''உங்கள் தீனிப்புல் திடலுக்கு அல்ல, பயப்படாதே.''

''பிடித்தேனே, ஆளுக்குப் பத்து ரூபிள் அபராதம் போட்டு விடுவேன்.''

''புல் அறுக்காத இடம் ஒன்று எங்களுக்குத் தெரியும். அங்கே காட்டுப் பழங்கள் குலை குலையாகப் பழுத்துக் குலுங்குகின்றன. மாட்டை மந்தைக்கு ஓட்டிப் போ, ஊம்?''

''ஆகட்டும்.''

ஆக, அந்த இரவில், தம்பிக்காகப் பால் கொண்டுவர அவர் போனாரே, அந்த ராத்திரியில், அப்படி என்னதான் இருந்தது, அது திடீரென்று இப்போது நினைவு வருவதற்கு?

''எனக்கு மூளை மழுங்குகிறது போல் இருக்கிறது'' என்று துயரத்துடன் எண்ணினார் மத்வேய். ''முதுமையில் எல்லார் மூளைகளும் மழுங்குவது உண்டு.''

ஆனால் நெஞ்சுப் படபடப்பு தணியவில்லை. பாடும் அக் கார்டியனுடன் கோல்கா வருவதைத் தாம் எதிர்பார்க்கக் கூடத் தொடங்கி விட்டதை அவர் கவனித்தார். அவன் நீண்ட நேரமாக வாராதிருந்ததால் அவர் அமைதியின்றித் தவிக்க லானார். நீனா மேல் எரிந்து விழுந்தார். ''மதமதத்த கிடாரி!.. அவனைச் சீக்கிரத்தில் விட்டுவிடுவாளா என்ன?'' என்று சீறினார்.

உட்கார்ந்து காத்திருந்தார், சிகரெட்டு புகைத்தார்.

கடைசியாகத் தொலைவில் சந்தில் இசைக்கத் தொடங் கியது அக்கார்டியன். அதோடு நெஞ்சில் படபடப்பும் அதி கரித்தது. ஆனால் இது விந்தையான படபடப்பு—விரும்பத் தக்கது. இது இல்லாவிட்டால் ஏதோ மூளியாய் இருந்தது.

இன்னும் சில காலைகள் நினைவுக்கு வந்தன... புல்லில் அவர் வெறுங்காலராய் நடக்கிறார். பனித் துளிகள் புல் மேல் மணியாரம் சூட்டி இருக்கின்றன. ஆனால் அடித் தடங் கள் அழியாமல் பதிகின்றன—விஷப் பச்சையானவை. பனித் துளிகள் வெறுங்கால்களைத் தணலாகப் பொசுக்கு கின்றன. இப்போது எண்ணிப் பார்த்த போது கூடக் கால் கள் சில்லிட்டன.

இல்லாவிட்டால் சாவைப் பற்றிய எண்ணங்கள் எழுந் தன: விரைவில் ஆட்டம் ஓய்ந்து விடும். அச்சம் இல்லாமல், வலி இல்லாமல் . என்றாலும் ஒரு வகையில் வியப்பு ஏற்பட் டது. எல்லாம் இப்படியே இருக்கும், நம்மைக் கல்லறைக்குக் கொண்டு போய்ப் புதைப்பார்கள் என்பது புரிந்தது. ஆனால் ஒரு விஷயத்தைப் புரிந்து கொள்வது கடினமாக இருந்தது: இங்கே எல்லாம் இப்படியே இருக்கும் என்பது எப்படி? சூரி யன் எழும், மறையும் என்பது புரிகிறது என்று வைத்துக் கொள்வோம். சூரியன் எப்போதுமே எழுவதும் மறைவது மாக இருந்து வருகிறது. ஆனால் கிராமத்தில் யாரோ வேறு மனிதர்கள் இருப்பார்கள், அவர்களை நம்மால் ஒருபோதும்

அடையாளம் தெரிந்து கொள்ள முடியாது... இதை எந்த வகையிலும் புரிந்து கொள்ள முடியவில்லே. நல்லது, மத்வேய் ரிஸான்த்செவ் என்பவன் இருந்தான் என்பதை இன்னும் ஒரு பத்து, பதினைந்து ஆண்டுகளுக்கு ஊரார் நினைவு வைத்திருப்பார்கள், பின்பு மறந்து விடுவார்கள். ஆனல் அவர்கள் இங்கே எப்படி இருப்பார்கள் என்று தெரிந்து கொள்ள ஆசையாய் இருக்கிறதே. வருத்தமோ எந்த வகையிலும் இல்லே என்றே சொல்ல வேண்டும்: சூரியனையும் மன நிறைவு ஏற்படும்படி நன்ருகப் பார்த்து விட்டோம், விழா நாட்களில் களித்துக் கொண்டாடியும் விட்டோம். ஒன்றுமில்லே, மகிழ்ச்சியாக இருந்தது, அதோடு... இல்லே, வருத்தமாக இல்லே. நிறைய அனுபவித்து விட்டோம். ஆனுலும் எப்படி நினைத்துப் பார்ப்பது: நாம் இல்லே, யார் யாரோ எல்லாரும் இருக்கிருர்கள், ஆனல் நாம் இனி இருக்கப் போவதில்லே என்று?.. நாம் இல்லாமல் அவர்களுக்கு ஒரு வகையில் வெறுமையாக இருக்கும். அல்லது இருக்காதோ?

''த்தூ!.. இல்லே, நான் கிழவன் ஆகிக் கொண்டு போகிறேன்.''

இந்த மாதிரி எண்ணங்களால் அவர் களேத்துக்கூடப் போனுர்.

''இந்தா!.. விழித்துக் கொள்'' என்று மனேவியை எழுப்பினுர் மத்வேய். ''நீ சாவை நினேத்துப் பயப்படுகிருயா?'' என்று கேட்டார்.

''இந்த ஆளுக்கு மூளே புரண்டு விட்டது!'' என்று முணுமுணுத்தாள் அலியோனு. ''அந்தச் சனியனே நினேத்துப் பயப்படாதவர் யார்?''

''நான் அஞ்சவில்லே.''

''அப்படியானுல் தூங்கு. இதைப் பற்றி எண்ணுவது எதற்காக?''

''தூங்கு, உன்னேப் போய்க் கேட்டேனே!..''

ஆனுல் அவர் குதிரையேறிப் பாய்ந்து சென்ற, காதுகளில் பேரிரைச்சல் கேட்டுக் கொண்டிருந்த, அந்தக் கரிய இரவு மறுபடி நினேவுக்கு வந்ததும் கலவரத்துடனும் இனிமையாகவும் நெஞ்சு இறுகியது. இல்லே, வாழ்க்கையில் இருக்கிறது ஏதோ ஒன்று, எதையோ குறித்துக் கடும் துயரம் உண்டாகிறது. கண்ணீர் வரும் அளவுக்கு வருத்தமாய் இருக்கிறது.

நிற்க, ஓர் இரவு கோல்காவின் அக்கார்டியன் முழக்

கத்தை எதிர்பார்த்து அவர் காத்திருந்தது வீணுயிற்று. உட்கார்ந்து புகைத்துக் கொண்டிருந்தார்... ஆனால் அக்கார்டியன் சத்தமே கேட்கவில்லை. வெட்டியாகக் காத்திருந்தார். அலுத்துக் களைத்துப் போனுர்.

விடியும் தறுவாயில் மத்வேய் மனைவியை எழுப்பினுர்.

''நம்முடைய சேண்டி தட்டியின் சத்தத்தையே காணுேமே, ஏன்?'' என்று கேட்டார்.

''அட அவனுக்குத்தான் மணமாகி விட்டதே! ஞாயிற்றுக் கிழமை விருந்துக் கொண்டாட்டம்.''

மத்வேயுக்கு ஏக்கம் உண்டாயிற்று. அவர் படுத்தார், உறங்க முயன்ருர், ஆனுல் தூக்கம் வரவில்லை. பொழுது புலரும் வரை இப்படியே படுத்திருந்தார், கண்களைக் கொட்டிக் கொண்டிருந்தார். தம் வாழ்க்கையிலிருந்து இன்னும் எதையாவது நினைவுபடுத்திக் கொள்ள விரும்பினுர், ஆனுல் எதனுலோ ஒன்றுமே நினைவு வரவில்லை. மறுபடியும் கூட்டுப் பண்ணைக் கவலைகள் சூழ்ந்தன... புல்லறுப்பு விரைவில் நடக்க வேண்டும், ஆனுல் பாதி அறுப்பு இயந்திரங்கள் கருமான் உலையருகே மேல் தூக்கிய நுகங்களுடன் நின்று கொண்டிருந்தன. அந்தப் பேய்மகன், கருமான் பீலியாவோ, குடித்துக் கூத்தடித்துக் கொண்டிருக்கிருன். இந்த அழகில் மண விருந்தினுல் வேறு காரியம் முடங்கிப் போகும், ஒரு வாரம் சுணக்கம் ஏற்படும் என்று கணக்கிடலாம்.

''நாளைக்கு பீலியாவிடம் பேச வேண்டும்.''

...மறு நாள் பரு உதடன் கோல்காவைச் சந்தித்ததும் மத்வேய் குறுநகை புரிந்தார்.

''என்ன தம்பீ, வாசிப்பு முடிந்ததா!''

கோல்கா புன்னகை செய்தான்... அவனுடைய புன்னகையோ, ஒரு காதிலிருந்து மறு காது வரை நீண்டது.

''முடிந்தது, மத்வேய் இவானிச். இனி இரவு வேளைகளில் உங்கள் தூக்கத்தைக் கலைக்க மாட்டேன். அவ்வளவு தான். நங்கூரம் பாய்ச்சி விட்டேன்.''

''சரி, சரி'' என்று சொல்லி விட்டுத் தம் அலுவல்களைக் கவனிக்கப் போனுர் மத்வேய். ''எதற்காக மகிழ்ந்து போகிருய், காளைக் கன்றுக்குட்டீ? அந்தப் பெண் நீனு உன் கொம்புகளைப் பிடித்துக் கொள்வாள், தெரிந்து கொள். கிரேச்செத்தவ் குடும்பத்தார் எல்லாருமே அந்த மாதிரி ஆட்களாக்கும்!'' என்று எண்ணிக் கொண்டார்.

ஒரு வாரம் கழிந்தது.

எப்போதும் போலவே இரவுகளில் நிலவொளி சன்னல்களுக்குள் பெருகியது. காய்கறித் தோட்டத்திலிருந்து காஞ்சிரையின் நெடியும் இளம் உருளைக்கிழங்குச் செடிகளது தழைப் பகுதியின் மணமும் வீசின... நிசப்தம் நிலவியது.

மத்வேய் அமைதியின்றி உறங்கினார். விழித்துக் கொண்டு சிகரெட்டு புகைத்தார்... நடைக்குப் போய் குவாஸ் என்னும் புளித்த ரொட்டிச் சாற்றைப் பருகினார். வாயிலுக்குச் சென்று படியில் உட்கார்ந்து புகை பிடித்தார். கிராமத்தில் வெளிச்சமாய் இருந்தது. பயங்கர நிசப்தமும் குடி கொண்டிருந்தது.

**வெட்கம் கெட்டவர்கள்**

கிழவர் குஞகவ் அறுபத்தெட்டாம் வயதில் மனைவியை இழந்தார். கிழவியைப் புதைத்து விட்டு, ருஷ்ய வழக்கப்படி இறுதி விருந்து நடத்தினார்... அழுதார்.

''இனி நான் எப்படி இருக்கப் போகிறேனோ? ஒண்டிக்கட்டையாக?'' என்று புலம்பினார்.

புலம்பினார்—மனைவியை இழக்கும் முதியவர்கள் வழக்கமாகச் சொல்லும் வார்த்தைகள் இவை. அவர் துயரப்பட்டார், மிகவும் துயரப்பட்டார் என்பது உண்மையே. ஆனாலும், ''இனிமேல் தாம் எப்படி இருக்கப் போகிறார்'' என்று அவர் நினைக்கவில்லை. துயரம் பொங்கிற்று, வேதனை உண்டாயிற்று, அவ்வளவுதான். முன்னே பார்வை செலுத்தவில்லை அவர்.

ஆனால் நாட்கள் சென்றன, ஓர் ஆண்டு சென்றது, கிழவருக்கு அறவே பொறுக்க முடியாமல் போயிற்று. பெரிய வீட்டில் தனி ஆளாக வளைய வருவது என்னவோ போல் இருந்தது. அவருக்கு மகன் இருந்தான், இளையவன் (மூத்தவர்கள் யுத்தத்தில் கொல்லப்பட்டார்கள்), ஆனால் அவன் நகரத்தில் இருந்தான். எப்போதாவது கிராமத்துக்கு வந்தான் — உருளைக்கிழங்கும் உப்பிலிட்ட முட்டைக்கோசும் வெள்ளரிக்காய்களும் தன் குழந்தைகளுக்குத் தேனும் (கிழவர் ஆறு தேன் கூடுகள் வைத்திருந்தார்) வீட்டில் வதக்கிய பன்றி இறைச்சியும் எடுத்துப் போவதற்காக... இந்தத் திடீர் வருகைகள் கிழவருக்கு மகிழ்ச்சி அளிக்கவில்லை, எரிச்சல்தான் ஊட்டின. பன்றி இறைச்சியோ, தேனோ, வெள்ளரிக்காய்களோ கொடுப்பது அவருக்குக் கசக்கவில்லை... இல்லை. சொந்த மகன் ஒரு விதத்தில் சொந்த மகனாய் இல்லாமல் வேற்றானாக, ஒட்டியும் ஒட்டாமலும் இருந்ததுதான் கசந்தது, மனத்தைப் புண்படுத்திற்று. அவர் மகனுக்குப் பன்றி இறைச்சியும் முட்டைக்கோசும் கொடுத்தார்.. நல்லவையாகப் பொறுக்கிக் கொடுத்தார். நெஞ்சைக் கல்லாக்கிக் கொண்டு பேசாதிருந்தார், குறை சொல்லவில்லை. அப்படியே அவர், ''வான்யா, எனக்கு மனசு சரியில்லை, நெஞ்சை என்னவோ செய்கிறது...'' என்று சொல்லி இருந்தாலும் என்ன செய்திருப்பான் வான்யா? எப்படி உதவி இருப்பான்? அவரோடு சேர்ந்து பெருமூச்சு விட்டிருப்பான், ஒரு புட்டி

வோத்காவைக் குடித்திருப்பான், பிறகு பெட்டியும் கையுமாகத் தன் அருமை நகரத்துக்கு, தன் குடும்பத்திடம் போகக் கிளம்பி இருப்பான். அதுதான் நிலைமை.

ஆகவே மணம் செய்து கொள்ளத் தீர்மானித்தார் கிழவர். ஆமாம். பெண்ணையும் பார்த்து வைத்து விட்டார்.

அன்று மே மாதம் 9ம் தேதி, வெற்றித் திருநாள். எப்போதும் போலவே கிராமத்தார் எல்லாரும் அன்று இடுகாட்டில் திரண்டிருந்தார்கள்—யுத்தத்தில் கொல்லப்பட்டவர்களின் நினைவுக்கு அஞ்சலி செலுத்த. கிராம சோவியத் அலுவலர் முக்காலி மேல் நின்று பெயர்ப் பட்டியலை உரக்கப் படித்தார்:

''கிரேப்த்சவ் நிக்கலாய் மித்ரபானவிச், குலியாயெவ் இலியா வசீலியெவிச், குளூகவ் வசீலி யெமெல்யானவிச், குளூகவ் ஸ்தெபான் யெமெல்யானவிச், குளூகவ் பாவெல் யெமெல்யானவிச்...''

இந்த மூவரும் கிழவர் யெமெல்யான் குளூகவின் புதல்வர்கள். ஒவ்வொரு முறையும் மைந்தர்களுடைய பெயர்கள் படிக்கப்படுகையில் துயரம் கிழவனாரின் குரல்வளையைக் கொடிய விரல்களால் நெரிக்கும், மூச்சு விடுவது சிரமமாய் இருக்கும்... இன்றும் அவர் தரையைக் பார்த்தவாறு இருந்தார். அழவில்லை. ஆயினும் கண்ணீர் விழிகளுக்குத் திரையிட்டது. இவ்வாறு நீண்ட நேரம் நின்று கொண்டிருந்தார். கிராம சோவியத் அலுவலரோ, மேலும் மேலும் படித்துக் கொண்டு போனார்...

ஊரார் இடுகாட்டில் சத்தமில்லாமல் அழுதார்கள். சத்தமில்லாமல்தான், சால்வை முனைகளாலும் அங்கைகளாலும் வாய்களைப் பொத்திக் கொண்டு. பெருமூச்சும் அடக்கமாக விட்டார்கள். அந்தக் கணத்தில் தேவையாக இருந்த நிசப்தத்தைக் குலைத்து அவமதித்து விடுவோமோ என்று அவர்கள் பயந்தது போல் இருந்தது. கிழவனாரின் துயரம் கொஞ்சம் தணிந்தது. அவர் சுற்றிலும் கண்ணோட்டினார். ''எத்தனை மனிதர்கள் கொல்லப்பட்டு விட்டார்கள்!'' எனறே ஒவ்வொரு தடவையும் எண்ணினார்.

அப்போதுதான் கூட்டத்தில் கிழவி அதாவினாவைக் கவனித்தார். அவள் அந்த ஊர்க்காரி அல்ல, ஆனால் வெகு காலமாக அங்கே வசித்து வந்தாள். குளூகவுக்கு அவளைத் தெரியும். கிழவி அதாவினாவைச் சேர்ந்தவர்கள் யாரும் இந்தப்

பட்டியலில் இல்லை, ஆனாலும் அவள் எல்லோரோடும் சேர்ந்து ஓசையின்றி அழுதவாறு சிலுவைக் குறி இட்டுக் கொண்டாள். முதியவர் குளுகவ் தெய்வபக்தி உள்ளவர்களை மதித்து வந் தார்... அவர்களுடைய பொறுமைக்காகவும் நெஞ்சுறுதிக் காகவும். அதாவினவை அவர் கூர்ந்து பார்வையிட்டார்... வளைந்த மூக்கி, இன்னும் வலுவுடனிருந்த கிழவி. காய்கறித் தோட்ட வேலையைச் சமாளிக்கவும் குளியல் அறையில் அடுப்பு மூட்டி வெந்நீர் போடவும் ரொட்டிக்கு மாவு பிசைய வும் ரொட்டி சுடவும் இவளால் தாராளமாக முடியும். கிழ வனுருக்குக் கடைகளில் விற்ற ''அரசாங்க'' ரொட்டியைத் தின்ன முடியவில்லை. ''இவளுந்தான் தனியாக உழல்கிறாள்... ஊம்?'' என்று திடீரென எண்ணினார் கிழவர்.

வீட்டுக்கு வந்து புதல்வர்களின் நினைவுக்காகக் குடித் தார்... பின்பு சிந்தனை செய்யலானார்: ''தன் மர வீட்டை இவள் விற்று விடலாம். என் வீட்டில் வந்து இருக்கலாம். வீட்டை விற்றுக் கிடைக்கும் பணத்தைத் தன் கணக்கில் வங்கி யில் போடலாம். அவள் இருந்தால் இந்த வீடு இவ்வளவு வெறிச்சென்று இருக்காது. குளியறைக்குள் மனிதனாய் லட் சணமாய்ப் போகலாம், குளியலுக்குப் பிறகு கவலை இல்லா மல் படுத்திருக்கலாம்... சமைத்துப் போட ஆள் இருக்கும். 'சாப்பிட வா, யெமெல்யான்' என்று அழைக்க ஆள் இருக் கும். வீட்டில் மனித வாடை வீசத் தொடங்கும்! சமையலறை யில் அடுப்பருகே ஒருவர் கவர்க்கோலால் ஓசைப் படுத்திக் கொண்டிருந்து புளித்த ரொட்டி மாவு மணம் வீசிக் கொண்டிருந்தால், நிலைமை அடியோடு வேறு ஆகி விடுமே. அல்லது ராத்திரி வேளையில் உறக்கம் பிடிக்காத பொழுது தணிந்த குரலில் பேசிக் கொள்ளலாம்... அட அவள் மட்டும் வந்தாளானால் நன்றாயிருக்கும். எப்படி எல்லாம் புரட்டிப் புரட்டிப் பார்த்தாலும் வீட்டுக்காரி என்றால் வீட்டுக்காரி தான்.'' இவ்வாறு எண்ணமிட்ட கிழவர் கொஞ்சம் கிளர்ச்சி கூட அடைந்தார்.

ஆக, ஒரு ஞாயிற்றுக் கிழமையைத் தெரிந்தெடுத்து ஓல்கா செர்கேயெவ்னா மாலிஷெவா என்பவளின் வீட்டுக்குப் போனார். இவளும் இப்போது கிழவிதான், ஆனால் அதா வினவுக்குக் கொஞ்சம் இளையவள், கொஞ்சம் மூளையுள்ள வள். ஒரு காலத்தில் கிழவனார் இந்த ஓல்கா செர்கேயெவ்னா மீது மறைமுகமாக மிகுந்த காதல் கொண்டிருந்தார். அப்

போது அவர் கிழவர் அல்ல, இளைஞர். அழகியும் ஏறுமாறுன வளுமான ஒல்காவைக் காதலித்தார். மாலிஷெவ் குடும்பத்தாரிடம் பெண் பேச ஆளனுப்புவது என்று எண்ணிக் கொண்டிருந்தார். ஆனால் அதற்குள் புரட்சி தொடங்கி விட்டது. யாரோ இளம் கமிசார் ஒருவன் கிராமத்துக்கு வந்தான். விரைவிலேயே ஒல்காவை மயக்கி எங்கோ அழைத்துப் போனான். அழைத்துப் போனதோடு தவிர, தான் எங்கோ மறைந்து விட்டான். சண்டையில் கொல்லப்பட்டிருப்பான் ஒருவேளை. ஒல்கா செர்கேயெவ்னா ஊர் திரும்பியவள், அப்போது முதல் தனியாக வசித்து வந்தாள். மணம் செய்து கொண்டு விட்ட யெமெல்யான் குளுகவ், இளமை காரணமாகத்தான், ஒரு நாள் ஒல்காவைப் பார்க்க கிராம சோவியத் அலுவலகத்துக்குப் போனார் (அவள் அங்கே செயலராகப் பணியாற்றி வந்தாள்). தம் காதலை அவளிடம் வெளியிட்டார். ஒல்கா செர்கேயெவ்னா கடுங் கோபம் கொண்டு விட்டாள், அழுதாள். சிங்கம் போன்ற தன் கமிசாருக்குப் பிறகு ஆயுள் முழுதும் தான் யாரையும் கிட்டத்தில் நெருங்க விடப் போவதில்லை என்றாள். தமக்குக் கெட்ட எண்ணங்கள் எவையும் கிடையாது என்றும் அவளைக் காதலிப்பதாக வெறுமே சொல்ல மட்டுமே விரும்பியதாகவும் விளக்கம் கூற முயன்றார் குளுகவ். இதில் என்ன தவறு என்று கேட்டார். ஒல்கா செர்கேயெவ்னாவோ முன்னிலும் அதிகக் கோபம் கொண்டு மறுபடி பேசத் தொடங்கினாள். எல்லா ஆண்களும் தன் நினைவில் குடிகொண்டு விட்ட கமிசாரின் சுண்டு விரலுக்குக்கூட ஈடாக மாட்டார்கள் என்றாள். இந்த மாதிரி எல்லோரையும் தன் கமிசாரைக் காட்டி அவள் பயமுறுத்தவே, மற்றவர்களும் அவளை நெருங்க அஞ்சினார்கள். ஆனால் எத்தனையோ ஆண்டுகள் கழிந்து விட்டன, எல்லாம் மறந்து போய் விட்டன, பழையவை எல்லாம் கழிந்து வேறு வாழ்க்கை வெகு காலமாகவே ஆரவாரித்துக் கொண்டிருந்தது... கிழவனார் குளுகவும் பென்ஷனர் ஒல்கா செர்கேயெவ்னாவும் விந்தையான முறையில் நண்பர்கள் ஆனார்கள். கிழவர் வீட்டு வேலைகளில் அவளுக்கு உதவினார். குளிர் காலத்தில் முகப்பில் குவிந்த வெண்பனியைச் சுரண்டி அகற்றினார், விறகு பிளந்தார், துடைப்பத்தைப் பிடியில் பொருத்தினார், மர வீட்டுக் கூரையில் ஏற்பட்ட பொத்தல்களை ஒட்டுத் துண்டுகளால் அடைத்தார்... இருவரும் சற்று நேரம் உட்கார்ந்து உரை

யாடினார்கள். ஓல்கா செர்கேயெவ்னா சாப்பாட்டு மேசை மேல் வோத்காப் புட்டியை வைத்தாள்... குளுகவ் இன்னமும் அவளிடம் பயந்து கொண்டிருந்ததால் பொதுப்படையான விஷயங்கள் பற்றிப் பேசினார்:

''பார் எப்பேர்ப்பட்ட.... கச்சிதமான ஆட்சி! முன்னால் எல்லாம் எப்படி? மனிதன் தொண்டு கிழவன் ஆகி விட்டால் அவனைச் சீந்துவார் கிடையாது. இப்போதோ, பென்ஷன். நான் கேட்கிறேன், எதற்காக எனக்கு ஒவ்வொரு மாதமும் பென்ஷன் தருகிறார்கள்? சொந்த மகன்கூட வந்த போது ஒரு ஐந்து ரூபிள் நோட்டை என் கையில் திணித்தாலும் திணிக்கிறான், இல்லாவிட்டால் மறந்து விடுகிறான். ஆனால் ஆட்சி ஒவ்வொரு மாதமும் கணக்காகக் கொடுத்து விடுகிறது. அந்தக் காலத்திலே இருந்தார்களே, கமிசார்கள்... அவர்கள் இதைப் புரிந்து கொண்டிருந்தார்கள். தங்கள் உயிர்களை அவர்கள் ஒளி வீசும் வருங்காலத்துக்காகவும் கம்யூனிசத்துக்காகவும் கொடுத்தார்கள்! என் யோசனை என்னவென்றால், ஓல்கா செர்கேயெவ்னா, எழுந்திருந்து அவர்களுடைய நினைவுக்கு அஞ்சலி செலுத்துவோம்.''

ஓல்கா செர்கேயெவ்னா அதிருப்தியுடன் சொன்னாள்:

''உட்கார். எதற்காக இப்போது?.. பரவாயில்லை.''

இப்போதெல்லாம் அவள் கமிசாரை அரிதாகவே நினைவு கூர்ந்தாள். இரவு வேளைகளில் தனக்கு எப்படிப் ''படபடக்கிறது'' என்பது பற்றியே அதிகம் பேசினாள்.

''ஆக, படபடக்கிறது—படபடக்கிறது. ஆயிற்று, என் சாவு வந்து விட்டது என்று நினைத்தேன்...''

''எங்கே படபடக்கிறது? நெஞ்சிலேயா?''

''உடம்பு முழுக்க. எங்கும் ஒரேயடியாகப் பிடித்து நசுக்குகிறது பாரு, ஆயிற்று, எல்லாம் முடிந்தது என்று நினைத்தேன். அப்புறம் எல்லாவற்றையும் தளர்த்தி விடுகிறது—கையையோ, காலையோ, அசைக்க முடியவில்லை. நான் நீந்துவது போல் இருக்கிறது, எங்கேயோ நீந்துவது போல.''

''அப்படியா'' என்று பரிவு காட்டினார் குளுகவ். ''விஷயம் இந்த அளவுக்குப் போய் விட்டது என்றால் ஒரேயடியாக நீந்திப் போய் விடுவாய் என்றைக்காவது.''

மனைவியை இழந்த பிறகு கிழவனார் ஓல்கா செர்கேயெவ்னாவின் வீட்டுக்கு முன்னிலும் அடிக்கடி போய் வரலானார். தாழ்வாரத்தில் உட்கார்வது அவர்களுக்குப் பிடித்திருந்தது.

தேனுடன் தேநீர் பருகினார்கள். கிழவனார் மரப்பட்டைத் தொன்னையில் தேன் கொண்டு வந்தார்.

''ஏங்குகிறாயோ?'' என்று கேட்டாள் ஒல்கா.

எப்படிப் பதில் சொல்வது என்று குளுகவுக்குத் தெரியவில்லை. ஒன்று கிடக்க ஒன்று சொல்லி விடக் கூடாதே என்று பயந்தார். சொன்னால் அவள் அவரைப் பழிப்பாள். அவரை அவள் பழிப்பது கூடக் குறைவுதான். அவருக்கு வயது விரைவில் எழுபது ஆகப் போகிறது என்றாலும் தாம் பேசாதிருப்பதும் அவள் பேசுவதை அதிகமாகக் கேட்பதும் அவருக்கு அவசியம் என்பதை அடிக்கடி உணர்த்தி வந்தாள்.

''ஏங்குகிறாயோ?''

''இப்படித்தான்...'' என்று தெளிவில்லாமல் சொன்னார் குளுகவ். ''சந்தேகமில்லாமல் வருத்தம் உண்டாகிறது. என்ன இருந்தாலும்... அவளும் நானும் ஐம்பது வருஷங்கள் சேர்ந்து வாழ்ந்திருக்கிறோமே.''

''நூறு ஆண்டுகள் கூடத்தான் வாழலாம்... ஆனால் அர்த்தம் ஏதாவது இருந்ததா? யானைகள் இருநூறு ஆண்டுகள் வாழ்கின்றன. பயன் என்ன?''

குளுகவுக்கு ரோசம் வந்து விட்டது.

''என் மூன்று மகன்கள் யுத்தத்தில் கொல்லப்பட்டார்கள்! நீ என்னிடம் இந்த மாதிரி வார்த்தைகள் பேசுகிறாயே...''

''நான் ஒன்றுமே சொல்லவில்லை'' என்றாள் ஒல்கா. ''அவர்கள் தாய்நாட்டுக்காக உயிர் துறந்தார்கள்.''

''ஏங்கத்தான் செய்கிறேன்'' என்று அதிகத் துணிவுடன் பேசலானார் குளுகவ். ''என்னோடு அவள் எவ்வளவு துன்பப்பட்டாள்!.. எல்லாவற்றையும் பொறுத்துக் கொண்டாள். நான் சின்ன வயதிலிருந்தே மடையனாய் இருந்தேன், சண்டைக்காரனாக... எல்லாவற்றையும் பொறுத்துக் கொண்டாள்... வருத்தமாய் இருக்கிறது.''

''உணர்வு...'' என்று பெருமூச்செறிந்தாள் ஒல்கா. ''உங்களை மறுபடி மறுபடி சீவி இழைக்க வேண்டும். இன்னும் இருநூறு ஆண்டுகள் இழைத்துக் கொண்டே இருக்க வேண்டும். அப்போதுதான் நீங்கள் மனிதர்கள் போல் ஆவீர்கள். நீ அவளோடு ஐம்பது ஆண்டுகள் வாழ்ந்தாய்... அதனால் பயன் என்ன? எதுவும் சொல்லவும் உன்னால் முடியவில்லை. இதோ என் தோட்டத்தில் களைச் செடிகள் வளர்கின்றன...

அவையும் வளரத்தான் செய்கின்றன. பக்கத்தில் 'விக்டோ ரியா' ரக ஸ்டிராபெரிப் பழச் செடிகளும் வளர்கின்றன. இரண்டுக்கும் வித்தியாசம் உண்டா?''

''நீ எதற்காகக் கோபிக்கிருயாம்?'' என்று விளங்காமல் கேட்டார் குளுகவ்.

''வித்தியாசம் இருக்கிறதா, கேட்கிறேன்.''

''நல்ல ஒப்பீடுதான்...''

''இன்னும் ஒப்பிடப் போகிறேன்! ஏனென்ருல் ஒரு மனிதன் வாழ்கிருன், சுடர்கிருன், மற்றவனே, மட்கிப் போகிருன். ஒருவனுடைய ஒவ்வொரு நுண்துளேயும் பொருள் நிறைந்தது. மற்றவர்களோ... தங்கள் வேலேயைச் செய் கிருர்கள், அவ்வளவுதான். குதிரைகள்.''

''எல்லாராலும் கமிசார்களாய் இருக்க முடியுமா எங் காவது!'' என்று கோபத்துடன் சொன்ஞர் குளுகவ். ''குதிரை கள்'' என்ற சொல் அவர் நெஞ்சில் தைத்து விட்டது.

''ஐம்பது ஆண்டுகள் வாழ்ந்தேன் என்கிருயே, அவற்றில் பொருள் உள்ளதாக ஒரு வாரம் தேறுமா?'' என்று குத்த லாகக் கேட்டாள் ஓல்கா.

''வந்து, பொருள் என்னவோ நிறையத்தான் இருந்தது, கடவுள் அருளால். தேவைக்கு மேலாகவே.''

''அதுதான் தெரிகிறதே!'' என்று உதடுகளே இகழ்ச்சி தோன்றக் குவித்துக் கொண்டாள் ஓல்கா. ''குதிரைகள்.''

தாம் அவளுக்கு எதனுலோ எரிச்சல் ஊட்டுவதாக குளுகவ் உணர்ந்தார். ஆனுல் எதனுல் என்பது அவருக்கு விளங்கவே இல்லே.

இருந்தாலும் அவர் ஓல்காவின் வீட்டுக்கு முன் போலவே போய் வந்து கொண்டிருந்தார். சில வேளேகளில், இதோ, இந்த மாதிரி, வாய்ச் சண்டை போட்டுக் கொண்டார்கள், மற்ற வேளேகளில், பரவாயில்லே, சமாதானமாகப் பிரிந்தார் கள். மாலே, இதற்கிடையே தன்னே அறியாமலே கழிந்தது.

இந்த ஞாயிறன்று குளுகவ் ஓல்கா வீட்டுக்குக் கோட ரியோ ரம்பமோ இல்லாமல் வெறுமே வந்தார். கலந்து பேசுவதற்காக. யோசனே கேட்பதற்காக.

''ஓல்கா, யோசனே கேட்க வந்திருக்கிறேன். உதவி செய்.''

''என்ன நடந்தது?'' என்று கூர்ந்து கேட்கத் தயாராஞள் ஓல்கா. யோசனேகள் சொல்லுவது அவளுக்குப் பிடித்தது.

''கிழவி அதாவினுவை உனக்குத் தெரியும், அல்லவா?''

''தெரியும்.''

''நீ அவளிடம் கொஞ்சம் பேசேன் என் வீட்டுக்கு வர இசைவாளா என்று? தன் வீட்டை விற்று விடட்டும். அல்லது இப்படிச் செய்யட்டும்: இப்போதைக்கு வீட்டைப் பூட்டி வைக்கட்டும். கொஞ்ச நாள் சேர்ந்து வாழ்ந்து எங்களுக்குள் ஒத்துப் போனுல் அப்புறம் விற்றுக் கொள்ளட்டும். வீணுக ஆபத்தில் மாட்டிக் கொள்ள வேண்டாமே. என்ன நினைக்கிருய்? தனியே அவளோடு பேச எனக்குத் துணிவில்லை. உன்னுல் முடியும். அவளுக்கு நான் ஒரு குறை வைக்க மாட்டேன்... நான்கு கால்களிலே, அவை இப்போது முன் போலத் துடியாய் இல்லாவிட்டாலும், அதிக உறுதியாக நிற்கலாமே. நீ என்ன நினைக்கிருய்?'' தம் வழக்கத்துக்கு மாருக குளுகவ் நிறையவும் விரைவாகவும் பேசினுர். அவருக்குச் சங்கடமாய் இருந்தது. ''நானும் எண்ணி எண்ணிப் பார்த்தேன், இப்படி முடிவு செய்தேன். தனியாய் இருப்பது சிரமமாய் இருக்கிறது. தொலையட்டும் இந்த வாழ்க்கை! அவளுக்கும் இதமாய் இருக்கும் என்று நினைக்கிறேன். என்ன சொல்லுகிருய்?''

ஒல்கா பெரு வியப்பு அடைந்தாள். அந்த வியப்பில் அவளுக்கு உருப்படியாகச் சொல்ல வார்த்தைகளே அகப்படவில்லை.

''மணம் செய்து கொள்ள ஏற்பாடு செய்கிருயாக்கும்?''

''ஊம், மணம் செய்து கொள்ளவாவது... இது... எந்த மணத்தோடு சேர்த்தி? சும்மாதான் சேர்ந்து வாழ்வோம், ஒரு ஆறுதலுக்காக.''

''என்ன ஆனுலும் சட்டப்படி இது மணம்தான். எதற்காக வாலைக் குழைக்கிருய்?''

குளுகவுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

''நல்லது, மணம் என்றே வைத்துக் கொள்வோம். ஏன்? இதற்கு ஊக்கம் அளிக்கப்படுவதில்லையோ?''

ஒல்கா கவனமாக, ஒரு வகையான ஒதுக்கத்துடன், ஒரு வகையான மறைமுகப் பகைமையைக் காட்டும் தோரணையில் கிழவனுர் மீது கண்ணுேட்டினுள்.

''ஆனுல் அவள் இசைகிருளா? அடே, நீதான் சொல்லி விட்டாயே, அவளோடு பேச வாய்க்கவில்லை என்று...''

''அவளுக்குத் தெரியாது! அதனுல்தான் உன்னிடம் வந்தேன். அவளோடு பேசேன் என்று கேட்டுக் கொள்ள. கொஞ்

சம் பேசு, வேண்டி இருந்தால் வழிப்படுத்து. அவள் மத நம்பிக்கை உள்ள கிழவி. பாவம் என்று சொன்னாலும் சொல் லுவாள்... ஆனால் எந்த வகையில் பாவம்? கொஞ்சம் அலசிப் பார்த்தால்... நான் ஒண்டி ஆள், அவளும் தனிக் கட்டை...''

''அவளுக்கு நகரத்தில் மகள் இருக்கிறாள்.''

''ஆமாம், அது உண்மைதான்!.. எனக்கும்கூடத்தான் மகன் நகரத்தில் இருக்கிறான். அதனால் கண்ட பலன் என்ன இன்றைக்கு? நாங்கள் இரண்டு பேராக மீதி வாழ்க்கையை ஒரு விதமாகக் கழிப்போம். முதலில் சாகிறவரைப் புதைக்க ஆள் இருக்கும்.''

''உங்களுக்குத்தான் குழந்தைகள் இருக்கிறார்களே!'' என்று திடீரெனக் குரலை உயர்த்தினாள் ஓல்கா. ''எதற்காக ஆருமற்ற அகதிகளாக வேஷம் போடுகிறீர்கள்?'' என்று கத்தினாள்.

குஸூகவ் பேசாதிருந்தார். இப்போது அவர் ஓல்காவைக் கவனமாகக் கோபத்துடன் பார்வையிட்டார். இவள் எதற் காக எரிந்து விழுகிறாள்? எதற்காக?

''நீ ஏன் இப்படி, ஓல்கா?'' என்று கேட்டார்.

''ஏனா? எனக்கு ஒன்றுமில்லை. மணம் செய்து கொள்ள நீங்கள் திட்டமிட்டிருக்கிறீர்கள், நான் அல்ல. எதற்காக நீ என்று என்னிடம் கேட்கிறாயே. எனக்கு ஒன்றுமில்லை.''

''எதனாலோ கோபம் கொண்டிருக்கிறாய்...''

''அட கொஞ்சங்கூட இல்லை! நன்றாய்ச் சொன்னாயே. இன்னும் நான் கோபம் வேறு கொள்ளப் போகிறேனாக்கும். மணம் செய்து கொள்ளுங்கள்! அதாவினாவோடு பேச வேண் டுமா? பேசுகிறேன்.'' இப்போது ஓல்கா பரபரத்தாள், தானும் மளமளவென்று பேசத் தொடங்கினாள். ''அவளை அழைக்கிறேன், பேசுவோம், எனக்குக் கடினம் அல்ல. அவள் இசைகிறாளா இல்லையா என்று தெரிந்து கொள்கிறேன். எதற் காக நான் கோபம் கொள்ள வேண்டுமாம்? ஊரார் நகை யாடப் போவது உங்களைத்தானே, என்னை அல்லவே.''

''அது எப்படி?''

''எது?''

''நகையாடுவார்கள் என்பது?''

''இல்லாவிட்டால் என்ன, கொண்டாடவா போகிறார் கள்?''

''அட கிழவர்கள் சேர்ந்து வாழ்வது நடப்பதில்லையா என்ன?..''

''நடக்கிறது, நடக்கிறது. சரி, நாளை மதியத்துக்கு வா... நான் அவளைக் கொஞ்சம் முன்னல் வரச் சொல்லுகிறேன், அவளோடு முதலில் விரிவாகப் பேசுகிறேன். நீ அப்புறம், மதியச் சாப்பாட்டு வேளையில், வா. நடக்கிறது இந்த மாதிரி, நடக்கிறது. எவ்வளவு வேண்டுமாளுலும்! நான் அவளோடு பேசுகிறேன், கவலைப்படாதே; பேசுகிறேன்.''

ஒல்காவின் வீட்டிலிருந்து போகையில் குளுகவின் மனம் குழம்பியது. ஒல்கா தம்மை எப்படியோ காலை வாரி விடப் போவதாக உணர்ந்தார். விசித்திரமான கிழவி, மெய்யாகவே. எதனுலோ ஓயாமல் சிடுசிடுக்கிருள். அவள் போக்குப்படி விட்டால் எல்லாவற்றையும் மாற்றி அமைத்து விடுவாள், எல்லாவற்றையும் வெட்டிச் சீவித் திருத்தி விடுவாள்... எல்லோருக்கும் வாழக் கற்றுக் கொடுப்பாள், எல்லோருக்கும் தண்டனைத் தீர்ப்பு வழங்குவாள். திரும்பிப் போய், அவளுடைய உதவி ஒன்றும் வேண்டாம், நானே எப்படியாவது சமாளித்துக் கொள்கிறேன் என்று சொல்லி விடலாமா என்று கூட நினைத்தார் கிழவர். நடையை நிறுத்தி, சற்று தயங்கினுர். கிடக்கிறது, அவள் எக்கேடும் கெடட்டும், பேசட்டும் என்று முடிவு செய்தார். தாமே பேசுவது எப்படியும் அவ்வளவு சுளுவாய் இராது. எரிச்சல் படட்டும், ஆனுல் காரியத்தைச் செய்யட்டும்.

மறு நாள் ஓல்கா, அதாவிஞ, இரண்டு கிழவிகளும் சந்தித்தார்கள். அவர்களுக்குள் பேச்சு நடந்தது.

அதாவிஞ ஓல்காவின் வீட்டுக்கு வந்து, முதல் காரியமாக மூலைப் பக்கம் பார்வை செலுத்திளுள் (தெய்வப் படங்கள் இருக்கின்றனவா என்று). பின்பு சோபாவின் விளிம்பில் கூச்சத்துடன் உட்கார்ந்தாள். முகமன் கூறிளுள்.

''நான் எதற்காக உன்னை அழைத்தேன் தெரியுமா?'' என்று நேரே தொடங்கிளுள் ஓல்கா. ''கிழவர் குளுகவை அறிவாய் அல்லவா?''

''யெமெல்யான் யெகோரிச்சையா? அறிவேன், அறியாமல் எப்படி. அவருடைய மூன்று மகன்கள் கொல்லப்பட்டார்கள்...''

''ஆயிற்ரு, அவர் உன்னை மணக்க விரும்புகிருர்.'' ஓல்கா சொற்களைக் கணீரென்று தெளிவாக ஒலித்தாள். ''நீ இசைகிருயா?''

''தேவா, தேவா, தேவா'' என்று சிலுவைக் குறி இட்டுக் கொண்டாள் அதாவிஞ. ''அட அவர் என்ன?''

''ஏன், என்ன?'' என்று ஓரளவு குதூகலத்துடன்கூட வின விஞள் ஓல்கா. ''நீங்கள் தனிக்கட்டைகள்... நீ யோசனை செய், முதலில் யோசித்துப் பார். அவசரப்பட்டுப் பதில் சொல்லாதே. எல்லாரையும் போல அவரும் ஆட்டுக் கடா தான், ஆனுல் மீதி வாழ்க்கையைக் கழிக்க உதவுவார். நீ என்ன நினைக்கிருய்? மர வீட்டை இப்போதைக்கு விற்க வேண்டாம், பூட்டி வைக்கலாம், நீங்கள் ஒத்து வாழ்ந்தால் விற்கலாம், பணத்தை வங்கியில் போட்டு வைக்கலாம் என் கிருர். நீ எப்படி நினைக்கிருய்?''

''அட நான் எப்படி நினைக்க முடியும்? என் எண்ணங்கள் எல்லாம் மூளையிலிருந்து ஓடி விட்டன. எப்படி இருக்கிறது கதை, திடுதிப்பென்று வாழ்க்கைப்பட வேண்டுமாம்'' அதா விஞ லேசாக உளமாரச் சிரித்தாள். ''இந்த மாதிரிச் சொன் ஞல் மூளையேகூடப் புரண்டு விடலாம். நல்ல மணப் பெண் நான்!''

''அவர் மாத்திரம் என்ன பிரமாத மணமகன். ஆனுலும், என்ன சொல்கிருய்?''

''அட கொஞ்சம் பொறு நீ. மனதைக் கொஞ்சம் திடப் படுத்திக் கொள்ள விடு...''

''அவர் இப்போது வருவார். பதிலுக்காக.''

''ஓகோ!'' அதாவிஞ சோபாவிலிருந்து சற்று எழுந்து கூட விட்டாள். அவளுடைய பார்வை கதவின் பக்கம் போயிற்று. பின்பு மறுபடி உட்கார்ந்தாள். ''நல்ல சிக்கல் தான் போ!'' என்ருள்.

''ஆனுல் நீ இப்போதே அனேகமாக இசைந்து விட்டதைப் பார்க்கிறேன்.''

கிழவி அதாவிஞ சட்டென்று ஆழ்ந்து சிந்திக்கலானுள்.

''நான் உனக்கு இப்படிச் சொல்லுகிறேன் ஓல்கா செர் கேயெவ்ஞ. அவர் பரவாயில்லே. வெறியேறக் குடிப்பதில்லே, விசேஷமாக தெய்வநிந்தை செய்வதில்லே, என் காதில் பட்ட தில்லே... ஒன்று மட்டுந்தான்...'' அதாவிஞ ஓல்காவைப் பார்த்தாள். ''கிழவனும் கிழவியும் சேர்ந்து வாழ்வது நடக் கிறதுதான்...''

''நடக்கிறது.''

''அது சரி, ராத்திரி வேளைகளிலே தொந்தரவு பண்ணத் தொடங்கினுலோ?''

ஓல்கா வியப்பினுல் ஆவென்று வாயைக்கூடத் திறந்து விட்டாள்:

''எப்படி?''

''எப்படியாவது? அப்படித்தான். இந்த ஆண்கள் எப்படிப் பட்டவர்கள், தெரியும் அல்லவா? அவர் தொந்தரவு பண்ணத் தொடங்க மாட்டார் என்று முதன்முதலில் தெரிந்து கொள்ளவும் நம்பவும் நான் விரும்புகிறேன். அப்புறம் ஆபாச மாக வையக் கூடாது. சிகரெட்டு புகைக்கிருர்... ஆனுல் அது கொஞ்சம்... எல்லாருந்தான் புகைக்கிருர்கள். இதைத் தடுக்க முடியாது.''

''அப்படியானுல் உனக்குச் சம்மதமா?''

''பொறேன் கொஞ்சம். விரட்டாதே குதிரை மாதிரி. அதுதான் நான் சொல்லுகிறேன்: நான் நிபந்தனைகள் நிறைய விதிக்கிறேனே. இது கூடாது, அது கூடாது... என்று. கிழ வனுர் எண்ணிப்பார்த்து, 'எதுதான் கூடும்?' என்பார். நம் முடைய மண முயற்சி எல்லாம் அதோடு சிதறிப் போகும்.'' அதாவினு மறுபடி மெல்லிய குரலில் நகைத்தாள். ''இதை நான் நினைக்கவே, இல்லை, அனுமானிக்கவே இல்லை... கடவுளே, கடவுளே. பார்க்கப் போனுல், அப்படி ஒன்றும் மோசமில்லையே? நான் முன்னே வசித்தேனே, புலானிஹா, அங்கே எனக்கு நெருங்கின தோழி ஒருத்தி இருக்கிருள். அவளும் இப்படித் தான். ஒரு கிழவர் வந்தார். வெறுமே பேசிக் கொண்டார் கள். அப்புறம், அவர் வா, சேர்ந்து வாழ்வோம் என்ருர். வாழ்ந்தார்கள். ஆனுல் அந்த மனிதர் இரண்டொரு வருஷங் களுக்கு முன்னே காலமாகி விட்டார்... அவள் அவருடைய வீட்டில் வசிக்கிருள். நன்ருகவே வாழ்ந்தார்கள், எனக்குத் தெரியும். எத்தனை?.. ஒரு ஐந்து ஆண்டுகள் வாழ்ந்தார்கள். மோசமில்லை, அவளுக்குக் குறை வைக்கவில்லை அவர். ஆயுள் முடிவை நெருங்கும் போது மனிதர்கள் அதிகப் புத்திசாலி கள் ஆகிவிடுகிருர்கள். இப்போது பார்... இந்தக் காலத்து ஆட்களைத்தான் பாரேன்... கடவுளே, கடவுளே!.. காணவே சகிக்கவில்லை. வந்து, எனக்குந்தான் கடைசிக் காலத்திலே கொஞ்சம் வசதியாக வாழ வேண்டும் போல் இருக்கிறது... என்னுடைய வீடு ஒரேயடியாக அற்றலைந்து போய்விட்டது. குளிர் காலம் கழிந்து விட்டதே என்று சந்தோஷப்படுகிறேன்.

இல்லாவிட்டால் என் வீட்டுக்குள் கதகதப்பு ஏற்படுத்துவது முடியாத பாடு. அடுப்பை எரிய விட்டு எரிய விட்டு மாளாது, அப்படியும் சூடெல்லாம் எங்கேயோ போய் விடும்.''

''ஆனுல் நீ பெண் வீட்டில் போய் இருப்பதற்கென்ன?''

''நன்ருய்க் கேட்டாய் போ! அவர்களே சாணகல இடத்தில் குமைகிருர்கள்... இருந்தேன். பேரக் குழந்தைகள் சின்னதுகளாக இருந்தன, அதனுல் இருந்தேன். தொல்லைப் பட்டு விட்டேன். இப்போதோ குழந்தைகள் பள்ளிக்கூடம் போகிருர்கள், ஆகவே, இந்த மர வீடாவது எனக்கு வாங்கிக் கொடுத்தார்களே என்று நான் இப்போது மகிழ்கிறேன். புலானிஹாவில் இருந்த என் வீட்டை நான் விற்று விட்டேன். பெண்ணுக்குக் கலியாணம் ஆனதும் விற்று விட்டேன். அது வலுவான கட்டிடம். இன்னும் நூறு வருஷம் நிற்கும். விற்றேன். என்ன செய்வது? பெண்ணும் மாப்பிள்ளையும் கூட்டுறவு வீடு வாங்கத் திட்டம் போட்டார்கள். பணத்துக்கு எங்கே போவது? அவன், அதுதான் மாப்பிள்ளை, படையிலிருந்து பணி முடிந்து வந்திருந்தான். என் பெண்ணும் தொழிற் பள்ளிப் படிப்பை முடித்திருந்தாள். அம்மா, வா, வீட்டை விற்போம் என்ருள். எங்களோடு இருக்க உனக்குப் பிடிக்காவிட்டால் உனக்குத் தனி வீடு வாங்கித் தருகிருேம் என்ருள். அதுதான் அவர்களோடு இருந்தேன், குழந்தைகளைச் சீராட்டி வளர்த்தேன். அப்புறம் பார்த்தேன். சின்னதாகவாவது எனக்கு வீடு வாங்கித் தாருங்கள், நகரத்தில் என்னுல் வாழ முடியாது, வயிற்றைக் குமட்டுகிறது என்றேன். தயங்கினுர்கள், இழுத்தடித்தார்கள், கடைசியில் மர வீடு வாங்கப் பணத்துக்கு ஏற்பாடு செய்தார்கள். புலானிஹாவில் வீடுகள் கிராக்கி, இங்கே மலிவு, அதனுல்தான் நான் இங்கே வந்தேன். வந்து, எதற்குச் சொல்லுகிறேன் என்ருல், வயது காலத்தில்... வசதியாக வாழ்ந்தால்... நன்ருய்த்தான் இருக்கும்.''

இந்த உரையாடலைப் பற்றிக் கிழவர் குஞகவுக்கு ஒன்றும் தெரியாது. கிழவிகளுக்குள் பேச்சு நடக்கும் என்பதை அவர் அறிந்திருந்தார், ஆனுல் எந்த மாதிரிப் பேச்சு என்பது அவருக்குத் தெரியாது. எதற்கும் இருக்கட்டும் என்று புதிய கோட்டு அணிந்து, ஒரு புட்டி மதுவும் மரப் பட்டைத் தொன்னையில் தேனும் எடுத்துக் கொண்டு ஓல்காவின் வீட்டுக்கு வந்தார்.

வந்தார்... முகமன் கூறினார். எதற்காகவோ கூச்சப்பட்டார், புட்டியையும் தொன்னையையும் மேசை மேல் வைத்தார்... புகையிலைப் பையை எடுக்க முற்பட்டார்.

''நீ பொறு. மதுப் புட்டியை இப்போதே வைக்காதே, பொறு, அவசரப்படாதே'' என்றாள் ஓல்கா.

கிழவருக்கு நெஞ்சு விழுந்து போயிற்று. அவரோ அதாவினாவுடன் சேர்ந்து வாழ மனதை ஏற்கெனவே உறுதியாகத் தயார்படுத்தி இருந்தார். எல்லா விவரங்களையும் எண்ணிப் பார்த்தார். எல்லாம் நன்றாய் இருந்தன. இப்போது என்ன?

''நீங்கள் இரண்டு பேரும் சொன்னதைக் கவனமாகக் கேட்டேன்... சந்தேகமில்லாமல், இது உங்கள் சொந்த வாழ்க்கை, நீங்கள் சேர்ந்து வாழலாம்... மனிதர்களுக்குப் பைத்தியம் பிடிக்கிறது, அதுகூட மோசமில்லை. ஆனாலும் உங்களை ஒன்று கேட்க விரும்புகிறேன்: உங்களுக்கு வெட்கமாய் இல்லையா? ஊம்?'' இந்தச் சொற்களை அவள் கிழவர், கிழவி, இருவரது முகங்கள் மேலும் எறிந்தாள். விளக்க முடியாத ஒருவகைக் கொடூரத்துடன், மறைமுகமான ஏதோ வலியால் துடித்த உள்ளத்தின் அடியாழத்திலிருந்து, எறிந்தாள். இந்த மணமகனும் மணப் பெண்ணும் எவ்வளவுதான் முகஞ்சிவந்தாலும் எவ்வளவுதான் இருப்புக் கொள்ளாமல் தவித்தாலும், எவ்வளவுதான் துன்பப்பட்டாலும் பொருட்படுத்தாமல் சுடு சொற்களை அவர்கள் மேல் நெருப்பு மழையாகக் கொட்டினாள். ''இதற்குப் பிறகு நீங்கள் உலகத்தார் முன் எப்படித் தலையைக் காட்டப் போகிறீர்கள்? ஊம்? அட மனிதர்கள் ஆயுள் முழுவதும் தன்னந்தனியாக வாழ்கிறார்கள்... நான் வாழ்நாள் முழுதும் தனியாகவே இருந்து வருகிறேன். இருபத்து மூன்றாம் வயதிலிருந்து தனியாய் இருக்கிறேன்... என்னை மணக்க யாரும் விரும்பவில்லையா என்ன? விரும்பினார்கள். இரவு வேளைகளில் என்னிடம் வரவில்லையா? என் அறை சன்னலைத் தட்டவில்லையா? வந்தார்கள். தட்டினார்கள். குளுகவ், கிராம சோவியத் அலுவலகத்தில் என்னிடம் நீ வந்தாயா இல்லையா? நான் இல்லாமல் வாழ முடியாது என்று சொன்னாயா, இல்லையா? வரவில்லையா நீ? ஊம், சொல்லு.''

தரை பிளந்து தம்மை விழுங்கி விடாதா என்று இருந்தது குளுகவுக்கு.

''நான் அசட்டுத்தனமாக... அப்போது குடித்திருந்தேன்''

என்று முனகினார் அவர். ''நான் உன்னை மணக்க விரும்ப வில்லை... எதற்காக நீ? வீணாக. நான், வந்து, எப்போதோ...''

''அசட்டுத்தனமாகவாம்! இப்போது அதிக புத்திசாலி ஆகி விட்டான், அதனால்தான் எழுபது வயதில் கலியாணம் செய்து கொள்ள எண்ணி இருக்கிறான். கெட்டிக்காரன்! அப்புறம் நீ இருக்கிறாயே, பெண்பிள்ளை!.. 'பார்க்கிறேன், யோசனை செய்கிறேன்... வசதியாக வாழலாமே' என்கிறாய். தெய்வ பக்தி உள்ளவளாம், அட சே? அழகுதான்... மற்றவர்களை விரலால் சுட்டிக் காட்டுவீர்கள், 'பாவம்' என்பீர்கள். நீங்களோ? இளைஞர்களுக்கு எந்த மாதிரி உதாரணம் காட்டுகிறீர்கள் நீங்கள்? இதைப் பற்றி எண்ணினீர்களா? மக்களுக்கு முன் உங்கள் பொறுப்பை நீங்கள் புரிந்து கொண்டீர்களா?'' எலும்பும் தோலுமான வறண்ட விரல்களால் மேசையைத் தட்டினாள் ஓல்கா. ''இதை எண்ணிப் பார்த்தீர்களா? இல்லை, எண்ணிப் பார்க்கவில்லை. சுயநலமிகளா. மக்கள் தங்கள் சக்தியை எல்லாம் ஈடுபடுத்தி உழைக்கிறார்கள். நீங்களோ? மண விழாவுக்கு ஏற்பாடு செய்கிறீர்கள்... ஆட்களைக் குடிக்கவும் சரசமாடவும் ஆசை காட்டி அழைக்கப் பார்க்கிறீர்கள். வெட்கம் கெட்டவர்களா.''

''மண விழாவாவது ஒன்றாவது?'' என்று மறுபடி முனகினார் குளுகவ். அதாவினாவோ ஒரு வார்த்தை பேச முடியாதவளாக இருந்தாள். ''சந்தடி இல்லாமல் சேர்ந்து வாழ்வோம், அவ்வளவுதான். மண விழாவாவது, மணவிழா?'' என்றார் கிழவர்.

''ஒரேயடியாக... வீடு வாசல் இல்லாதவர்கள் போல. த்தூ!''

''இந்தா, இது!.. ரொம்பத்தானே!'' என்று சீறி விழுந்த கிழவனார் வெளியே போய்க் கதவைப் படீரென்று அறைந்து சாத்தினார்.

அவர் பின்னே வெளியேறினாள் அதாவினா. வெளியேறவாவது, வெளியே பாய்ந்தார்கள் கொதி நீரை யாரோ ஊற்றி விட்டது போல. இருவருக்கும் ஒரே சந்து வழியே போக வேண்டி இருந்தது. ஆனாலும், வெளி வாயிலைத் தாண்டிய பின் இருவரும் ஒருவரை ஒருவர் பார்க்காமல் வெவ்வேறு திசைகளில் நடந்தார்கள்.

கிழவனார் குளுகவ் கிராமத்தை நன்றாகச் சுற்றி வளைத்தவாறு நடந்து வீடு போய்ச் சேர்ந்தார். துப்பினார், ஆபாச

வசவுகளைப் பொழிந்தார், ஓரிடத்தில் கால் தரிக்காமல் அல்லாடினார்... ''அந்த இழிமகளைச் சுட்டுப் பொசுக்கி விடுகிறேன்!'' என்று கூட ஆத்திரத்தில் எண்ணினார்.

அவர் ஓல்காவைச் சுட்டுப் பொசுக்கவில்லை என்று சொல்லவே வேண்டாம். ஆனால் அவள் வீட்டுக்குப் போவதை நிறுத்தி விட்டார். அவளை வழியில் கண்ட போது முகத்தைத் திருப்பிக் கொண்டார். முகமன் கூறவில்லை.

அதாவினா நகரத்துக்குப் போனாள், மாதாகோயிலில் தொழுது பாவத்தைப் போக்கிக் கொள்வதற்காக. கிழவி கடுமையாகத் துன்பப்பட்டாள், ஓல்காவைச் சந்திக்காமல் இருக்க முயன்று வந்தாள்.

இந்த அபூர்வ மண முயற்சியைப் பற்றி ஓல்கா கிராமத்தில் யாரிடமும், ஒரு மனிதரிடமும், சொல்லவில்லை. அவள் இதை எல்லோருக்கும் சொல்லுவாள் என்று குளுகவும் அதாவினாவும் எதிர்பார்த்தார்கள். இல்லை. அவள் சொல்லவில்லை.

**வேடிக்கையான ஆள்**

மனைவி அவனைச் ''சுதீக்'' (''வேடிக்கையான ஆள்'') என்று அழைத்து வந்தாள். சில வேளைகளில் கொஞ்சலாக.

சுதீக்கிடம் ஒரு தனிச் சிறப்பு இருந்தது. எப்போது பார்த்தாலும் அவனுக்கு ஏதாவது நடந்து கொண்டிருந்தது. அவன் இதை விரும்ப வில்லை, துன்பப்பட்டான், ஆனாலும் அடிக்கடி எவையேனும் இக்கட்டுகளில் மாட்டிக் கொண்டான். இவை அற்பமானவைதாம், ஆனால் எரிச்சல் ஊட்டு பவை.

அவனுடைய ஒரு பயணத்தில் நடந்த சம்பவங்கள் இவை. விடுமுறை கிடைத்ததும் உராலில் இருந்த தன் தமையனிடம் போவதென்று தீர்மானித்தான். ஒரு பன்னிரண்டு ஆண்டு களாக அவர்கள் சந்திக்கவில்லை.

''தூண்டில் தக்கை எங்கே போயிற்று...மீன் பிடிப்பதற்கு உதவுமே?'' என்று சாமான் அறையிலிருந்து கத்தினான் சுதீக்.

''எனக்கு எப்படித் தெரியும்?''

''அட இங்கே தானே எல்லாம் கிடந்தன!'' நீலமும் வெண்மையுமான உருண்டை விழிகளால் முறைத்துப் பார்க்க முயன்றான் சுதீக். ''எல்லாம் இருக்கின்றன, ஆனால் அதை மட்டும் காணோம்.''

''மீன் போல் இருக்குமோ?''

''ஆம், வாளை மீன் போல்.''

''நான் அதைக் கைப்பிசகாக எடுத்துப் பொரித்து விட் டேன் போலிருக்கிறது.''

சுதீக் சற்று நேரம் பேசாதிருந்தான்.

''அப்புறம், எப்படி இருந்தது?''

''எது?''

''ருசியாய் இருந்ததா? ஹா-ஹா-ஹா!..'' அவனுக்குக் கிண்டல் பண்ணவே வரவில்லை, ஆனால் அதற்கு ஆசை மட்டும் நிறைய இருந்தது. ''பற்கள் பழுதில்லாமல் இருக் கின்றனவா? அது வலிவனுமினியத் தகடு!..''

...பயண ஏற்பாடுகள் வெகு நேரம்—நள்ளிரவு வரை— நடந்து கொண்டிருந்தன.

அதிகாலையில் சுதீக் பெட்டியும் கையுமாக ஊரைச் சுற்றி நடந்தான்.

எங்கே போகப் புறப்பட்டிருக்கிறான் என்ற கேள்விக்கு, ''உரால்! உரால்!'' என்று விடை அளித்துக் கொண்டு போனான். இப்படிச் சொல்கையில், நெடுந் தூரப் பயணம் அவனுக்கு ஒரு பொருட்டே இல்லை, அது அவனை அச்சுறுத்த வில்லை என்ற அசட்டைப் போக்கைச் சதைப்பற்று உள்ள அவனுடைய உருண்டை முகமும் வட்ட விழிகளும் மிகுந்த அளவில் வெளியிட்டன. ''உராலுக்கு ஒரு நடை போய் விட்டு வர வேண்டும்!''

ஆனால் உரால் இன்னும் தொலைவில் இருந்தது.

தற்போதைக்கு அவன் வட்டார நகரத்துக்கு நலமே போய்ச் சேர்ந்திருந்தான். அங்கே டிக்கெட்டு வாங்கி ரயில் ஏற வேண்டி இருந்தது.

நேரம் நிறைய இருந்தது. மருமக்களுக்கு இப்போதே பரிசுகள் வாங்குவதென்று சுதீக் முடிவு செய்தான். மிட்டாய் களும் பிஸ்கோத்துக்களும் வாங்குவதற்காக உணவுப் பண்டக் கடைக்குப் போய் வரிசையில் நின்று கொண்டான். அவனுக்கு முன்னால் ஹாட் அணிந்த ஆடவரும் ஹாட்டுக்கு முன்னால் உதட்டுச் சாயம் பூசிய பருத்த மாதும் நின்றார்கள். அவள் ஹாட்டினிடம் தணிந்த குரலில், ஆவேசம் பொங்க, விரைவாகச் சொல்லிக் கொண்டிருந்தாள்:

''நினைத்துப் பாருங்கள், எவ்வளவு நாகரிகம் இல்லாத, நயம் இல்லாத ஆளாய் இருக்க வேண்டும்! அந்த மனிதருக்கு மறதி உண்டுதான். ஏழு வருஷமாக அவருக்கு இந்த மறதி இருந்ததே. ஆனாலும் ஓய்வு பெறும்படி ஒருவரும் அவரிடம் சொல்லவில்லையே! இந்த ஆள் பணிக் குழுவுக்குத் தலைவர் ஆகி ஒரு வருஷம் கூட நிறையவில்லை, ஒரு வாரம் பாக்கி இருக்கிறது. அதற்குள், 'அலெக்சாந்தர் செமியோனிச், நீங் கள் வேலையிலிருந்து ஓய்வு பெறுவது மேலாய் இருக்குமோ?' என்கிறாரே, என்ன துடுக்கு!''

ஹாட் ஆமாம் போட்டது.

''ஆமாம்... இந்தக் காலத்து ஆசாமிகளே இப்படித் தான். பிரமாதமாக்கும்—மறதி. ஸீம்பாதிச் விஷயம் என்ன?.. அவரும் கடைசிக் காலத்தில் எல்லாவற்றையும் மறந்து வந் தார். அப்புறம் இவள் இருக்கிறாளே, அவள் பேர் என்ன?..''

சுதீக் நகர மாந்தரை மதித்தான். ஆனால் எல்லோரை

யும் அல்ல. போக்கிரிகளையும் விற்பனை ஆட்களையும் அவன் மதிக்கவில்லை, பயந்தான்.

அவனுடைய முறை வந்தது. மிட்டாய்களும் பிஸ் கோத்துக்களும் மூன்று சாக்லெட்டுகளும் வாங்கிக் கொண்டு அவற்றைப் பெட்டியில் வைப்பதற்காக ஒரு புறம் ஒதுங் கினான். பெட்டியைத் தரையில் வைத்துத் திறந்து பண்டங்களை வைக்கத் தொடங்கினான்... தரை மேல் கண்ணோட்டினான். வரிசை நின்ற கடை மேசை அருகே ஆட்களின் கால்களின் பக்கத்தில் கிடந்தது ஐம்பது ரூபிள் நோட்டு. பளபளக்கும் பச்சை நோட்டு மடத்தனமாகக் கிடந்தது, அதை ஒருவரும் காணவில்லை. மகிழ்ச்சியால் சுதீக்கின் மேனி நடுங்கக்கூடச் செய்தது, கண்கள் சுடர் வீசின. யாரும் தன்னை முந்தி விடக் கூடாது என்பதற்காக அவன் அவசரப்பட்டான். வரிசையில் நின்றவர்களிடம் நோட்டைப் பற்றிக் குதூகலம் பொங்கவும் கிண்டலாகவும் எப்படிச் சொல்வது என்று விரைவாக எண்ணிப் பார்த்துக் கொண்டான்.

''நன்றாக வாழ்கிறீர்கள், நகரவாசிகளே!'' என்று மகிழ்ச்சி யுடன் உரக்கச் சொன்னான்.

ஆட்கள் அவனைத் திரும்பிப் பார்த்தார்கள்.

''எங்கள் ஊரில் இந்த மாதிரிக் காகிதங்களை யாரும் எறிய மாட்டார்கள்.''

இதைக் கேட்டதும் எல்லோரும் கொஞ்சம் பரபரப்பு அடைந்தார்கள். இது மூன்றோ ஐந்தோ அல்ல, ஐம்பது ரூபிள் ஆயிற்றே, பாதி மாதம் வேலை செய்துதானே சம்பா திக்க முடியும். ஆனால் நோட்டுக்கு உரியவரைக் காணவில்லை.

''ஒருவேளை ஹாட்டுக்காரராய் இருக்கும்'' என்று ஊகித் தான் சுதீக்.

கடை மேசை மேல் நன்கு தெரியும் இடத்தில் நோட்டை வைப்பது என்று முடிவு செய்தார்கள்.

''இதோ வருவார் யாராவது'' என்றாள் விற்பனைக்காரி.

சுதீக் களி பொங்கும் மன நிலையில் கடையிலிருந்து வெளி யேறினான். எவ்வளவு இயல்பாக, குதூகலமாகப் பேச வாய்த்து விட்டது என்றே ஓயாமல் எண்ணிக் கொண்டு போனான்: ''எங்கள் ஊரில் இந்த மாதிரிக் காகிதங்களை யாரும் எறிய மாட்டார்கள்!'' திடீரென்று அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. சேமிப்பு வங்கியில் இந்த மாதிரி நோட்டு ஒன்றும் இருபத்தைந்து ரூபிள் நோட்டு ஒன்றும் தனக்குக் கொடுத்

தார்கள் என்பது நினைவு வந்தது. இருபத்தைந்து ரூபிள் நோட்டை அவன் இப்போது மாற்றினான், ஐம்பது ரூபிள் நோட்டு அவன் பையில் இருக்க வேண்டும்... பையில் கையை விட்டுப் பார்த்தான். எங்கும் தேடினான், இல்லை.

''நோட்டு என்னுடையதுதான்!'' என்று உரக்கச் சொன்னான் சுதீக். ''உங்கள் அம்மாவை!.. என்னுடைய நோட்டு அது!''

துயரத்தால் நெஞ்சு கணகணப்பது போல் இருந்தது. ''நகரவாசிகளே, நோட்டு என்னுடையதுதான். சேமிப்பு வங்கியில் எனக்கு இரண்டு நோட்டுகள் கொடுத்தார்கள்: ஒன்று இருபத்தைந்து ரூபிள் நோட்டு, மற்றது ஐம்பது ரூபிள் நோட்டு. இருபத்தைந்து ரூபிள் நோட்டை நான் இப்போது மாற்றினேன், மற்ற நோட்டு என்னிடம் இல்லை'' என்று கடைக்குள் போய்ச் சொல்ல வேண்டும் என்ற எண்ணம் முதலில் உண்டாயிற்று. ஆனால், தனது இந்தச் சொற்களால் எல்லோருக்கும் ஏற்படக் கூடிய கசப்பை எண்ணிப் பார்த்தான். ''உரியவன் இல்லாதபடியால் பணத்தைத் தானே சுருட்ட முடிவு செய்திருக்கிறான்'' என்று பலர் நினைப்பார்கள் என்பதைக் கற்பனை செய்தான். இல்லை, தன்னை வசப்படுத்தி, அந்தப் பாழும் நோட்டை எடுக்கக் கை நீட்டுவது தன்னால் முடியாது என்று உணர்ந்தான்... கடைக்காரி கொடுக்க மறுத்தும் விடலாம்...

''அட எதனால்தான் நான் இப்படி இருக்கிறேன்?'' என்று கைப்புடன் உரக்கச் சொல்லிக் கொண்டான் சுதீக். ''இனி என்ன செய்வது?..''

ஊர் திரும்ப வேண்டியதாயிற்று.

கடை வரை சென்றான். தூரத்திலிருந்தாவது நோட்டைப் பார்க்க விரும்பினான். வாயில் அருகே சற்று நேரம் நின்றான்... ஆனால் உள்ளே போகவில்லை. ஒரேயடியாக வேதனை உண்டாகும். இதயம் தாங்காமலும் போய் விடலாம்.

பஸ்ஸில் ஊர் திரும்பிய போது வாய்க்குள் வைது துணிவைத் திரட்டிக் கொண்டான். மனைவிக்கு விளக்கம் கூற வேண்டி இருந்ததே.

சேமிப்புக் கணக்கிலிருந்து இன்னும் ஐம்பது ரூபிள் எடுத்தார்கள்.

தனது கையலாகாத் தனத்தால் சுதீக் நொந்து போயிருந்

தான். அவனுடைய மனைவி இதை இன்னொரு தரம் எடுத்துச் சொன்னாள் (கண்ணகப்பையால் அவன் தலையில் இரண்டு தடவை இடிக்கக் கூடச் செய்தாள்). இப்படி நொந்த மன நிலையில் அவன் ரயில் ஏறினான். ஆனால் துயரம் கொஞ்சங் கொஞ்சமாக மறைந்தது. காடுகளும் சோலைகளும் கிராமங் களும் ரயில் சன்னலுக்கு வெளியே தோன்றித் தோன்றி விரைந்தன... விதம் விதமான மனிதர்கள் வருவதும் போவது மாக இருந்தார்கள், விதம் விதமான கதைகள் சொல்லப் பட்டன... பெட்டியின் வெளிமேடையில் நின்று புகை பிடிக்கையில் ஒரு அறிவுஜீவித் தோழனிடம் சுதீக்கும் ஒரு கதை சொன்னான்.

''எங்கள் பக்கத்துக் கிராமத்தில் ஒரு மட மட்டி... சூட்டுக் கோலை எடுத்துக் கொண்டு தாயாரை அடிக்கக் கிளம் பினான். குடித்திருந்தான். அவள் அவனிடமிருந்து தப்பி ஓடிக் கொண்டே கத்தினாள்: 'கைகள், மகனே, கைகள் பொசுங்கி விடாமல் பார்த்துக் கொள்!' என்று. அவனைப் பற்றியே அவள் கவலைப்பட்டாள். அவனோ வியர்த்து வடிந்து கொண்டு பாய்ந்தான், குடிகார முகரைக்கட்டை. பெற்ற தாயார் மேல். நினைத்துப் பாருங்கள் எவ்வளவு நாகரிகம் இல்லாத, நயம் இல்லாத ஆளாக இருக்க வேண்டும்...''

''நீங்களே கற்பனை செய்தீர்களோ?'' என்று சுதீக்கை மூக்குக் கண்ணாடிக்கு மேலாகப் பார்வையிட்டவாறு கண்டிப் புடன் கேட்டான் அறிவுஜீவித் தோழன்.

சுதீக்குக்கு விளங்கவில்லை. ''எதற்காக? எங்கள் ஊரில் ஆற்றின் அக்கரையில் இருக்கிறது ராமென்ஸ்கயே கிராமம்...''

அறிவுஜீவித் தோழன் சன்னல் பக்கம் முகத்தைத் திருப்பிக் கொண்டவன், மேற்கொண்டு பேசவில்லை.

ரயில் பயணம் முடிந்த பின் சுதீக் வட்டார விமானத்தில் இன்னும் ஒன்றரை மணி நேரம் பறக்க வேண்டி இருந்தது. அவன் எப்போதோ ஒரு தரம் பறந்திருந்தான். வெகு காலத் துக்கு முன்னால். விமானத்தில் ஏறி உட்கார்ந்த போது அவ னுக்கு அச்சம் உண்டாகாமல் இல்லை. ''ஒன்றரை மணி நேரத்தில் இதனுடைய ஒரு கருவியாவது உடையாமல் இருக் குமா என்ன?'' என்று நினைத்தான். பின்பு பரவாயில்லை, துணிவு அடைந்தான். பக்கத்துப் பயணியிடம் பேச்சுக் கொடுப்பதற்குக் கூட முயன்றான், ஆனால் அவர் செய்தித்

தாள் படித்துக் கொண்டிருந்தார். செய்தித்தாளில் இருந்த சுவாரசியத்தில் உயிருள்ள மனிதனின் பேச்சைக் கேட்க அவருக்கு விருப்பம் இல்லை. சுதீக் தெரிந்து கொள்ள விரும்பியது இதுதான்: விமானங்களில் சாப்பாடு தருவார்கள் என்று அவன் கேள்விப்பட்டிருந்தான். ஆனால் இப்போது கொண்டு வரக் காணோம். அவனுக்கோ விமானத்தில் சாப்பிட ஒரே ஆசையாய் இருந்தது—ஆவல் காரணமாக.

''கபளீகரித்து விட்டார்கள்'' என்று முடிவு செய்தான்.

கீழே பார்க்கலானான். கீழே இருந்தன மேக மலைகள். அந்தக் காட்சி அழகா இல்லையா என்று சுதீக்கால் எதனாலோ நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை. ''ஆகா, என்ன அழகு!'' என்று எல்லோரும் சொல்லிக் கொண்டிருந்தார்கள். அவனுக்கோ, பஞ்சில் விழுவது போல மேகங்களில் விழ வேண்டும் என்ற மகா மட்டித்தனமான ஆசைதான் திடீரென ஏற்பட்டது. ''நான் ஏன் ஆச்சரியப்பட மாட்டேன் என்கிறேன்? எனக்குக் கீழே அனேகமாக ஐந்து கிலோமீட்டர் வெறு வெளி ஆயிற்றே'' என்றும் அவன் எண்ணமிட்டான். மனதுக்குள் இந்த ஐந்து கிலோமீட்டர்களைத் தரையில் அளந்து அந்தப் பகுதியை நெட்டுக்குத்தாக நிறுத்திப் பார்த்தான்—ஆச்சரியப்படுவதற்காக. ஆனால் ஆச்சரியம் உண்டாகவில்லை.

''எப்பேர்ப்பட்டவன் மனிதன்!.. இதைக் கற்பனை செய்திருக்கிறானே'' என்று பக்கத்துப் பயணியிடம் சொன்னான்.

அவர் இவனைப் பார்த்து, ஒன்றும் பேசாமல் மறுபடி செய்தித்தாளைச் சரசரக்கத் தலைப்பட்டார்.

''வார்களை இறுக்கிக் கொள்ளுங்கள்! இறங்கப் போகிறோம்'' என்றாள் இன்முகமுள்ள இளமாது.

சுதீக் பணிவாக வாரை இறுக்கிக் கொண்டான். பக்கத்துப் பயணியோ, சட்டை செய்யவே இல்லை. சுதீக் அவரைப் பதபாகமாகத் தொட்டான்.

''வாரை இறுக்கிக் கொள்ளச் சொல்லுகிறார்கள்'' என்றான்.

பக்கத்துப் பயணி ''பரவாயில்லை'' என்று சொல்லி, செய்தித்தாளை ஒரு புறம் வைத்து விட்டு இருக்கையில் சாய்ந்து, எதையோ நினைவுபடுத்திக் கொண்டவர் போலச் சொன்னார்: ''குழந்தைகள் வாழ்க்கையின் மலர்ச் செடிகள், அவர்களைத் தலை கீழாக நட வேண்டும்.''

''அது எப்படி?'' என்று விளங்காமல் கேட்டான் சுதீக்.

படிப்பாளர் உரக்க நகைத்தார், ஆனால் மேற்கொண்டு பேசவில்லை.

விமானம் விரைவாக இறங்கலாயிற்று. இதோ தரை, கையால் தொடலாம் போல, வேகமாகப் பின்னே ஓடியது. ஆனால் விமானம் தரையில் படவில்லை. விமானி இலக்குத் தவறி விட்டான் என்று விஷயம் தெரிந்தவர்கள் பிறகு சொன்னார்கள். முடிவில் மோதல் நிகழ்ந்தது. அது எல்லோரையும் உலுக்கியதால் பற்கள் இடித்துக் கொள்வதும் நெறுநெறுப்பதும் கேட்டன. படிப்பாளர் செய்தித்தாளுடன் இருக்கையிலிருந்து துள்ளி, சுதீக்கின் வயிற்றில் வழுக்கை மண்டையால் முட்டி, சாளரத்தில் இடித்துக் கொண்டார், பின்பு விமானத் தரையில் விழுந்தார். இந்த நேரம் முழுவதும் அவர் எவ்வித ஒலியும் செய்யவில்லை. சுற்றும் இருந்தவர்களும் பேசாதிருந்தார்கள். இது சுதீக்குக்கு வியப்பூட்டியது. அவனும் மௌனமாய் இருந்தான். எழுந்தார்கள். முதன் முதலில் சுய நிலைக்கு வந்தவர்கள் சாளரத்துக்கு வெளியே பார்த்து, விமானம் உருளைக் கிழங்கு வயலில் இறங்கி இருப்பதைக் கண்டார்கள். விமானி அறையிலிருந்து ஏங்கிய முகத்துடன் வெளியே வந்த விமானி, இறங்கு வாயிலுக்குப் போனான். ஒருவன் எச்சரிக்கையுடன் அவனிடம் கேட்டான்:

''நாம் உருளைக் கிழங்கில் உட்கார்ந்து விட்டோம் போலிருக்கிறதே?''

''உங்களுக்கே தெரியவில்லையா என்ன?'' என்று பதிலளித்தான் விமானி.

பயம் போய்விட்டது. அதிகக் குதூகலப் பேர்வழிகள் மெதுவாகக் கிண்டல் பேச முயன்றார்கள்.

வழுக்கைப் படிப்பாளர் தம் செயற்கைத் தாடையைத் தேடினார். சுதீக் வாரைக் கழற்றி விட்டுத் தானும் தேடலானான்.

''இதுவா?!'' என்று மகிழ்ச்சியுடன் கூவி, படிப்பாளரிடம் அதைக் கொடுத்தான். அந்த ஆளுடைய வழுக்கைகூட குப்பென்று சிவந்து விட்டது.

''கைகளால் கட்டாயம் தொட்டு ஆக வேண்டி இருந்ததோ?'' என்று பொக்கை வாயால் சீழ்க்கையடித்துக் கூச்சலிட்டார்.

சுதீக் குழப்பம் அடைந்தான்.

''வேறு எதனால் தொடுவதாம்?..''

''இப்போது அதை எங்கே கொதிக்க வைப்பேன்? எங்கே?!''

இதைச் சுதீக்கும் அறிந்திருக்கவில்லை.

''என்னோடு வாருங்களேன், ஊம்?'' என்றான். ''இங்கே என் தமையன் இருக்கிறான். அவன் வீட்டில் கொதிக்க வைப்போம்... நான் அதில் நோயணுக்களை விட்டிருப்பேன் என்று அஞ்சுகிறீர்களோ? என்னிடம் அவை இல்லை.''

படிப்பாளர் சுதீக்கை வியப்புடன் நோக்கி, கூச்சலிடுவதை நிறுத்தினார்.

விமான நிலையத்தில் சுதீக் மனைவிக்குத் தந்தி எழுதினான்:

''தரை இறங்கினோம். பவளக்குறிஞ்சிக் கிளை மார்பின் மேல் விழுந்தது. இனிய குரூஷா, என்னை மறக்காதே. வஸியாத்கா.''

தந்தி அலுவல் மாது கண்டிப்பும் வறட்சியும் உள்ளவள். தந்தியைப் படித்து விட்டு அவள் சொன்னாள்:

''வாசகத்தை மாற்றுங்கள். நீங்கள் வயது வந்தவர், குழந்தை அல்ல.''

''ஏன்?'' என்று கேட்டான் சுதீக். ''அவளுக்குக் கடிதங்களில் நான் எப்போதும் இப்படித்தான் எழுதுவேன். அவள் என் மனைவியாக்கும்!.. நீங்கள் ஒருவேளை நினைத்திருப்பீர்கள்...''

''கடிதங்களில் நீங்கள் என்ன வேண்டுமானாலும் எழுதலாம், ஆனால் தந்தி என்பது அஞ்சல் தொடர்பின் ஒரு வகை. இது வெளிப்படையான வாசகம்.''

சுதீக் மாற்றி எழுதினான்:

''தரை இறங்கினோம். எல்லாம் நலம். வஸியாத்கா.''

தந்தி அலுவல் மாது ''தரை இறங்கினோம்'', ''வஸியாத்கா'' என்ற இரண்டு சொற்களைத் தானே திருத்தினாள். அவை முறையே ''பறந்து வந்து சேர்ந்தோம்'', ''வசீலி'' என்று உருவம் பெற்றன.

'' 'தரை இறங்கினோம்' என்று எழுதி இருக்கிறீர்களே, நீங்கள் என்ன, விண்வெளிப் பயணியா?''

''சரி. சரி. நீங்கள் சொல்கிறபடியே இருக்கட்டும்'' என்றான் சுதீக்.

...திமீத்ரி என்ற அண்ணனும் மூன்று மருமக்களும் தனக்கு உண்டு என்பதைச் சுதீக் அறிந்திருந்தான்... இவர்களோடு மதனி ஒருத்தியும் இருக்க வேண்டும் என்ற எண்ணம்

எதனாலோ அவனுக்கு வரவில்லை. அவன் அவளைப் பார்த்ததே கிடையாது. உண்மையிலோ, அவனுடைய விடுமுறை முழு வதையும் அறவே பாழாக்கினவள் இந்த மதனிதான். என்ன காரணத்தாலோ சுதீக்கைக் கண்ட உடனேயே அவளுக்குப் பிடிக்காமல் போய் விட்டது.

தமையனும் அவனும் மாலையில் வோத்கா குடித்தார் கள். நடுங்கும் குரலில் சுதீக் பாடினான்:

''பாப்ளார்களா...
பாப்ளார்களா...''

மதனி சோபியா இவானவ்னா பக்கத்து அறையிலிருந்து எட்டிப் பார்த்து, ''கூப்பாடு போடாமல் இருக்க முடியாதா? நீங்கள் இருப்பது ரயிலடியில் அல்ல, புரிந்ததா?'' என்று எரிச்சலோடு சொல்லிக் கதவைப் படீரென்று சாத்தினாள்.

அண்ணன் திமீத்ரிக்குச் சங்கடமாய்ப் போய் விட்டது.

''அது... அங்கே குழந்தைகள் தூங்குகிறார்கள். மொத் தத்தில் அவள் நல்லவள்'' என்றான்.

இன்னும் குடித்தார்கள். இளமையையும் தாயாரையும் தகப்பனாரையும் நினைவுபடுத்திக் கொள்ளத் தொடங்கினார் கள்...

''உனக்கு நினைவு இருக்கிறதா?'' என்று மகிழ்ச்சியுடன் கேட்டான் தமையன் திமீத்ரி. ''ஆனால் உனக்கு யாரை நினை விருக்கும்! நீ அப்போது கைக்குழந்தை ஆயிற்றே. உன்னைப் பார்த்துக் கொள்ள என்னை விட்டார்கள். நானோ, உன்னை முத்தமிடத் தொடங்கினேன். ஒரு தரம் உன் உடம்பு நீலம் பாரித்துக் கூடப் போய் விட்டது. அதற்காக எனக்குச் செம்மையாகக் கிடைத்தது. அப்புறம் உன்னைப் பார்த்துக் கொள்ள என்னை விடவில்லை. ஆனாலும் பெரியவர்கள் மறு பக்கம் பார்க்க வேண்டியதுதான் தாமதம், நான் உன் கிட்டே வந்து மறுபடி முத்தங் கொஞ்சினேன். என்ன வழக்கமோ சைத்தானுக்கே வெளிச்சம். எனக்கே மூக்குச் சளியைத் துடைத்துக் கொள்ளத் துப்புக் கிடையாது, அதற்குள்... இந்த... முத்தங் கொஞ்சல்கள்...''

''நினைவு இருக்கிறதா உனக்கு?!'' என்று தானும் ஆரம் பித்தான் சுதீக். ''நீ என்னை ஒரு தரம்...''

''நீங்கள் கூப்பாடு போடுவதை நிறுத்தப் போகிறீர்களா இல்லையா?'' என்று ஒரே எரிச்சலும் புகைச்சலுமாக மறுபடி

கேட்டாள் மதனி. ''உங்கள் மூக்குச் சளிகளையும் முத்தங்களையும் பற்றிக் கேட்பது யாருக்கு வேண்டும்? போதும்— பேசி ஆயிற்று எல்லாம்.''

''வெளியே போவோம் வா'' என்ருன் சுதீக்.

வெளியே போய் வாயிற்படியில் உட்கார்ந்தார்கள்.

''நினைவு இருக்கிறதா?..'' என்று பேச்சைத் தொடர்ந்தான் சுதீக்.

ஆனால் அதற்குள் அண்ணன் திமீத்ரிக்கு என்னவோ நேர்ந்து விட்டது. அவன் அழத் தொடங்கி முழங்காலில் முட்டியால் இடித்துக் கொள்ளத் தலைப்பட்டான்.

''இதுதான் நான் வாழ்கிற வாழ்க்கை! பார்த்தாயா? இவளிடம் எவ்வளவு வன்மம்!.. எவ்வளவு காட்டம்!''

சுதீக் தமையனைத் தேற்றினான்.

''விடு, துயரப்படாதே. வேண்டாம். இவர்கள் கெட்டவர்கள் அல்ல. இவர்கள் பைத்தியங்கள். என்னவளும் இப்படிப்பட்டவள்தான்.''

''அட ஏன் உன்னை இவளுக்குப் பிடிக்கவில்லை?! எதனுல்? இவளுக்கு உன்னைப் பிடிக்கவில்லை, தெரிகிறதா?.. எதனுல்?''

மதனிக்குத் தன்னைப் பிடிக்கவில்லை என்பதை அப்போதுதான் சுதீக் புரிந்து கொண்டான். மெய்யாகவே, என்ன காரணத்தால்?

''எதனுல் என்ருல் நீ பொறுப்புள்ள பதவியில் இல்லை, தலைமை அதிகாரி இல்லை என்பதனுல். எனக்குத் தெரியும் இவளை, இந்த முட்டாளை. பொறுப்புள்ள பதவி வகிப்பவர்களைக் கண்டு மூளை பிசகி விட்டது இவளுக்கு. இவள் மாத்திரம் யாராம்? அலுவலகத்தில் சிற்றுண்டிக் கடைக்காரி, அற்ப வேலை. அங்கே அதிகாரிகளை நிறையப் பார்த்து விட்டு, தொடங்குகிருள் பாட்டை... என்னைக்கூட வெறுக்கிருள், நான் பொறுப்புள்ள பதவியில் இல்லை, கிராமத்தான் என்பதால்.''

''எந்த அலுவலகத்தில் இருக்கிருள்?''

''அதுதான் என்கிறேன்... உலோக... இப்போது எனக்குச் சொல்ல வரவில்லை. அப்படியானுல் எதற்காக வாழ்க்கைப் பட்டாளாம்? அவளுக்குத் தெரியாதா என்ன?''

சுதீக்குக்கும் ரோசம் பொத்துக் கொண்டு வந்து விட்டது.

''மொத்தத்தில் விஷயம் என்ன என்று கேட்கிறேன்'' என்று தமையனிடம் அல்ல, வேறு யாரிடமோ வினவினுன்.

''உங்களுக்குத் தெரியாவிட்டால் சொல்லுகிறேன், அனேக மாகப் பிரபலஸ்தர்கள் எல்லாருமே கிராமத்தவர்கள் தாம். நீங்கள் செய்தித்தாள் படிக்க வேண்டும்!.. பெயர் பெற்றவர் யாரைப் பாருங்கள், கிராமத்தவர், சிறு வயதி லேயே வேலை செய்யத் தொடங்கியவர் என்பது தெரியும்.''

''அட எத்தனை சான்றுகள் காட்டினேன் இவளுக்கு, கிரா மத்தவர்கள் மேலானவர்கள், அகந்தை பிடித்தவர்கள் அல்ல என்று.''

''ஸ்தெபான் வரபியோவை நினைவு இருக்கிறதா உனக்கு? அட உனக்குத் தான் அவனைத் தெரியுமே...''

''தெரியும், தெரியாமல் எப்படி.''

''சாதாரண கிராமத்தவன்தான், பார்த்துக் கொள்ளேன்: சோவியத் யூனியனின் வீரர் பட்டம் பெற்றுன். ஒன்பது டாங்கி களை அழித்தான். பகைவனுடைய டாங்கியைத் த்ன்னுடைய டாங்கியால் நேரே மோதித் தகர்த்தான். இப்போது அவ னுடைய தாயாருக்கு ஆயுட்காலம் பூராவும் மாதம் அறுபது ரூபிள் பென்ஷன் கிடைக்கும். இந்த விவரம் சமீபத்தில் தான் அரசாங்கத்தாருக்குத் தெரிய வந்தது. அவன் தகவல் இல் லாமல் தொலைந்து போய் விட்டதாக எண்ணி இருந்தார் கள்...''

''அப்புறம் இலியா மக்சீமவ்!.. நாங்கள் சேர்ந்து போர் முனைக்குப் போனோம். பார், மூன்று வரிசை புகழ்ப் பட்டம் பெற்று விட்டான். ஆனுல் ஸ்தெபானைப் பற்றி அவளிடம் சொல்லாதே... வேண்டாம்.''

''சரி. பிறகு இந்த இவன்!..''

கிளர்ச்சி அடைந்த சகோதரர்கள் இன்னும் வெகு நேரம் இரைந்து கொண்டிருந்தார்கள். சுதீக் வாயிற்படி அருகாக நடந்தவாறு கைகளை வீசி ஆட்டக்கூடச் செய்தான்.

''கிராமமாம், கேட்டீர்களா!.. அந்தக் காற்று ஒன்றே கோடி பெறுமே! காலையில் சன்னலைத் திறந்ததும் அந்தக் காற்று உடம்பை எல்லாம் குளிப்பாட்டுவது போல வீசும். அதை வேண்டுமானுல் பருகலாமே — அவ்வளவு குளுகுளு வென்று மணக்கும். வகை வகையான புற்களின் மணமும் விதம் விதமான பூக்களின் வாசனையும் அதில் வீசுமே...''

பின்பு அவர்கள் களைத்துப் போனுர்கள்.

''கூரை வேய்ந்து விட்டாய் அல்லவா?'' என்று தம்பி யிடம் தணிவாகக் கேட்டான் தமையன்.

''வேய்ந்து விட்டேன்'' என்று சுதீக்கும் தணிவாகப் பெருமூச்சு விட்டான். தாழ்வாரம் கட்டி இருக்கிறேன். பார்க்க எடுப்பாக இருக்கிறது. மாலையில் தாழ்வாரத்துக்குப் போனால்... என்னென்னவோ கற்பனைகள் தோன்றுகின்றன. அம்மாவும் அப்பாவும் மட்டும் உயிரோடு இருந்தால், நீ குழந்தைகளோடு வந்திருக்கலாம், தாழ்வாரத்தில் எல்லோருமாக உட்கார்ந்து ராஸ்ப்பெர்ரிப் பழங்களுடன் தேநீர் பருகி இருக்கலாம். இந்தத் தடவை ராஸ்ப்பெர்ரிப் பழங்கள் அமோகமாக விளைந்திருக்கின்றன. திமீத்ரி, நீ அவளைக் கோபிக்காதே. இல்லாவிட்டால் அவளுடைய வெறுப்பு அதிகம் ஆகி விடும். நான் எப்படியாவது நைச்சியம் பண்ணிப் பார்க்கிறேன். அவள் மாறி விடுவாள், பார்.''

''அவளும் கிராமத்தவள்தான்!'' என்று தணிந்த குரலில் துயரத்துடன் சொன்னான் திமீத்ரி. ''ஆனால் பார்... குழந்தைகளைச் சித்திரவதை செய்கிறாள், மடைச்சி! பையனைப் பியானோ கற்றுக் கொள்ளச் சொல்லி வதைத்து எடுத்தாள், பெண்ணை ஸ்கேட்டிங் நடன வகுப்பில் சேர்த்திருக்கிறாள். என் நெஞ்சில் உதிரம் கொட்டுகிறது, ஆனால் சொன்னேனோ, உடனே வசவும் திட்டும்.''

''ம்ம்ஹ்!'' என்று பெருமூச்செறிந்த சுதீக் எதனாலோ மீண்டும் கிளர்ச்சி அடைந்தான். ''இந்தச் செய்தித்தாள்களை என்னால் புரிந்து கொள்ளவே முடியவில்லை. எவளோ கடையில் வேலை செய்பவள் பாங்கின்றி நடந்து கொள்கிறாளாம். பிரமாதம்!.. அவள் வீட்டுக்கு வந்த பிறகும் அப்படியேதான் இருக்கிறாள். துன்பத்துக்கெல்லாம் மூல காரணம் இதுதான்! எனக்குப் புரியவில்லை!'' சுதீக்கும் முட்டியால் முழங்காலில் இடித்துக் கொண்டான். ''புரியவில்லை, எதனால் இந்தப் பெண் பிள்ளைகள் கோபக்காரிகள் ஆனார்கள் என்று!''

காலையில் சுதீக் கண் விழித்த போது வீட்டில் ஒருவரும் இல்லை. தமையன் திமீத்ரி வேலைக்குப் போய் விட்டான், மதனியும் அப்படியே. பெரிய குழந்தைகள் வெளி முகப்பில் விளையாடிக் கொண்டிருந்தன. சின்னது குழந்தைகள் இல்லத்தில் கொண்டு விடப்பட்டிருந்தது.

சுதீக் படுக்கையை ஒழுங்குபடுத்தினான், முகங்கை கழுவிக் கொண்டான், பின்பு எண்ணமிடலானான்—மதனியை மகிழ்விப்பதற்கு என்ன செய்யலாம் என்று. அப்போது குழந்தைத் தள்ளு வண்டி அவன் கண்ணில் பட்டது. ''ஆகா, இதில் சித்

திரம், தீட்டுகிறேன்'' என்று தீர்மானித்தான் சுதீக். வீட்டில் அடுப்புக்கு மேல் அவன் தீட்டியிருந்த சித்திரங்களைப் பார்த்து எல்லாரும் ஆச்சரியப்பட்டார்கள். சிறுவர்களின் வண்ணங் களையும் தூரிகையையும் தேடி எடுத்து வேலையில் முனைந் தான். ஒரு மணி நேரத்தில் வேலை முடிந்து விட்டது. குழந்தை வண்டி அடையாளம் காண முடியாதபடி மாறி விட்டது. வண்டியின் மேற்புறத்தில் நாரைகள் முக்கோண வடிவில் கூட்டமாகப் பறப்பதாகத் தீட்டியிருந்தான் சுதீக். கீழ்ப்புறம் வகை வகையான பூச்செடிகள், இளம் புல், இரண்டு சேவல் கள், கோழிக் குஞ்சுகள் ஆகியவற்றை வரைந்திருந்தான்... குழந்தை வண்டியை எல்லாப் புறங்களிலுமிருந்து பார்வை யிட்டான்—கண்கொள்ளாக் காட்சி. குழந்தை வண்டி அல்ல, விளையாட்டுச் சாமான் என்று தோன்றியது. மதனி எவ்வளவு களிப்பும் வியப்பும் அடைவாள் என்று எண்ணிப் பார்த்துப் புன்முறுவல் பூத்தான்.

''நீ என்னடா என்றால், கிராமத்தான் என்று பழிக்கிறாய். விசித்திரமான பெண்பிள்ளை நீ. உன் குழந்தை செப்பில் வைத்தது போல் இருக்கும்'' என்று மனதுக்குள் சொல்லிக் கொண்டான். மதனியைச் சமாதானப்படுத்த விரும்பினான்.

பகல் முழுவதும் சுதீக் நகரத்தைச் சுற்றி வந்தான். கடை களின் காட்சிப் பெட்டிகளைப் பார்வையிட்டான். மருமகனுக்கு ஒரு படகு வாங்கினான். அருமையான விசைப்படகு, வெள்ளை யானது, விளக்கு உள்ளது. ''இதிலும் படங்கள் தீட்டு வேன்'' என்று நினைத்துக் கொண்டான்.

மாலை ஆறு மணி வாக்கில் சுதீக் தமையன் வீட்டுக்குத் திரும்பினான். வாயிற்படி ஏறியதும் தமையனும் மதனியும் வாய்ச் சண்டை போடுவது அவன் காதில் பட்டது. உண்மை யில் மதனிதான் சண்டை போட்டுக் கொண்டிருந்தாள். தமையன் திமீத்ரி திரும்பத் திரும்ப ஒன்றையே சொல்லிக் கொண்டிருந்தான்:

''அட என்ன வந்து விட்டது!.. அட சரிதான்... சோபியா... அட சரி விடு என்கிறேன்...''

''இந்த மடையன் நாளைக்கே இங்கிருந்து போய் விட வேண்டும்!'' என்று கத்தினாள் சோபியா இவானவ்னா. ''நாளைக்கே போய் விடட்டும்!''

''அட சரிதான் விடேன்... சோபியா...''

''சரி இல்லே! சரி இல்லே! அவன் காத்திருக்க வேண்டாம்· அவனுடைய பெட்டியை எக்கேடும் கெட்டுப் போகட்டும் என்று எறிந்து விடுவேன், அவ்வளவுதான்!''

சுதீக் அவசர அவசரமாக வாயிலிலிருந்து இறங்கி விட்டான்... மேற்கொண்டு என்ன செய்வது என்று அவனுக்குத் தெரியவில்லே. மறுபடி அவனுக்கு வேதனே உண்டாயிற்று. யாரேனும் அவனே வெறுத்த போது அவனுக்குக் கொடிய வேதனே உண்டாயிற்று, பயமாய் இருந்தது. இனி ஆட்டம் தீர்ந்தது, எதற்காக வாழ வேண்டும் என்று தோன்றியது. தன்னே வெறுப்பவர்கள் அல்லது கேலி செய்பவர்களிடமிருந்து விலகித் தொலேவில் எங்கேனும் போய் விட விருப்பம் உண்டாயிற்று.

''எதற்காகத்தான் நான் இப்படி இருக்கிறேன்?'' என்று சவுக்கையில் உட்கார்ந்து கைப்புடன் கிசுகிசுத்தான். ''நாளுகவே ஊகித்திருக்க வேண்டும்—இவளுக்குப் புரியாது, மக்கள் படைப்புக் கலே இவளுக்கு விளங்காது என்பதை.''

இருட்டும் வரை சவுக்கையில் உட்கார்ந்திருந்தான். நெஞ்சு ஓயாமல் வலித்தது. பின்பு அண்ணன் திமீத்ரி வந்தான். அவன் ஆச்சரியப்படவில்லே. தம்பி வசீலி வெகு நேரமாகச் சவுக்கையில் உட்கார்ந்திருப்பதை அறிந்தவன் போல.

''பார்த்தாயா...'' என்ருன். ''மறுபடி காட்டுக் கத்தல். குழந்தை வண்டியை... இப்படிச் செய்திருக்க வேண்டாம்.''

''அவளுக்குப் பிடிக்கும் என்று நினேத்தேன். நான் போய் விடுகிறேன், அண்ணு.''

தமையன் திமீத்ரி பெருமூச்செறிந்தான்... ஒன்றுமே சொல்லவில்லே.

சுதீக் ஊர் திரும்பிய போது வெதுவெதுப்பான அடைமழை பெய்து கொண்டிருந்தது. சுதீக் பஸ்ஸிலிருந்து இறங்கி, புதிய பூட்சுகளேக் கழற்றி விட்டு வெப்பமுள்ள ஈர மண் மீது வெறுங்கால்களோடு ஓடினுன்—ஒரு கையில் பெட்டியும் மறு கையில் பூட்சுகளுமாக. துள்ளிக் குதித்துக் கொண்டு உரக்கப் பாடினுன்:

''பாப்ளார்களா...''

வானத்தின் ஒரு விளிம்பு அதற்குள் தெளிந்து இளநீலம் ஆயிற்று. சூரியன் அருகே எங்கோ இருந்தது. மழை தணிந்து

குட்டங்களில் பெருத் துளிகளாக விழுந்தது. அவற்றில் குமிழிகள் கிளம்பி வெடித்தன.

ஓர் இடத்தில் சுதீக் சறுக்கி விழத் தெரிந்தான்.

...அவனுடைய முழுப் பெயர் வசீலி யெகோரிச் கினியா ஸெவ். அவனுக்கு முப்பத்தொன்பது வயது ஆகி இருந்தது. அவன் கிராமத்தில் திரைப்படத் தொழில் விஜேஞை வேலை செய்து வந்தான். துப்பறிபவர்கள் மேலும் நாய்கள் மேலும் அவனுக்கு ஒரே மோகம். சிறுவனுய் இருக்கையில் ஒற்றன் ஆக வேண்டும் என்று கனவு கண்டு வந்தான்.

பரிசு

உழவு இயந்திரங்களின் உதிரிப் பகுதிகள் வாங்குவதற்காக நகரத்துக்குப் போனார்கள்... அங்கே கடையில் மாதர்களுக்கான நெடுஞ்சோடுகளை செர்கேய் துகானின் கண்டான். அக்கணமே அமைதியை இழந்தான். மனைவிக்கு அம்மாதிரி சோடுகள் வாங்க ஆசை உண்டாயிற்று. ஒரு தரமாவது அவளுக்கு நல்ல பரிசு அளிக்க வேண்டும் என்று நினைத்தான். முக்கியமானது அழகான பரிசு... இந்த மாதிரி சோடுகளை அவள் கனவில் கூட அணிந்தது கிடையாது.

செர்கேய் நெடுஞ்சோடுகளை நீண்ட நேரம் வியந்து நோக்கிக் கொண்டிருந்தான். பின்பு அவை வைத்திருந்த காட்சிப் பெட்டியின் கண்ணாடியை நகங்களால் தட்டி, மகிழ்ச்சி ததும்ப வினவினான்:

''இந்த மாதிரித் தோல் குழாய்கள் என்ன விலை?''

''எந்தத் தோல் குழாய்கள்?'' என்று விளங்காமல் கேட்டாள் விற்பனைக்காரி.

''இதோ இருக்கின்றனவே... நெடுஞ்சோடுகளைச் சொல்கிறேன்.''

''எதோ மாதிரித் தோல் குழாய்களின் விலை... அறுபத்தைந்து ரூபிள்.''

''அட உங்க!..'' என்று ஒரு வசவு வார்த்தையை அனேகமாகக் கத்த வாய் எடுத்த செர்கேய் நீட்டி மழுப்பினான்:

''ஊம்... கடிக்கிற சோடுகள்தான்.''

விற்பனை செய்யும் பெண் அவனை இகழ்ச்சியுடன் பார்த்தாள். விந்தையான பேர்வழிகள் இந்த விற்பனைக்காரிகள். ஒரு கிலோ சாதாரணத் தினையை விற்கும் போது மறந்து போன கடனைத் திருப்பிக் கொடுப்பவர்கள் போல் முகத்தை வைத்துக் கொள்வார்கள்.

அட எக்கேடும் கெட்டுப் போகட்டும் இந்த விற்பனைக்காரிகள். அறுபத்தைந்து ரூபிள் செர்கேயிடம் இருந்தது. எழுபத்தைந்துகூட இருந்தது. ஆனாலும்... அவன் வெளியே போய், சிகரெட்டு பற்ற வைத்துக் கொண்டு எண்ணமிடலானான். மொத்தத்தில், உள்ளதைச் சொன்னால், இந்த மாதிரி சோடுகள் கிராமத்துச் சேற்றுக்கு ஏற்றவை அல்லதான், ஆனால் வீட்டுக்காரி இவற்றைப் பேணி வைத்துக்

கொள்வாள்... மாதத்தில் ஒரு தரம் எங்காவது போவதற்கு இவற்றைப் போட்டுக் கொள்வாள். அதுவும் சேற்றில் அல்ல, உலர்ந்த தரையில் நடப்பதற்குத்தான் பயன்படுத்துவாள். ஆனால் எவ்வளவு சந்தோஷப்படுவாள்! அவன் பெட்டியி லிருந்து இந்த நெடுஞ்சோடுகளை எடுத்து, ''இந்தா, போட்டுக் கொள்'' என்று சொல்லும் கணம், அடேயப்பா, எவ்வளவு விலைமதிப்புள்ளது!

கடைக்கு அருகாமையில் இருந்த ஸ்டாலுக்குப் போய், பீர் வாங்குவதற்காக வரிசையில் நின்று கொண்டான் செர் கேய்.

இந்த நெடுஞ்சோடுகளைக் கண்டதும் மனைவியின் கண்கள் எப்படிப் பளிச்சிடும் என்று அவன் எண்ணிப் பார்த்தான். சில வேளைகளில் அவள் சின்னப் பெண் போலக் கண்ணீர் வரும் அளவுக்கு ஆனந்தப்படுவதுண்டு. மொத்தத்தில் அவள் நல்லவள். ஆண்களாகிய நம்மோடு வாழ்வதற்கு அளவில் லாத பொறுமை வேண்டும் என்று நினைத்துக் கொண்டான் செர்கேய். நம்முடைய பாழாய்ப் போன குடிப் பழக்கத்தைச் சகிப்பதே அரும் பாடு ஆயிற்றே. போதாக் குறைக்குக் குழந்தை களைப் பராமரிப்பதும் வீட்டுக் காரியங்களை நிர்வகிப்பதும் வேறு... இல்லை, இவ்வளவு பாரத்தை இந்த மாதர்களால் தாங்க முடிகிறது என்றால் இவர்கள் அபாரப் பொறுமை சாலிகள்தாம். நாமாவது ஏதேனும் ஒரு வகையில் ஆறு தல் பெற முடிகிறது. குடிக்கும் போது நெஞ்சுச் சுமை இறங்கி விடுகிறது. அவர்களோ, காலை முதல் நள்ளிரவு வரை யில் சாவி கொடுத்த இயந்திரங்கள் போல உழைக்கிறார்கள்.

வரிசை மெதுவாக நகர்ந்தது. ஆட்கள் முடிவில்லாமல் ''திரும்பத் திரும்ப வந்தார்கள்''. செர்கேய் எண்ணத்தைத் தொடர்ந்தான்.

மனைவி வெறுங் காலோடு நடமாடவில்லைதான். வீணாகப் பஞ்சப் பாட்டுப் பாடுவானேன்? கிராமத்தில் எல்லாரையும் போலவே அவளும் நடக்கிறாள்... இந்த நெடுஞ்சோடுகள் அழகானவை தாம், ஆனால் விலை அவனுக்குக் கட்டி வராது. வாங்கிக் கொண்டு போனால், முதலில் அவளே கோபித்துக் கொள்வாள். ''இவ்வளவு கிராக்கியானவை எனக்கு எதற் காக? பெண்களுக்கு ஏதாவது வாங்கி வந்திருக்கலாமே, மேல் கோட்டுகள் மாதிரி—குளிர் காலம் நெருங்குகிறது'' என்பாள்.

முடிவில் செர்கேய் இரண்டு குவளை பீர் வாங்கிக் கொண்டு ஒரு புறமாக ஒதுங்கி, ஒவ்வொரு மடக்காக மெதுவாய்ப் பருகலானான். சிந்தனை தொடர்ந்தது.

இப்படியே வாழ்ந்து வருகிறேன், நாற்பத்தைந்து வயது ஆகி விட்டது. எப்போதாவது நன்றாக, சிரமம் இல்லாமல் வாழலாம் என்று ஓயாமல் எண்ணிக் கொண்டிருக்கிறேன். நேரமோ கழிந்து கொண்டு போகிறது... கட்டாயமாகக் கிடக்க வேண்டிய கிடங்குக்கு இப்படியே கிட்டப் போய் விடுவேன்—வாழ்நாள் முழுவதும் எதையோ எதிர்பார்த்துக் கொண்டிருந்து விட்டு. எந்த இழவுக்காக எதிர்பார்க்க வேண்டும், செய்ய முடிகிற சந்தோஷக் காரியங்களை ஏன் செய்யக் கூடாது என்ற கேள்வி எழுகிறது. இதையே பாரேன்: பணம் இருக்கிறது. அசாதாரணமான நெடுஞ்சோடுகள் கடையில் வைத்திருக்கின்றன. வாங்கு, ஒரு நபரைச் சந்தோஷப் படுத்து! இது மாதிரி சந்தர்ப்பம் மறுபடி வாய்க்காமலே போகலாம். பெண்கள் இன்னும் மணப் பெண்கள் ஆகிவிட வில்லை. கொஞ்சம் முன்னேயோ பின்னேயோ, போட்டுக் கொள்ளலாம், நைந்து போகும் வரை. இந்த சந்தர்ப்பமோ வாழ்க்கையில் ஒரு தரமே வாய்க்கக் கூடியது...

செர்கேய் கடைக்குப் போனான்.

''எங்கே, அதுகளை இப்படிக் கொடு, பார்க்கலாம்'' என்று கேட்டான்.

''என்ன?'',

''நெடுஞ்சோடுகளை.''

''அவைகளை என்ன பார்க்க வேண்டி இருக்கிறது? எந்த அளவு வேண்டும்?''

''நான் கண்மதிப்பால் தெரிந்து கொள்வேன். அளவு என்னவோ, எனக்குத் தெரியாது.''

''வாங்க வருகிறவருக்கு அளவு என்ன என்பது தெரியா தாம். சோடுகளைப் போட்டு அளவு பார்க்க வேண்டும். இவை செருப்புக்கள் அல்ல.''

''செருப்புக்கள் இல்லை என்பதை நானும் காண்கிறேன். விலையைப் பார்த்தாலே தெரிகிறதே, ஹெஹ்ஹே...''

''அவைகளைப் பார்க்கத் தேவையில்லை.''

''நான் வாங்க விரும்பினாலோ?''

''அளவுகூடத் தெரியாத போது எப்படி வாங்குவீராம்?''

''உங்களுக்கு என்ன வந்தது? நான் பார்க்க விரும்பு கிறேன்...''

''அவைகளைப் பார்க்கத் தேவையில்லை. ஒவ்வொருவரும் பார்க்கக் கிளம்பினால்...

''இதோ பாருங்கள், பெண்மணி'' என்ற செர்கேய் கோபங் கொண்டான். ''உங்கள் உள்ளாடையைக் காட்டும்படி நான் கேட்கவில்லை, ஏனென்றால் அதைப் பார்க்க எனக்கு விருப்பம் இல்லை. காட்சிப் பெட்டியில் இருக்கும் நெடுஞ் சோடுகளைக் காட்டும்படிக் கேட்கிறேன்'' என்றான்.

''நீங்கள் இங்கே போக்கிரித்தனம் பண்ணுகிறீர்கள், சொல்லி விட்டேன்! கண் தலை தெரியாமல் குடித்து விட்டு ஆட்டம் போடுகிறீர்கள்...''

''என்ன ஆட்டம் போடுகிறீர்கள்? யார் ஆட்டம் போடுகிறீர்கள்? நீங்கள் எனக்குக் குடிக்கக் கொடுத்தீர்களா என்ன, இப்படிப் பேசுகிறீர்கள்?''

விற்பனைக்காரி ஒரு நெடுஞ்சோட்டை அவனிடம் எறிந்தாள். செர்கேய் அதை எடுத்துத் திருப்பினான், தோலை வளைத்து நெளித்துப் பார்த்தான், மெருகிட்டுப் பளபளத்த அடிப் புறத்தை நகங்களால் சுண்டிப் பார்த்தான்... பின்பு சோட்டுக்குள் கையைச் சாக்கிரதையாக விட்டான்...

''இதிலே கால் சுகமாகத் தூங்கும்'' என்று மகிழ்ச்சியுடன் எண்ணிக் கொண்டான்.

''வடிவாக அறுபத்தைந்து ரூபிளா?'' என்று கேட்டான்.

விற்பனைக்காரி பதில் பேசாமல், அவனை வன்மத்துடன் நோக்கினாள்.

செர்கேய் வியப்பு அடைந்தான். ''அட கடவுளே! ஒரே வெறுப்பைக் கக்குகிறாள். எதற்காக?'' என்று எண்ணிக் கொண்டான்.

விற்பனைக்காரியின் மனத்தை விரைவில் கனிவிக்க வேண்டும், தான் வீணாக அவளுடைய கவனத்தைத் திருப்பவில்லை, சோடுகளை வாங்கப் போகிறான் என்று காட்ட வேண்டும் என்பதற்காகப் போலும், ''எடுத்துக் கொள்கிறேன். பணத்தை உங்களிடம் கொடுக்க வேண்டுமா, காசுக் கணக்கரிடமா?'' என்று கேட்டான்.

விற்பனைக்காரி அவனை விடாது பார்த்துக் கொண்டே, ''காசறையில்'' என்று தணிந்த குரலில் சொன்னாள்.

''சரியாக அறுபத்தைந்தா அல்லது கோப்பெக்குகளுடனா?''

விற்பனைக்காரி அவனை உறுத்து நோக்கிய வண்ணமாய் இருந்தாள். செர்கேய் சற்றுக் கூர்ந்து பார்த்த போது அவளுடைய விழிகளில் அப்பட்டமான வெறுப்பு அனல் வீசக் கண்டான். மிரண்டு போனான்... பேசாமல் சோட்டை வைத்து விட்டுக் கணக்கறைக்குப் போனான். ''இவளுக்கு என்ன, மூளை பிசகி விட்டதா, இப்படி வன்மம் பாராட்டுகிறாளே? இந்த மாதிரிச் சிடுசிடுத்தால் அற்பாயுசில் மண்டையைப் போட நேரலாமே'' என்று நினைத்துக் கொண்டான்.

விலை துல்லியமாக அறுபத்தைந்து ரூபிள், சில்லறை இல்லாமல் என்று தெரிய வந்தது. செர்கேய் ரசீதை விற்பனைக் காரியிடம் கொடுத்தான். அவளுடைய விழிகளை நோக்கத் தயங்கி, ஒட்டிய மார்பகத்துக்கு மேலே பார்த்தான். ''நோயாளி போலிருக்கிறது'' என்று இரக்கப்பட்டான்.

விற்பனைக்காரி ரசீதை வாங்கிக் கொள்ளவில்லை. செர்கேய் நிமிர்ந்து பார்த்தான்... இப்போது விற்பனைக்காரியின் கண்களில் வெறுப்பும் அதோடு விந்தையான ஒரு திருப்தியும் காணப்பட்டன.

''சோடுகளைக் கொடுங்கள்.''

''சரி பார்க்கும் இடத்தில்'' என்று தணிந்த குரலில் சொன்னாள் விற்பனைக்காரி.

''எங்கே அது?'' என்று தானும் தணிந்த குரலில் கேட்டான் செர்கேய். இந்த வறண்ட விற்பனைக்காரியைத் தானும் வெறுக்கத் தொடங்குவதை அவன் உணர்ந்தான்.

விற்பனைக்காரி பேசாமல் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''சரி பார்க்கும் இடம் எங்கேயாம்?'' என்று அவளுடைய விழிகளை நேரே நோக்கி முறுவலித்தான் செர்கேய். ''ஊம்? நீ என் மேல் கண்ணோட்டாதே அருமைப் பெண்ணே, கண்ணோட்டாதே, நான் மணமானவன். என் மேல் கண்டதும் காதல் ஏற்பட முடியும் என்பது எனக்குத் தெரியும், ஆனால்... நான் என்ன செய்வேன்? பொறுத்துக் கொள், வேறு என்ன செய்வாய்? சொல்லு சற்றே, சரி பார்க்கும் இடம் எங்கே?''

விற்பனைக்காரியின் வாய்கூடத் தானாகவே திறந்து கொண்டது... இப்படி நடக்கும் என்று அவள் எதிர்பார்க்கவில்லை.

செர்கேய் சரி பார்க்கும் இடத்தைத் தேடக் கிளம்பினான்.

''ஓ-ஓ!'' என்று தன் மீதே ஆச்சரியப்பட்டான். ''எங்கிருந்து இது வந்தது? ஒரு பெண்ணை இப்படிப் பிய்த்துப் பிடுங்க வேண்டி இருந்ததே? ஆனால் இனி அவள் வீணாக வம்பு

செய்ய மாட்டாள். இல்லாவிட்டால் வன்மமே உருவாக இருந்தாள்.''

சரி பார்க்கும் இடத்தில் சோடுகள் அவனிடம் கொடுக்கப்பட்டன. அவன் வீடு செல்வதற்காகத் தன்னவர்கள் இருந்த லாரி நிலையத்துக்குப் போனான். (பொறி வினைஞனும் இன்னும் இரண்டு காரோட்டிகளுமாக அவர்கள் தங்கள் லாரிகளில் வந்திருந்தார்கள்.)

செர்கேய் நிலைய அலுவலறைக்குப் போனான். எல்லோரும் தன்னுடைய அட்டைப் பெட்டி மேல் அக்கணமே தாவி அதில் என்ன இருக்கிறது என்று ஆவலுடன் பார்ப்பார்கள் என நினைத்தான். உண்மையிலோ, யாருமே செர்கேயைக் கவனிக்கக் கூட இல்லை. எப்போதும் போலவே அவர்கள் விவாதித்துக் கொண்டிருந்தார்கள். தெருவில் இள வயதினனை பாதிரியைப் பார்த்தார்களாம், அவன் என்ன சம்பளம் வாங்குகிறான் என்று இப்போது வாதாடிக் கொண்டிருந்தார்கள். எல்லாரையும் விட அதிகமாகக் கூச்சலிட்டுக் கொண்டிருந்தான் வீத்கா கிபியக்கோவ். இவன் அம்மைத் தழும்புகள் இட்ட வெளிறிய முகத்தினன், ஏக்கம் ததும்பும் பெரிய விழிகள் கொண்டவன். அவன் தொண்டையைக் கிழித்துக் கொண்டு கூப்பாடு போட்டு எல்லோரையும் அவமதித்த போது கூட அவனுடைய கண்கள் ஏக்கமும் அறிவுக் கூர்மையும் கொண்டு விளங்கின. நம்பிக்கைக்கு இடமற்ற துயரத்துடன் அவை வீத்காவையே நோக்குபவை போலக் காணப்பட்டன.

''இந்தப் பாதிரியிடம் சொந்த 'வோல்கா' மோட்டார் இருப்பது உனக்குத் தெரியுமா?'' என்று கத்தினான் ரஷ்பீல் (வீத்காவைத் தோழர்கள் ''ரஷ்பீல்'' (''அரம்'') என்று அழைத்தார்கள்). ''இந்தப் பாதிரிகள் படிக்கும் போது பெறும் பயிற்சிப்படி நூற்றைம்பது ரூபிள், புரிந்ததா? பயிற்-சிப்-படி!''

''பாதிரிகளிடம் சொந்தக் கார்கள் உண்டு என்பது சரி, ஆனால் இளைஞர்களிடம் கிடையாது. என்னிடம் என்ன கதைக்கிறாய்? சொந்தக் கார்கள் வைத்திருப்பவர்கள் இந்த இவர்கள்... அதாவது அப்போஸ்தலர்கள், இல்லை, இல்லை, அப்போஸ்தலர்கள் அல்ல, வந்து, இவர்கள் இருக்கிறார்களே... அவர்கள் பெயர் என்ன?..''

''புரிந்ததா? சொந்த 'வோல்கா' வைத்திருப்பவர்கள்

அப்போஸ்தலர்களாம்! சரியான உலக்கைக் கழுந்து அப்பா! நீயே தான் அப்போஸ்தலன்!''

''நூற்றைம்பது ரூபிள் பயிற்சிப்படியா? அப்படியானல் சம்பளம் எத்தனை ரூபிள்?''

''இல்லாவிட்டால் நீ என்ன நினைக்கிருய்? அவன் சக்காத் துக்குத் துன்பப்படுவான் என்ரு? இந்தா! ஐந்நூறு ரூபிள் வேண்டுமா?''

''அவன் மத நம்பிக்கை உள்ளவனுக இருக்க வேண்டும்.''

செர்கேயால் மறுப்புக் கூற முடியுந்தான், ஆனுல் அவன் விவாதத்தில் தலையிட விரும்பவில்லை. இளம் பாதிரிக்கு ஐந் நூறு ரூபிள் சம்பளம் என்பது அதிகம். ஆனுல் இப்போது இதைப் பற்றி விவாதிப்பது... வேண்டாம், செர்கேய் சோடு களைக் காட்ட ஆசைப்பட்டான். அவற்றை எடுத்துப் பார்க்க லானுன். பாதிரியைப் பற்றிப் பேசுவதை எல்லோரும் இதோ நிறுத்தி விடுவார்கள்... மௌனமாகி விடுவார்கள் என்று நினைத்தான். ஆனுல் அவர்கள் பேச்சை நிறுத்தவில்லை. ஒரு பார்வை பார்த்ததோடு விட்டு விட்டார்கள். ஒருவன் மட் டுமே காட்டு என்று கையை நீட்டினுன். செர்கேய் சோட்டைக் கொடுத்தான். காரோட்டி (செர்கேயுக்குத் தெரியாதவன்) தோலை வளைத்து நெளித்துப் பார்த்தான், இரும்பு நகங் களால் அடிப் பாகத்தைச் சுண்டினுன்... பின்பு தூய வெண்மையும் மென்மையும் உள்ள உட்புறத்தில்... அழுக்குக் கையை நுழைத்தான். செர்கேய் சோட்டைப் பிடுங்கிக் கொண்டான்.

''எங்கே நுழைக்கிருய் உன் உருளைக் கட்டையை?''

காரோட்டி வாய்விட்டுச் சிரித்தான்.

''இது யாருக்கு?''

''வீட்டுக்காரிக்கு.''

அப்போதுதான் எல்லோரும் பேச்சை நிறுத்தினுர்கள்.

''யாருக்கு?'' என்று கேட்டான் ரஷ்பீல்.

''கிளாவாவுக்கு.''

''எங்கே, பார்ப்போம்?''

சோடு ஒவ்வொரு கையாக மாறியது. எல்லோரும் குழல் பகுதியைக் கசக்கினுர்கள், அடிப் புறத்தைச் சுண்டினுர்கள்... உள்ளே கை விடத் தயங்கினுர்கள். ஆனுல் குழல் பகுதியை அகற்றி வெண் தூவி அடர்ந்த உட்புறத்தில் பார்வை செலுத் தினுர்கள். ஒருவன் எதற்காகவோ உள்ளே ஊதினுன். முன்பு

உணர்ந்து அறியாத பெருமிதத்தை செர்கேய் உணர்ந்தான்.
''இம்மாதிரி சோடுகள் என்ன விலை?''
''அறுபத்தைந்து.''
எல்லோரும் விளங்காமையுடன் செர்கேயைப் பார்த்தார்கள். செர்கேய் சற்றுக் குழப்பம் அடைந்தான்.
''உனக்கு என்ன, பித்தேறி விட்டதா?''
செர்கேய் ரஷ்பீலிடமிருந்து சோட்டை வாங்கிக் கொண்டான்.
''இதோ!'' என்று கூவினான் ரஷ்பீல். ''நல்ல ஆளப்பா நீ செர்கேய்! இவை அவளுக்கு எதற்கு?''
''போட்டுக் கொள்ளத்தான்.''
செர்கேய் அமைதியாக, தன்னம்பிக்கையுடன் இருக்க விரும்பினான். ஆனால் அவன் உள்ளம் துணுக்குற்றது. மட்டித்தனமான ஓர் எண்ணம் விடாது எழுந்தது: ''ஸ்கூட்டர் விலையில் பாதி, ஸ்கூட்டர் விலையில் பாதி.'' அறுபத்தைந்து ரூபிள் ஸ்கூட்டர் விலையில் பாதி அல்ல என்று அவன் அறிந்திருந்த போதிலும் ''ஸ்கூட்டர் விலையில் பாதி'' என்ற எண்ணம் விடாப்பிடியாகத் தோன்றிக் கொண்டிருந்தது.
''இந்த மாதிரி நெடுஞ்சோடுகள் வாங்கும்படி அவள் உன்னிடம் சொன்னாளா?''
''அவள் கேட்டாளா என்பது எதற்காக? நானே வாங்கினேன், அவ்வளவுதான்.''
''இவற்றைப் போட்டுக் கொண்டு எங்கே போவாள்?'' என்று செர்கேயை மகிழ்ச்சியுடன் வதைத்தார்கள் தோழர்கள். ''முழங்கால் வரையில் சேறு, அங்கே நடக்க அறுபத்தைந்து ரூபிள் சோடுகள் வாங்கி இருக்கிறான் பார்.''
''இவை பனிக் கால சோடுகள்!''
''பனிக் காலத்தில் இவற்றை மாட்டிக் கொண்டு எங்கே போவதாம்?''
''தவிரவும், இது நகரப் பெண் காலுக்கு ஏற்றது. கிளாவாவின் கால் இதில் நுழையவே நுழையாது... அவளுடைய கால் அளவு என்ன? இது அவளுடைய விரலுக்குத்தான் போதும்.''
''அவள் போட்டுக் கொள்வது எந்த அளவு சோடு?''
''அட போங்களடா!..'' என்று முடிவில் எரிந்து விழுந்தான் செர்கேய். ''நீங்கள் எதற்காகத் தொல்லைப்படுகிறீர்கள்?''

அவர்கள் கெக்கலித்தார்கள்.

''வருத்தமாய் இருக்கிறது அப்பா, செர்கேய்! இந்த அறுபத்தைந்து ரூபிள் உனக்கு வழியில் கிடைக்கவில்லையே.''

''நான் உழைத்துச் சம்பாதித்தேன், விரும்பிய விதத்தில் செலவழித்தேன். வீணுகச் சளசளப்பானேன்?''

''அவள் ஒருவேளை ரப்பர் நெடுஞ்சோடுகள் வாங்கி வரச் சொன்னுளோ?''

ரப்பர்... செர்கேயுக்கு ஒரேயடியாக எரிச்சல் மண்டியது.

''நீங்கள் பாதிரியைப் பற்றியே அரட்டை அடித்துத் தொலையுங்கள், அதுவே மேல். ஆமாம், அவனுக்கு என்ன தான் சம்பளம் கிடைக்கிறது?''

''உன்னை விட அதிகம்.''

''என்ன ஆட்களப்பா... உட்கார்ந்து பிறத்தியார் பணத்தைக் கணக்கிடுகிருர்கள், வெட்டிப் பயல்கள்.'' செர்கேய் எழுந்தான். ''மேற்கொண்டு செய்வதற்கு வேலை இல்லையா என்ன?'' என்ருன்.

''நீ எதற்காகச் சிடுசிடுக்கிருய்? அசட்டுத்தனம் செய்தாய், உனக்கு அதைச் சொன்னேம். இப்படிப் பதற்றப்பட வேண்டாம்...''

''நான் பதற்றப்படவே இல்லை. ஆனுல் எனக்காக நீ ஏன் வருத்தப்படுகிருயாம்? ஆளைப் பாரப்பா, பெரிதாகக் கவலைப் படுகிருன்! இவனிடம் நான் கடன் வாங்கி இருந்தால், அல்லது வேறு ஏதேனும் என்ருலாவது...''

''முட்டாள்களை அமைதியாகப் பார்த்துக் கொண்டிருக்க என்னுல் முடியாது, அதனுல் தான் கவலைப்படுகிறேன். அவர்கள் மேல் எனக்கு இரக்கம் உண்டாகிறது...''

''இரக்கம் உண்டாகிறதாம் பெரியவருக்கு!''

இன்னும் சிறிது நேரம் இப்படி வம்பு அடித்த பிறகு வீட்டுக்குத் திரும்பினுர்கள்.

செர்கேயுடன் ஒரே லாரியில் வந்த பொறி வினைஞன் அவன் மேல் கடைசித் தாக்கு தொடுத்தான்.

''வீட்டுக்காரி உன்னிடம் எதற்காகப் பணம் கொடுத்தாள்?'' என்று கேட்டான். வஞ்சம் இல்லாமல், அனுதாபத்தோடு வினவினுன். ''வேறு எதற்காகவாவதா?''

பொறி வினைஞனை செர்கேய் மதித்தான், ஆகையால் அவனைத் திட்டவில்லை.

''எதற்காகவும் இல்லை. இந்தப் பேச்சை விடு.''

அவர்கள் மாலையில் கிராமத்தை அடைந்தார்கள்.

செர்கேய் யாரிடமும் சொல்லிக் கொள்ளவில்லை... எல்லோரோடும் சேர்ந்து போகாமல் பிரிந்து தனியே வீட்டுக்குச் சென்றான்.

கிளாவாவும் பெண்களும் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள்.

''ஏன் இவ்வளவு நேரம்?'' என்று கேட்டாள் கிளாவா. ''ராத்திரி அங்கே தங்குவீர்கள் என்று நினைத்தேன்.''

''இயந்திரப் பகுதிகளை வாங்கி லாரி நிலையம் சேர்ப்பதற்கு நேரம் ஆயிற்று... அவைகளை வட்டாரவாரியாகப் பகிர்ந்து கொடுப்பதில் வேறு நேரம் கழிந்தது...''

''அப்பா, நீ ஒன்றும் வாங்கவில்லையா?'' என்று கேட்டாள் மூத்த பெண் குருஷா.

''என்ன?'' கிளாவா முகத்தைச் சுளித்தால், ''விலை ரொம்ப அதிகம், இந்த நெடுஞ்சோடுகளுக்குப் பதில் வேறு எதையாவது வாங்கி இருந்தால் மேலாய் இருக்குமே'' என்றால்... இவற்றைக் கிணற்றில் போட்டு விடுவது என்று வீட்டுக்கு வரும் வழியில் செர்கேய் முடிவு செய்திருந்தான்.

''வாங்கினேன்.''

மூவரும் உணவு மேசையிலிருந்து அவன் பக்கம் திரும்பினார்கள். பார்த்தார்கள். ''வாங்கினேன்'' என்று அவன் சொன்ன விதத்திலிருந்து அவன் வாங்கியது நான்கு ரூபிள் பெறும் தலைக்குட்டையோ இறைச்சி அரைக்கும் இயந்திரமோ அல்ல என்பது தெளிவாய் இருந்தது. ஆகவே அதன் பக்கம் திரும்பி... எதிர்பார்த்தார்கள்.

''அதோ, பெட்டியில் இருக்கிறது.'' செர்கேய் நாற்காலியில் உட்கார்ந்து சிகரெட்டுக்காகப் பைக்குள் கை விட்டான். பதற்றத்தினால் தன் விரல்கள் நடுங்குவதைக் கவனித்தான்.

கிளாவா பெட்டியிலிருந்து அட்டைப் பெட்டியை எடுத்தாள். அட்டைப் பெட்டியிலிருந்து வெளியே தெரிந்தன நெடுஞ்சோடுகள்... மின் விளக்கின் ஒளியில் அவை முன்னை விட அழகாக இருந்தன. அவை பெட்டியில் சிரிப்பவை போலக் காணப்பட்டன. பெண்கள் சாப்பாட்டு மேசையிலிருந்து தாவினார்கள்... ஆகாகா, ஓகோகோ என்று வியந்து பாராட்டினார்கள்.

''அப்படியே எனக்குப் பொருத்தமானவை! அட என் அப்பனே!.. ஆமாம், இவை யாருக்கு?''

''உனக்குத்தான், வேறு யாருக்கு?''

''அப்படியே எனக்குப் பொருத்தமானவை!..'' கிளாவா கட்டிலில் உட்கார்ந்தாள், கட்டில் கிறீச்சிட்டது... உழத்தியின் வலிய காலில் துணிவுடன் ஏறிற்று நகர நெடுஞ்சோடு. நடுவில் சிக்கிக் கொண்டது. செர்கேய் வலியை உணர்ந்தான். சோடுகள் காலுக்குப் பொருந்தவில்லை... குழல் பகுதிக்குள் கால் நுழையவில்லை.

''என்ன அளவு?''

''முப்பத்து எட்டாவது...''

இல்லை, பொருந்தவில்லை. செர்கேய் எழுந்து மாட்ட முயன்றான். முடியவில்லை.

''அளவு என்னவோ என்னுடையதுதான்...''

''இதோ இங்கே தான் அளவு போதவில்லை. கெண்டைக் கால் பெரியது.''

''என்னதான் பாழாய்ப் போகிற கால் இது!''

''பொறு! மெல்லிதான காலுறை போட்டுக் கொள் பார்ப்போம்.''

''அட எங்கே நுழையப் போகிறது? பார்த்தாயா?..''

''ஊம்...''

''அடச் சே!.. என்னதான் ஆக்கங் கெட்ட கால் இது!''

உற்சாகம் மங்கி விட்டது.

''அடச்சே சே!'' என்று ஏங்கினாள் கிளாவா. ''என்னதான் காலோ இது! சோடுகள் என்ன விலை?..''

''அறுபத்தைந்து.'' செர்கேய் சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டான். விலை கிளாவாவின் காதில் சரியாகப் படவில்லை என்று அவனுக்குத் தோன்றியது. ''விலை அறுபத்தைந்து ரூபிள் என்கிறேன்.''

கிளாவா சோட்டைப் பார்த்தவாறு அதன் மழமழப்பான குழல் பகுதியை இயந்திர கதியில் தடவினாள். அவளுடைய கண் இமைகளின் மேல் பளிச்சிட்டது கண்ணீர்... இல்லை, விலை அவள் காதில் நன்றாகப் பட்டிருந்தது.

''சைத்தான் கொண்டு போக இந்தக் காலை! ஒரு தரம் வாய்ப்பு கிடைத்தது, அதுவும்... உருப்படாமல் போய் விட்டது!'' என்று அங்கலாய்த்தாள்.

செர்கேயின் நெஞ்சை மறுபடி தாக்கியது எதிர்பாராத வலி... இரக்கம். சற்றே மறந்து போன காதல். நெடுஞ்

சோட்டைத் தடவிக் கொண்டிருந்த மனைவியின் கையைத் தொட்டான். அழுத்தினான். கிளாவா அவனை ஏறிட்டுப் பார்த்தாள்... அவர்களுடைய விழிகள் சந்தித்தன. கிளாவா கூச்சத்துடன் புன்னகைத்து, மங்கைப் பருவத்தில் செய்தது போல, ஆண் போன்று ஓரளவு குறும்புடன், ஆனால் மதிப்பும் பெருமிதமும் விளங்கும் வகையில் தலையைக் குலுக்கினாள்.

''இந்தா, குருஷா, உனக்கு அடித்தது அதிர்ஷ்டம். இந்தா, போட்டுப் பார்'' என்று சோடுகளைப் பெண்ணிடம் நீட்டினாள்.

மகள் குழப்பம் அடைந்தாள்.

''ஊம்!'' என்று தானும் தலையைக் குலுக்கினான் செர்கேய். ''பத்தாம் வகுப்பில் நன்றாகத் தேறினாயானால் இந்தச் சோடுகள் உனக்கு'' என்றான்.

கிளாவா கலகலவென நகைத்தாள்.

... தூங்கப் போவதற்கு முன்னால் சமையலறைக் கதவின் அருகே இருந்த தாழ்ந்த முக்காலியில் உட்கார்ந்து கடைசி சிகரெட்டைப் புகைப்பது செர்கேயின் வழக்கம். அன்றும் அவன் உட்கார்ந்தான்... புகை பிடித்தவாறு சிந்தித்தான். அன்றைக்குச் சோடுகள் வாங்கியதை இன்னொரு முறை எண்ணிப் பார்த்தான். அதன் தற்செயலான பொருளைப் புரிந்து கொண்டான். அந்தப் பொருள் பெரியதாக இப்போது அவனுக்குத் தோன்றியது. அவன் உள்ளம் மகிழ்ச்சியால் நிறைந்தது. இந்த நல்ல மனநிலையை, அரிதாக வந்திருக்கும் இந்தக் கணத்தை இப்போது ஏதேனும் கலவரப்படுத்தினால் பரிதாபமாய் இருக்கும்.

கிளாவா அறையில் படுக்கை விரித்தாள்.

''ஊம், வா...'' என்று அழைத்தாள்.

அவன் வேண்டுமென்றே பதில் பேசவில்லை. மேற்கொண்டு என்ன சொல்வாள் என்று பார்த்தான்.

''செர்கேய்க் கண்ணா!'' என்று கொஞ்சலாக அழைத்தாள் கிளாவா.

செர்கேய் எழுந்தான், சிகரெட்டுத் துண்டை அணைத்து விட்டு அறைக்குள் போனான். தனக்குத் தானே புன்னகை செய்து தலையை அசைத்துக் கொண்டான்... ஆனால், ''நான் சோடுகள் வாங்கி வந்தேன், இவள் அன்பு காட்டுகிறாள்'' என்று அவன் நினைக்கவில்லை. இல்லை, முக்கியமானவை சோடுகள் அல்ல, முக்கியமானது என்னவென்றால்...

ஒன்றுமில்லை. நல்லது.

**தாய் உள்ளம்**

வீத்யா பார்ஸியோன்கவ் வட்டார நகரச் சந்தைக்குப் போய், பன்றிக் கொழுப்பை நூற்றைம் பது ரூபிள்களுக்கு விற்று விட்டு (அவன் மணம் செய்து கொள்ள எண்ணி இருந்தான், அதற்குப் பணம் உடனடியாகத் தேவைப்பட்டது), மது இரண்டொரு குவளைகள் சாப்பிட்டுத் ''தொண்டையை நனைத்துக் கொள் வதற்காக'' மதுக் கடைக்குப் போனுன். பிறகு வெளியே வந்து சிகரெட்டு பற்ற வைத்துக் கொண் டான்...

இள நங்கை ஒருத்தி பக்கத்தில் வந்து, ''சிகரெட்டு பொருத்தக் கொஞ்சம் நெருப்பு கொடேன்'' என்ருள்.

வீத்யா தன்னுடைய சிகரெட்டை அவளுக்குப் பற்ற வைத்துக் கொள்ளக் கொடுத்து விட்டு அவளுடைய முகத்தை ஆர்வத்துடன் நோட்டமிட்டான். இளம் பெண். முகம் உப்பி இருந்தது. விரல்கள் நடுங்கிக் கொண்டிருந்தன.

''குடித்ததால் தலை வலிக்கிறதோ?'' என்று ஒளிவு மறைவு இல்லாமல் கேட்டான் வீத்யா.

''ஊம்'' என்று சிகரெட்டுப் புகையைச் சுவையுடன் இழுத்து விட்டு எளிமையாக, ஒளிவு மறைவு இல்லாமல் பதில் சொன்னுள் பெண்.

''தலைவலி போகும்படிக் குடிப்பதற்கு ஒன்றும் இல்லை யாக்கும்'' என்று தன் எண்ணத்தை மேற்கொண்டு விரிவு படுத்தினுன் வீத்யா. மனிதர்களின் நிலைமை மோசமாய் இருக் கும் போது அவர்களைப் புரிந்து கொள்ளத் தன்னுல் முடி கிறது என்பதால் அவன் மன நிறைவு கொண்டிருந்தான்.

''உன்னிடம் இருக்கிறதா?''

(தான் கொழுப்பு விற்ற போது அந்தப் பெண் தன்னைச் சிறப்பாகப் பார்வை இட்டாள் என்பதையும் மதுக் கடை யின் அருகே தன் வரவுக்காக வெறுமே பதிபோட்டுக் காத் திருந்தாள் என்பதையும் வீத்யா ஒருபோதும், எந்தக் கார ணத்தை முன்னிட்டும், எண்ணியிருக்க மாட்டான்.)

''போவோம் வா, தலைவலியைப் போக்கிக் கொள்'' என் ருன் வீத்யா. கண்ணுக்கு இனியவளும் வடிவமைந்த மேனி யளுமான அந்தப் பெண்ணை அவனுக்குப் பிடித்துப் போயிற்று.... அவளுடைய முகம் உப்பி இருந்ததும், சிறப்

பாக, தன் ஏழ்மையை அவள் மறைக்காமல் ஒப்புக் கொண்டதும் அவனுக்கு ஒரு வகையான கிளர்ச்சிகூட ஏற்படுத்தின.

அவர்கள் மதுக் கடைக்குப் போனார்கள்... வீத்யா மது ஒரு புட்டியும் இரண்டு குவளைகளும் வாங்கிக் கொண்டான்... தான் ஒன்றரைக் குவளை பருகி விட்டு, மீதியைப் பெருந்தன்மையுடன் நங்கைக்கு ஊற்றினான். குடித்த பின் அவர்கள் மறுபடி கடை வாசலுக்குச் சென்று சிகரெட்டு பற்ற வைத்துக் கொண்டார்கள். வீத்யாவுக்கு உற்சாகமாய் இருந்தது, பெண்ணுக்கும் அப்படியே. இருவருக்கும் உற்சாகம் பொங்கிற்று.

''இங்கேதான் வாசமா?''

''இங்கேதான், கிட்டத்தில்'' என்று தலை அசைப்பால் காட்டினாள் நங்கை. ''நன்றி. தலைவலி குறைந்திருக்கிறது.''

''ஒருவேளை இன்னும் விரும்புகிறாயோ?''

''குடிக்கலாந்தான்... ஆனால் இங்கே அல்ல.''

''வேறு எங்கே?''

''என் வீட்டுக்குப் போகலாம். என் வீட்டில் ஒருவரும் இல்லை...''

வீத்யாவின் நெஞ்சில் இனிமையும் வழுக்கலுமான ஒன்று வாலை நெளித்து ஆட்டியது. இன்னும் நேரம் ஆகவில்லை. பஸ்ஸில் ஊர் போய்ச் சேர வீத்யாவுக்கு ஒன்றரை மணிதான் பிடிக்கும். இடையே எல்லாவற்றையும் செய்யப் பொழுது இருந்தது.

எவ்வளவு மது வாங்குவது என்று வீத்யா யோசனை செய்த போது அந்தப் பெண் ''எனக்கு ஒரு தோழி வேறு இருக்கிறாள்'' என்று குறிப்பாகச் சொன்னாள். அதனால்தான் அவன் ஒரு வோத்கா புட்டியும் இரண்டு மதுப் புட்டிகளும் வாங்கினான்.

''எதையாவது கடித்துக் கொண்டு குடிப்போம்'' என்று தீர்மானித்து, ''கடித்துக் கொள்ள ஏதாவது இருக்கிறதா?'' என்று கேட்டான்.

''கிடைக்கும்.''

நெடுங்கால நண்பர்கள் போலச் சந்தையிலிருந்து புறப்பட்டார்கள்.

''எதற்காக வந்தாய்?''

''கொழுப்பு விற்றேன்... பணம் வேண்டும். மணம் செய்து கொள்ளப் போகிறேன்.''

''என்ன?''

''மணம் செய்து கொள்ளப் போகிறேன். இழுவைக் கூலியாள் போலத் திரிந்தது போதும்.'' விந்தையான சேதி, மணப் பெண் விஷயத்தில் தான் மோசமாய் நடந்து கொள்வதாக வீத்யா நினைக்கவுங்கூட இல்லை. அறிமுகம் அற்ற பெண்ணோடு எங்கோ போகிறோம், அவளோடு இருப்பது நமக்கு நன்றாய், மணப் பெண்ணோடு இருப்பதைக் காட்டிலும் மேலாய், சுவாரசியமாய் இருக்கிறது, இது மணப் பெண்ணுக்குத் துரோகம் செய்வதாகும் என்று அவன் எண்ணவே இல்லை.

''நல்ல பெண்ணா?''

''உனக்கு எப்படிச் சொல்லுவது?.. வீட்டுக் காரியங்களில் கெட்டிக்காரி. வீட்டை நன்றாக நிர்வகிப்பாள்.''

''ஆனால் காதல் விஷயமோ?''

''உனக்கு எப்படிச் சொல்வது?.. முன்னைப் போல எதற்கெடுத்தாலும் பூச்சி பிடிக்கிற வழக்கம் இப்போது என்னிடம் இல்லை. ஆயிற்று... எப்போதாவது மணம் செய்து கொள்ளத் தானே வேண்டும்?''

''இலக்கு பிசகி விடாதே. அப்புறம் தொல்லைப்படுவாய்... அன்பு இல்லாமல் மணம் செய்து கொண்டு வீரிடப் போகிறாய்.''

பொதுவாக இந்த தோரணையில் பேசியவாறு பெண்ணின் வீட்டை அடைந்தார்கள். (அவள் பெயர் ரீதா.) எப்படி வந்து சேர்ந்தோம், எந்தச் சந்துகளின் வழியாக எப்படி நடந்தோம் என்பதை வீத்யா கவனிக்கக்கூட இல்லை. வீடு எந்த வீட்டையும் போன்றதுதான்—பழையது, இருண்டது, ஆனால் இன்னும் எழுபது ஆண்டுகள் சிதையாமல் நிற்கும்.

அறைகள் (மூன்று) துப்புரவாய், சன்னல் திரைகளும் மேசை விரிப்புக்களுமாக, வசதியாய் இருந்தன. வீத்யாவுக்கு ஓரேயடியாக உற்சாகம் பொங்கியது.

விரைவில் இன்பம் பெறுவதற்கான அறிகுறிகளை வாழ்க்கை காட்டிய போதெல்லாம் அவன் மனதுக்குள் உல்லாசப் பாட்டு இசைத்தான்.

''உன் தோழி எங்கே?''

''இதோ போய் அவளை அழைத்து வருகிறேன். உட்கார்ந்திருப்பாயா?''

''உட்கார்ந்திருக்கிறேன். ஆனால் சீக்கிரம் வா. சரிதானா?''

''அதோ ரேடியோகிராம் இருக்கிறதே, திருப்பு, சலிப்பு தட்டாமல் இருக்கும். நான் இதோ வந்து விடுவேன்.''

இந்தப் பெண்ணோடு பழகுவது வீத்யாவுக்கு ஏன்தான் இவ்வளவு சுளுவாக, நன்றாக இருந்தது? ஐந்து நிமிட அறிமுகம், அதற்குள்... வாழ்க்கையே வாழ்க்கை! பெண்ணின் கண்களில் துயரமும் சிந்தனையும் அறிவும் சுடர்ந்தன. வீத்யாவுக்கு ஒரு சமயம் பெண் மேல் இரக்கம் உண்டாயிற்று, மறு சமயம் அவளை இறுகக் கட்டித் தழுவ விருப்பம் ஏற்பட்டது.

ரீதா போய் விட்டாள். வீத்யா அறையில் நடமாடத் தொடங்கினான். ரேடியோகிராமை அவன் திருப்பவில்லை. அது இல்லாமலே நெஞ்சு மகிழ்ச்சி நிறைந்த முன்னுணர்வால் துடித்தது.

பிறகு வீத்யா நினைவுபடுத்திக் கொண்டபடி, ரீதாவின் தோழி வந்தாள். ரீதாவுடன் ஒப்பிட்டால் அவள் மோசமானவள், மூத்தவள், சீரழிந்தவள், பாசாங்குக்காரி. வரும் போதே சளசளக்கத் தொடங்கி விட்டாள். தான் எப்போதோ சர்க்கசில் இருந்ததாகவும் கரண வேலைகள் செய்ததாகவும் கதைத்தாள். பிறகு குடித்தார்கள்... வீத்யா அங்கேயே, மேசை அருகிலேயே, ரீதாவை முத்தமிட்டான். தோழி ஆமோதிக்கும் பாங்கில் சிரித்தாள். ரீதா நெட்டித் தள்ளும் பாவனையில் வீத்யாவின் தோளை லேசாகத் தட்டினாள். உண்மையிலோ, அவனோடு ஒட்டி இழைந்து கழுத்தைக் கட்டிக் கொண்டாள்.

''இதுதான் வாழ்க்கை!'' என்ற சொற்கள் வீத்யாவின் கொதிப்பேறிய மூளையில் மாறி மாறி ஒலித்தன. ''இதுதான் களி பொங்கும் வாழ்க்கை—அது நாசமாய்ப் போக. நானே வெற்றி வீரன்!''

அப்புறம் நடந்தது ஒன்றுமே வீத்யாவுக்கு நினைவில்லை—அது மூளையிலிருந்து அறுத்து அகற்றப்பட்டு விட்டது போல. இரவில் ஏதோ ஒரு வேலி அருகே அவன் தன் நினைவுக்கு வந்தான்... நாம் எங்கே இருக்கிறோம், நமக்கு என்ன நேர்ந்தது என்று வெகு நேரம் வேதனையுடன் எண்ணிப் பார்த்தான். தலை விண்விண்ணென்று தெறித்தது. கன்னப் பொறிகள் சிதறி விழுந்து விடும் போல வலித்தன. வாய் எல்லாம் வறண்டு அண்ணத்தோடு ஒட்டிக் கொண்டது. அந்தப் பெண் ரீதாவை அவன் எப்படியோ ஒரு விதமாக நினைவுபடுத்திக்

கொண்டான்... எதையோ குடிக்கக் கொடுத்து மயங்கச் செய்து சந்தேகமில்லாமல் பணத்தை எடுத்துக் கொண் டிருக்கிறுர்கள் அந்தப் பெண்கள் என்று புரிந்து கொண்டான். பணத்தைப் பற்றிய எண்ணம் அவனைக் கடுமையாக உலுக் கிற்று. வெகு சிரமத்துடன் எழுந்து எல்லாப் பைகளையும் துழாவிப் பார்த்தான். ஆமாம், பணம் பறி போய் விட்டது. வீத்யா வேலி மீது சாய்ந்து கொண்டு சுற்று முற்றும் கண் ணோட்டினான்... இல்லை, ரீதாவின் வீட்டை ஒத்தது எதுவும் அருகாமையில் இருக்கவில்லை. எல்லாம் வேறு, முற்றிலும் வேறு வீடுகள்.

வீத்யாவிடம் மறைவிடத்தில், உள்பையில் பத்து ரூபிள் நோட்டு ஒன்று இருந்தது. சந்தையிலேயே கையோடு காவ லாக அதை அங்கு செருகிக் கொண்டிருந்தான்... துழா வினான், அங்கே பத்து ரூபிள் நோட்டு இருந்தது. வீத்யா அனு மானமாக ஒரு திக்கில் நடந்தான். முதலில் எதிர்ப்பட்ட ஒரு கிழவனிடம் பஸ் நிலையத்துக்கு வழி கேட்டான். அது கிட் டந்தான் என்று தெரிந்தது. நேரே போய், பின்பு இடப் புறம் சந்தில் திரும்பி, வலப் புறம் வீதிக்கு வந்து மறுபடி நேரே போக வேண்டும். ''பஸ் நிலையத்தில் முட்டிக் கொள் வீர்கள்.'' வீத்யா நடந்தான்... பஸ் நிலையம் போய்ச் சேர் வதற்குள் நகரத்துச் சோமாறிகள் மேல் அவனுக்கு ஆத் திரம் பொங்கியது, வெறுப்பு மூண்டது, எனவே தலைவலி குறைந்து வெறியுள்ள தெளிவு ஏற்பட்டு விட்டது. பழி வாங்கும் பெரு வலிமை நெஞ்சில் பிறந்தது.

''சரி, சரி, நான் உங்களுக்குக் கொடுக்கிறேன் சூடாக...'' என்று முணுமுணுத்தான்.

என்ன செய்ய விரும்பினான் என்பது அவனுக்குத் தெரிய வில்லை. அவனுக்குத் தெரிந்தது எல்லாம், இந்த விவகாரம் நல்லபடியாக முடியாது என்பதுதான்.

பஸ் நிலையத்தின் பக்கத்தில் மதுக் கடை வெகு நேரம் வரை திறந்திருந்தது. அங்கே ஆட்கள் எப்போதும் நெரிந் தார்கள். வீத்யா மது ஒரு புட்டி வாங்கி, நேரே அதை வாயில் வைத்து அடியொட்டக் குடித்தான், காலிப் புட்டியைச் சிறு பூங்காவில் போட்டான்... அவன் பக்கத்தில் குடித்த ஆட் கள், மூன்று பேர் இருந்தார்கள். அவர்களில் ஒருவன் அவ னிடம் சொன்னான்:

''அங்கே மனிதர்கள் உட்கார்ந்திருக்கக் கூடுமே.''

வீத்யா தன் கடற்படை இடைவாரைக் கழற்றி, அதன் நுனியைக் கையில் சுற்றிக் கொண்டு, கனத்த உலோகப் பட்டையைக் குண்டாந்தடி போலத் தொங்கும்படி வைத்துக் கொண்டான். இந்த மூன்று பெயரும் வசமாக மாட்டிக் கொண்டார்கள்.

''ஓகோ?'' என்று வியந்தான் வீத்யா. ''அவர்கள் மனிதர்களா என்ன? இந்தப் பேன் பிடித்த ஆபாசச் சிற்றூரில் மனிதர்களும் இருக்கிறார்களோ?''

மூவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

''வேறு யாராம், உன் கருத்துப்படி?''

''பெண் நாய்கள்! கரண வேலை செய்கிறீர்கள், அப்படித் தானே?''

மூவரும் அவனைத் தாக்கினார்கள், வீத்யா மூவரையும் தாக்கினான்... உலோகப் பட்டை மண்டையில் அடித்ததால் ஒருவன் உடனே தரையில் சாய்ந்தான். மற்ற இருவரும் தலைகளைக் காப்பாற்றிக் கொண்டு காலாலோ கைகளாலோ வீத்யாவைத் தாக்க முயன்றார்கள். பிறகு அவர்கள் கூப்பாடு போட்டார்கள்:

''நம் ஆட்களை அடிக்கிறார்களே!''

இன்னும் ஐந்து பெயர் பாய்ந்து வந்தார்கள்... வீத்யாவுக்கும் அடிபட்டது. ஒருவன் பின்னாலிருந்து புட்டியால் மண்டையில் அடித்தான், ஆனால் அது வழுகிச் சென்றுவிட்டது. வீத்யா கலங்காமல் நின்றான். அவனது அவமதிக்கப்பட்ட நெஞ்சம் வெற்றி கொண்டாடியது, நிலையான அமைதி பெற்று விட்டது.

தாக்கியவர்கள் ஆபாசமாகத் திட்டினார்கள், அர்த்தமில்லாமல் நெரிந்தார்கள், ஒருவருக்கு ஒருவர் இடைஞ்சல் செய்தார்கள், யோசனை சொன்னார்கள். இதைச் சாதகமாக எடுத்துக் கொண்டு வீத்யா அடித்தான்.

மிலீஷியாக்காரர்கள் ஓடி வந்தார்கள்... தாக்கியவர்கள் ஒன்று திரண்டு வீத்யாவை மதுக் கடைக்கும் வேலிக்கும் இடையே மூலைக்கு விரட்டினார்கள். வீத்யா கையை ஆட்டி அவர்களிடமிருந்து தப்பினான். மற்றவர்கள் மிலீஷியாக்காரர்களை முன்னே போக விட்டார்கள். வீத்யா அவர்களில் ஒருவன் மண்டையில் உலோகப் பட்டையால் மட்டித்தனமாக அடித்தான். வீத்யாவின் இந்த உலோகப் பட்டையின் உட்புற வளைவில் காரீயம் உருக்கிப் பொருத்தப்பட்டிருந்த

தால் அது மேலும் அதிகப் பயங்கரமாக இருந்தது. மிலீ ஷியாக்காரன் விழுந்து விட்டான்... எல்லோரும் திகைத்து வாயடைத்துப் போனார்கள். சரிப்படுத்த முடியாத தவறு நேர்ந்து விட்டது என்று புரிந்து கொண்டு வீத்யா இடை வாரை எறிந்து விட்டான்... அவன் காவற் சிறைக்கூடத் துக்கு இட்டுச் செல்லப்பட்டான்.

நேர்ந்த துன்ப நிகழ்ச்சி பற்றிய சேதியை வீத்யாவின் தாய் மறு நாள் தெரிந்து கொண்டாள். வட்டார மிலீ ஷியாத் தலைவர் காலையில் அவளை அழைத்து, வீத்யா நகரத்தில் இன்னின்ன வம்புகள் செய்தான் என்று தெரிவித்தார்.

தாயார் பயந்து போனாள். ''புனித பிதாக்களே! இதற் காக அவனுக்கு இப்போது என்ன தண்டனை கிடைக்கும்?''

''சிறைத் தண்டனை. கட்டாயமாகச் சிறைத் தண்டனை. மிலீஷியாக்காரனுக்குக் காயம். மருத்துவ மனையில் கிடக் கிறான். இந்த மாதிரிக் குற்றங்களுக்குச் சிறைத் தண்டனை தான். ஐந்து ஆண்டுகள் போட்டாலும் போட்டு விடுவார் கள். அவனுக்கு என்ன கிறுக்குப் பிடித்து விட்டதோ, கேட் கிறேன்?''

''என் அப்பனே, என் தேவனே, பிரபுவே, எப்படியாவது காப்பாற்று!'' என்று மிலீஷியாத் தலைவரை வேண்டிக் கொண்டாள் தாயார்.

''அட நீ என்ன? என்னால் எப்படிக் காப்பாற்ற முடி யும்?..''

''அவன் குடித்திருப்பான், கட்டாயம். குடித்தால் அவ னுக்குக் கண் தலை தெரியாது...''

''அட என்னால் எதுவும் செய்ய முடியாது, புரிந்துகொள் நீ. அவன் காவற் சிறைக்கூடத்தில் இருக்கிறான். அவன் மேல் வழக்கு பதிவு செய்திருப்பார்கள்...''

''அப்படியானால் யார் அவனுக்கு உதவ முடியும் என் கிறாய்?''

''ஒருவராலும் முடியாது என்கிறேன். யாரால் முடியும்?.. நல்லது, மிலீஷியா நிலையத்துக்குப் போ. விவரங்களையாவது தெரிந்து கொள். ஆனால் அங்கேகூட... அங்கே அவர்களால் என்ன செய்ய முடியும்?''

வீத்யாவின் தாயார் சதைப் பிடிப்பு இல்லாத வலிய மேனியும் விரைந்த நடையும் உள்ளவள். கிராமத்தில் அவள்

ஓடியாடினுள். கிராம சோவியத் தலைவரிடம் போனுள். அவரும் கையை விரித்து விட்டார்.

''என்னுல் எப்படி உதவ முடியும்? ஊம், சான்றுக் கடிதம் எழுதலாம்... எப்படியும் எழுத வேண்டி வரலாம். சரி, நல்ல சான்றுக் கடிதம் எழுதுகிறேன்'' என்ருர்.

''எழுது, எழுது, முடிந்தவரை நல்லதாக, நீதானே எங்கள் புத்திசாலித் தலைவன். அவன் குடி வெறியில் செய்து விட்டான், புத்தி நிதானமாய் இருக்கும் போது ஈ எறும் புக்குக்கூடத் தீங்கு செய்ய மாட்டான் என்று எழுது...''

''அவன் குடி வெறியில் செய்தானு, குடி வெறி இல் லாமலா என்று அங்கே கேட்கப் போவதில்லையே. நீ இப்படிச் செய்: அடிபட்ட மிலீஷியாக்காரனிடம் போ. ஒருவேளை அவனுக்கு ரொம்பப் பலத்த காயம் பட்டிருக்காது. ஆனுலும் சந்தேகந்தான்...''

''நன்றி உனக்கு, எங்களைப் பாலிக்கும் தேவதூதன் நீ. ரொம்ப ரொம்ப நன்றி உனக்கு மகனே...''

''அட அப்படி நான் என்ன செய்து விட்டேன்?..''

வீத்யாவின் தாயார் வட்டார மையத்துக்குப் போனுள். அவள் ஐந்து குழந்தைகள் பெற்ருள், இளமையிலேயே கண வனை இழந்தாள் (42ம் ஆண்டில் வீத்யாவின் தகப்பன் போரில் கொல்லப்பட்ட செய்தி வந்த போது வீத்யா கைக் குழந்தை). அவளுடைய மூத்த மகனும் 45ம் ஆண்டில் போரில் கொல்லப்பட்டான். மகள் 46ம் ஆண்டில் ஊட்டக் குறை வால் நேர்ந்த கடும் தளர்ச்சி காரணமாக மடிந்தாள். அடுத்த இரண்டு மகன்களும் பிழைத்திருந்தார்கள், சிறு வயதிலேயே தொழிற்சாலைப் பயிற்சிப் பள்ளியில் சேர்ந்தார்கள், இப் போது வெவ்வேறு நகரங்களில் வசித்து வந்தார்கள். தன் சக்தியை எல்லாம் செலவிட்டு வீத்யாவைப் பேணி வளர்த் தாள் தாயார். உடைமைகள் எல்லாவற்றையும் விற்று விட்டாள், ஆனுலும் மகனை ஊட்டி வளர்த்தாள். வலிவும் வனப்பும் நல்லியல்பும் உள்ளவனுக வளர்ந்தான்... எல்லாம் நன்ருய் இருந்திருக்கும், ஆனுல் குடித்து விட்டால் மடையனி லும் அடி மடையன் ஆகி விடுவான். தகப்பனைக் கொண்டிருந் தான். அந்த மனிதன்—சுவர்க்க சாம்ராஜ்யம் அவனுக்குக் கிட்டுவதாக—கிராமத்தில் ஒரு சண்டையைக்கூட விட்ட தில்லை.

பஸ் நிலையத்தில் தலைக்கு நாள் நடந்த நிகழ்ச்சி மிலீஷியா

நிலையத்தில் விவாதிக்கப்பட்டுக் கொண்டிருந்த சமயத்தில் தாயார் அங்கே போய்ச் சேர்ந்தாள். மிலீஷியாக்காரனுக்கு வீத்யா பலத்த அடி கொடுத்திருந்தான். அவன் மெய்யாகவே மருத்துவ மனையில் கிடந்தான். இன்னும் இரண்டு குடிகாரர் களும் வீத்யாவின் இடைவார் உலோகப் பட்டையால் தாக் குண்டு மருத்துவ மனையில் கிடந்தார்கள்.

மிலீஷியா நிலையத்தினர் இந்த உலோகப் பட்டையை ஆவலுடன் பார்வையிட்டார்கள்.

''மூளை எப்படி வேலை செய்திருக்கிறது பார், நாய்ப் பயலுக்கு!.. மேல் பார்வைக்கு வெறும் இடைவார்தான். ஆனால் இதில் முழுப் படிக்கல்லையே பொருத்தி இருக்கிறான். கூர்மைப் பகுதியால் தாக்காமல் விட்டானே, நல்ல வேளை யாக...''

அந்த சந்தர்ப்பத்தில் உள்ளே வந்தாள் வீத்யாவின் தாயார்... நிலையைத் தாண்டியதும் முழந்தாள் படியிட்டு, ஒப்பாரி வைத்துப் புலம்பத் தொடங்கினாள்:

''என் அன்புள்ள தேவதூதர்களே, புத்திசாலித் தங்கங் களே!.. அவன் பண்ணின கெடுதலை நீங்கள் எப்படியாவது பொறுத்துக் கொள்ளுங்கள். அந்தப் பாழாய்ப் போனவனை மன்னித்து விடுங்கள்! அவன் குடித்திருந்தான்... புத்தி நிதானத்தோடு இருக்கும் போது தான் போட்டிருக்கும் துணிகளைக் கூட ஒன்று பாக்கி இல்லாமல் கழற்றிக் கொடுத்து விடுவானே. புத்தி நிதானத்தோடு இருந்த சமயத்தில் யாருக் கும் ஒரு காலத்திலும் தீங்கு செய்ததில்லை அவன்...''

மேசை அருகே உட்கார்ந்து வீத்யாவின் இடைவாரைக் கைகளில் பிடித்திருந்த நிலையத் தலைவர் பேசத் தொடங் கினார். தாயார் விவகாரத்தை முழுமையாகப் புரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக விவரமாகவும் நிதானமாகவும் எளிமையாகவும் விளக்கலானார்:

''அம்மா, நீ கொஞ்சம் பொறு. எழுந்திரு, எழுந்திரு, இது மாதாகோயில் அல்ல. வா, இதைப் பார்...''

தலைவருடைய குரலில் தொனித்த நல்லெண்ணத்தால் சிறிது அமைதி அடைந்து எழுந்தாள் தாய்.

''இதோ பார், உன் மகனுடைய இடைவாரை... அவன் கடற்படையில் பணியாற்றினானா என்ன?''

''ஆமாம், கடற்படையில்—இந்தக் கப்பல்கள் இருக் கின்றனவே, அவற்றில்...''

''இப்போது பார்: தெரிகிறதா?'' தலைவர் உலோகப் பட்டையைத் திருப்பி, கையில் வைத்து எடை பார்த்தார். ''இதைக் கொண்டு மனிதனைக் கொல்ல முடியும் என்பதில் சந்தேகத்துக்கே இடமில்லை. நேற்று அவன் கூர்மைப் பகுதி யால் அடித்திருந்தால் ஆட்டம் குளோஸ். கொலை. வெறுமே மொண்ணைப் பக்கத்தால் அவன் மூன்று பேரை அடித்து வீழ்த்தி விட்டான், அவர்களுடைய உயிருக்காக மருத்துவர் கள் இப்போது போராடிக் கொண்டிருக்கிறார்கள். இந்த அழகில் 'மன்னித்து விடுங்கள்' என்கிறாய் நீ. மூன்று ஆட்களை உன் மகன் மருத்துவ மனைக்கு அனுப்பி விட்டானே. அதிலும் ஒருவனைப் பணித்துறைக் கடமையை நிறைவேற்றிய போது தாக்கி இருக்கிறான். இந்த மாதிரிக் காரியங்களுக்குத் தண்டிக் காமல் எப்படி விடுவது, மெய்யாகவே? நீயே யோசித்துப் பார்.''

தாய் உள்ளம் மூதறிவுள்ளது, ஆனால் எங்கே சொந்தக் குழந்தைக்கு ஆபத்து வரும் அறிகுறி தென்படுகிறதோ, அங்கே வெளியாரின் அறிவுரையைப் புரிந்து கொள்ளத் தாய் திறன் அற்றவள். தர்க்கம் அவளிடம் செல்லாது.

''அட என் அருமை மகன்களே!'' என்று கூவி அரற்றத் தொடங்கினாள் தாயார். ''குடி வெறியில் என்னதான் நடப்ப தில்லை? என்னவெல்லாமோ நடக்கிறதுதான். அடித்துக் கொண்டார்களாக்கும்... அவன் மேல் நீங்கள் இரக்கம் காட்டுங்கள்!..''

தாயாரைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. அவ ளுடைய குரலில் அளவற்ற ஏக்கமும் துயரமும் அளவற்ற புகலின்மையும் தொனித்ததால் கேட்டவர் நெஞ்சு பாகாய் உருகிப் போயிற்று. மிலீஷியாக்காரர்களுக்கும் இரக்கத்துக் கும் வெகு தூரம், ஆனால் அவர்கள்கூட சிலர் முகங்களைத் திருப்பிக் கொள்வதும் சிலர் சிகரெட்டு புகைக்கத் தொடங்கு வதுமாகத் தத்தளித்தார்கள்...

''அவன் எனக்கு ஒரே மகன்—என்னோடு இருப்பவன் அவன்தானே. எனக்கு அன்னந் தண்ணீர் கொடுப்பவன் அவன். அதோடு கலியாணம் கட்டிக் கொள்ள வேறு ஏற்பாடு செய்து கொண்டிருந்தான். அவனை அடைத்து விட்டால் அந்தப் பெண் என்ன செய்வாள்? அவனுக்காகக் காத்திருப் பாளா என்ன? காத்திருக்க மாட்டாள். நல்ல பெண், நல்ல

குடும்பத்தைச் சேர்ந்தவள். அவளை விடுவதற்கு வருத்தமாய் இருக்கிறது...''

''உன் மகன் நகரத்துக்கு எதற்காக வந்தான்?'' என்று கேட்டார் மிலீஷியா நிலையத் தலைவர்.

''கொழுப்பு விற்க. சந்தையில் கொழுப்பு விற்பதற்காக. கலியாணம் கட்டத் தீர்மானித்து விட்டானே, பணம் வேண்டும் அல்லவா? வேறு எங்கே கிடைக்கும், பணம்?''

''அவனிடம் பணமே இருக்கவில்லை.''

''புனித பிதாக்களே! எங்கே போயிற்று?'' என்று திகிலுடன் கூவினாள் தாயார்.

''இதை அவனிடம் கேட்க வேண்டும்.''

''திருடி இருப்பார்கள் ஒருவேளை. திருடி விட்டார்கள்!.. அட என் கண்ணு மகனே, இதற்காகத்தான் அவன் சண்டை போட்டிருக்கிறான் — அவனிடமிருந்து பணத்தைத் திருடி விட்டார்கள்!.. போக்கிரிகள் திருடி விட்டார்கள்...''

''போக்கிரிகள் திருடினார்கள் என்றால் எங்கள் மிலீஷியாக்காரன் என்ன செய்தான்? அவனை எதற்காகத் தாக்கினான் உன் மகன்?''

''ஆத்திரத்தில் தெரியாமல் பட்டிருக்கும்.''

''சரிதான், ஒவ்வொரு தரமும் ஆத்திரத்தில் தெரியாமல் இப்படிப் பட்டால் எங்களிடம் மிலீஷியாக்காரர்களே விரைவில் இல்லாமல் போய்விடுவார்கள். மட்டுமீறிய ஆத்திரக்காரர்கள் உங்கள் மகன்கள்!'' என்ற தலைவரின் குரலில் உறுதி தொனித்தது. ''இதற்கு மன்னிப்பு கிடையாது. சட்டப்படி உள்ள தண்டனை அவன் பெறுவான்'' என்றார்.

''ஐயோ என் தேவதூதர்களே, நல்ல மனிதர்களே'' என்று மறுபடி கெஞ்சத் தொடங்கினாள் தாயார். ''நான் கிழவி, எனக்காகவாவது இரங்குங்களேன். நான் இப்போது தான் கொஞ்சம் வெளிச்சத்தைக் கண்ணால் பார்த்தேன்... அவன் உழைப்பாளி, என் மகன். கலியாணம் கட்டிக் கொண்டால் ஒழுங்கான ஆள் ஆகி விடுவான். நானும் பேரன் பேத்திகளைச் சீராட்டுவேன்...''

''விவகாரம் எங்கள் கைகளில்கூட இல்லை அம்மா, புரிந்து கொள். அரசாங்க வழக்குரைஞர் இருக்கிறாரே! நாங்கள் அவனை விட்டு விடுகிறோம் என்று வைத்துக் கொள், எந்த ஆதாரத்தின் பேரில் என்று எங்களைக் கேட்பார்களே? எங்களுக்கு உரிமை கிடையாது. இந்த மாதிரி உரிமைகூட எங்

களுக்குக் கிடையாது, உன் மகனுக்குப் பதில் சிறைக்குப் போக நான் தயாராய் இல்லே, உள்ளபடியே.''

''ஒருவேளை அந்த மிலீஷியாக்காரனை எப்படியாவது சரிக்கட்டலாமோ? என்னிடம் கித்தான் துணி இருக்கிறது, இப்போதுதான் கித்தான் துணி நெய்தேன். ஒரு பாடு! எல்லாம் மணமக்களுக்காக நெய்தேன்...''

''அட அவன் உன்னிடம் ஒன்றும் வாங்கிக் கொள்ள மாட்டான் என்கிறேன், மாட்டவே மாட்டான்!'' என்று கத்தினர் தலைவர். மனிதர்களைக் கேலிக்கு இடமாக்காதே, மெய்யாகவே சொல்லுகிறேன். இது ஒன்றும் உறவுகாரர்களுக்குள்ளே நடந்த சச்சரவு அல்ல!''

''இப்போது நான் எங்கேதான் போவது, கண்களா? உங்களுக்கு மேலே யாராவது இருக்கிறார்களா, இல்லையா?''

''அரசாங்க வழக்குரைஞரிடம் போகட்டும்'' என்று யோசனை சொன்னன் அங்கே இருந்தவர்களில் ஒருவன்.

''மேல்னிக்கவ், இவளை வழக்குரைஞரிடம் கூட்டிப் போ'' என்றார் தலைவர். பின்பு மறுபடி தாயின் பக்கம் திரும்பி, செவிடி அல்லது அறவே மூளை மந்தித்தவளிடம் பேசுவது போல மறுபடி அவளோடு பேசலானார்: ''அரசாங்க வழக்குரைஞரிடம் போ. அவர் எங்களுக்கு மேலே இருப்பவர்! இந்த வழக்கு ஏற்கெனவே அவர் பார்வையில் இருக்கிறது. எங்களால் ஏதாவது செய்ய முடியுமா முடியாதா என்று அவர் உனக்கு விளக்கட்டும்! உன்னை ஒருவரும் ஏமாற்றவில்லை, இதை நீ புரிந்து கொள்!''

தாயார் மிலீஷியாக்காரனுடன் அரசாங்க வழக்குரைஞரிடம் போனாள்.

வழியில் மிலீஷியாக்காரன் மேல்னிக்கவிடம் பேச்சுக் கொடுக்க முயன்றாள்.

''பொன்னு மகனே, இவனை என் மகன் ரொம்பக் காயப்படுத்தி விட்டானே?''

மிலீஷியாக்காரன் மேல்னிக்கவ் சிந்தனையில் ஆழ்ந்தவனகப் பேசாதிருந்தான்.

''வழக்கு விசாரணை நடந்தால் மகனுக்கு என்ன தண்டனை கொடுப்பார்கள்?''

மிலீஷியாக்காரன் அகல அடி வைத்து நடந்தான். வாய் திறக்கவில்லை.

தாயார் அருகாகக் குடுகுடுவென்று சிற்றடி வைத்து

நடந்தவாறு அந்த நெட்டையனுடன் பேச முயன்றபடி அவன் முகத்தை ஏறிட்டு நோக்கினுள்.

''மகனே, நீ வாயை மூடிக் கொண்டு இருக்காதே, எனக்கு விளக்கிச் சொல்லு... உனக்கும் கட்டாயம் தாயார் இருப்பாள். உங்கள் மேல் இரக்கம் உண்டாகிறதே. இதோ பேசிக் கொண்டிருக்கிறேனே, இந்த ஒவ்வொரு வார்த்தையும் நெஞ்சிலே பட்டு எதிரொலிக்கிறது—அவ்வளவு இரக்கம் உண்டாகிறது. சொல்லு, நிறையத் தண்டனை கொடுப்பார்களோ?''

மிலீஷியாக்காரன் மேல்னிக்கவ் தெளிவில்லாமல் பதில் சொன்ஞன்:

''உதாரணமாக, கல்லறையை அலங்கரிக்கிருர்கள், வேலி போடுகிருர்கள், கம்பங்கள் நாட்டுகிருர்கள், மலர் வளையங்கள் சாத்துகிருர்களே... இது என்ன, இறந்தவர்களுக்கு வேண்டுமோ? உயிரோடு இருப்பவர்களுக்கு வேண்டும் இது. இறந்தவர்களுக்கு எல்லாம் ஒன்றுதான்.''

தாயாரை ஒரேயடியாகத் திகில் பற்றிக் கொண்டது. அவள் நின்று விட்டாள்.

''நீ எதற்காக இதை எல்லாம் சொல்லுகிருய்?'' என்ருள்.

''போவோம் வா. நான் சொல்லுவது எதற்காக என்ருல், தண்டிக்கத்தான் போகிருர்கள் என்பதற்காக. குடித்திருந்தான், பணம் திருட்டுப் போய் விட்டது, மனிதன் மனத்தாங்கல் கொண்டிருந்தான் என்ற காரணங்களுக்காக மன்னித்தாலும் மன்னிக்கலாம்தான். ஆனுலும் மற்றவர்களுக்குப் படிப்பினையாக இருக்கும் பொருட்டுத் தண்டனை கட்டாயம் கொடுப்பார்கள். இந்த உதாரணத்தால் மற்றவர்களுக்குப் பாடம் கற்பிப்பது முக்கியம்...''

''ஆனுல் நீயே சொல்லுகிருய் குடித்திருந்தான் என்று!''

''இது இப்போது கணக்கில் சேராது. யாரும் அவனைப் பலவந்தப்படுத்திக் குடிக்க வைக்கவில்லை. அவனுகவே தான் வெறியேறக் குடித்தான். மற்றவர்களுக்கு இது படிப்பினையாக இருக்கும். அவனுக்கு இப்போது சிறையில் இருப்பது ஒரு பொருட்டில்லை, ஆனுல் மற்றவர்கள் சிந்தித்துப் பார்ப்பார்கள். வேறு வகையில் உங்களுக்கு மறு பயிற்சிப் போதனை அளிக்க முடியவே முடியாது.''

இந்த நெட்டையன் மகன் மேல் பகைமை கொண்டிருக்கிறான் என்று நினைத்துத் தாயார் பேசாதிருந்தாள்.

அரசாங்க வழக்குரைஞரைத் தாயாருக்கு எடுத்த எடுப்பிலேயே பிடித்து விட்டது—கவனம் உள்ளவர் என்பதால். தாயார் நீண்ட நேரம் குழப்பிக் குழப்பிப் பேசிக் கொண்டிருந்தாள், ஆனாலும் அவர் கவனமாக கேட்டுக் கொண்டிருந்தார். தன் மகன் வீத்யா நல்லவன், உதார குணம் உள்ளவன், புத்தி நிதானத்தோடு இருக்கும் போது ஈ எறும்புக்குக்கூடத் தீங்கு செய்ய மாட்டான், இப்போது தனிக் கட்டையாக அவளால் எப்படி இருக்க முடியும்? மணப் பெண் வீத்யாவுக்காகக் காத்திருக்க மாட்டாள், அவள் அருமையான பெண், அந்த மாதிரிப் பெண்ணை யார் வேண்டுமானாலும் கொத்திக் கொண்டு போய் விடுவார்கள்... என்று தாயார் சொன்னதை எல்லாம் வழக்குரைஞர் முடிவு வரை காது கொடுத்துக் கேட்டார், மேசை மேல் விரல்களால் தாளம் போட்டார்... எங்கோ தொலைவிலிருந்து பேசுபவர் போல, தாமும் ஓரளவு குழப்பும் விதத்தில் பேசத் தொடங்கினார்:

''நீ குடியானவப் பெண்பிள்ளை. உங்கள் குடும்பத்தில் நிறையக் குழந்தைகள் இருந்திருக்குமே...''

''பதினாறு பேர், அப்பனே. பதினாலு பேர் பிழைத்திருந்தோம், இரண்டு பேர் குழந்தைகளாகவே காலமாகி விட்டார்கள். பாவெல் இறந்து போனான். அவனுக்குப் பிறகு அடுத்த மகனுக்கும் பாவெல் என்று பெயர் வைத்தார்கள்...'

''நல்லது. பதினாறு பெயர். சிறிய அளவில் முழு சமூகம். அதற்குத் தலைவன் தகப்பன். அப்படித்தானே?''

''அப்படித்தான் அப்பனே, அப்படித்தான். தகப்பன் சொல்லுக்குக் கீழ்ப்படிந்தோம்...''

''அதுதானே!'' என்று தாயாரின் சொல்லைப் பிடித்துக் கொண்டார் வழக்குரைஞர். ''கீழ்ப்படிந்தீர்கள்! ஏன்? ஒருவன் அசிங்கம் செய்தால் தகப்பன் இடைவாரால் அவனை விளாறினான். அசிங்கம் பண்ணினவனுக்குத் தகப்பன் எப்படிப் பாடம் கற்பிக்கிறான் என்று சகோதரனோ சகோதரியோ பார்த்தார்கள். தாங்கள் அசிங்கம் செய்வதா கூடாதா என்று எண்ணிப் பார்த்தார்கள். பெரிய குடும்பங்களில் ஒழுங்கு இந்த மாதிரி நிலைநாட்டப்பட்டது. இந்த மாதிரி மட்டுமே. தகப்பன் ஒருவனை மன்னித்தான், அடுத்தவனை மன்னித்தான், என்றால் குடும்பத்தில் என்ன நேரும்? சிதைவு. உன்னை எனக்குப்

புரிகிறது, உனக்கு இரக்கமாய் இருக்கிறது... வேண்டு மானால் கேள், எனக்குந்தான் இரக்கமாய் இருக்கிறது. சிறைச் சாலை சுக வாசஸ்தலம் அல்ல. எல்லாவற்றையும் பார்க்கும் போது உன் மகன் அங்கே போவது ஒரு சீசனுக்கு மட்டும் அல்ல. மனிதத் தன்மையோடு பார்த்தால் எல்லாம் புரியக் கூடியதுதான், ஆனால் உயர் ஒழுங்கு பற்றிய கோட்பாடு இருக்கிறது. அதில் நாங்கள் சக்தி அற்றவர்கள்... தண்டனை கட்டாயம் கிடைக்கும். எவ்வளவு கிடைக்குமோ எனக்குத் தெரியாது, நீதி மன்றம் இதை முடிவு செய்யும்.''

இந்த மனிதருக்கும் தன் மகனைப் பிடிக்கவில்லை என்று எண்ணினாள் தாயார். ''தங்கள் ஆளுக்காகக் கோபம் கொண் டிருக்கிறார்கள்'' என்று நினைத்தாள்.

''அப்பனே, உனக்கு மேலே யாராவது இருக்கிறார்களா?'' என்று கேட்டாள்.

வழக்குரைஞருக்கு இது உடனே புரியவில்லை. ''இதற்கு என்ன அர்த்தம்?'' என்று கேட்டார்.

''நீதான் எல்லாருக்கும் மேலானவனா, அல்லது உனக்கு மேலும் அதிகாரிகள் இருக்கிறார்களா?''

வழக்குரைஞர் அடக்க மாட்டாமல் பக்கென்று சிரித்து விட்டார். ஆனால் பிறகு அவருக்குச் சங்கடமாய் இருந்தது.

''இருக்கிறார்கள், தாயே, இருக்கிறார்கள். நிறையப் பேர்!''

''எங்கே இருக்கிறார்கள் அவர்கள்?''

''ஊம், எங்கே?.. பிரதேச நிறுவனங்கள் இருக்கின்றன... நீ என்ன, அங்கே போக நினைக்கிறாயோ? என்னைக் கேட்டால் வேண்டாம் என்பேன்.''

''நல்ல மனிதர்கள் எனக்கு யோசனை சொன்னார்கள்: மகன் இன்னும் தண்டனை பெறாததால் இப்போது விடுதலை செய்வது மேலாம், அப்புறம் அதிகச் சிரமமாய் இருக்கு மாம்...''

''இந்த நல்ல மனிதர்களிடம் சொல்லு, அவர்கள்... நல்லவர்கள் அல்ல என்று. வெளிப் பார்வைக்குத்தான் அவர் கள் நல்லவர்கள்... நல்லவர்களாகப் பசப்புகிறவர்கள். யார் இப்படி யோசனை சொன்னது?''

''அட யோசனை சொன்னார்கள்...'''

''நல்லது, போ. பயணத்தில் காசைக் கரியாக்குவாய், அவ்வளவுதான். பயன் இதுவாகத்தான் இருக்கும். நான்

முழுக்க முழுக்க அதிகார தோரணையில் சொல்லுகிறேன், தண்டனை கிடைக்கும். தண்டிக்காமல் இருக்க முடியாது. அதற்கு எங்களுக்கு உரிமை கிடையாது. இந்தத் தீர்ப்பை யாரும் ரத்து செய்ய மாட்டார்கள்.''

தாயாரின் நெஞ்சு சுரீர் என்று வலித்தது... ஆனால் அவள் வழக்குரைஞர் மேல் மனத்தாங்கல் கொண்டிருந்த தால் அங்கேயே விழுந்து வாய் விட்டு அழுது புலம்பாமல் இருப்பதற்குத் தான் கடும் பிரயாசை மேற்கொள்ள வேண்டி இருப்பதை வெளிக் காட்டவில்லை. அவளுடைய கால்கள் துவண்டன.

''அவனைப் போய்ப் பார்க்கவாவது எனக்கு அனுமதி கொடு...''

''இது முடியும்'' என்று உடனே இசைந்தார் வழக் குரைஞர். ''அவனிடம் நிறையப் பணம் இருந்ததாகச் சொல்லுகிறார்களே?''

''இருந்தது...''

வழக்குரைஞர் காகிதத்தில் ஏதோ எழுதி, தாயாரிடம் கொடுத்தார்.

''மிலீஷியா நிலையத்துக்குப் போ'' என்றார்.

மிலீஷியா நிலையம் போகும் வழியைத் தாயார் நெட்டை யன் இல்லாமல் தானே கண்டு கொண்டாள். நெட்டையன் முன்பே போய் விட்டான். தாயார் ஆட்களிடம் விசாரித் தாள். அவர்கள் வழி காட்டினார்கள். தாயாரின் விழிகளில் எல்லாம் பனி மூட்டத்தில் ஆழ்ந்து பெருகி ஓடத் தலைப் பட்டன... அவள் மௌனமாக அழுதாள், தலைக் குட்டை நுனியால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள், ஆனால் வழக்கப்படி விடுவிடென்று நடந்தாள். நடைபாதைப் பலகை கள் துருத்தியிருந்த இடங்களில் மட்டுமே சில வேளைகளில் தடுமாறினாள்... ஆனாலும் மேலே மேலே நடந்தாள், அவ சரப்பட்டாள். தான் இப்போது விரைய வேண்டும், மகன் தண்டிக்கப்படுவதற்குள் காரியங்களை நிறைவேற்றி விட வேண்டும் என்று எண்ணினாள். இல்லாவிட்டால் பிறகு மகனை விடுதலை செய்விப்பது கடினமாய் இருக்கும். இதை அவள் நம்பினாள். வாழ்நாள் முழுவதும் அவள் செய்தது எல்லாம் துயரத்தை அடக்கிக் கொண்டதுதான், அதுவும் எப் போதும் இவ்வாறே—போகிற போக்கில், விரைவாக, தலைக் குட்டை நுனியால் கண்ணீரைத் துடைத்தவாறு. நல்ல மனி தர்கள் இருக்கிறார்கள், அவர்கள் உதவுவார்கள் என்கிற

நம்பிக்கை அவள் உள்ளத்தில் அழிக்க முடியாதபடி வேர் விட்டுத் தழைத்திருந்தது. இந்த ஆட்கள்—கிடக்கிறார்கள்— இவர்கள் தங்கள் ஆளுக்காகக் கோபம் கொண்டிருக் கிறார்கள். ஆனால் அவர்கள்—கொஞ்சம் தூரத்தில் இருப்ப வர்கள்—அவர்கள் உதவுவார்கள். அப்படி உதவாமல் இருப் பார்களா என்ன? அவள் அவர்களுக்கு எல்லா நிலைமைகளை யும் விவரிப்பாள். அவர்கள் உதவுவார்கள். விந்தை என்ன வென்றால் தன் மகன் கடுங் குற்றம் செய்து விட்டான் என்பதைத் தாயார் ஒரு தரங்கூட நினைத்துப் பார்க்கவில்லை. அவள் அறிந்ததெல்லாம் ஒன்றுதான்: மகனுக்குப் பெரு விபத்து நேர்ந்து விட்டது. விபத்திலிருந்து அவனை மீள வைப்பவர்கள் யார், தாயார் இல்லாவிட்டால்? யார்? ஆண்ட வனே, இந்தப் பிரதேச நிறுவனங்களுக்கு அவள் கால் நடையாகவே போவாள். இரவும் பகலும் நடவா நடை நடப்பாள்... இந்த நல்ல மனிதர்களை அவள் தேடிக் கண்டு கொள்வாள்.

''ஊம்?'' என்று அவளிடம் கேட்டார் மிலீஷியாத் தலை வர்.

''பிரதேச நிறுவனங்களுக்குப் போகச் சொன்னார்'' என்று தந்திரமாகப் புளுகினாள் தாயார். ''அப்புறம் இது மகனைப் பார்ப்பதற்கு'' என்று காகிதத்தைக் கொடுத்தாள்.

மிலீஷியாத் தலைவர் சற்று வியப்பு அடைந்தார், ஆனால் அவரும் அதைக் காட்டாதிருக்க முயன்றார். கடிதத்தைப் படித்தார்... அவர் கொஞ்சம் ஆச்சரியப்பட்டதைத் தாயார் கவனித்தாள். ''ஆ-ஆ'' என்று எண்ணிக் கொண்டாள். அவளுக்கு ஒரு சிறிது ஆறுதல் உண்டாயிற்று.

''அழைத்துக் கொண்டு போ, மேல்னிக்கவ்.''

வெகு தூரம், நீண்ட நேரம் நடக்க வேண்டி இருக்கும், இரும்புக் கதவுகள் திறக்கும், கம்பிகளுக்குப் பின்னே மகனை அவள் காண்பாள், நுனிக் கால்களில் எம்ப நின்றபடிக் கீழிருந்து மகனுடன் பேசுவாள்... என்றெல்லாம் தாயார் எண்ணினாள். அவளுடைய மகனோ, இங்கேயே, கீழே, நிலவறையில் இருந் தான். அங்கே நடையில் ஒட்டக் கத்தரித்த முடியினரான ஆட்கள் டாமினோ ஆடிக் கொண்டிருந்தார்கள்... தாயாரை யும் மிலீஷியாக்காரனையும் உறுத்துப் பார்த்தார்கள். அவர் களுக்கு நடுவே வீத்யா இருக்கவில்லை.

''என்ன அம்மா, உனக்கும் பதினைந்து நாள் தண்டனை

கிடைத்து விட்டதா?'' என்று கேட்டான் ஒரு குதிரை முகத் தன்.

எல்லோரும் கெக்கலித்தார்கள்.

நடையில் மூன்று, நான்கு அறைகள் இருந்தன. அவற் றில் ஒன்றுக்கு மிலீஷியாக்காரன் தாயாரை அழைத்துப் போனான், கதவைத் திறந்தான்...

வீத்யா தனியே இருந்தான், ஆனால் அறை பெரியதாக வும் பலகைக் கட்டில் அகலமாகவும் இருந்தன. வீத்யா கட்டிலில் படுத்திருந்தான்... மிலீஷியாக்காரன் அறைக்குள் போன போது அவன் எழுந்திருக்கவில்லை, ஆனால் அவன் பின்னே தாயாரைக் கண்டதும் துள்ளி எழுந்தான்.

''பேசுவதற்குப் பத்து நிமிடங்கள்'' என்று எச்சரித் தான் நெட்டையன். பின்பு வெளியேறினான்.

தாயார் பலகைக் கட்டிலில் உட்கார்ந்தாள். தலைக் குட்டையால் கண்ணீரை அவசரமாகத் துடைத்துக் கொண் டாள்.

''பாரேன், நிலவறை, ஆனால் ஈரம் இல்லாமல், வெது வெதுப்பாக இருக்கிறதே'' என்றாள்.

வீத்யா கைகளால் முழங்கால்களைக் கட்டிக் கொண்டு பேசாதிருந்தான். கதவை நோக்கினான். அந்த இரவுக்குப் பின் அவன் மெலிந்திருந்தான், முகத்தில் தாடி மீசை வளர்ந்திருந்தது—திடீரென்று ஏதோ திட்டமிட்டிருந்தது போல. அவனைப் பார்க்கவே வேதனையாக இருந்தது. உடம்பு லேசாக நடுங்கியது. இந்த நடுக்கத்தையாவது தாயார் பார்க்காதிருக்கட்டும் என்று அவன் உடம்பை விரைப்பாக வைத்துக் கொண்டான்.

''பணந்தான் திருட்டுப் போய் விட்டதாமே?'' என்று கேட்டாள் தாய்.

''திருட்டுப் போய் விட்டது.''

''அட எக்கேடும் கெட்டுப் போகட்டும் அது, இந்தப் பணம், அதற்காக அடிபிடியில் இறங்குவானேன்? அது நம்மைச் சம்பாதிக்கவில்லையே, நாம்தானே அதைச் சம் பாதிக்கிறோம்.''

பணம் தன்னிடமிருந்து திருட்டுப் போனது எப்படி என் பதை வீத்யா எந்தச் சூழ்நிலையிலும் யாருக்கும் சொல்லி யிருக்க மாட்டான்—வெட்கமாய் இருந்தது. இரண்டு வேசி கள்... வேதனை அளிக்கும் வெட்கக்கேடு! அதோடு தாயார்

மேலும் இரக்கம் வந்தது. அவள் தன்னிடம் வருவாள், எல்லாத் தடைகளையும் கடந்து வந்து விடுவாள் என்று அவன் அறிந்திருந்தான். அவளை எதிர்பார்த்தான், பயந்து கொண்டிருந்தான்.

தாயின் உள்ளத்திலோ, அந்தக் கணத்தில் வேறு உணர்வு இருந்தது. உலகத்தில் மிலீஷியா, வழக்குரைஞர், நீதி மன்றம், சிறைச்சாலை முதலியவை இருப்பதைப் புரிந்து கொள்வதை அவள் அறவே நிறுத்தி விட்டாள்... அருகே உட்கார்ந்திருந்தான் அவளுடைய குழந்தை, குற்றம் செய்தவன், நிர்க்கதியானவன்... அவள்—அவள் மட்டுமே, வேறு யாரும் அல்ல—அவனுக்கு இப்போது தேவை. இந்த வேளையில் அவளிடமிருந்து அவனைப் பிடுங்கிக் கொள்ள யாரால் முடியும்?

''நான் அவனைக் கடுமையாகத் தாக்கி விட்டேனே, தெரியாதா உனக்கு?''

''அட ஒன்றும் இல்லை, மொண்ணைப் பக்கந்தான் பட்டிருக்கிறது... ஆனால் படுத்துக் கிடக்கிறான், எழுந்திருக்கவில்லை.''

''நிபுணர்கள் பரிசோதனை நடந்திருக்கும், கட்டாயம்... மருத்துவ விடுமுறைச் சீட்டு வாங்குவான்...'' வீத்யா தாயாரை நோக்கினான். ''ஒரு ஏழு ஆண்டுகள் தீட்டி விடுவார்கள்.''

''புனித பிதாக்களே!..'' தாயாரின் நெஞ்சு விழுந்து விட்டது. ''எதற்காக இவ்வளவு நிறைய, ஊம்?''

''ஏழு ஆண்டுகள்!..'' வீத்யா கட்டிலிலிருந்து துள்ளிக் குதித்து அறையில் நடக்கத் தொடங்கினான். ''எல்லாம் மண்ணாகி விடும்! வாழ்க்கை முழுதும் குப்புறக் கவிழ்ந்து விடும்!''

தன் மகனுடைய நெஞ்சை எத்தகைய புகலின்மை நசுக்குகிறது என்பதைத் தாயார் தன் மூதறிவுள்ள இதயத்தால் புரிந்து கொண்டாள்...

''என்னவோ ஏற்கெனவே தண்டனை கிடைத்து விட்டது போலப் பேசுகிறாயே!'' என்று கடிந்து கொண்டாள். ''இப்போதேயா? வாழ்க்கை குப்புறக் கவிழ்ந்து விட்டதாம்'' என்றாள்.

''எதிர்பார்ப்பது எதற்காகவாம்? எல்லாந்தான் தெரிந்து கிடக்கிறதே...''

''பாரப்பா, எல்லாம் அதற்குள் தெரிந்து கிடக்கிறதாம்!

நான் எங்கே போனேன், என்ன செய்தேன் என்று முதலில் கேட்டிருக்க வேண்டாமா நீ?..''

''எங்கே போனுய்?'' வித்யா நின்று விட்டான்.

''அரசாங்க வழக்குரைஞரிடம் போனேன்...''

''அப்புறம்? அவர் என்ன சொன்னுர்?''

''முதலிலேயே இப்படிக் கேட்டிருக்க வேண்டும் நீ, அவர் என்ன சொன்னுர் என்று. நீ என்னடா என்ருல் குப்புறக் கவிழ்ந்து விட்டது என்று உடனே மாய்ந்து போகிருய்! என்னவோ கையாலாகாதவர்கள் நீங்கள்... இன்னும் ஒன்றுமே நடந்து விடவில்லை, அதற்குள்... என்னவெல்லாமோ எண்ணங்கள்...''

''சரி, வழக்குரைஞர் என்னதான் சொன்னுர்?''

''இல்லாவிட்டால்... அவர் சொல்லுகிருர், இப்போதைக்குக் கவலைப்படாதிருக்கச் சொல்லு மகனை. கண்ட கண்ட படி நினைத்து மறுக வேண்டாம் என்று சொல்லு... இங்கே எங்களால் ஒன்றும் செய்ய முடியாது, ஏனென்ருல் எங்களுக்கு அதிகாரம் கிடையாது. நீ நேரத்தை வீணுக்காதே, ரயிலேறிப் பிரதேச நிறுவனங்களுக்குப் போ என்கிருர். அங்கே இருந்து எங்களுக்கு உத்தரவு வரும், நாங்கள் விரும்பினுலும் விரும்பாவிட்டாலும் மகனை விடுவித்து விடுவோம் என்கிருர். அப்போது சொந்த ஆட்களுக்கு முன்னுல் நாங்கள் நாண வேண்டி இருக்காது. நாங்கள் தண்டிக்க விரும்பினேம், ஆனுல் எங்களால் முடியவில்லை என்று போக்கு காட்டலாம் என்கிருர். அவர்கள் இங்கே எல்லாவற்றையும் தீர ஆலோசித்து விட்டார்கள். எனக்கே உன் மகன் மேல் இரக்கமாய் இருக்கிறது... ஆனுல் நாங்கள் சின்ன ஆட்கள். பிரதேச நிறுவனங்களுக்குப் போ. அங்கே எல்லாவற்றையும் விவரமாக எடுத்துச் சொல்லு என்கிருர்... ஆமாம், உன்னிடம் எவ்வளவு பணம் இருந்தது?''

''நூற்றைம்பது.''

''புனித பிதாக்களே! சுளையாக விழுங்கி விட்டார்களே...''

நெட்டை மிலீஷியாக்காரன் உள்ளே எட்டிப் பார்த்தான்.

''முடியுங்கள்.''

''இதோ, இதோ'' என்று பரபரத்தாள் தாயார். ''நாம் எல்லாம் பேசித் தீர்த்து விட்டோம்... இப்போது நான்

ஊருக்குப் போகிறேன். மீஷ்கா பிச்கோவ் உன்னைப் பற்றிச் சான்றுக் கடிதம் எழுதுவான்... நல்லதாக எழுதுகிறேன் என்றான்.''

''அங்கே... வந்து... என் பெட்டியில் வேலையிடத்தில் கிடைத்த பல வகையான பாராட்டுப் பத்திரங்கள் கிடக்கின்றன... கையோடு காவலாக அவற்றையும் எடுத்துக் கொள்...''

''எந்த மாதிரிப் பத்திரங்கள்?''

''ஊம், அங்கே பார்த்துக் கொள், ஒருவேளை பயன் படலாம்.''

''எடுத்துக் கொள்கிறேன். அப்புறம் அலுவலகத்துக்குப் போய் நானும் சான்றுக் கடிதத்தை வாங்கிக் கொள்கிறேன்... வெறுங்கையோடு போக மாட்டேன். ஒருவேளை, கித்தாரை விற்று விடட்டுமா, செர்கேயெவ்னு விலைக்குக் கேட்டாள்?''

''எதற்காக?''

''கையோடு பணத்தைக் கொண்டு போகலாமே—யாரையாவது சரிக்கட்ட வேண்டி வரலாம்.''

''வேண்டாம். காரியத்தைக் கெடுக்கத்தான் செய்வாய்.''

''நல்லது, அங்கே போய்ப் பார்த்துக் கொள்ளுகிறேன்.''

மிலீஷியாக்காரன் அறைக்குள் மறுபடி எட்டிப்பார்த்தான்.

''நேரம்.''

''வந்து விட்டேன், வந்து விட்டேன்'' என்று மறுபடி பரபரத்தாள் தாயார். கதவு சாத்தப்பட்டதும் மார்புச் சட்டைக்குள் கையை விட்டு ரொட்டியையும் முட்டையையும் எடுத்தாள். ''இந்தா, சாப்பிடு... ரொம்பத்தானே கவலைப்படாதே. இன்னும் குப்புறக் கவிழ்ந்து விடவில்லை ஒன்றும். நல்ல மனிதர்கள் உதவுவார்கள். பெரிய அதிகாரிகள் இருக்கிறார்களே, அவர்கள் மேல், அவர்கள் பயப்படுவதில்லை. இவர்கள் பயப்படுகிறார்கள். அவர்களோ, யாருக்கும் அஞ்ச வேண்டியதில்லை—அவர்கள் வைத்தது தான் சட்டம். அவர்கள் வரை போவதற்கு நான் போய் விடுவேன். நீ திடமாயிரு, எதையாவது நினைத்துக் கொண்டிரு—வேராவைத்தான் நினையேன்... வேராவும் ஒரேயடியாக ஏங்கத் தொடங்கி விட்டாள். சற்று முன்னே அவளிடம் போயிருந்தேன். சேதி அவள் காதுக்கு எட்டியிருந்தது...''

''அப்புறம்?''

''ரொம்ப வருத்தப்படுகிருள்.''

மணப் பெண் வருத்தப்படுவதைக் கேட்டு வீத்யாவுக்கு ஆறுதல் ஏற்படவில்லை. என்ன காரணத்தாலோ, ஆறுதல் உண்டாகவில்லை.

''இன்னும் ஒன்று சொல்லுகிறேன் கேள்'' என்று கிசுகிசுத்தாள் தாயார். ''மனதுக்குள்ளாகக் கடவுளை வேண்டிக் கொள். பரவாயில்லை, நீ ஞானஸ்நானம் ஆனவன், துதி படிக்கலாம். எல்லா வகையாலும் முயற்சி செய்வோம். நான் ரயிலடிக்குப் போக வீட்டிலிருந்து கொஞ்சம் முன்னலேயே கிளம்பி விடுகிறேன், வழியில் மாதாகோயிலுக்குப் போய், புனிதர் நிக்கலாயுக்கு முன் திரு விளக்கு ஏற்றி வைக்கிறேன், அவரையும் வேண்டிக் கொள்கிறேன். கவலைப் படாதே, மன்னிப்பு கிடைத்து விடும். உன் தகப்பஞர் யுத்தத்தில் கொல்லப்பட்ட சேதிக் கடிதத்தையும் எடுத்துக் கொள்கிறேன்...''

''நீ அண்ணன்மாருக்கு... வந்து... இப்போதைக்கு எழுதாதே.''

''எழுத மாட்டேன், எழுத மாட்டேன். அவர்கள் அனுவசியமாக மேற்கொண்டு கலவரப்படுத்துவார்கள், அவ்வளவுதான். முக்கியமானது, இப்போது எல்லாம் குப்புறக் கவிழ்ந்து விட்டது என்று எண்ணி மறுகாதே. அப்படியே தண்டித்தாலும், ஒரு வருஷம் போலச் சிறைத் தண்டனை கொடுப்பார்கள்—மற்றவர்களுக்கு மெய்ப்பிப்பதற்காக.ஏழு ஆண்டுத் தண்டனை ஒன்றும் கிடைக்காது! எவனுக்கு ஒரு வருஷத் தண்டனை கிடைக்கிறதோ, பெரும்பாலும் அரை ஆண்டில் அவனை விட்டு விடுவார்கள். அங்கே நன்ருக வேலை செய்தவர்களை முன்கூட்டி விடுவித்து விடுவார்கள். ஒரு வருஷங்கூட ஒருவேளை கொடுக்காமல் இருக்கலாம்.''

மிலீஷியாக்காரன் அறைக்குள் வந்து நின்றவன், வெளியே போகவில்லை.

''நேரம், நேரம்...''

''வந்து விட்டேன்.'' தாயார் கட்டிலிலிருந்து எழுந்து, மிலீஷியாக்காரனுக்கு முதுகைக் காட்டித் திரும்பி, மகன் மேல் லேசாகச் சிலுவைக் குறி இட்டு, ''இயேசு உன்னைக் காப்பாராக'' என்று உதடுகளால் மட்டும் கிசுகிசுத்தாள்.

பின்பு அறையிலிருந்து வெளியேறிஞள்...நடையில் நடந்த

போது கண்ணீர் மறைத்ததால் மீண்டும் அவள் எதையும் காணவில்லை. மகன் வீத்யா மேல் இரக்கம் பொங்கியது. ஓ, எவ்வளவு இரக்கம்! குழந்தைகளுக்கு உடம்புக்கு வரும் போதும் அவர்கள் மேல் நிரம்ப இரக்கம் உண்டாகிறது. ஆனல் இப்போது தனிப்பட்ட இரக்கம் பொங்கியது. மனிதர்களிடம் உதவி கேட்கிறேம், அவர்களோ, முகத்தைத் திருப்பிக் கொள்கிறார்கள், நேரிட்டுப் பார்க்க மாட்டோம் என்கிறார்கள். சில வேளைகளில் பயங்கரமாக இருக்கிறது... ஆனலும் தாயார் செயலாற்றினள். எண்ணங்களில் அவள் ஏற்கெனவே கிராமத்தில் இருந்தாள். பயணம் புறப்படுவதற்கு முன் யாரைப் பிடிக்க வேண்டும், எந்த மாதிரிப் பத்திரங்களை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று சீர்தூக்கிப் பார்த்தாள். நல்ல மனிதர்கள் தனக்கு உதவுவார்கள் என்ற அழிக்க முடியாத நம்பிக்கை அவளை மேலே மேலே நடத்திச் சென்றது. தாயார் எங்குமே தயங்கவில்லை, நிற்கவில்லை. வாயார அழவும் அவளுக்கு நேரம் இல்லை. தானும் புகலின்மைக்கு ஆளாவது அழிவு என்பதை அவள் அறிந்திருந்தாள். அவள் செயலாற்றினள்.

பிற்பகல் சுமார் மூன்று மணிக்குத் தாயார் மறுபடி கிராமத்திலிருந்து புறப்பட்டாள்—பிரதேச நிறுவனங்களுக்கு.

''ஆண்டவனே, காப்பாற்று, பிதாவே'' என்று மனதுக்குள் இடைவிடாமல் செபித்தாள். ''மகனுக்குக் கெட்ட எண்ணங்கள் தோன்ற விடாதே. அவனுக்கு நல்ல புத்தி கொடு. அவன் கொஞ்சம் கிறுக்கன். தனக்கு ஏதாவது செய்து கொண்டு விடாமல் இருக்க வேண்டுமே.''

பின் மாலையில் அவள் ரயிலேறிப் பயணம் தொடங்கினள்.

''பரவாயில்லை, நல்ல மனிதர்கள் உதவுவார்கள்.''

உதவுவார்கள் என்று அவள் நம்பினள்.

**வழிப்போக்கனின் மகன்**

ஸ்பிரிதோன் ரஸ்தர்கூயெவுக்கு முப்பத்தாறுவது வயது நடந்து கொண்டிருந்தது. ஆனுல் தோற்றத்தைக் கொண்டு இருபத்தைந்து வயதுக்குத்தான் மதிக்கலாம், அதற்கு மேல் இல்லே.

அவன் வியப்பூட்டும் அளவுக்கு அழகானவன். சனிக் கிழமையன்று குளியறைக்குப் போய், ஒரு வாரம் லாரி ஓட்டிய போது சேர்ந்த அழுக்கெல்லாம் உடம்பிலிருந்து அகலும் படி நீராவிக் குளியல் குளித்து விட்டு, புதுச் சட்டை போட்டுக் கொண்டு, ஒரு கிளாஸ் வோத்கா குடித்து விட்டால், இளம் தெய்வம்தான்! அறிவு சுடரும் தெளிவான விழிகள்... பெண்தன்மை வாய்ந்த உதடுகள் பழுப்பேறிய முகத்தில் சிவந்து மலர்ந்திருந்தன. இணைந்த புருவங்கள் காக்கைச் சிறகுகள் போல, சபல சித்தத்தைக் காட்டும் வளேவாக இரு புறமும் சென்றிருந்தன. சைத்தானுக்கே வெளிச்சம்!... இயற்கை சில வேளேகளில் கேலி செய்வதாகத் தோன்றுகிறது. அட எதற்காக அவனுக்கு? அவனே சொல்லுவான்: ''இது எனக்குத் திருண மாத்திரம்!'' என்று. எல்லாமே அவனுக்குத் ''திருண மாத்திரம்'' தான். முப்பத்தாறு வயது ஆகி விட்டது—குடும்பம் கிடையாது, உண்மையான வீட்டுப் பொறுப்பு கிடையாது. அவனுக்குத் தெரிந்தது ஆபாசச் சொற்களால் திட்டுவதும் தனிக்கட்டைகளான பெண்களிடம் இரவுகளில் சுற்றி அலேவதும்தான். அதுவும் வித்தியாசம் இல்லாமல் வரிசையாக. இதுவும் அவனுக்குத் ''திருண மாத்திரம்'' தான். வேண்டுமென்றே போல—வயதில் மூத்தவர்களேயும் அதிக விகாரமானவர்களேயும் விரும்பினுன்.

''ஸ்பிரிதோன், மடையனடா நீ, அடி மடையன். சொந்த மூஞ்சிக்காவது இரங்க மாட்டாயா! யாரிடம் போய்த் தொற்றிக் கொண்டிருக்கிறுய்—அம்மைத் தழும்பி லீஸ்காவிடம், அந்தத் துருவு பலகையிடம்!.. வெட்கமாய் இல்லேயா உனக்கு?''

''மூஞ்சியைப் பார்த்து முடிவு செய்யக் கூடாது'' என்று தர்க்க ரீதியாகப் பதில் சொன்னுன் ஸ்பிரிதோன். ''அவள்

துருவு பலகை என்கிறீர்கள், ஆனல் உங்களை விட நல்ல இதயம் உள்ளவள்.''

ஸ்பிரிதோனின் வாழ்க்கை பிள்ளைப் பிராயத்திலேயே கோணல்மாணலாகத் தொடங்கி விட்டது. ஐந்தாம் வகுப்பில் படித்துக் கொண்டிருந்த போதே அவனுக்குப் பல வகையான அனுபவங்கள் ஏற்பட ஆரம்பித்து விட்டன. ஜெர்மன் மொழி ஆசிரியை அடக்கமுள்ள கிழவி, ரோசக்காரி. யுத்த காலத்தில் சொந்த ஊரை விட்டு வெளியேறி வந்தவர்களைச் சேர்ந்தவள். ஸ்பிரிதோனைக் கண்டு அவள் பிரமித்துப் போனள்.

''பைரன்!.. ஆங்கிலக் கவி லார்டு பைரன்போல் இருக்கிறன்! ஆச்சரியப்படும் படியான உருவ ஒற்றுமை!'' என்று அவனைப் பார்த்ததும் சொன்னள்.

ஸ்பிரிதோனுக்குக் கிழவி மேல் ஆழ்ந்த வெறுப்பு ஏற்பட்டு விட்டது.

ஜெர்மன் மொழி வகுப்பு நேரம் நெருங்கியதுமே அவன் நெஞ்சு வலித்தது. மறுபடி ஆசிரியை தொடங்கி விடுவாள்: ''இல்லை, இது பிரமிக்க வைப்பது... பைரன் குஞ்சு, அப்படியே சின்ன பைரன்'' என்று. அவனுக்கு இது அலுத்துப் போய் விட்டது. ஒரு நாள் கிழவி வழக்கம் போல, ''நம்ப முடியாதது இது, யாருமே நம்ப மாட்டார்கள், குட்டி பை...'' என்று பல்லவி தொடங்கியதும்,

''அட போடீ நீ...'' என்று ஸ்பிரிதோன் குடிகாரப் பட்டிக்காட்டான் கூட நாணும்படி அவ்வளவு ஆபாசமான வசவுகளைப் பொழிந்தான்.

கிழவி மலைத்துப் போய் விட்டாள். பிறகு அவள் மற்றவர்களிடம் சொன்னள்:

''நான் பயந்து விடவில்லை. முதல் உலக யுத்தம் நடந்த போது நான் மருத்துவத் தாதியாகப் படையில் வேலை செய்தேன். நிறையக் கண்டேன், கேட்டேன்... ஆனல் இந்த மாதிரிச் சொற்களை இவன் எங்கிருந்து தெரிந்து கொண்டான், அதுதான் எனக்கு ஆச்சரியமாய் இருந்தது. ஆனலும் எவ்வளவு செப்பமான முகம்!.. கடவுளே, இவனுக்குத்தான் எப்பேர்ப்பட்ட முகம்—குட்டி பைரன்!''

இந்த ''பைரனை'' இரக்கம் இல்லாமல் நொய்யப் புடைத்தாள் தாயார். அவன் கொஞ்சம் படுத்துக் கிடந்து விட்டு, வலி தீர்ந்ததும் போர் முனைக்குக் கிளம்பினன். நவசிபீர்ஸ்க்

நகரில் பிடிக்கப்பட்டு வீட்டுக்குத் திருப்பி அனுப்பப்பட்டான். தாயார் மறுபடியும் அவனைத் தொலித்துப் போட்டாள்... ஆனால் இரவில் தன் தலைமயிரைப் பிய்த்துக் கொண்டு மகனுக்காக ஊளையிட்டாள். ''வழியோடு போன இளைஞன்'' ஒருவனைக் கூடி அவள் ஸ்பிரிதோனைப் பெற்றிருந்தாள். மகனிடம் இருந்த அந்த இளைஞனின் அம்சத்தை நோய்த் தன்மையுடன் நேசிப்பதும் வெறுப்பதுமாக இருந்தாள். ஸ்பிரிதோன் தகப்பனைப் பார்த்ததே கிடையாது, என்றாலும் அவனையே உரித்து வைத்தது போல் இருந்ததோடு சுபாவத்திலும் அவனைத் தோற்கடிப்பவனாக இருந்தான்.

தாயார் எவ்வளவோ அடித்துக் கொண்டாள், கையில் கிடைத்ததால் மொத்தினாள், ஆனாலும் அவன் பள்ளிக் கூடத்துக்கு மேற்கொண்டு போகவில்லை. வீட்டுக் கூரையிலிருந்து கவர்க்கோல் மேல் குதிப்பேன் என்று அவன் பயமுறுத்தவே, தாயார் பின் வாங்கினாள். ஸ்பிரிதோன் கூட்டுப் பண்ணையில் வேலை செய்யப் போனான்.

துடுக்கனாக வளர்ந்தான். மூத்தவர்கள் பேச்சைக் கேட்கவில்லை. போக்கிரித்தனம் செய்தான், அடிபிடி சண்டை போட்டான்... தாயார் கடைசியில் அவனோடு மல்லுக் கட்டிக் களைத்துப் போய் எக்கேடும் கெடட்டும் என்று விட்டு விட்டாள்.

''கிடக்கிறான், ஒருவேளை சிறைக்குப் போவான்'' என்றாள்.

மெய்யாகவே அவன் சிறைக்குப் போனான். யுத்தத்துக்குப் பிறகு. தன் நண்பனும் தன்னைப் போலவே சீர்திருத்த முடியாதவனுமான ஒரு நாடோடியுடன் சேர்ந்து நெடுஞ்சாலையில் கிராம நுகர்வோர் சங்க வண்டியை இடை மறித்தான். இருவரும் வோத்காப் புட்டிகள் அடங்கிய பெட்டி ஒன்றை வண்டி ஓட்டியவனிடமிருந்து பறித்துக் கொண்டார்கள்... அவனுடைய எதிர்ப்பைச் சமாளித்தார்கள்! அதோடு அவனை அடித்து நொறுக்க வேறு செய்தார்கள். ஸ்பிரிதோனுடைய வைப்பாட்டி வீட்டில் எதற்கும் துணிந்து ஒரு பகலும் இரவும் குடித்துக் கேளிக்கை நடத்தினார்கள்... அங்குதான் மிலீஷியா அவர்களைப் பிடித்தது. ஸ்பிரிதோன் துப்பாக்கியை எடுத்துக் கொண்டு ஓடிக் குளியறைக்குள் புகுந்து கொண்டான். அனேகமாக இரண்டு பகல்களும் இரவுகளும் பிடிக்க முடியவில்லை—அவன் சுட்டுக் கொண்டிருந்

தான். அவனுடைய வைப்பாட்டியான அலப்புவாய் வேராவை மிலீஷியாக்காரர்கள் ஸ்பிரிதோனிடம் அனுப்பினார்கள்— நல்லபடியாகத் தன்னை ஒப்புக் கொடுக்கும்படி சொல்வதற்கு. அந்த மடைச்சி ஆடைத் தலைப்புக்குள் ஒரு புட்டி வோத்காவையும் தோட்டாக்களையும் ஒளித்துக் கொண்டு கொடுத்தாள். நெடுநேரம் அவனோடு இருந்தாள்... பின்பு வெளியே வந்து, ''நடவாது!'' என்று கர்வத்துடன் அறிவித்தாள்.

ஸ்பிரிதோன் சன்னலுக்கு வெளியே சுட்டான், ருஷ்ய-ஜப்பானியப் போர்க் காலத்தில் பிரபலமாய் இருந்த பாட்டின் வரிகளைப் பாடினான்:

''செருக்குள்ள 'விராங்கியன்'
பகைவனுக்குப் பணிய மாட்டான்,
இரக்கம் எதும் வேண்டாம் என்கிறான்!''

''ஸ்பிரிதோன், நீ சுடும் ஒவ்வொரு குண்டுக்கும் ஓர் ஆண்டு அதிகத் தண்டனை கிடைக்கும்!'' என்று கத்தினார்கள் மிலீஷியாக்காரர்கள்.

''எண்ணுங்கள், எத்தனை?'' என்று பதிலளித்தான் ஸ்பிரிதோன். பின்பு சன்னல் வழியே நீண்ட குண்டு வரிசை சுட்டான். சுற்றிலும் இடி போன்ற முழக்கம் கேட்டது. பின்பு வெறி தணிந்து விடவே அவனுக்கு அடக்க முடியாதபடி உறக்கம் வந்தது. துப்பாக்கியை வெளியே எறிந்து விட்டுச் சரணடைந்தான்.

ஐந்து ஆண்டுகள் சிறையில் இருந்தான்.

வெளியே வந்த போது முன்போலவே அலட்சியமும் அழகும் துடுக்கும், முன்போலவே எதிர்பாராத தயாள குணமும் உள்ளவனாக இருந்தான் (அவனுடைய தயாளம் அவனது அழகைப் போலவே வியப்பூட்டியது. தன் கடைசிச் சட்டையைக்கூடக் கழற்றித் தேவைப்பட்டவனுக்குக் கொடுத்து விடுவான். விடுமுறை நாளில் காட்டுக்கு லாரியை ஓட்டிச் சென்று பகல் முழுதும் அங்கே கடுமையாக உழைத்து, மாலையில் லாரியில் விறகு ஏற்றித் தனியான யாரேனும் கிழவர்களுக்குக் கொண்டு கொடுப்பான். லாரியை ஓட்டி வந்து விறகை இறக்கிய பின் வீட்டுக்குள் போவான்.

''ஸ்பிரிதோன், கருணை வள்ளலே, இதற்காக உனக்கு

என்ன?... இதற்காக நாங்கள் என்ன தர வேண்டும்?'' என்று கிழவர்கள் ஆலைபாய்வார்கள்.

ஸ்பிரிதோனுக்கு மகிழ்ச்சி உண்டாகும்.

''ஒரு கிளாஸ் வோத்கா'' என்று சொல்லி விட்டு ஆவலுடன் பார்ப்பான். ''என்ன? நான் எப்படிப்பட்ட ஆள், பரவாயில்லையா?'' என்று சில வசவுச் சொற்களைக் கூறுவான்).

ஸ்பிரிதோன் சிறையிலிருந்து வந்தான்... கூட்டாளிகள் ஒருவரும் இல்லை. அவரவர் வெவ்வேறு இடங்களுக்குப் போய் விட்டார்கள்.வைப்பாட்டிகள் மணம் செய்து கொண்டு விட்டார்கள். அவனும் எங்காவது போய் விடுவான் என்று ஊரார் நினைத்தார்கள். அவன் போய் விடவில்லை. கொஞ்சம் போலக் குடித்துக் கூத்தடித்தான், பணத்தைத் தாயாரிடம் கொடுத்து விட்டுக் காரோட்டியாக வேலை செய்யத் தொடங்கினான்.

இவ்வாறு வாழ்ந்தான் ஸ்பிரிதோன்.

வசந்த காலத்தில் யாஸ்னயே கிராமத்துக்கு வந்தார்கள் இரண்டு புதியவர்கள். செர்கேய் யூரியெவிச், இரீனா இவானவ்னா என்ற பள்ளி ஆசிரியர்கள். கணவனும் மனைவியும். செர்கேய் யூரியெவிச் உடற் பயிற்சி ஆசிரியர். இரீனா இவானவ்னா இசை கற்பித்தாள்.

செர்கேய் யூரியெவிச் உயரம் அற்றவர், வலிய தசைகள் உள்ளவர், அகன்ற தோளினர். அனாயாசமாகத் துள்ளியவாறு விசுவாக நடந்தார், குட்டிக் கரணம் அடித்தார். பல்வேறு சாதனங்களில் விதம் விதமான உடற் பயிற்சிகளை அவர் ஆழ்ந்த ஈடுபாட்டுடன் செய்வதைப் பார்க்கவே இன்பமாய் இருந்தது... அசாதாரணமாக அகன்ற, திருத்தமான வாயும் முறைப்புள்ள பருத்த மூக்கும் இடைவிட்ட, மிக வெண்மையான, பெரிய பற்களும் கொண்டிருந்தார்.

இரீனா இவானவ்னாவுக்குச் சிறு கூடான, வெளிறிய, கன்னியினது போன்று வடிவமைந்த மேனி, சிறப்பான தன்மை எதுவும் இல்லை போலத் தோன்றியது, ஆனால், ஆசிரியை உடையை அணிந்து நடந்து நுனிக்கால்களில் நின்று அலமாரி மேலிருந்து கனத்த அக்கார்டியன் வாத்தியத்தை எடுத்துக் கொண்டதும், அந்த நேர்த்தியும் ஒயிலும் எங்கிருந்து தான் வந்தனவோ. பார்வை தானாகவே அவள் மேல் நிலைத்தது.

இந்தத் தம்பதியர் (அவர்களுக்குச் சுமார் முப்பது, முப்பத்திரண்டு வயது இருக்கும்) ஏப்ரல் மாதக் கடைசியில், வெதுவெதுப்பான, நல்ல நாட்களில் யாஸ்னயே கிராமத்துக்கு வந்தார்கள். கிழவர்களான புரோகுதின் தம்பதியரின் பெரிய வீட்டில் அவர்களுக்குத் தங்க இடம் தரப்பட்டது.

புதியவர்களை முதன் முதலில் பார்க்க வந்தவன் ஸ்பிரிதோன். புதிதாக வருபவர்களைக் காண முன்பும் அவன் போவது உண்டு, வருவான், சற்று நேரம் உட்காருவான், வீட்டுக்காரர்களோடு சேர்ந்து கொஞ்சம் குடிப்பான் (ஸ்பிரிதோன் குடித்தான் என்றாலும் நிதானம் இழக்கும் அளவுக்குக் குடித்தது அரிது என்பதை இதே கையோடு சொல்லி விட வேண்டும்). பின்பு போய் விடுவான்.

மாலை நேரம். ஸ்பிரிதோன் முகங்கை கழுவி, முகத்தை மழித்துக் கொண்டு விடுமுறை நாளில் அணியும் பாங்கான உடை அணிந்து புரோகுதின் தம்பதியர் வீட்டுக்குப் போனான்.

''போய் இவர்கள் எப்படிப்பட்ட ஆட்கள் என்று பார்க்கிறேன்'' என்று தாயாரிடம் சொன்னான்.

புரோகுதின் தம்பதியர் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள்.

''உட்கார், ஸ்பிரிதோன், சாப்பிடு'' என்று உபசரித்தார்கள். ஸ்பிரிதோன் சில வேளைகளில் முதியவர்களுக்கு உதவினான், அவர்கள் அவன் மேல் அன்பும் இரக்கமும் கொண்டிருந்தார்கள்.

''நன்றி. சாப்பிட்டு விட்டுத்தான் நேரே வருகிறேன். உங்கள் வீட்டில் புதியவர்களைக் குடி வைத்திருக்கிறீர்களாமே?''

கிழவர் உட்புற அறையைத் தலையசைப்பால் சுட்டி, ''அங்கே இருக்கிறார்கள். சாமான்களை ஒழுங்குபடுத்திக் கொண்டிருக்கிறார்கள்'' என்றார்.

''எப்படிப்பட்டவர்கள்?''

''மோசமில்லை. மரியாதை தெரிந்தவர்கள். பாலடைக் கட்டியும் மசாலை இறைச்சியும் தந்தார்கள். உட்கார். தின்று பார்.''

ஸ்பிரிதோன் தலையசைத்து விட்டு அறைக்குப் போனான். கதவைத் தட்டினான்.

''உள்ளே வாருங்கள்!'' என்று அறையிலிருந்து குரல் கேட்டது.

ஸ்பிரிதோன் உள்ளே போனான்.

''வணக்கம்!''

''வணக்கம்'' என்று பதிலளித்தார்கள் தம்பதியர். தம்மை அறியாமலே ஸ்பிரிதோனை வியந்து நோக்கினார் கள். இப்படி நடப்பது வழக்கந்தான்.

ஸ்பிரிதோன் அறிமுகம் செய்து கொண்டான்.

''ஸ்பிரிதோன் ரஸ்தர்கூயெவ்.''

''செர்கேய் யூரியெவிச்.''

''இரீனா இவானவ்னா. தயை செய்து உட்காருங்கள்.''

இரீனா இவானவ்னாவின் வெதுவெதுப்பான சிறு கையைப் பற்றிக் குலுக்குகையில் ஸ்பிரிதோன் அவளைத் தலைமுதல் கால்வரை ஒளிவு மறைவு இன்றி, ஆவலுடன் பார்த்தான். கைகுலுக்கலால் இரீனா இவானவ்னா சற்றே முகம் சுளித் தாள், புன்னகை செய்தாள், எதனாலோ சட்டென்று கையை விடுவித்துக் கொண்டு சட்டென்று திரும்பி மேசை அருகே சென்றாள்... நாற்காலியை எடுத்து வந்து ஸ்பிரிதோனைப் பார்வையிட்டாள். அவளுடைய பார்வையில் வியப்பு அவ் வளவாக இல்லையானாலும் மிகுந்த ஆர்வம் தென்பட்டது.

ஸ்பிரிதோன் உட்கார்ந்தான்.

செர்கேய் யூரியெவிச் அவனைப் பார்த்தார்.

''நல் வரவு'' என்றான் ஸ்பிரிதோன்.

''நன்றி.''

''பார்த்து விட்டுப் போகலாம் என்று வந்தேன். இல்லா விட்டால் எங்கள் ஊரார் ஏனென்று கேட்பதற்குள் ஆட் கள் வாடிப் போய் விடலாம்.''

''சகஜமாகப் பழக மாட்டார்களோ?''

''எல்லா ஊர்களிலும் போலவே. அவன் அவனுக்குத் தன் காரியமே குறி.''

''நீங்கள் இந்த ஊர்க்காரர் தாமே?''

''ஆமாம். சைபீரியன்.''

''செர்கேய், நான் எதாவது தயாரிக்கிறேனே?''

''தயாரி!'' என்று விருப்புடன் ஆமோதித்த செர்கேய், ஸ்பிரிதோனை மீண்டும் மகிழ்ச்சி பொங்க நோக்கினார். ''நமது புதுக் குடித்தன விழாவை ஸ்பிரிதோனுடன் சேர்ந்து கொண்டாடுவோம்'' என்றார்.

''ஒரு கிளாஸ் பருகலாம்'' என்று இசைந்தான் ஸ்பிரிதோன். ''எங்கிருந்து வருகிறீர்கள்?''

''ரொம்ப தூரத்திலிருந்து அல்ல.''

இரீனு இவானவ்னு கிழவர்களின் அறைக்குச் சென்றுள். ஸ்பிரிதோன் அவளைப் பார்வையால் தொடர்ந்தான்.

''இங்கே வாழ்க்கை எப்படி இருக்கிறது?'' என்று கேட்டார் செர்கேய்.

''வாழ்க்கையா...'' ஸ்பிரிதோன் சற்று நேரம் பேசாதிருந்தான். அவன் சொற்களைத் தேடவில்லை. ஆனால் வீட்டுக்காரி, இந்தச் சிறு மாது, வாழ்க்கை பற்றித் தான் சொல்லப் போவதைக் கேட்க மாட்டாள் என்பதால் அவனுக்குத் திடீரென வருத்தம் உண்டாயிற்று. ''மனிதன் இருக்கிருனே, பகுதி பகுதியாக வாழ்கிருன். ஒரு பகுதி நல்லது, மறு பகுதி கெட்டது...'' இல்லை, அவன் சொல்ல விரும்பியது இது அல்ல. ''அவள் எதற்காகப் போனுள்? கிழவர்களிடம் சொன்னுல் அவர்கள் வேண்டியதைச் செய்வார்களே'' என்று செர்கேயிடம் கேட்டான்.

''எதற்காகவாவது? அவள் வீட்டுக்காரி அல்லவா? ஆமாம், உங்கள் வாழ்க்கையில் இப்போது என்ன பகுதி நடக்கிறது?''

''இப்படித்தான்—இதுவுமில்லை, அதுவுமில்லை. மொத்தத்தில் பார்த்தால் ஒன்றுமில்லை...'' அவள் அங்கே மட்டித்தின் பண்டங்கள் தயாரித்துக் கொண்டிருந்த போது பேசவே பிடிக்கவில்லை.' 'சிகரெட்டு குடிக்கலாமா?''

''குடியுங்கள்.''

''பள்ளியில் வேலை பார்க்கவா?''

''ஆமாம்.''

''அவள் என்ன சொல்லிக் கொடுப்பாள்?''

''பாட்டு.''

''என்ன, நன்றுகப் பாடுவாளா?''

''பாடுவாள்...''

''இப்போது பாடிக்காட்டலாமா, நமக்கு?''

''ஊம்... கேளுங்களேன். ஒருவேளை பாடுவாள்.''

''போய்க் கிழவர்களிடம் சொல்லுகிறேன்... அவள் அங்கே வீணுகப் பாடுபடுகிறுள்!''

இவ்வாறு சொல்லி அறையிலிருந்து வெளியேறினுன் ஸ்பிரிதோன்.

இரீனுவும் ஸ்பிரிதோனும் ஒன்றுகத் திரும்பி வந்தார்

கள். இரீனு ஒரு தட்டில் பாலடைக் கட்டி, மசாலை இறைச்சி, கொழுப்பு முதலியவற்றை எடுத்து வந்தாள்...

''சூடாக ஒன்றும் பண்ண வேண்டாம் என்ருர், நான் ஒப்புக் கொண்டேன்'' என்ருள் அவள்.

''நல்லது.''

''அட அது யாருக்கு வேண்டும்?..'' என்று பேசத் தொடங்கிய ஸ்பிரிதோன், தன் வழக்கமான வசவுச் சொற் களைக் கூற அனேகமாக வாய் எடுத்து விட்டான். ''உப்பி லிட்ட வெள்ளரிக்காயும் கொழுப்பும் ருசியான பண்டங்கள்! இல்லையா?'' என்று வீட்டுக்காரரை நோட்டமிட்டான்.

''உனக்குத் தெரியாததா'' என்று கொஞ்சம் கடுகடுப் புடன் சொன்னுர் செர்கேய்.

அவர் ஒருமையில் பேச ஆரம்பித்தது ஸ்பிரிதோனுக்கு மகிழ்ச்சி அளித்தது. அப்படிச் சொந்தம் பாராட்டுவது நல்லது. கணவனும் மனைவியும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டதை அவன் கவனிக்கவில்லை. அவனுக்கு மகிழ்ச்சி உண்டாயிற்று. இப்போதைக்கு ஒரு கிளாஸ் வோத்கா... அப்புறம் நடப்பதைப் பார்ப்போம்.

வோத்காவுக்குப் பதில் அதிக நாகரிகமான கொனியாக் (பிராண்டிப்) புட்டி மேசைமேல் வைக்கப்பட்டது.

''நான் ஒரே தடவையில் ஒரு கிளாஸ் பருகி விட்டு அதோடு நிறுத்திக் கொள்கிறேன். அப்படிப் பழகி விட் டேன். உங்களுக்குத் தடை இல்லையே?''

வீட்டுக்காரர்கள் ஸ்பிரிதோனுக்கு அன்புகூர்ந்து அனு மதி அளித்தார்கள்.

ஸ்பிரிதோன் கொனியாக் பருகிவிட்டு மசாலை இறைச்சி ஒரு சிறு துண்டு எடுத்துக் கொண்டான்...

''இதோ...'' என்று உடம்பை நெளித்து, ''உருகா உறைபனிப் படிவு வாங்கி இருக்கிறீர்கள், பேச்சு வழக்கில் சொல்லுவது போல'' என்ருன்.

கணவனும் மனைவியும் ஆளுக்கு ஒரு சிறு கிண்ணம் கொனியாக் பருகினுர்கள். மாதின் மென்மையான குரல்வளை நடுங்கியதை ஸ்பிரிதோன் கவனித்தான். ஒரு கிளாஸ் கொனி யாக்கை ஒரே மூச்சில் பருகியதாலோ, இளம் இரத்தத்தின் காரணமாகவோ, இதயத்தில் குப்பென்று சூடேறியது. அந்த மென்மையான கழுத்தைத் தொட்டுத் தடவ வேண்டும் என்ற ஆசையால் கைகளில் அரிப்பு எடுத்தது. ஸ்பிரிதோ

னின் பார்வை அதிக ஒளியும் அதிக அறிவும் சுடர்ந்தது. நெஞ்சில் இன்பம் ஊற்றெடுத்தது.

''அருமையான கொனியாக், விலைதான் அதிகம்'' என்று புகழ்ந்தான்.

செர்கேய் கலகலவென்று நகைத்தார். ஸ்பிரிதோன் அவரைச் சட்டை செய்யவில்லை.

''வீட்டில் தயாரித்த வோத்கா நல்லது இல்லையா? மலிவுக்கு மலிவு, காட்டத்துக்குக் காட்டம்'' என்றார் செர்கேய்.

''ஏதேனும் இன்பக் கதை சொல்லட்டுமா?'' என்று கேட்டான் ஸ்பிரிதோன்.

''வீட்டில் வோத்கா தயாரிப்பது இப்போது அபூர்வம். அது யுத்த காலத்தில் தான்...'' என்றான். தொலைவில் சென்று விட்ட ஆண்டுகள் நினைவுக்கு வந்தன. பட்டினியையும் சக்திக்கு மீறிய, சிறு பிள்ளைகளின் இயல்புக்கு மாறான கடும் வயல் வேலையையும் நினைத்துக் கொண்டான்... இவை எல்லாவற்றையும் பற்றிக் குதூகலமாகக் கதை சொல்ல விருப்பம் உண்டாயிற்று. அழகிய தலையைப் பின்னே சாய்த்து, மாதை நேரிட்டு நோக்கியவாறு புன்னகை புரிந்தான்...

''நான் எப்படி வாழ்ந்தேன் என்று சொல்லட்டுமா?''

இரீனா அவன் மேலிருந்து பார்வையைச் சட்டென அகற்றிக் கணவனைப் பார்த்தாள்.

''சொல்லு, சொல்லு, ஸ்பிரிதோன். நீ எப்படி வாழ்ந்தாய் என்று தெரிந்து கொள்வது சுவையாய் இருக்கும்'' என்றார் செர்கேய்.

ஸ்பிரிதோன் சிகரெட்டு பற்ற வைத்துக் கொண்டான்.

''நான் மணமாகாதவளுக்குப் பிறந்தவன்'' என்று தொடங்கினான்.

''அது எப்படி?'' என்று விளங்காமல் கேட்டாள் இரீனா.

''அம்மா கள்ளப் புருஷனைக் கூடி என்னைப் பெற்றாள். இந்த வட்டாரத்தில் ஒரு துணிந்த ஆள் இருந்தான். பிரதேசம் எங்கும் சுற்றி மென்மயிர்த் தோல் சேகரித்தான். தருவிப்பாளன். ஆயிற்று, அவற்றோடு கூடவே என்னையும் தருவித்தான்.''

''நீங்கள் அவரை அறிவீர்களா?''

''பார்த்ததே கிடையாது. அம்மாவுக்கு வயிறு பருத்த பிறகு அவன் அவள் கண்ணில் படவே இல்லை. அப்புறம்

அவன் எதற்காகவோ கைதானுன். பிற்பாடு தகவலே கிடையாது. ஒருவேளை தூக்குப் போட்டிருப்பார்கள். ஆயிற்று, நான் வாழ்ந்து வளரத் தலைப்பட்டேன்...'' தன் வாழ்க்கை பற்றிக் குதூகலமாகக் கதை சொல்லும் ஆசை எப்படித் திடீரென எழுந்ததோ, அப்படியே திடீரென அற்றுப் போய் விட்டது. ''குதூகல நிகழ்ச்சிகள் குறைவு... சிறை முகாமைப் பற்றிச் சொல்வதா என்ன?'' ஸ்பிரிதோன் இரீனவைப் பார்த்தான். அவளுடைய இனிய கழுத்தைத் தொட்டுப் பார்க்கும் ஆசை உள்ளத்தில் மறுபடி எழுந்தது.

அவன் எழுந்திருந்தான்.

''நான் லாரி ஓட்டப் போக வேண்டும். சிற்றுண்டிக்கு நன்றி'' என்றுன்.

''இரவு நேரத்தில் லாரி ஓட்டவா?'' என்று வியந்தாள் இரீன.

''எங்களுக்கு இது சகஜம். விடை கொடுங்கள். உங்கள் வீட்டுக்கு மறுபடி வருவேன்.''

திரும்பிப் பார்க்காமல் வெளியேறினுன் ஸ்பிரிதோன்.

''விந்தையான இளைஞன்'' என்று சற்று நேர மௌனத்துக்குப் பிறகு சொன்னுள் மனைவி.

''அழகானவன் என்று சொல்ல விரும்பினுயோ?''

''அழகானவன்தான்.''

''அழகானவன்... அவன் உன் மேல் காதல் கொண்டு விட்டான், தெரியுமா?''

''அப்படியா?''

''உனக்கும் நெஞ்சு குறுகுறுத்தது போலிருக்கிறது. குறுகுறுத்தது அல்லவா?''

''எதை வைத்துக் கொண்டு சொல்லுகிறுய்?''

''கட்டாயம் குறுகுறுத்தது.''

''குறுகுறுக்க வேண்டும் என்று விரும்புகிறுயா?''

''வேறு என்ன?... ஆனுல்... உனக்கு வாய்க்காது.''

மனைவி கணவரை நோக்கினுள்.

''நீ பயப்படுவாய். இதற்குத் துணிவு வேண்டும்'' என்றுர் அவர்.

''நிறுத்து'' என்று கண்டிப்பாகச் சொன்னுள் மனைவி. ''எதற்காக நீ?''

''துணிவும் சந்தேகம் இல்லாமல் வலிமையும்'' என்று பேச்சைத் தொடர்ந்தார் கணவர். ''ஒரு வகையில் சொன்

ஞல் தகுந்த பாங்கில் இருக்க வேண்டும். இதோ இவஞல் முடியும். ஆமாம், இவன் சிறையில் இருந்தாஞம்.''

''எதஞல் சொல்லுகிருய்?''

''நீ நம்பவில்லேயோ? போய்க் கிழவர்களிடம் கேள்.''

''உனக்கு வேண்டுமாஞல் நீயே போய்க் கேள்.''

''அதற்கென்ன?..''

கணவர் வெளியே, கிழவர்களிடம் போஞர்.

ஐந்து நிமிடம் பொறுத்துத் திரும்பி வந்தார்... அசட்டுத் தனமான வெற்றிக் களிப்புடன் முழங்கிஞர்:

''ஐந்து ஆண்டுகள்! கடுங்காவல் சிறை முகாம்களில். கொள்ளேக் குற்றத்துக்காக.''

மாலேத் தறுவாயில் ஈரித்திருந்த குளிர் காற்று சூடான முகத்துக்கு மிகவும் இதமாய் இருந்தது. ஸ்பிரிதோன் நடந்த வாறு புகை பிடித்தான். அடை மழை சோவென்று கொட்ட வேண்டும்—சோஞமாரியாகப் பெய்ய வேண்டும்—பல் வைத்த நெருப்பு வாட்களால் வானம் கிழிபட வேண்டும், இடி இடிக்க வேண்டும் என்ற ஆசை திடீரென்று மனத்தில் எழுந்தது... அப்படி மழை கொட்டி இடி இடித்தால் உரக்கக் கத்த லாம் என்று தோன்றியது.

ஸ்பிரிதோன் தனது அடுத்த ''முழைக்கு''—நியூரா ஸவி யாலவா என்பவள் வீட்டுக்குப் போஞன்.

சன்னல் கதவைத் தட்டிஞன்.

தூங்கத் தொடங்கியிருந்த நியூரா வெண் புள்ளி போலச் சன்னலுக்குப் பின் மங்கலாகத் தெரிந்தவாறு ''ஊம்?'' என்று அதிருப்தியுடன் கேட்டாள்.

ஸ்பிரிதோன் நியூராவைப் பற்றி எண்ணியவாறு பேசா திருந்தான். யுத்த காலத்தில், இருபத்து மூன்று வயதான நியூரா விதவையாகி இரண்டு சிறு குழந்தைகளேக் காப்பாற்ற வேண்டி இருந்த போது, ஒரு நாள் இரவில் ஸ்பிரிதோன் (அவனுக்கு அப்போது பதிஞன்காவது வயது நடந்து கொண் டிருந்தது) சரக்கு வண்டியிலிருந்து ஒரு கோதுமை மூட்டையை (மாவு அரைப்பதற்காக வண்டித் தொடர் நகரத்துக்குப் போய்க் கொண்டிருந்தது) அவள் வீட்டுக் காய்கறித் தோட்டத்தில் போட்டான். இதே சன்னலேத் தான் போலிருக்கிறது, தட்டிப் பரபரப்போடு சொன்ஞன்:

''காய்கறித் தோட்டத்தில், குளியறைக்குப் பக்கத்தில்

கிடக்கிறது பார்... எடுத்துத் தொலேவில் ஒளித்து வை!''

இரண்டு நாட்களுக்குப் பிறகு மறுபடியும் இரவில் அவன் நியூராவின் வீட்டுக்கு வந்த போது, அவள் அவன் மேல் பாய்ந்தாள்:

''என்னடா நீ, ஸ்பிரிதோன், வரிப் பாம்புப் பயலே, என்னேச் சிறையில் தள்ளப் பார்க்கிருயா? நீ திருப்தியாகச் சாப்பிடுவதற்காக மற்றவர்கள் வீட்டில் திருட்டு மூட்டையைத் தள்ளுகிருயோ?..''

ஸ்பிரிதோன் மலேத்துப் போனுன்.

''அட நான் எனக்காக அல்ல, நீ என்ன கத்தக் கிளம்பி விட்டாய்?''

''பின்னே யாருக்காக?''

''உனக்காக. இதுகள் சாப்பிட வேண்டுமே'' என்று நியூராவின் குழந்தைகளேக் குறித்தான். ''இதுகள் பட்டினி கிடக்கிறதே'' என்ருன்.

நியூரா பசு மாடு போல மாவென்று அலறி, ஸ்பிரிதோனேக் கட்டித் தழுவி முத்தமிடத் தொடங்கினுள். ஸ்பிரிதோன் குழம்பிப் போய் ஆபாச வசவுகளேப் பொழிந்தான்.

''அது தான் சேதி... உரலில் மாவு இடித்து ரொட்டி தட்டித் தணலில் சுடு. என்ன ருசி, தெரியுமா, சொல்லி முடியாது!..''

இந்த நிகழ்ச்சிதான் இப்போது நினேவுக்கு வந்தது.

''என்ன நிற்கிருய்?'' என்று கேட்டாள் நியூரா. ''கதவு திறந்திருக்கிறது... கிழவர்களே எழுப்பி விடாதே'' என்ருள்.

ஸ்பிரிதோன் நின்று கொண்டிருந்தான். அவனுடைய சுபாவத்தில் ஒரு வகையான கொடிய ஆவல் இருந்தது. அவள் இப்போது என்ன செய்வாள் என்று தெரிந்து கொள்ள விரும்பினுன்.

''ஸ்பிரிதோன்!.. அட எதற்காக நீ?''

மௌனம்.

''வாயேன், ஊம்?''

மௌனம்.

''மட்டிக் கிறுக்கன்... எழுப்புகிருன், பிறகு தொடங்குகிருன் கிறுக்குத்தனத்தை... அப்படியானுல் எக்கேடும் கெட்டுப் போ!'' நியூரா கட்டிலுக்குப் போய் விட்டாள்.

நியூராவின் பெற்ருேர் குறட்டை விட்டுக் கொண்டிருந்த

வீட்டுக்குள் முன்னறை வழியே சத்தமில்லாமல் புகுந்து உள் அறையை அடைந்தான் ஸ்பிரிதோன்.

''என்ன பிரமாதச் சண்டித்தனம் பண்ணுகிருய்?''

ஸ்பிரிதோனுக்கு நியூரா மேல் தாங்க முடியாத அளவு இரக்கம் பொங்கியது... மெய்யாகவே எதற்கு இந்த இழுபறி? அப்போது வராமலே இருப்பது மேல்.

''அவ்வளவுதான், நியூரா, தூங்குவோம்.''

மூன்று நாட்களுக்குப் பிறகு ஒரு மாலையில் ஸ்பிரிதோன் புரோகுதின் தம்பதியரின் வீட்டுக்குப் போனுன். குடியிருந்தவர்கள் வீட்டில் இல்லை. ஸ்பிரிதோன் அப்போதைக்குக் கிழவர்களுடன் பேசிக் கொண்டிருந்தான்.

இரீனு வந்தாள். தனியாக. புது மலர்ச்சியும் அறிவும் துலங்க... வசந்த கால மாலையின் தெள்ளிய குளுமையை வெளியிலிருந்து வீட்டுக்குள் கொண்டு வந்தாள். வியப்பு அடைந்தாள். அவள் மகிழ்ச்சியும் அடைந்ததாக ஸ்பிரிதோனுக்குத் தோன்றியது.

அமைதியும் உறுதியும் வாய்ந்த ஸ்பிரிதோன் அறைக்குள் புகுந்தான்...

''இந்தாருங்கள்'' என்று தழல்போல் சிவந்த மலர்ச் செண்டை இரீனுவுக்குக் கொடுத்தான்.

''ஆகா!..'' என்று முன்னிலும் அதிக மகிழ்ச்சி அடைந்தாள் இரீனு. ''ஆகா, எப்பேர்ப்பட்டவை! இவற்றின் பெயர் என்ன? இந்த மாதிரிப் பூக்களை நான் பார்த்ததே இல்லை...''

''ஜார்க்கி'' என்ற ஸ்பிரிதோனின் உள்ளம் மகிழ்ச்சியால் பூரித்து இனிமையாக ஒலிக்கத் தொடங்கியது. அடிபிடி சண்டை போடவோ, பிடித்த மாதைக் கட்டித் தழுவவோ வாய்த்த சந்தர்ப்பங்களுக்கு முன் இவ்வாறு நேர்ந்தது உண்டு. அவன் காதலை மறைக்கவில்லை. ''இனிமேல் இந்த மாதிரிப் பூக்களை உங்களுக்கு அடிக்கடி கொண்டு தருவேன்'' என்முன்.

''அட வேண்டாம், எதற்காக?.. இது அனுவசியச் சிரமம் ஆயிற்றே...''

''அடேயப்பா, பிரமாதச் சிரமம் என்ன இதிலே!'' என்று பசப்பினுன் ஸ்பிரிதோன். ''அந்த வழியாக லாரியில் போகிறேன். இந்தப் பூச்செடிகளோ, அறுவடை செய்யலாம் போலச் செழித்து மண்டிக் கிடக்கின்றன அங்கே...'' என்முன். என்ன ஆனுலும் தான் அழகனுக இருப்பது நல்லது

தான் என்ற எண்ணம் அவன் மனத்தில் தோன்றியது. வேறு ஒருவனாய் இருந்தால் இதற்குள் வெளியே நெட்டித் தள்ளி இருப்பார்கள், அவ்வளவுதான். அவன் புன்னகைத்தான். அவனுக்கு மகிழ்ச்சியாய் இருந்தது.

இரீனாவும் கலகலவென்று சிரித்தாள், கூச்சப்பட்டாள். ஸ்பிரிதோன் இன்பம் அனுபவித்தான்: வெயில் பொசுக்கும் பகலில், குளிர் நீர் பொங்கும் ஊற்றில் முகம் முழுவதையும் அமிழ்த்தித் தண்ணீர் பருகுபவன் போல. பருகினான், பருகிக் கொண்டே இருந்தான்—சுரத்தின் அயர்த்தும் வெம்மை மேனி முழுவதிலும் நெருப்பாய்ப் பரவியது. அவன் மாதின் கையைப் பற்றினான்... கனவில் போல! விழிப்பு மட்டும் வராமல் இருக்க வேண்டும்!

மாது கையை விடுவித்துக் கொள்ள முயன்றாள்... ஸ்பிரிதோன் விடவில்லை.

''எதற்காக நீங்கள்?.. வேண்டாம்.''

''ஏன் வேண்டாம்?'' என்றான் ஸ்பிரிதோன். தன்னால் முடிந்தவை எல்லாவற்றையும், மற்ற மாதர்கள் விஷயத்தில் தவறாமல் எப்போதும் பலித்த எல்லாத் தந்திரங்களையும் இந்த இனிய மெல்லியல் மேல் கையாள அவன் விரும்பினான். ''கடவுளே, கைகொடு! இவள் முரண்டாமல் இருக்கட்டும்!'' என்று மனதுக்குள் வேண்டிக் கொண்டான். அவளைத் தன்னருகே இழுத்தான்... பக்கத்தில் இருந்த, வியப்படைந்த அவள் விழிகள் அகலமானதைக் கண்டான். இப்போது கை நடுங்கக் கூடாது, வலு இழந்து விடக் கூடாது... ''கடவுளே, இப்போது எனக்கு வேறு ஒன்றும் வேண்டாம்—முத்தம் இடுகிறேன், அது போதும்''. அவன் முத்தம் இட்டான். அவளுடைய மென்மையான வெண் கழுத்தை வருடினான்... படிந்து கொடுத்த மெல்லிதழ்களை மீண்டும் முத்தம் இட்டான். அப்போது வந்து விட்டார் கணவர்... செர்கேய். அவர் வந்தது ஸ்பிரிதோனுக்குக் காதில் படவில்லை. மாதின் தலை சட்டென்று பின்னே சாய்ந்ததையும் அவளுடைய விழிகளில் அச்சம் ததும்பியதையும் அவன் கண்டான்...பின்னால் ஒலித்த—பயங்கரமாகப் பழக்கமான—குரலைக் கேட்டான்:

''அவர்கள்தான். மேற்கொண்டு கணவனும்.''

ஸ்பிரிதோன் மாதை விட்டு விட்டான். அவனுக்கு வெட்கமும் உண்டாகவில்லை, அச்சமும் தோன்றவில்லை.

வருத்தம் ஏற்பட்டது. கச்சிதமாக உடையணிந்து விரைப்பாக, தன்னம்பிக்கையுடன் நடமாடிய இந்த மனிதர் மேல் எரிச்சல் பற்றிக் கொண்டு வந்தது... எஜமானர் வந்து விட்டார்! இந்த மாதிரிச் சைத்தான்களிடம் எல்லாம் இருக்கின்றன, எல்லா இடங்களிலும் இவர்கள் விரும்பத்தக்க மனிதர்கள். அவன் கணவர் மீது பார்வை செலுத்தினன்.

''துணிந்த ஆள்தான்! அப்புறம், வாய்த்ததா ஏதாவது?'' செர்கேய் புன்னகை செய்ய முயன்ருர், ஆனல் புன்னகை வரவில்லை. விழிகள்தாம் மோசமாகக் குறுகின, பருத்த உதடுகள் கோபத்தால் நடுங்கின. அவர் மனைவியைப் பார்த்தார். ''என்ன பேசாதிருக்கிறீர்கள்? என்ன வெளிறிப் போனுய்?'' வன்மம் நிறைந்த திடீர்க் கத்தல்—மனைவியைச் சவுக்கால் அடிப்பது போல. ''வேசி! சாதித்துக் கொண்டாயா காரியத்தை?'' கணவர் மனைவியின் பக்கம் அடி எடுத்து வைத்தார். ஸ்பிரிதோன் அவரை வழி மறித்தான். ரோசத்தாலும் சீற்றத்தாலும் பள்ளி ஆசிரியரின் கரு விழிகள் தழல் வீசியதை அருகில் கண்டான்... செர்கேயின் நன்கு மழித்த மழமழப்பான கன்னங்களிலிருந்து வந்த ஒடிகொலோனின் மெல்லிய குளிர் மணத்தையும் முகர்ந்தான் ஸ்பிரிதோன்.

''பதற்றம் வேண்டாம்'' என்ருன்.

மறு கணத்தில் வலிய குட்டைக் கை ஸ்பிரிதோனை அறையிலிருந்து இழுத்தது.

''இந்தா, அழகு ராஜா, போவோம் வா!..''

ஸ்பிரிதோனுல் ஒன்றும் செய்ய முடியவில்லை அந்தக் கையை. அது பொங்கிப் பின்கழுத்தைப் பற்றியது. அதன் உறுதியோ மனிதத்தன்மைக்கு அப்பாற்பட்டதாக இருந்தது. இயந்திரத்தின் இரும்புத் தடி பின்னுலிருந்து நெட்டித் தள்ளுவது போல் தோன்றியது.

ஸ்பிரிதோன் கிழவர்களின் அறை வழியாக இந்த மாதிரி இழுத்துச் செல்லப்பட்டான். குடியிருந்தவரையும் ஸ்பிரிதோனையும் பரக்க விழித்துப் பார்த்தார்கள் கிழவர்கள்.

''அசிங்கம் பண்ணின கடுவனைப் பிடித்து விட்டேன்'' என்று விளக்கினுர் குடியிருந்தவர்.

ஸ்பிரிதோனின் உள்ளம் பட்ட பாடு பயங்கரம்!.. வெட்கம், வலி, சீற்றம்—எல்லாம் அதில் கலந்து குழம்பின. மூச்சு திணறியது.

''அட்டுப் பிடித்த வாத்தியார்ப் பயலே, என்ன செய்கிருய்?..'' என்று கரகரத்தான் ஸ்பிரிதோன்.

வாயிலுக்கு வந்தார்கள்... இயந்திர இரும்புத் தடி இயங்கிற்று. உயரமான வாயிற்படியிலிருந்து கீழே பாய்ந்து விழுந்து, கால்களைத் தேய்த்துத் துடைப்பதற்காகப் பரப்பி இருந்த ஈர வைக்கோல் பற்றை மேல் உருண்டான் ஸ்பிரிதோன்.

''கொலை செய்வேன்'' என்ற எண்ணம் அவன் மூளையில் உதித்தது.

செர்கேய் அவன் அருகே இறங்கி வந்தார்...

''எழுந்திரு!''

தான் அனுமதிக்கப்பட்ட அளவுக்குத் துள்ளி எழுந்தான் ஸ்பிரிதோன்... அக்கணமே தடாலென்று தரையில் விழுந்தான். ''இவர் என்னை அடிக்க அல்லவா செய்கிருர்!'' என்று கோரமும் அருவருப்பும் பொங்கப் புரிந்து கொண்டான். மீண்டும் துள்ளி எழுந்து, பயங்கர இரும்புத் தடியின் கீழாக நுழைந்து உடற்பயிற்சி ஆசிரியரின் குரல்வளையைப் பிடிக்க முயன்ருன். ஆனுல் இரும்புத் தடியே போன்ற மறு கரம் கீழிருந்து அவன் தாடையில் சுருக்கமாக இடித்தது... ஸ்பிரிதோன் பின்னே தள்ளப்பட்டான். அவன் வாயில் கட்டியாக எதுவோ அடைத்துக் கொண்டது. மறுபடியும் ஆசிரியர் மேல் பாய்ந்தான்... அவன் சண்டை போடத் திறன் உள்ளவன்தான், ஆனுல் கடுஞ் சீற்றமும் வலியும் அவமானமும் இரும்புத் தடிகள் போன்ற கைகளுக்கு முன் தன்னுடைய ஏலாமையும் அவனுடைய வழக்கமான லாகவத்தையும் அமைதியையும் பறித்து விட்டன. கண்ணற்ற சீற்றம் அவனை மீண்டும் மீண்டும் முன்னே பாயத்தூண்டியது. மறு புறத்தில் இரும்புத் தடிகள் இயங்கிய வண்ணமாய் இருந்தன. அவனுடைய அடி ஒன்று கூட ஆசிரியர் மேல் படவில்லை போல் இருந்தது. ஆசிரியரின் கடைசித் தாக்கு அவனை ஒரேயடியாக வீழ்த்தி விட்டது. ஆசிரியர் அவன் பக்கம் குனிந்தார்.

''நான் உன்னைத் தொலைத்து விடுகிறேன்'' என்று தெளிவில்லாமல், ஈன சுரத்தில், ஆழ்ந்த முறையில் குழறினுன் ஸ்பிரிதோன்.

''மரியாதையாக நடந்து கொள்வதற்கான படிப்பினை இது என்று எண்ணுவோம். சிறை முகாம் வேலைகளை

இங்கே காட்டக் கூடாது, நிறுத்தி விட வேண்டும்.'' ஆசிரியரின் குரல் வன்மம் இல்லாமல், ஆழ்ந்து ஒலித்தது.

''நான் உன்னைக் கொலை செய்வேன்'' என்று திருப்பிச் சொன்னான் ஸ்பிரிதோன். வாயில் வலியுண்டாக்கும் ஏதோ சப்புச் சவறு அடைந்திருந்தது. ஓடிகொலோன் சீசாவை அவன் கடித்து நொறுக்கி விட்டது போலவும் அதன் சில்லுகள் வாயை எல்லாம் அறுத்துக் காந்தச் செய்வது போலவும் இருந்தது. ''கொலை செய்வேன், பார்.''

''எதற்காக?'' என்று அமைதியாக வினவினார் ஆசிரியர்.

''பார்.''

ஆசிரியர் வீட்டுக்குள் போய், கதவைப் படீரென்று சாத்தி, இரும்புத் தாழ்ப்பாளைப் போட்டார்.

ஸ்பிரிதோன் எழுந்திருக்க முயன்றான், முடியவில்லை. தலை விண்விண்ணென்று தெறித்தது, ஆனால் தெளிவாகச் சிந்திக்க முடிந்தது. புரோகுதின் தம்பதியரின் வீட்டுக் கூரையிலிருந்து சிறு திறப்பு வழியாகச் சாமான் அறைக்குள் இறங்கலாம் என்பதை அவன் அறிந்திருந்தான். சாமான் அறை பூட்டப்படுவதில்லை. கதவு தானாகத் திறந்து கொள்ளாதிருப்பதற்காகச் சணற்கயிற்றால் சுருக்கிட்டு ஆணியில் மாட்டியிருந்தது, அவ்வளவுதான். கிழவர்களின் அறையும் இரவில் ஒருபோதும் பூட்டப்பட்டதில்லை. உள்ளறைக்கோ தாழ்ப்பாளே கிடையாது. புரோகுதின் தம்பதியரின் மகன் மீஷாவும் ஸ்பிரிதோனும் சிறு வயது முதலே கூட்டாளிகள். ஸ்பிரிதோன் அவர்கள் வீட்டுக்கு அடிக்கடி போனான், இரவில் அங்கே தங்கக்கூடச் செய்தான். இப்போது மீஷா இல்லை என்றாலும் கிழவர்களின் வீட்டில் எல்லாம் முன்போலவே இருந்து வந்தன.

முடிவில் ஸ்பிரிதோன் மிகுந்த சிரமத்துடன் எழுந்து, வீட்டுச் சுவற்றைப் பிடித்துக் கொண்டு நின்றான்... ஆற்றுக்குப் போனான். சக்தி திரும்பி வந்து விட்டது.

உடைந்த முகத்தைக் கழுவிக் கொண்டான். நெருப்புக் குச்சிகளைக் கிழித்து, சராய், கோட்டு, சட்டை எல்லாவற்றையும் பார்வையிட்டான்... தாயார் இரத்தத்தைப் பார்த்து விடக் கூடாது, இல்லாவிட்டால் அவன் துப்பாக்கியை எடுக்கும் போது ஏதோ சரியில்லை என்று சந்தேகிப்பாள். துப்பாக்கியை ஏதேனும் காரணம் சொல்லி எடுத்துக் கொள்ளலாம். விதைத் தானியத்தை ஏற்றிக் கொண்டு

இரவில் உட்புகுதிகளுக்குப் போவதாகவும் காலையில் திரும்பி வரும் வழியில் ஏரிக் கரையில் சற்று நேரம் இருக்கப் போவ தாகவும் சொல்லலாம்.

வீட்டில் தாயார் அதற்குள் உறங்கிக் கொண்டிருந்தாள்.

''நீயா ஸ்பிரிதோன்?'' என்று தூக்கக் குரலில் கேட் டாள்.

''நான்தான். தூங்கு. நான் போக வேண்டும்.''

''அடுப்பில் பொரித்த உருளைக் கிழங்கும் வெளி அறை யில் பாலும் இருக்கின்றன... சாப்பிட்டு விட்டுப் போயேன்.''

''சரி. கையோடு எடுத்துப் போகிறேன்.'' ஸ்பிரிதோன் விளக்கு ஏற்றுமல், சுவற்றிலிருந்து துப்பாக்கியை ஓசையின்றி எடுத்து நடைக்குப் போய் அதில் தோட்டாக்கள் சரியாய் இருக்கின்றனவா என்று பார்த்தான்... பின்பு வீட்டுக்கு உள்ளே போனுன் (துப்பாக்கியை நடையில் வைத்தான்). படுக்கைப் பரண் அருகே போய், படியில் ஏறி நின்று, இருட் டில் தாயாரின் தலையைக் கண்டுபிடித்து அருகிய, கதகதப் பான கூந்தலை வருடினுன். குடித்த பின் அவன் தாயாரைக் கொஞ்சுவது உண்டு, எனவே அவள் கலவரப்படவில்லை.

''குடித்திருக்கிருயே எப்படி லாரி ஓட்டுவாயாம்?'' என்ருள். வயது ஆக ஆகத் தாயார் ஸ்பிரிதோன் மேல் அன்பு செலுத்தத் தலைப்பட்டாள். அவன் ஒரு போதும் குடி யும் குடித்தனமுமாக வாழ மாட்டான், நல்ல மனிதர்கள் செய்வது போல எவ்விதத்திலும் செய்ய மாட்டான் என்ப தால் வருந்தினுள், நாணினுள். யாரேனும் கட்டற்ற வித வையோ மண முறிவு செய்து கொண்டவளோ தங்கள் வீட்டில் புகுந்து கொள்வாள் என்று எதிர்பார்த்தாள்.

''பரவாயில்லை, ஓட்டுவேன்'' என்ருன் ஸ்பிரிதோன்.

''இயேசு கிறிஸ்து உன்னைக் காப்பாராக'' என்று இருட் டில் மகன் மீது சிலுவைக்குறி இட்டாள் தாயார். ''கொஞ் சம் மெதுவாகவாவது ஓட்டு, இல்லாவிட்டால் வெறி பிடித் தவர்கள் போல விரட்டுகிறீர்கள் நீங்கள்.''

''எல்லாம் நன்ருய் இருக்கும்'' என்ற ஸ்பிரிதோனுக்கு உற்சாகம் வந்து விட்டது. விரைவில் வெளியேறி, தாயாரை எப்படியாவது மறந்து விட விருப்பம் உண்டாயிற்று. இந்த வாழ்க்கையில் யாரையாவது பிரிய வேதனையாய் இருந்தது என்ருல், தாயாரைத்தான்.

துப்பாக்கியை இறுகப் பற்றியவாறு இருண்ட வீதியில்

நடந்தான் ஸ்பிரிதோன். தாயாரைப் பற்றிய எண்ணங்களி லிருந்து விடுபடும் ஆசை மேலும் மேலும் தீவிரம் ஆயிற்று. அவள் தாங்கிக் கொண்டு வாழ்ந்திருக்க மாட்டாள். கட்டுண்ட மகனை ஆட்கள் இழுத்து வருவதைக் கண்டதும்... ஸ்பிரி தோன் நடையை விரைவுபடுத்தினுன். ''கடவுளே, தாங் கும் வலிமையை அவளுக்குக் கொடு'' என்று பிரார்த்தித் தான். அனேகமாக ஓடப் பார்த்தான். கடைசியில் ஓடவும் செய்தான். கொலை செய்ய அல்ல, இரீனுவின் படுக்கைக்கு, இதமான வெப்பத்தையும் இசைவையும் நாடிச் செல்பவன் போலக் கிளர்ச்சி அடைந்தான். இரீனு அவன் கண்களுக்கு முன் காட்சி தந்தாள். ஆனுல் எப்படியோ சட்டென மறைந் தும் விட்டாள். அவளுடைய மென்மையான, பாதி திறந்த இதழ்கள் நினைவுக்கு வந்தன, ஆனுல் வாயில் இரத்தத்தின் ருசி, முத்தத்தின் நினைவை அனுபவிக்கத் தடையாய் இருந் தது. அதோடு செர்கேயின் மழமழப்பான கன்னங்களி லிருந்து கமழ்ந்த ஓடிகொலோனின் குளிர் மணமும் அதனுடன் சேர்ந்து தடுத்தது. இந்தக் குளிர் மணம் இப்போது எதனுலோ நினைவுக்கு வந்தது.

ஸ்பிரிதோன் ஓடிக் கொண்டே உற்சாகம் வருவதற் காகப் பாடினுன்:

> ''கட்டுக்கு அடங்காமல்
> கரும் புரவி பாயுமோ?
> கட்டழகி என் இனியாள்...''

வீடு ஒரே இருட்டாய் இருந்தது. ''சரி, சரி, சரி'' என்று மனதுக்குள் விரைவாகச் சொல்லிக் கொண்டான் ஸ்பிரிதோன். ''ஏணியை எடுப்போம்... நிறுத்துவோம் அதை, அதன் ஆத்தாளை... நிதானமாக.'' அவன் இடையூறு இல் லாமல் சாமான் அறைக்குள் புகுந்து விட்டான். உற்றுக் கேட்டான். சந்தடி இல்லை. நெஞ்சு தான் விலாவில் இடித்துக் கொண்டிருந்தது. ''அமைதியாய் இரு, ஸ்பிரிதோன்!'' சணற்கயிறும் அனேகமாக ஓசை இன்றி அறுந்து விட்டது. ஆணிதான் குப்புறத் திரும்பி மெலிதாகக் கிணுங்கியது. ஸ்பிரிதோன் துப்பாக்கி இல்லாத கையை முன்னே நீட்டிய வாறு நடை வழியே போய், சுவற்றில் லேசாகத் தடவிக் கதவைத் தொட்டான். ''சரி, சரி...'' குனிந்து கதவின் அடியில் விரல்களை விட்டு அதைச் சிறிது தூக்கித் தன் பக்

கம் இழுத்தான். ''ப்-ஆஹ்'' என்ற தணிந்த, இனிய பெரு மூச்சுடன் கதவு திறந்து கொண்டது. பின்பு சத்தமில்லாமல் ஒரு புறம் விலகியது. கிழவர்கள் புழங்கும் இடத்தின் வாடை அடித்தது. ஈரித்த மேல்கோட்டு, வெப்பமுள்ள அடுப்பு, பிசைந்த மாவு ஆகியவற்றின் மணம் வீசிற்று... சற்று முன் இங்குதான் அவன் நெட்டித் தள்ளப்பட்டான். ஆண்டவனே, கிழவர்கள் விழித்துக் கொள்ளாதிருக்கும் படி அருள் புரிவாயாக. யாரேனும் இப்போது குறுக்கிடுவார் களோ என்ற எண்ணம் பயங்கரமாக இருந்தது... ''ஐயோ, அவன் எப்படி அடித்தான் என்னை! எப்படி அடித்தான்!.. அடிக்கத் தெரிந்தவன்தான்.''

தன் விசுவும் லாகவமும் ஸ்பிரிதோனுக்கே வியப்பளித் தன. அவனுக்கே தன் அங்க அசைவுகள் கேட்கவில்லை. அறைக் கதவைத் தொட்டு அறிந்து, அதையும் கீழிருந்து மேலே சற்றுத் தூக்கினான்... கதவு கிரீச்சிட்டது. ஸ்பிரி தோன் சட்டென்று முன்னே அடி வைத்து, கதவு பின்னே இருக்கும்படி நின்று கொண்டான்... அவன் அறையில் இருந் தான்! தெரு விளக்கு வெளிச்சத்தால் அறையின் இருட்டு கொஞ்சம் குறைந்திருந்தது, மூலையில் கட்டில் கிறீச்சிட்டது. சுவற்றில் ஸ்விட்சைத் தடவிக் கண்டு போட்டான் ஸ்பிரி தோன். கட்டிலில் உட்கார்ந்தபடி அவனை நோக்கியவாறு இருந்தார் செர்கேய், இரீனா சற்றே எழுந்தாள்... முதலில் கணவரை உறுத்துப் பார்த்தவள் அவருடைய பார்வை யிலிருந்து துப்பாக்கியும் கையுமாக நின்று கொண்டிருந்த ஸ்பிரிதோன் மீது கண்ணோட்டினாள். சத்தமில்லாமல் வாயைத் திறந்தாள்... செர்கேய் தூங்கவில்லை என்பதை ஸ்பிரிதோன் புரிந்து கொண்டான். தம் கரு விழிகளால் மிகுந்த புரி வுடனும் அசையாமலும் நோக்கிக் கொண்டிருந்தார் அவர்.

''நான் எச்சரித்தேன், உன்னைத் தொலைத்து விடுவேன் என்று. நான் உன்னிடம் சொன்னேன்!'' என்று கூறி, இரட்டைக் குழல் துப்பாக்கியின் குதிரையைச் சுட வாக் காக இழுத்து விட முயன்றான். அது முன்பே இழுத்து விடப் பட்டிருந்தது (எப்போது?).

இரீனா உள்ளாடை அணிந்து கட்டிலில் அமர்ந்திருந் தாள். ஆடையின் ஒரு நாடா தோளிலிருந்து நழுவி இருந் ததால் ஒளிர்வற்ற வெண் நிறம் கொண்ட, உறுதியான, பாலூட்டாத மார்பகம் ஒன்று முலைக்காம்பு வரையில்

முழுமையாக வெளியே தெரிந்தது. இந்தக் காட்சி ஸ்பிரிதோனின் அமைதியைச் சட்டென்று குலைத்தது. அவன் உடனே பார்வையைத் திருப்பிக் கொண்டான்.

கணவரும் மனைவியும் பேசாதிருந்தார்கள். ஸ்பிரிதோனைப் பார்த்தார்கள்.

''கட்டிலிலிருந்து இறங்கு. வெளியே போவோம்'' என்று உத்தரவிட்டான் ஸ்பிரிதோன்.

''ஸ்பிரிதோன்... உனக்கு மரண தண்டனை கிடைக்குமே. அதற்குக் கூட...''

''எனக்குத் தெரியும். இறங்கு.''

''ஸ்பிரிதோன்! மெய்யாகவேயா... மன்னித்து விடு, ஸ்பிரிதோன்!''

''இறங்கு!''

உள் சராயும் பனியனும் மட்டும் அணிந்த செர்கேய் கட்டிலிலிருந்து பாய்ந்தார்...

அப்போது திடீரென்று வீரிட்டாள் இரீனு. மிகப் பயங்கரமாக, மிக உரக்க, வெறியுடன், கோரிக்கையுடன். அவ்வளவு சிறுகூடான மேனியும் அறிவும் இதமான வெப்பமுள்ள மெல்லிதழ்களும் வாய்ந்த அவளுக்குக் கொஞ்சங்கூடப் பொருந்தாத அலறல் அது. மனிதத்தன்மையே அற்ற கடுந்துயரும் புகலின்மையும் அதில் ஒலித்தன. அவள் கட்டிலிலிருந்து விழுந்து, கைகளை நீட்டியவாறு ஊர்ந்தாள்...

''வேண்டாம்! ஓ-ஓ-ஓ-ய்! வேண்டாம்! ஓ-ஓ-ஓ-ய்!..'' என்று அலறியபடி முழந்தாள் படியிட்டுத் துப்பாக்கியைப் பிடிக்க முயன்றுள்...

அப்போது செர்கேய் கைகளை அகலப் பரப்பியவாறு ஸ்பிரிதோன் மேல் பாய்ந்தார்... துப்பாக்கிக் கட்டையால் தாக்குண்டு விழுந்து விட்டார்.

''அப்பனே-ஏ!.. வேண்டாம்!'' என்று ஊளையிட்டாள் சிறுமேனி மாது. ஸ்பிரிதோனுடைய பெயரை அவள் மறந்து விட்டதாகத் தோன்றியது. ''ஓ-ஓ-ய்!''

வீட்டில் கதவின் மறு புறம் இருந்த முதியவர்களும் கிலி கொண்டு கூப்பாடு போட்டார்கள்.

''வேண்டாம்!'' என்று கத்தினுள் இளமாது.

ஸ்பிரிதோன் குழப்பம் அடைந்து அவளை நெட்டித் தள்ளினுன்... இப்போது தான் சுட்டால், பிறகு என்னதான் பிரார்த்தனை செய்தாலும் எவ்வளவுதான் மிடாக் கணக்

கில் குடித்தாலும் இந்தச் சூட்டை மறக்க முடியாது என்று திடீரென்று தெளிவாகப் புரிந்து கொண்டான். இவள் இப்படி ஊளையிடாமல் இருந்தால் நல்லது!.. ஆனால், இவளிடந்தான் எவ்வளவு வலிமை!

ஸ்பிரிதோன் திட்டி நொறுக்கினான்... பின்பு அறையிலிருந்து வெளியேறி, அந்த இருண்ட வீட்டை விட்டுத் தொலைவில் நடந்தான். எதனாலோ திடீரென்று அவன் மிகவும் களைத்துப் போனான். தாயாரின் நினைவு வந்தது. அவன் ஓடினான், தாயைப் பற்றிய இந்த நினைவிலிருந்து, எல்லா நினைவுகளிலுமிருந்து தப்பும் பொருட்டு. ஆடையற்ற இரீனாவின் நினைவும் வந்தது. அவள் மீது இரக்கமும் காதலும் நெஞ்சைக் காந்தச் செய்தன. தான் விபத்து விளைக்கவில்லை என்ற எண்ணம் கணப் போது ஆறுதல் அளித்தது. கடவுளே, எப்படி அலறினாள்!.. இறந்த கணவனுக்காக அவள் எப்படி அழுது துடித்திருப்பாள்! மறுபடியும்—தாயார்... அவள் தான் சுழன்று சுழன்று நினைவுக்கு வந்து கொண்டிருந்தாள்! ஸ்பிரிதோன் இன்னும் விரைவாக ஓடினான். இடுகாட்டுக்கு ஓடிப் போய், தரையில் உட்கார்ந்தான். இருட்டாய் இருந்தது. துப்பாக்கிக் குழாய்களை நெஞ்சில் பொருத்தி வைத்துக் கொண்டான்... குதிரையை விரல்களால் தொட்டான். ''என்ன!.. இவ்வளவுதானா?'' என்று நினைத்துக் கொண்டான். சில்லிட்டிருந்த இரண்டு மெல்லிய அரை வளையங்களை விரல்கள் தொட்டு உணர்ந்தன... ஸ்பிரிதோன் இரண்டையும் ஒரே நேரத்தில் அழுத்தினான். கடைசிக் கணத்தில் முக்கியமானது எதையாவது எண்ண விரும்பினான், முடியவில்லை. பலமாக, வலியின்றி நெஞ்சில் இடித்தது. ஸ்பிரிதோன் மல்லாக்க விழுந்தான்... இருண்ட வானம் மெத்தென்று தன் மேல் விழுந்தது போல அவனுக்குத் தோன்றியது. எப்படியோ கடைசிக் கணத்தில் எண்ண அவனுக்கு நேரம் கிடைத்தே விட்டது... எண்ணக்கூட இல்லை, வியந்தான்: ''ஆனால் வலி இல்லையே!..'' அவ்வளவுதான்.

புவியில் ஸ்பிரிதோன் ரஸ்தர்கூயெவின் குறுகிய, சிக்கலான பாதை இங்கே இடை நின்று விட்டது.

**சிற்பி** செப்ரோவ்கா கிராமத்தில் சியோம்கா ரீஸ் என்ற தன்னிகரற்ற தச்சன் இருந்தான். குடிகாரன். காமவெறியன். நெடிய, ஒடிசலான மேனியும் பெரிய மூக்கும் உள்ளவன். பார்வைக்குப் பலசாலியே இல்லை போலத் தோன்றுவான். ஆனால் சட்டையைக் கழற்றி விட்டு, வெயிலில் அடிபட்டுச் சாயம் போன பனியன் மட்டும் அணிந்து நிற்கும் போதோ... கைக்கோடரியை ஆட்டியவாறு வேலைக் குழுத் தலைவனோடு குதூகலமாகக் கூச்சலிட்டுச் சச்சரவிடும் போதோ, அவனுடைய பயங்கர வலிமையும் ஆற்றலும் முழு அளவில் கண்ணுக்குப் புலனாகும். வலிமை அவனுடைய கைகளில் இருந்தது. சியோம்காவின் கரங்கள் உருட்சி திரட்சி உள்ளவை அல்ல, குன்றுத் தோள்கள் கொண்டவை அல்ல. தோள்முதல் அங்கை வரை அவை ஒரு சீரானவை, பருத்தவை, உருக்கி வார்த்தவை போன்றவை. அழகான கைகள். கைக்கோடரி அவற்றில் விளையாட்டுக் கருவி போல் இருந்தது. இம்மாதிரிக் கைகள் களைப்பு அறியாதவை என்று தோன்றியது. சியோம்கா வெறுமே தன் கட்டின்மையைக் காட்டுவதற்காகக் கத்துவான்:

''எங்களை என்ன, இயந்திரங்கள் என்று நினைத்து விட்டாயோ? அப்படியானால் என்னை முடுக்கு—நான் ஓய்ந்து போய் விட்டேன். ஆனால் பின்னால் எச்சரிக்கையோடு வா—உதைப்பேன்!''

சியோம்கா கெட்டவன் அல்ல. ஆனால், அவனே சொல்லுவது போல, அவனுக்கு ''உலகத்தில் எல்லாம் ஸ்தம்பித்துப் போய் விட்டது''. ஆகவே அவன் தன்னுடைய ''குதிரைத் திறனை'' எதில் வேண்டுமானாலும் — காட்டுக் கூப்பாடு போடுவதிலோ, கிண்டல் செய்வதிலோ, எங்கேனும் அசிங்கம் செய்வதிலோ—பாழாக்கினான், சர்வ சகஜமாக.

''உன் கைகள் கலை நுட்பம் உள்ளவை! நீ எப்படி வாழலாம், தெரியுமா?.. சீரும் சிறப்புமாக வாழலாமே!..'' என்று ஊர்க்காரர்கள் அவனிடம் சொன்னார்கள்.

''நான் சீரும் சிறப்புமாக வாழ விரும்பவில்லை. அப்புறம்?'' என்றான் சியோம்கா.

சம்பளம் முழுவதையும் அவன் வீட்டுச் செலவுக்குக்

கொடுத்தான். அதிகப்படி வேலையில் சம்பாதித்ததைக் கொண்டுதான் குடித்தான். பார்ப்பவர்கள் வியந்து மலைத்துப் போகும் படி அவ்வளவு நேர்த்தியான அலமாரி செய்ய அவ னால் முடிந்தது. வெகு தொலைவிலிருந்து ஆட்கள் வந்து சாமான்கள் செய்து தரும்படி அவனிடம் கேட்டார்கள், பெருந் தொகைகள் கூலியாகக் கொடுத்தார்கள். செப் ரோவ்காவில் கோடையில் தங்கி இளைப்பாறிய ஓர் எழுத் தாளர்கூட, தாம் வசித்து வந்த பிரதேச மையத்துக்கு அவனை அழைத்துச் சென்றார். அவன் அவருக்கு அலுவலறை கட்டிக் கொடுத்தான்... அலுவலறையைக் கிராமத்து மர வீட்டைப் போல அமைப்பது என்று இருவருமாகத் திட்டம் இட்டார்கள் (எழுத்தாளர் கிராமத்தைச் சேர்ந்தவர் ஆத லால் கிராமத்துக்காக ஏங்கிப் போயிருந்தார்).

நகரத்து நவீன வீட்டில் பதினாறாம் நூற்றாண்டைச் சேர்ந்த கிராமத்து மர வீட்டை ஒத்த அறையை அமைத்ததாக சியோம்கா விவரித்ததைக் கேட்டு விட்டு, ''பாரப்பா பண விரயத்தை!'' என்று வியந்தார்கள் ஊர்க்காரர்கள்.

''பிளாச்சுத் தரையின் இடத்தில் வகிர்ந்த மரக் கட்டைகளைப் பரப்பி இழைக்க மட்டும் செய்தோம், அவ் வளவுதான். வண்ணம்கூடப் பூசவில்லை. மேசையும் பலகை களை இணைத்துச் செய்தோம். சுவர் ஓரமாக பெஞ்சுகள், மூலையில் பலகைக் கட்டில். கட்டிலில் மெத்தைகளோ போர்வைகளோ கிடையாது... கனத்த நமுதா விரிப்பும் ஆட்டுத்தோல் கோட்டும்—அவ்வளவுதான். பற்றுசு விளக் கால் விட்டத்துக்குப் புகைக்கரி ஏற்றினோம்—அறையில் கணப்பு எரிவது போன்று தோன்றுவதற்காக. உப்பிய அறுவை மரக் கடைசித் துண்டுகளைச் சுவர்கள் மேல் பாவினோம்...''

கிராமத்தார் தலைகளை ஆட்ட மட்டுமே செய்தார்கள்.

''முட்டாள்களுக்கு வேறு வேலை இல்லை.''

''பதினாறாம் நூற்றாண்டு'' என்று சிந்தனையுடன் சொன் னான் சியோம்கா. ''அவர் எனக்குப் படங்களைக் காட்டினார். நான் அவற்றின்படியே எல்லாம் செய்தேன்.''

இன்னொரு விஷயம். நகரத்தில் எழுத்தாளர் வீட்டில் இருந்தபோது சியோம்கா குடிக்கவில்லை. பழங் காலத்தைப் பற்றிய பலவகைப் புத்தகங்களைப் படித்தான், பழைய தெய்வப் படங்களையும் நூற்புக் கருவிகளையும் பார்த்தான்...

எழுத்தாளர் வீட்டில் இம்மாதிரிப் பொருள்கள் ஏராள மாய் இருந்தன.

நகரத்துக்குப் போன அதே கோடையில் செப்ரோவ்கா விலிருந்து மூன்று கிலோமீட்டர் தொலைவில் இருந்த தாலித்ஸா என்னும் கிராமத்தின் சர்ச்சைக் கூர்ந்து பார்வை யிடத் தொடங்கினன் சியோம்கா. தாலித்ஸாவில் இருந்த இருபது விவசாயி வீடுகளில் எஞ்சி இருந்தவை எட்டுதான். சர்ச்சு வெகு காலமாகவே மூடப்பட்டிருந்தது. கற்களால் கட்டப்பட்ட சிறிய சர்ச்சு அது. தாலித்ஸாவுக்குப் போன சாலை ஒரு குன்றைச் சுற்றிச் சென்றது. அதன் மறு புறம் திடீரென்று பார்வைக்குப் புலனாயிற்று சர்ச்சு... அதை நிறு விய பண்டைக் கால மனிதர்கள் என்ன காரணத்தாலோ வழக்கப்படி குன்றின் உச்சியில் அதைக் கட்டாமல் கீழே, சரிவின் அடியில் கட்டியிருந்தார்கள். தாலித்ஸாவுக்குப் போகும் போது ஏதாவது யோசனையில் ஆழ்ந்திருந்தால், குன் றின் அருகில் இருந்த திருப்பத்தில் பாப்ளார் மரங்களின் செழிப்பான, கனத்த பசுமைக்கு நடுவே, லேசாக, வெண்மை யாகத் தோற்றம் அளித்த சர்ச்சு எதிர்பாரா விதமாகக் கண்ணுக்குத் தென்படக் கண்டு திடுக்கிடுவோம் என் பது குழந்தைப் பருவம் முதலே சியோம்காவுக்கு நினைவு இருந்தது.

செப்ரோவ்காவிலும் சர்ச்சு இருந்தது, ஆனால் தெளி வாகப் பிற்காலத்தது, பெரியது, உயரமான மணிக்கூண்டு உள்ளது. அதுவும் நெடுங் காலமாக மூடப்பட்டிருந்தது. அதன் சுவரில் வெடிப்பு ஏற்பட்டிருந்தது. பார்க்கப் போனல் இரண்டு சர்ச்சுகள். ஒன்று பெரியது, மேட்டில் இருந்தது, மற்றது குன்றின் அடிவாரத்தில் மறைந்திருந் தது. ஒப்பிட்டால் எது வெல்ல வேண்டும்? குன்றின் அடி யில் இருந்த சிறிய சர்ச்சே வென்றது. அது எல்லா அம்சங் களிலும் சிறப்பாய் இருந்தது: லேசானது என்பதிலும், எதிர் பாரா விதமாகக் கண்ணுக்குப் புலனாயிற்று என்பதிலும்... செப்ரோவ்கா சர்ச்சு ஐந்து கிலோமீட்டர் தூரத்திலேயே பார்வைக்குத் தென்பட்டது—கட்டியவர்களின் திட்டமும் அதுவே. தாலித்ஸா சர்ச்சையோ, வெறும் ஆட்களின் பார்வையிலிருந்து மறைத்திருந்தார்கள் சிற்பிகள். அதன் அருகே போனவர்களுக்கு மட்டுமே அது திடீரென்று முழுதும் தெரிந்தது...

ஒரு தடவை விடுமுறை நாளன்று சியோம்கா தாலித்ஸா வுக்கு மறுபடி போனுன். குன்றின் மேல் உட்கார்ந்து சர்ச்சைக் கூர்ந்து பார்க்கத் தலைப்பட்டான். நாற்புறமும் நிசப்தமும் அமைதியும். கிராமத்தில் சந்தடி இல்லை. பசிய மரங் களின் நடுவே நின்றது வெண்மையான அழகுக் கட்டிடம். எத்தனை ஆண்டுகளாக நின்று கொண்டிருக்கிறது? மௌன மாய் இருக்கிறது. சூரியன் எழுவதையும் மறைவதையும் அது எத்தனை எத்தனை தடவைகளோ பார்த்து விட்டது. மழைகள் அதைக் குளிப்பாட்டின, வெண்பனிக் குவைகள் அதன் மேல் படிந்தன... ஆனுலும் இதோ, நின்று கொண் டிருக்கிறது. யாரை மகிழ்விப்பதற்காக? இதைக் கட்டியவர் கள் நெடுங் காலத்துக்கு முன்பே மண்ணேடு மண்ணுகி விட்டார்கள். அதை இந்த விதமாகத் திட்டமிட்ட அறி வார்ந்த மூளை வெகு காலத்துக்கு முன்பே சிதைந்து மட்கி விட்டது. இதைக் கண்டு கிளர்ச்சியும் மகிழ்ச்சியும் அடைந்த இதயம் மண்ணுக, பிடி மண்ணுக மாறி வெகு காலம் ஆகி விட்டது. இந்த வெண் நிறக் கற் கதையைத் தனக்குப் பின் விட்டுச் செல்கையில் என்ன எண்ணினுன் அந்தப் பேர் தெரியாத சிற்பி? அவன் கடவுளைப் போற்றினுை அல்லது தன்னைக் காட்டிக் கொள்ள விரும்பினுை? ஆனுல் தன்னைக் காட்டிக் கொள்ள விரும்புபவன் தொலைவுக்குப் போக மாட் டான், பெரிய சாலைகளுக்குப் பக்கத்திலேயோ அல்லது ஆட் கள் நெரியும் நகரச் சதுக்கத்திலேயோ கட்டாயமாக இடம் தேடுவான்—அங்கே மக்கள் கவனிப்பார்கள் என்பதால். இதைக் கட்டியவன் அக்கறை கொண்டது வேறு ஒன்றில்— அழகிலோ ஒருவேளை? ஒருவன் பாடினுன், நன்ருகப் பாடி னுன், பின்பு போய் விட்டான் என்பது போல. எதற்காக இது வேண்டி இருந்தது? அவனே அறியவில்லை. அவன் உள்ளம் அப்படிக் கோரியது. இனிய, அருமை மனிதனே!.. உன்னிடம் என்ன சொல்வது என்று தெரியவில்லை—அங்கே, உன்னுடைய கரிய, பயங்கரமான நிலவாமை இருளில்— இது உன் செவிகளில் படாது. தவிரவும், சொல்லத்தான் என்ன முடியும்? ஊம், நன்ருய் இருக்கிறது, அழகாய் இருக் கிறது, கிளர்ச்சி ஊட்டுகிறது, மகிழ்ச்சி அளிக்கிறது... இது முக்கியமா என்ன? அவனுந்தான் மகிழ்ந்தான், கிளர்ச்சி யும் அடைந்தான், அழகாய் இருக்கிறது என்றும் புரிந்து கொண்டான். அதனுல் என்ன?.. ஒன்றும் இல்லை. உன்னுல்

மகிழ்ச்சி அடைய முடியும் என்றால் மகிழ்ச்சி அடை, மகிழ்ச்சி ஊட்ட முடியும் என்றால் மகிழ்ச்சி ஊட்டு... முடியாது என்றால்—சண்டை போடு, படை நடத்து அல்லது இப்படி ஏதாவது செய்—இதோ இந்தக் கதையை அழிக்கலாம்: இரண்டொரு கிலோகிராம் வெடிமருந்தை அடியில் வைத்தால் துண்டு துண்டாகச் சிதறிப் போகும், அதோடு கதை முடிந்தது. அவரவருக்கு உரியது அவரவுருக்கு.

சியோம்கா பார்வையிட்டவன் ஒன்றைக் கவனித்தான்: மேலே கொர்னிசுக்கு அடியில் இருந்த நான்கு கற்கள் மற்றவற்றைப் போல் இன்றிப் பளிச்சிட்டன. கிட்டே போய் உற்றுப் பார்த்தான். சிற்பி சுவர் முழுதையும் இழைத்து மெருகேற்ற எண்ணியிருக்கிறான். சுவர் கிழக்குப் பார்த்தது. சிற்பி வேலையை முடிவுவரை செய்திருந்தால், சூரியன் உதிக்கும் போது (அது குன்றின் பின்னிருந்து எழும்) வானம் தெளிவாய் இருக்கும் நாட்களில் சர்ச்சு மேல் கும்மட்டத்திலிருந்து தகதகக்கத் தொடங்கி, படிப்படியாகச் சுவர் முழுவதிலும்—சிலுவை முதல் அஸ்திவாரம் வரை—ஒளி நெருப்பால் கனன்று எரியும். சிற்பி இந்த வேலையைத் தொடங்கினவன், எதனாலோ நடுவில் நிறுத்தி விட்டான்—சர்ச்சு கட்டச் சொல்லிப் பணம் கொடுத்தவன் ''சரி, போதும், இப்படியும் நன்றாய் இருக்கும்'' என்று ஒரு வேளை சொல்லி இருப்பான்.

சியோம்காவுக்கு இன்னொன்றும் கிளர்ச்சி ஊட்டியது. அந்தக் காலத்தில் கல்லை இழைத்து எப்படி மெருகூட்டினார்கள் என்று புரிந்து கொள்ள விரும்பினான். ஒருவேளை முதலில் பரு மணலாலும் பின்பு பொடி மணலாலும் தேய்த்து விட்டுக் கடைசியில் கம்பளித் துணியாலோ அல்லது தோலாலோ தேய்த்திருப்பார்கள். பெரிய வேலை.

நிலவறை வழியாகச் சர்ச்சுக்கு உள்ளே போக முடிந்தது. சியோம்கா பிள்ளைப் பருவம் முதலே இதை அறிந்திருந்தான், பையன்களோடு பல முறை அங்கே போயிருந்தான். ஒரு காலத்தில் இரட்டைக் கதவால் மூடப்படக் கூடியதாய் இருந்த (அந்தக் கதவு வெகுகாலத்துக்கு முன்பே அகற்றப்பட்டு விட்டது) நிலவறை வாயில் பாதி தகர்ந்து சரிந்திருந்தது. அங்கே களைச் செடிகள் மண்டியிருந்தன... மேற்பகுதிக்கும் தரைக் கற்களுக்கும் இடையிலிருந்த இடுக்கில் சியோம்கா சிரமப்பட்டு நுழைந்தான். சில இடங்களில்

தவழ்ந்தும் சில இடங்களில் உடலை மூன்ருக மடக்கியும் சென்று சர்ச்சின் முன் பகுதியை அடைந்தான். சர்ச் விசால மாகவும் எதிரொலி உள்ளதாகவும் இருந்தது... கும்மட்டத் தின் மேல் இன்னும் தொங்கிக் கொண்டிருந்த இரும்புத் தகட்டை இளங் காற்று லேசாக அசைத்துக் கொண்டிருந் தது, அதனுல் ஏற்பட்ட சரசரப்பு வெளியே அரிதாகவே காதில் பட்டது. சர்ச்சுக்கு உள்ளேயோ, கலவரம் ஊட்டும் அளவுக்கு உரக்க ஒலித்தது. சாளரங்கள் வழியே வந்த ஒளிக் கதிர்கள் சர்ச்சின் நிழலடர்ந்த வெறுமையை அகல மான தங்க வாட்களால் வெட்டிப் பிளந்து கொண்டிருந் தன.

அழகினுலும் மர்மத்தாலும் கிளர்ச்சி அடைந்திருந்த சியோம்கா இப்போதுதான் சுற்று முற்றும் கூர்ந்து பார்வை செலுத்தி ஒரு விவரத்தைக் கண்டுபிடித்தான்: சுவர்களுக் கும் தரைக்கும் இடையே நேர்க்கோணம் அமையவில்லை, மாருக, தூம்பு வடிவில் கோணலற்ற, சரியான உள்வளைவு ஏற்படுத்தப்பட்டிருந்தது. சுவர் நெடுகிலும் கீழே இணைப் புக்கல் சகஜமாகச் சென்றிருந்தது. சுவற்றின் அடித் தளத் திலிருந்து சுமார் ஒரு மீட்டர் அகலமும் ஓர் ஆள் உயரமும் கொண்டிருந்தது இந்த இணைப்பு. மேற்புறம் அது சுவற்று டன் வேறுபடுத்திக் காண முடியாத படி ஒன்றி இருந்தது. இது எதற்காக என்று சியோம்கா முதலில் புரிந்து கொள்ள வில்லை. நன்ருகச் செதுக்கி இழைக்கப்பட்ட இணைப்புக் கற்கள் கீழே கறுப்பாக இருக்கின்றன, பின்பு மேலே போகப் போக வெளிறடைந்து வெள்ளைச் சுவற்றுடன் சேர்ந்து ஒன் ருகி விடுகின்றன என்பதை மட்டும் கவனித்தான். கும்மட் டத்தின் உச்சத்தில் பாவியிருந்தது தனி வகைக் கல். மேற் கொண்டு அது இழைத்து மெருகேற்றவும் பட்டிருந்தது போலும். கும்மட்டத்தின் அடியே ஒரே வெளிச்சமாக, மகிழ்ச்சியாக இருந்தது. மொத்தத்தில் இருந்தவையோ, குறுகலான நான்கு சாளரத் துவாரங்கள் தாம்...

சியோம்கா பலிபீடத்தின் பக்கத்தில் உட்கார்ந்து, இந்தக் கல் இணைப்பு எதற்காக என்று சிந்திக்கலானுன். பின்பு தனக்கு இவ்வாறு விளக்கிக் கொண்டான்: சிற்பி நேர்க் கோணங்களை அகற்றிச் சதுரத்தைக் குலைத்து விட்டான். சர்ச்சு சின்னது ஆகையால் உள்ளே தாராளமான இட வசதி இருப்பதான உணர்வை ஏற்படுத்துவது அவசியமாய் இருந்

தது. சதுரக் கூடு போல் நெஞ்சை அழுத்துவதும் இறுக்குவதும் வேறு எதுவும் அல்ல. அதனால் தான் கீழே ஆழ்ந்த கரு நிறக் கற்களை நாட்டிய சிற்பி, இணைப்பு உயர்ந்ததற்கு ஏற்ப அதைச் சுவற்றுக்குப் பொருந்தச் சீராக்கினான். இவ்வாறு, சுவர்கள் பின்னே நகர்ந்து விட்டன போன்று தோற்றம் அளித்தன.

கல் தரை மேல் இருந்த ஒளிப் புள்ளி தன் காலை நெருங்கும் வரை சியோம்கா சர்ச்சில் உட்கார்ந்திருந்தான். பின்பு வெளிவந்து வீடு சென்றான்.

மறு நாள் சியோம்கா உடம்பு சரியில்லை என்று சொல்லி, வேலைக்குப் போகாமல் வட்டார மைய நகரத்துக்குச் சென்றான். அங்கே வழிபாடு நடந்து கொண்டிருந்த ஒரு சர்ச்சு இருந்தது. பாதிரியார் சர்ச்சின் அருகே அமைந்த தம் வீட்டில் இருந்தார். மகனை அனுப்பிவிட்டு அவர் சகஜமாகக் கூறினார்:

''சொல்லுங்கள்.''

பாதிரியார் இன்னும் முதுமை அடையாதவர். அவருடைய உயிரோட்டமுள்ள கரு விழிகளில் குறும்புத்தனம் கூடத் ததும்பும் ஒரு வித ஒளி பளிச்சிட்டது. இந்த விழிகள் சியோம்காவை நேரிட்டு, உறுதியுடன் நோக்கின—அவர் பதிலை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

எழுத்தாளர்களிடமும் பாதிரிகளிடமும் ஒருமையில் பேசலாம் என்று சியோம்கா எதனாலோ முடிவு செய்திருந்தான். அதன்படி ஒருமையில் அவரை விளித்து, ''தாலித்ஸா சர்ச்சை உனக்குத் தெரியுமா? செப்ரோவ்கா வட்டாரத்தைச் சேர்ந்தது தாலித்ஸா'' என்று கேட்டான்.

''தாலித்ஸா?.. செப்ரோவ்கா வட்டாரத்தில் உள்ளது... சின்னதாய் இருக்குமே, அதுதானே?''

''ஆமாம்.''

''தெரியும்.''

''அது எந்த நூற்றாண்டைச் சேர்ந்தது?''

பாதிரியார் சிந்தனை செய்தார்.

''எந்த நூற்றாண்டா? தப்பாகச் சொல்லிவிடக் கூடாதே என்று பார்க்கிறேன்... ஜார் அலெக்சேய் மிகாய்லவிச் காலத்தது என்று நினைக்கிறேன்... அவருடைய புதல்வர் மக்களுக்காக நிறையக் கோயில்கள் கட்டவில்லை. பதினேழாம் நூற்றாண்டின் பிற்பாதி. ஏன்?''

''எவ்வளவு அழகானது!..'' என்று பரவசப்பட்டான் சியோம்கா. ''எப்படி நீங்கள் இப்படி அசட்டை செய்கிறீர்கள்?''

பாதிரியார் வாய்க்குள் நகைத்தார்.

''ஆண்டவன் அருள், இன்னமும் விழாமலாவது நிற்கிறது. அழகானதுதான். நான் அதைப் பார்த்து வெகு காலம் ஆகிவிட்டது, ஆனால் நினைவு இருக்கிறது. கீழே இருக்கிறது, இல்லையா?..''

''கட்டியவன் யார், தெரியாதோ?''

''அது தலைமைப் பாதிரியாரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும். இதை என்னால் சொல்ல முடியாது.''

''ஆனால் உங்களிடம் பணம் இருக்கிறதே! இருக்கிறது, அல்லவா?''

''சரி, இருப்பதாக வைத்துக் கொள்வோம்.''

''வைத்துக் கொள்வோம் அல்ல, இருக்கிறது. நீங்கள் தாம் அரசிலிருந்து இப்போது தனியாகி விட்டீர்களே...''

''நீ எதற்காக இதைச் சொல்லுகிறாய்?''

''அதைச் செப்பனிடுங்கள் — அது அற்புதமானது ஆயிற்றே! செப்பனிடும் பொறுப்பை நான் ஏற்கிறேன். கோடையில் செய்து விடுகிறேன். எனக்கு உதவிக்கு இரண்டு, மூன்று ஆட்கள் வேண்டும். குளிர் காலம் தொடங்குவதற்குள் சீராக்கி விடுகிறோம். எங்களுக்கு ஆளுக்கு... ரூபிள்கள் கூலி கொடுங்கள்.''

''என் அன்பனே, இந்த மாதிரிப் பிரச்சினைகளைத் தீர்ப்பவன் நான் அல்ல. எனக்கும் மேலதிகாரிகள் இருக்கிறார்கள்... தலைமைப் பாதிரியாரிடம் போ!'' பாதிரியார் தாமும் கிளர்ச்சி அடைந்தார். ''போ, ஏன் கூடாது? நீ மத நம்பிக்கை உள்ளவனா?''

''அட அது முக்கியம் அல்ல. நான் எல்லாரையும் போலவே, அல்லது இன்னும் மோசமாக, குடிக்கிறேன். இந்த மாதிரி அழகு வீணாகிறதே என்று எனக்கு வருத்தமாய் இருக்கிறது. இப்போதுதான் சீரமைக்கிறார்களே...''

''சீரமைக்கிறது அரசாங்கம்.''

''ஆனால் உங்களிடமுந்தான் பணம் இருக்கிறதே?''

''அரசு சீரமைக்கிறது. தன்னுடைய நோக்கங்களுக்காக. நீ போ, தலைமைப் பாதிரியாரிடம் போயேன்.''

''அவர் எங்கே இருக்கிறார்? இங்கேயா?''

''இல்லே, வெளியூரில்.''

''பிரதேச மையத்திலா?''

''ஆமாம்.''

''என்னிடம் பணம் இல்லே. நான் உன்னிடம் வருவதற்குத்தான் பணம் எடுத்து வந்தேன்...''

''நான் தருகிறேன். உனக்கு எந்த ஊர்?''

''செப்ரோவ்கா. நான் தச்சன், சியோம்கா ரீஸ்...''

''கேள், சியோம்கா, புறப்பட்டுப் போ! தலைமைப் பாதிரியார் அறிவுள்ளவர்... அவரிடம் எல்லாவற்றையும் சொல்லு நீ தனியாகவேயா வந்திருக்கிருய்?''

'' 'தனியாகவே' என்ருல் என்ன?'' என்று விளங்காமல் கேட்டான் சியோம்கா.

''நீயாகவே என்னிடம் வந்தாயா, அல்லது யாரேனும் அனுப்பிஞர்களா?''

''நாஞகவே.''

''இருந்தாலும் போ! நீ போய்ச் சேர்வதற்குள் நான் அவருக்குத் தொலேபேசியில் தகவல் தெரிவிக்கிறேன். அவர் உன்னே ஏற்பார்.''

சியோம்கா சற்று யோசனே செய்தான்.

''கொடு! நான் அப்புறம் உனக்கு அனுப்பி விடுகிறேன்.''

''அப்புறம் பேசி முடிப்போம். தலைமைப் பாதிரியாரைப் பார்த்த பின் மறுபடி என்னிடம் வா, எல்லாவற்றையும் சொல்லு.''

தலைமைப் பாதிரியார் பருத்தவர், நரைத்தவர், மதுவே அருந்தாத முதியவர், எதிர்பாராதபடி மெல்லிய குரல் உள்ளவர். சியோம்காவை அவர் இன் முகத்துடன் வரவேற்ருர்.

''ஹெராசிம் பாதிரியார் எனக்குத் தொலேபேசியில் தகவல் தெரிவித்தார்... நல்லது, சொல்லு, சொல்லு, கோயிலேச் சீரமைக்கும் எண்ணம் உனக்கு எப்படி உண்டாயிற்று?''

அழகான கோப்பையில் ஊற்றப்பட்ட சூடான தேநீரை ஒரு வாய் பருகிஞன் சியோம்கா.

''எப்படியாவது... இப்படித்தான். பார்த்தேன்—எப்பேர்ப்பட்ட அழகு! யாருக்கும் வேண்டாததாக நிற்கிறது!..''

தலைமைப் பாதிரியார் வாய்க்குள் சிரித்துக் கொண்டார்.

''அழகான சர்ச்சு, நான் அதை அறிவேன். அலெக் சேய் மிகாய்லவிச் காலத்தில் கட்டப்பட்டது. சிற்பி யார் என்பது இன்னும் எனக்குத் தெரியாது...விசாரித்துத் தெரிந்து கொள்ள முடியும். இடம் பரியாதின்ஸ்கி பிரபு வம்சத்தா ருடையது... சிற்பியைப் பற்றித் தெரிந்து உனக்கு என்ன ஆக வேண்டும்?''

''அட சும்மாதான். ஆவல் ஏற்பட்டது. வளமான கற் பனை உள்ளவன் அவன்!''

''பெரிய சிற்பிதான், யார் என்பதைப் பின்னுல் தெரிந்து கொள்வோம். விளதீமிர் கோயில்களையும் மாஸ்கோ கோயில் களையும் அவன் அறிந்திருந்தான் என்பது தெளிவு...''

''ஆகா, எவ்வளவு நுட்பமாகத் திட்டம் இட்டிருக் கிருன்!'' என்று முற்காலச் சிற்பியின் கலை மர்மத்தை ஆய்ந்து தெரிந்து கொள்ளத் தனக்கு எப்படி வாய்த்தது என்று விவரித்தான் சியோம்கா.

தலைமைப் பாதிரியார் கேட்டார், தலை ஆட்டினுர், ''அடே யப்பா!'' என்று சில வேளைகளில் சொன்னுர். இதே கை யோடு தன்னுடைய எண்ணங்களையும் தெரிவித்தான் சியோம் கா. கிழக்குச் சுவர் முழுவதையும் சிற்பி விரும்பியது போல இழைத்து மெருகிட வேண்டும், கும்மட்டத்திற்குத் தகடுகள் வேய்ந்து தங்க முலாம் பூச வேண்டும், மேல் சாளரங்களில் வண்ணக் கண்ணுடிகள் பொருத்த வேண்டும்—அப்போது கும்மட்டத்தின் அடியில் எப்படி ஒளிரும், என்னமாகத் தான் ஒளிரும்!.. சிற்பி அங்கே எவையோ தனி வகைக் கற்களைப் பாவி இருக்கிருன். ஒருவேளை அப்பிரகம் கலந்திருப்பான்... மேற்கொண்டு ஆரஞ்சு நிறக் கண்ணுடிகளும் பொருத்தி விட்டால்...

''எல்லாம் நன்ருய் இருக்கிறது, நன்ருய்த்தான் இருக் கிறது, என் மகனே'' என்று அவன் பேச்சில் குறுக்கிட்டார் தலைமைப் பாதிரியார். ''தாலித்ஸா சர்ச்சைச் செப்பனிட உங்களை அனுமதிக்கிருேம், இந்த வேலையை யாரிடம் ஒப் படைப்பீர்கள், சொல்லுங்கள் என்று என்னிடம் கூறப்பட் டால், ஒரு நொடி கூடத் தயங்காமல், சியோம்கா ரீஸ், செப்ரோவ்கா கிராமத் தச்சர் என்று சொல்லுவேன். ஆனுல்... அதைச் செப்பனிட என்னை அனுமதிக்க மாட்டார்கள். அது தான் விஷயம், என் மகனே. துயர் தரும் விஷயம்'' என்ருர்.

''ஏன்?''

''நானுந்தான் கேட்டேன், 'ஏன்?' என்று. அவர்கள் என்னிடம் திருப்பிக் கேட்டார்கள், 'எதற்காக?' என்று. தாலித்ஸாவில் எத்தனை வீடுகள்? இந்தக் கேள்வி நான் கேட்கிறேன்...''

''தாலித்ஸாவில் கொஞ்சந்தான்...''

''அது கூட முக்கியம் அல்ல. அவர்கள் புதிய சர்ச்சு களுக்கு வழி திறந்து விட்டால், மத விரோதப் போராட்டம் என்ன ஆகும்? நீயே எண்ணிப் பார்.''

''அட அதில் வழிபாடு நடத்த வேண்டாமே! எத்தனையோ வகையான காட்சிச்சாலைகள் இருக்கின்றனவே...''

''காட்சிச்சாலைகள் அரசின் விவகாரம், எங்களுடையது அல்ல.''

''அப்படியானால் இப்போது என்ன செய்வது?''

''என்ன செய்வது என்று சொல்லுகிறேன், கேள். எல்லோருமாகச் சேர்ந்து கடிதம் எழுதுங்கள்: இன்னின்ன மாதிரி—தாலித்ஸாவில் ஒரு சர்ச்சு புழங்காமல் இருக்கிறது. மதச் சார்பு அற்ற காரணங்களால் அது மதிப்புள்ளதாக எங்களுக்குத் தோன்றுகிறது என்று...''

''ஆயுள் பூராவும் முயன்றாலும் இந்த மாதிரிக் கடிதம் எழுத எங்களால் முடியாது. நீயே எழுது.''

''நான் எழுதக் கூடாது. எழுதத் தெரிந்தவர் யாரை யாவது தேடிப் பிடியுங்கள். இல்லாவிட்டால் நீங்களே, உங்கள் சொற்களில்... அது இன்னும் மேலானது கூட...''

''எனக்குத் தெரியும்! என்னிடம் இருக்கிறார் அந்த மாதிரி மனிதர்!'' சியோம்கா எழுத்தாளரை நினைவு படுத்திக் கொண்டான்.

''அந்தக் கடிதத்தோடு அதிகாரிகளைப் போய்ப் பாருங்கள். பிரதேச நிர்வாகக் கமிட்டி அலுவலகத்தில். அவர்கள் மறுத்தால் மாஸ்கோவுக்கு எழுதுங்கள்... ஆனால் முன்னதாக மாஸ்கோவுக்கு எழுதாதீர்கள், இவர்கள் மறுக்கும் வரை பொறுத்திருங்கள். மாஸ்கோவிலிருந்து கமிஷன் அனுப்பப்படலாம்...''

''அது மக்களை மகிழ்விக்கும்—நிலைத்து நிற்கும்!..''

''இது தான் என்னுடைய யோசனை. எங்களோடு பேசியது பற்றிக் கடிதத்தில் குறிப்பிடாதீர்கள். நீயும் யாரிடமும் சொல்லாதே. அதனால் காரியம் கெடத்தான் செய்யும்.

போய் வா, என் மகனே. கடவுள் உனக்கு வெற்றி அருள்வாராக.''

தலைமைப் பாதிரி வள வாழ்வு நடத்துவதை அவர் இருப்பிடத்திலிருந்து போனபோது சியோம்கா கவனித்தான். வீடு சுமார் எட்டு அறைகள் கொண்டது போலும். முகப்பில் ''வோல்கா'' கார் நின்று கொண்டிருந்தது. இதனால் சியோம்காவுக்கு வியப்பும் கசப்பும் ஏற்பட்டன. சொந்த சோவியத் ஆட்சியிடமே முறையிடுவது உண்மையில் மேலாய் இருக்கும் என்று அவன் முடிவு செய்தான். இந்தப் பாதிரிகள் எதையோ மூடி மறைக்கிறார்கள்... அவர்களுக்கு வேண்டியும் இருக்கிறது, குத்தலாகவும் இருக்கிறது, அதிகாரிகள் அனுமதிக்க மாட்டோம் என்கிறார்கள் என்று குறை சொல்லவும் தோன்றுகிறது.

முதலில் எழுத்தாளரிடம் போவதென்று சியோம்கா முடிவு செய்தான். அவருடைய வீட்டைக் கண்டுபிடித்தான்... எழுத்தாளர் வீட்டில் இல்லை.

''அவர் இல்லை'' என்று சியோம்காவிடம் வெடுக்கெனச் சொல்லி விட்டுப் படீரென்று கதவைச் சாத்தினாள் பருத்த யுவதி ஒருத்தி. ''பதினாறாம் நூற்றாண்டு மர வீட்டை'' இங்கே அமைத்த போது அவன் இந்த இள மாதை ஏனோ காணவில்லை. அந்த ''மர வீட்டைப்'' பார்க்க அவனுக்கு அடக்க முடியாத ஆசை உண்டாயிற்று. வாயில் மணியை இன்னொரு தரம் அடித்தான்.

''நானே!'' என்ற மாதின் குரல் கதவின் பின்னிருந்து கேட்டது. கதவு மறுபடி திறந்தது.

''ஊம்? இன்னும் என்ன வேண்டும்?''

''வந்து, நான் நிக்கலாய் யெபீமிச்சின் அலுவலறையை இங்கே அமைத்தேன்... அதை ஒரு பார்வை பார்க்க வேண்டும் போல இருக்கிறது...''

''அட என் கடவுளே!'' என்று குரலை உயர்த்தாமல் சொல்லி விட்டு மறுபடி கதவைச் சாத்தினாள் அந்த மாது.

''அவர் வீட்டில் இருக்கிறார் போலிருக்கிறது. அவர்களுக்குள் பெருத்த வாக்குவாதம் நடக்கிறது போலிருக்கிறது'' என்று அனுமானித்தான் சியோம்கா.

''உன் அலுவலறையை அமைத்தவனும், எவனோ மடையன்'' என்று அவள் எரிச்சலோடு சொல்லுவாள் என்றும்

எழுத்தாளர் தாமே ஒருவேளை வெளியே வருவார் என்றும் எதிர்பார்த்து அவன் சற்று நேரம் காத்திருந்தான். எழுத்தாளர் வெளியே வரவில்லை. மெய்யாகவே அவர் வீட்டில் இல்லை போலும்.

சியோம்கா பிரதேச நிர்வாகக் கமிட்டி அலுவலகத்துக்குப் போனான்.

கமிட்டித் தலைவரின் அலுவலறைக்கு அவன் உடனே, விந்தையான முறையில் சென்றான். அவன் ஏற்பறையில் புகுந்ததுமே செயலாளி மாது அவன் மேல் பாய்ந்தாள்:

''ஏன்தான் நேரம் ஆக்குகிறீர்கள்? ஏற்பதில்லை என்று ஒரு சமயம் குறை சொல்லுகிறீர்கள், அப்புறம் உங்களுக்காகக் காத்திருந்து மாளாது போல் இருக்கிறது. மற்றவர்கள் எங்கே?'' என்றாள்.

''அங்கே'' என்றான் சியோம்கா. ''வந்து கொண்டிருக்கிறார்கள்.''

''வந்து கொண்டிருக்கிறார்களாம்.'' செயலாளி மாது அலுவலறைக்குள் போய்ச் சற்று நேரம் இருந்து விட்டு வெளியே வந்து, ''உள்ளே போங்கள்'' என்று கோபத்துடன் சொன்னாள்.

சியோம்கா அலுவலறைக்குள் போனான்... தலைவர் அவனை எதிர் கொண்டார். முகமன் கூறினார்.

''சரியான கூச்சல் கிளப்பி விட்டீர்களே, கூச்சல்!'' என்று புன்னகையோடுதான் என்றாலும் கடிந்து கொண்டார். ''கூச்சல் போடுகிறோம், அல்லவா சோதரர்களே? வணக்கம்!'' என்றார்.

சியோம்கா தலைவரின் கையைக் குலுக்கி, ''நான் சர்ச்சு விஷயமாகப் பேச வந்தேன். உங்கள் உதவிக்காரி என்னை வேறு யாரோ என்று நினைத்து விட்டாள்... சர்ச்சு விஷயமாக வந்தேன்...'' என்றான்.

''எந்தச் சர்ச்சு விஷயமாக?''

''எங்கள் ஊரில், எங்கள் ஊரில் அல்ல, தாலித்ஸாவில், பதினேழாம் நூற்றாண்டுச் சர்ச்சு ஒன்று இருக்கிறது. அசாதாரணமான அழகு உள்ளது! அதை மட்டும் செப்பனிட்டால் அது... வழிபாடு நடத்த அல்ல, இல்லை! மதச் சார்பு இல்லாத நோக்கில் அது மதிப்பு உள்ளது. எனக்கு மூன்று ஆட்களை உதவிக்குக் கொடுத்தால், குளிர் காலத்துக்குள் அதைச் சீரமைத்து விடுவேன்.'' விளங்காமையுடன்

தன்னை யாரேனும் பார்த்தபோது சியோம்காவுக்குத் தாங்க முடியவில்லை, எனவே அவன் அவசரப்பட்டான். அந்த மாதிரி சந்தர்ப்பங்களில் அவன் பதற்றம் அடைந்தான். ''நான் சொல்லுகிறேன், தாலித்ஸா கிராமத்தில் ஒரு சர்ச்சு இருக்கிறது'' என்று மெதுவாக, ஆனால் அதற்குள் எரிச்சலுடன் சொல்லத் தொடங்கினான். ''அதைச் செப்பனிடுவது அவசியம். அது புழக்கத்தில் இல்லை. அது ருஷ்ய மக்கள் இனத்தின் பெருமை, ஆனால் எல்லோரும் அதைப் புறக்கணித்து விட்டார்கள். செப்பனிட்டு விட்டால் அது இன்னும் முன்னூறு ஆண்டுகள் நின்று கண்களையும் உள்ளத்தையும் மகிழ்வித்துக் கொண்டிருக்கும்.''

''ம்ஹ்ம், இதோ தெளிவுபடுத்திக் கொள்வோம்'' என்று மேசை மேலிருந்த பொத்தானை அழுத்தினார் தலைவர். செயலாளி மாது வாயிலில் தென்பட்டாள். ''ஸவத்ஸ்கியை வரச் சொல்லுங்கள்'' என்றார் தலைவர். ''அதாவது, உங்கள் கிராமத்தில் பழைய சர்ச்சு ஒன்று இருக்கிறது. பதினேழாம் நூற்றாண்டின் கட்டிடச் சிற்பக்கலைச் சின்னம் என்ற நோக்கில் அது அக்கறைக்கு உரியதாக உங்களுக்குப் படுகிறது என்கிறீர்கள், அப்படித்தானே?''

''முற்றிலும் சரி! முக்கியமானது என்னவென்றால், அங்கே வேலை அவ்வளவு அதிகம் இல்லை. கும்மட்டத்துக்குப் புதுத் தகடுகள் வேய வேண்டும், சிற்சில இடங்களில் கற்களுக்கு அண்டை கொடுக்க வேண்டும், ஒருவேளை சிலுவைக் கோலை மேலே தூக்கி விட்டுச் செப்பம் செய்ய வேண்டும்...''

''இதோ, இதோ... எங்கள் அலுவலகத்தில் ஒரு தோழர் இருக்கிறார், அவர் இந்த விஷயத்தைக் கவனித்துக் கொள்கிறார். இதோ வந்து விட்டார்.''

அலுவலறைக்குள் வந்தவர் இன்னும் இளைஞர், அலை படிந்த கரு முடியும் மோவாயில் குழிவும் கொண்ட அழகர்.

''ஈகர் அலெக்சாந்திரவிச், இந்தத் தோழர் சொல்லுவதைத் தயை செய்து கவனியுங்கள். உங்கள் பிரிவைச் சேர்ந்த விஷயம்'' என்றார் தலைவர்.

''வாருங்கள் போவோம்'' என்று அழைத்தார் ஈகர் அலெக்சாந்திரவிச்.

ஈகர் அலெக்சாந்திரவிச் முன்னேயும் சியோம்கா அரை அடி பின்னேயுமாக அவர்கள் நீண்ட நடை வழியே சென்ருர்கள்.

''நான் தாலித்ஸாக்காரன் அல்ல, செப்ரோவ்காக் காரன். தாலித்ஸா எங்கள் ஊரிலிருந்து...''

''இதோ, இதோ'' என்று திரும்பாமல் தலையை ஆட்டினுர் ஈகர் அலெக்சாந்திரவிச். ''இதோ எல்லாவற்றையும் தெளிவுபடுத்திக் கொள்வோம்.''

''இங்கே உள்ளவர்கள் நேரத்தை வீணுக்குவதே இல்லை'' என்று எண்ணிக் கொண்டான் சியோம்கா.

அலுவலறைக்குள் போனுர்கள்... அது தலைவரின் அறையைக் காட்டிலும் குறைந்த வசதிகள் கொண்டிருந்தது. வெறுமே அறை, மேசை, நாற்காலி, சுவர்கள்மேல் வரைபடங்கள், புத்தக அலமாரி.

''ஊம்?'' என்று புன்னகை செய்தார் ஈகர் அலெக்சாந்திரவிச். ''உட்கார்ந்து விஷயத்தை நிதானமாகச் சொல்லுங்கள்.''

சியோம்கா எல்லாவற்றையும் விவரிக்கத் தொடங்கினுன். அவன் விவரித்தபோது ஈகர் அலெக்சாந்திரவிச் கேட்டுக் கொண்டிருந்தார், பின்பு புத்தக அலமாரியிலிருந்து ஒரு கோப்பை எடுத்துப் பக்கங்களைப் புரட்டி, தேவையான பக்கத்தைத் திருப்பி, கோப்பு மூடிக் கொண்டு விடாதபடி உள்ளங்கையால் பிடித்தவாறு பொறுமையின்மையை வெளிப்படையாகக் காட்டலானுர். சியோம்கா இதைக் கவனித்தான்.

''இவ்வளவுதானே?'' என்று வினவினுர் ஈகர் அலெக்சாந்திரவிச்.

''இப்போதைக்கு இவ்வளவுதான்.''

சரி, கேளுங்கள். 'தாலித்ஸா சர்ச்சு, என். பிரதேசம், செப்ரோவ்கா வட்டாரம்' '' என்று படிக்கத் தொடங்கினுர் ஈகர் அலெக்சாந்திரவிச். '' 'கொலை நடந்த இடத்தில் எனப்படுவது. அனுமானமாகப் பதினேழாம் நூற்ருண்டின் எழுபதுக்கள்—தொண்ணூறுகளைச் சேர்ந்தது. பரியாதின்ஸ்கி வம்சச் சிற்றரசன் ஒருவன் தாலித்ஸாவில் பகைவனுல் கொலை செய்யப் பட்டான்...' '' ஈகர் அலெக்சாந்திரவிச் காகிதத்திலிருந்து பார்வையை உயர்த்தி, தமது அனுமானத்தைக் கூறினுர்: ''குடிகார அண்ணன் தம்பிகளோ உறவுகாரர்

களோ அடித்துக் கொண்டிருப்பார்கள். ஆயிற்று, மேலே கேளுங்கள்... 'பகைவனால் கொல்லப்பட்டான். அந்த இடத்தில் சர்ச்சு கட்டப்பட்டது. கட்டிடச் சிற்பியின் பெயர் தெரியவில்லை. கட்டிடச் சிற்பக் கலைச் சின்னம் என்ற நோக்கில் மதிப்பு உள்ளது அல்ல, ஏனென்றால் தன் காலத்துக்குப் புதியதான எதையும், எதிர்பாராச் செயல் முறை முடிவுகளையோ தேட்டங்களையோ, சிற்பி இதில் காட்டவில்லை. விளதீமிர் கோயில்களின் ஓரளவு சரியான நகல் இது. சர்ச்சின் அளவுகள் கவனத்தை ஈர்க்கின்றன, ஆனால் அவையும் கூடக் கட்டிடச் சிற்ப நோக்கங்களுக்காக அல்ல, கட்டுவித்தவரின் பொருளியல் சாத்தியக்கூறுகளின் காரணத்தால் மேற்கொள்ளப்பட்டன என்று தெரிகிறது. 1925 முதல் இதில் வழிபாடு நின்று விட்டது.' ''

''நீங்கள் அதைப் பார்த்தீர்களா?'' என்று கேட்டான் சியோம்கா.

''பார்த்தேன். இதோ.'' ஈகர் அலெக்சாந்திரவிச் கோப்பில் இருந்த அரசாங்கக் கடிதத்தின் பக்கத்தைக் காட்டினார். ''என் கேள்விக்குப் பதில் இது. உங்களைப் போல நானும் ஏமார்ந்தேன்...''

''உள்ளே போனீர்களா?''

''போனேன், போகாமல் இருப்பேனா? நம் பிரதேச நிபுணர்களையும் உடன் அழைத்துப் போனேன்...''

''பொறுங்கள்!'' என்று சீற்றம் பொங்கக் கூறினான் சியோம்கா. ''நிபுணர்கள் என்ன சொன்னார்கள்? இணைப்புக்களைப் பற்றி?..''

''சுவர்களை ஒட்டி இருப்பவற்றையா? அங்கே விஷயம் என்ன தெரியுமா? பரியாதின்ஸ்கி வம்சத்தவர்கள் இறந்தவர்களைத் தங்கள் கோயிலில் அடக்கம் செய்த போது வானக் கிடங்கை மிகவும் அகலமாக்கி விட்டார்கள். நீங்கள் ஊன்றிக் கவனித்திருந்தால் சர்ச்சு ஒரு பக்கம் சிறிது சாய்ந்திருப்பதைக் கண்டிருப்பீர்கள். வம்சத்தின் பிற்காலச் சந்ததி ஒருவன் இப்படி அடக்கம் செய்வதை நிறுத்தினான். பிறகு இந்த மாதிரி இணைப்பு பொருத்தப்பட்டது... எங்கே கல்லறைகள் அடியில் உள்ளனவோ, அங்கே இணைப்புக் கல் மேல் குறிப்பு பொறிக்கப்பட்டிருக்கிறது—நீங்கள் கவனித்திருக்கலாம்.''

தான் உறுதி இழந்து குழப்பம் அடைந்ததை சியோம்கா உணர்ந்தான்.

''ஆனாலும் எப்பேர்ப்பட்ட அழகு!'' என்று பிடிவாதம் பிடிக்க முயன்றான்.

''அழகானதுதான்'' என்று துள்ளி எழுந்த ஈகர் அலெக்சாந்திரவிச் அலமாரியிலிருந்து ஒரு புத்தகத்தை எடுத்து ஒரு கோயிலின் நிழற்படத்தைக் காட்டினார். ''அதைப் போல் இருக்கிறதா?''

''இருக்கிறது...''

''இது விளதீமிரில் உள்ள பக்ரோவ் கோயில். பன்னிரண்டாம் நூற்றாண்டு. நீங்கள் விளதீமிர் போனதில்லையோ?''

''எனக்கு என்னவோ நம்பிக்கைப்படவில்லை...'' சியோம்கா அரசாங்கக் காகிதத்தைத் தலையசைப்பால் குறித்தான். ''உங்கள் நிபுணர்கள் இருக்கிறார்களே, அவர்கள் உங்கள் கண்களில் மண்ணைத் தூவி விட்டார்கள். நான் மாஸ்கோவுக்கு எழுதப் போகிறேன்.''

''அட இது மாஸ்கோவிலிருந்து வந்த பதில்தான். நான் எதனால் ஏமார்ந்தேன் என்றால், இதுவும் பன்னிரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்று எண்ணியதால்... யாரோ தானாகவே, ஒருவேளை கேள்வி மூலம் அறிந்து விளதீமிர்க் காரர்களைப் போல் செய்திருக்கிறான் என்று நினைத்தேன். ஆனால் அற்புதங்கள் நிகழ்வதில்லை. உங்களைக் கிராம சோவியத்தார் அனுப்பினார்களா?''

''இல்லை, நானாகத்தான்...''

சியோம்கா அன்றே ஊர் திரும்பினான். பொழுது சாய்வதற்கு முன்பே வட்டார மையம் சேர்ந்து ஹெராசிம் பாதிரியாரிடம் போனான்.

ஹெராசிம் பாதிரியார் சர்ச்சில் வழிபாடு நடத்திக் கொண்டிருந்தார். ஊர் திரும்ப பஸ் கட்டணமும் ஒரு புட்டி மதுவின் விலையும் மட்டும் வைத்துக் கொண்டு எஞ்சிய பணத்தைப் பாதிரி வீட்டாரிடம் கொடுத்தான். கடன் பணத்தை அஞ்சல் வழி அனுப்பி விடுவதாகச் சொன்னான்... பின்பு வீடு சென்றான்.

அப்போது முதல் அவன் தாலித்ஸா சர்ச்சு பற்றிய பேச்சையே எடுக்கவில்லை. ஒருபோதும் அதற்குப் போகவில்லை. தாலித்ஸா சாலை வழியே போக நேர்ந்தால், குன்றின் அருகே சர்ச்சுக்கு முதுகைக் காட்டியவாறு திரும்பிக் கொண்டான்,

ஆற்றையோ, புல் வெளியையோ ஆற்றின் மறு கரையை யோ பார்த்துக் கொண்டு சிகரெட்டு புகைத்தவாறு பேசா திருந்தான். மற்றவர்கள் இதைக் கவனித்தார்கள். அந்த நேரத்தில் அவனோடு பேச யாரும் துணியவில்லை. பிரதேச மையத்துக்கு அவன் எதற்காகப் போனான், அங்கே யாரைப் பார்த்தான் என்றும் ஒருவரும் கேட்கவில்லை. அவன் மௌன மாய் இருக்கிறான் என்றால் இதைப் பற்றிப் பேச விரும்ப வில்லை என்று ஆகிறது. அப்படியானால் எதற்காகக் கேட்க வேண்டும்?

பரிசல்காரர் பிலிப் தியூரின் வானெலியில் கடைசிச் செய்திகளை முடிவுவரை கேட்டுவிட்டு, இன்னும் சிறிது நேரம் சாப்பாட்டு மேசை அருகே உட்கார்ந்து, கடுப்புடன் மௌனமாய் இருந்தார்...

''எனக்கு மனம் ஆறவே மாட்டேன் என்கிறது!'' என்று சிடுசிடுத்தார்.

''யார் மேல் நீ மறுபடி கோபித்துக் கொள்ளுகிருய்?'' என்று கேட்டாள் அவருடைய மனைவி, ஆண்களுடையவை போன்ற கைகளும் ஆண்களுடையது போன்ற கட்டைக் குரலும் கொண்ட நெடிய கிழவி.

''விமானத் தாக்கு நடத்துகிருர்கள்!'' என்று வானெலிப் பெட்டியைத் தலையசைப்பால் குறித்தார் பிலிப்.

''யார் மேல்?''

''வியத்நாமியர்கள் மேல்.''

அரசியலில் கணவருடைய இந்த ஈடுபாட்டைக் கிழவி ஆதரிக்கவில்லை. அது மட்டும் அல்ல, அசட்டுத்தனமான இந்த ஈடுபாடு அவளுக்கு எரிச்சல் ஊட்டிற்று. அரசியல் காரணமாக அவர்கள் திட்டிக் கொண்டது உண்டு. ஆனல் இப்போது அவள் சண்டை போட விரும்பவில்லை, அவள் சந்தைக்குக் கிளம்பிக் கொண்டிருந்தாள், சண்டை போட நேரம் இல்லை.

கண்டிப்பும் காரியத்தில் முனைப்பும் கொண்ட பிலிப் அதிகக் கதகதப்பான உடை அணிந்து கொண்டு பரிசல் துறைக்குப் போனுர்.

பரிசல்காரராக அவர் வெகு காலமாய், யுத்தம் முடிந்தது முதல் வேலை பார்த்து வந்தார். மண்டையில் காயம் பட்டதால் குனிந்து தச்சு வேலை செய்ய அவரால் முடியவில்லை, ஆகையால் பரிசல் ஓட்டும் வேலையை ஏற்றுக் கொண்டார்.

செப்டெம்பர் மாத முடிவு. மழைக்குப் பின் காற்று அடித்துக் கொண்டிருந்தது. ஒரே கூதலும் குளிருமாகக் கொண்டுவந்தது. காலடியில் சேறு நளுக்கிட்டது. கிராமக் கடையில் பொருத்தியிருந்த வானெலிப் பெட்டியிலிருந்து உடற் பயிற்சி நிகழ்ச்சி ஒலிபரப்பு ஆகிக் கொண்டிருந்தது. வாத்திய இசைத் துணுக்குகளையும் மாஸ்கோக்காரரின் உற்

சாகமான குரலையும் காற்று சிதற அடித்துக் கொண்டிருந் தது. கிராமத்தில் பன்றிகளின் வீலிடலும் கோழிகளின் கூக் குரலும் காதைத் துளைக்கும்படி இடையறுது கேட்டுக் கொண்டிருந்தன.

எதிரே வந்த ஊர்க்காரர்கள் தலை அசைப்பால் பிலிப் புக்கு முகமன் தெரிவித்து விட்டு அவசரமாக மேலே சென் ருர்கள்—ரொட்டி வாங்குவதற்காகக் கடைக்கோ அல்லது பஸ்ஸைப் பிடித்துச் சந்தைக்கோ போவதற்காக.

வீட்டிலிருந்து பரிசல் துறைக்கு இந்த மாதிரிக் காலை யில் நடப்பது பிலிப்புக்குப் பழக்கம் ஆகி விட்டது. இந்த நடையை அவர் சிந்தனை இல்லாமல் நடந்து வந்தார். அதாவது, அவர் சிந்தனை செய்யத்தான் செய்தார், ஆனுல் பரிசலைப் பற்றியோ, பகல் முழுதும் தாம் ஏற்றிச் செல்லப் போகிற பயணிகளைப் பற்றியோ இல்லவே இல்லை. அந்தச் சேதிகள் எல்லாம் புரிந்தவை தாமே. இந்த அமெரிக்கர் களைப் போரிலிருந்து தடுத்து நிறுத்துவது எப்படி என்று இப்போது அவர் சிந்தித்துக் கொண்டிருந்தார். சிறு வயது முதற்கொண்டே பிலிப் மிகத் துடியாக இருந்து வந்தார். புது வாழ்வில் துடியாகக் கலந்து கொண்டார், கூட்டுப் பண்ணைகள் அமைப்பதில் துடியாக உழைத்தார்... பணக் கார விவசாயிகளின் உடைமைகளை அவர் பறிக்கவில்லை தான், ஆனுல் நிறைய விவாதித்தார், கத்தினுர், நம்பிக்கை இல்லாதவர்களுக்கு அறிவுறுத்தினுர், கிளர்ச்சி அடைந் தார். கம்யூனிஸ்டுக் கட்சியில் உறுப்பினராகவும் அவர் சேரவில்லை. பொறுப்புள்ள தோழர்களோடு இந்த விஷயம் பற்றிப் பேச்சு எதனுலோ நடக்கவே இல்லை. ஆனுல் பொறுப் புள்ள தோழர்கள் பிலிப் இல்லாமல் ஒருபோதும் காரி யம் செய்யவில்லை. அவர் அவர்களுக்கு உளமார உதவி ஞர். தாம் இல்லாமல் அவர்களால் சமாளிக்க முடியவே இல்லை என்பதில் பிலிப் உள்ளுக்குள் பெருமை கொண் டிருந்தார். உதாரணமாக, தேர்தல்களுக்கு முன்னுல் நல்ல முறையில் தேர்தல்கள் நடத்துவது எப்படி என்று வெளி யிலிருந்து வந்த தோழர்களுடன் கிராம சோவியத்தில் ஆலோசனை செய்வது அவருக்குப் பிடித்தது: யார் வீட்டுக்கு ஓட்டுப் பெட்டியைக் கொண்டு போக வேண்டும், காலை யில் போய் நினைவுமட்டும் படுத்திவிட்டால் யார் தாமே வருவார்கள் என்பதை எல்லாம்... ஒரு வகை ஆட்கள்

முரண்டு பண்ணவும் தலைப்பட்டார்கள். ''விறகு வெட்டி வருவதற்காகக் கேட்டேனே, குதிரை கொடுத்தார்களா எனக்கு?..'' என்பது போலக் குறைகள் சொன்னார்கள். இந்த மாதிரிச் சொற்களைக் கேட்டு பிலிப்புக்கு ஒரே வியப்பு உண்டாயிற்று. ''நீ என்ன யெகோர், இதையும் அதையும் ஒப்பிடலாமா?! இது வேறு விஷயம்! இது அரசியல் காரியம். நீ என்னடா என்றால் குதிரை என்கிறாய். எதையோ எதனுடனோ போட்டுக் குழப்புகிறாயே...'' என்று கிராமத்தானுடன் வாதாடினார், விளங்கும்படி எடுத்துச் சொன்னார், சான்று காட்டினார். கிராமத்தாரும் அவருக்குச் சான்று காட்டினார்கள், விருப்புடன் அவரோடு விவாதித்தார்கள். அவர்கள் அவர் மேல் மனத்தாங்கல் கொள்ளவில்லை. ''அங்கே அவர்களிடம் சொல்லும் நீர்...'' என்றார்கள். சந்தர்ப்பத்தின் முக்கியத்துவத்தை பிலிப் உணர்ந்தார், கிளர்ச்சி அடைந்தார், கவலைப்பட்டார். பெரிய காரியத்தின் கவலைகளால் ஆட்கொள்ளப்பட்டு,''என்ன மக்கள் அப்பா! கவைக்கு உதவாத அறிவிலிகள்'' என்று எண்ணினார். வயது ஆகி விட்டதால் பிலிப்பின் ஊக்கம் தளர்ந்தது. அதோடு மண்டையில் குண்டடி படவே, துடியாக வேலை செய்யவும் கிளர்ச்சி அடையவும் முடியாமல் போயிற்று. ஆனாலும் அவர் பொதுப் பிரச்சினைகள் எல்லாவற்றிலும் உளமார்ந்த அக்கறை எடுத்துக் கொண்டார், கவலைப்பட்டார்.

ஆற்றின் மீது பலத்த காற்று வீசிக் கொண்டிருந்தது. அது சுளீரென்று அடித்தது, நெட்டித் தள்ளிற்று... கயிறுகள் ஙொய்யென்று முரன்றன. சூரியன் கொஞ்சம் தான் முகம் காட்டினாலும் அதுவே இதமாக இருந்தது.

பிலிப் அக்கரைக்கும் இக்கரைக்குமாகப் போய் வந்து கொண்டிருந்தார். கொஞ்சங்கூடப் பொறுமை இல்லாதவர்களை ஏற்றி வந்து கொண்டிருந்தார். அப்புறம் வேலை சுளுவாயிற்று, எரிச்சல், புகைச்சல் இல்லாமல். பிலிப் மறுபடி அமெரிக்கர்களைப் பற்றிய சிந்தனையில் ஈடுபட்டிருப்பார், ஆனால் அதற்குள் திருமணக் கொண்டாட்டக் கூட்டம் ஒன்று வந்தது... இந்தக் காலக் கூட்டம். வண்ண நாடாக்களாலும் பலூன்களாலும் அலங்கரித்த கார்களில் வந்தது. இப்போது கிராமங்களில் கூட இது மோஸ்தர் ஆகி விட்டது. மூன்று கார்கள் வந்தன... திருமணக் கூட்டம் கரையில் இறங்கிற்று. ஆரவாரம் நிறைந்தது, கொஞ்சம் குடி

வெறியில் இருந்தது... நிரம்ப, நிரம்பப் பகட்டானது, தற் பெருமை அடித்துக் கொள்வது. வண்ண நாடாக்களால் அலங்கரித்த கார்களில் வருவது இப்போது மோஸ்தர் ஆகி விட்டாலும், கிராமங்களில் இது இன்னமும் அபூர்வம்தான். கார்களுக்கு ஏற்பாடு செய்வது கொஞ்சம் பேருக்குத்தான் முடிந்தது.

திருமணக் கூட்டத்தை பிலிப் ஆவலுடன் பார்வையிட் டார். இந்த ஆட்கள் அவருக்குத் தெரியாதவர்கள். இந்தப் பக்கத்தைச் சேர்ந்தவர்கள் அல்ல. எங்கோ விருந்தின ராகப் போய்க் கொண்டிருந்தார்கள். ஹாட் போட் டிருந்த ஒரு மனிதர் நிரம்பத் தளுக்குப் பண்ணினுர்... அவர் தாம் கார்களுக்கு ஏற்பாடு செய்திருப்பார் என்று தோன்றி யது. திருமண விழா பெரிய அளவில், மிக விமரிசையாக நடக்க வேண்டும் என்று அவர் ஆசைப்பட்டார். அக்கார்டி யன் வாத்தியக்காரனைப் பரிசிலில் வாசிக்கும்படி கட்டாயப் படுத்தினுர். எல்லோருக்கும் முன்னுல் நடனம் ஆடத் தொடங்கினுர். கூச்சல் போட்டுக் கொண்டு ஜதி வரிசை களை ஆடிக் காட்டியபடி மிடுக்குடன் பார்த்தார். ஆனுல் எதனுலோ அவரைப் பார்க்கச் சங்கடமாக, வெட்கமாக இருந்தது. மணமகனுக்கும் மணமகளுக்கும் வெட்கமாய் இருந்தது. மற்றவர்களை விட அதிகப் புத்தி நிதானத்தோ டும் அதிக மரியாதை உணர்வோடும் இருந்தார்கள் அவர் கள். அந்த ஹாட்டுக்கார ஆசாமிதான் சொல்லச் சொல்லக் கேட்காமல் குதித்துக் கும்மாளம் போட்டுக் கொண் டிருந்தார். அவருடைய போலிக் குதூகலம் வேறு யாரை யும் பாதிக்கவில்லை. அவர் களைத்துப் போனுர்... பரிசல் அக்கரை சேர்ந்தது, கார்கள் புறப்பட்டன, திருமணக் கூட் டம் பயணத்தைத் தொடர்ந்தது.

பிலிப் தம்முடைய வாழ்க்கையைப் பற்றி எண்ணத் தொடங்கினுர். இளமையில் திருமண விஷயமாக அவருக்கு நேர்ந்தது இதுதான். அவர்களுடைய கிராமத்தில் மாரியா யெர்மீலவா என்ற பெண் இருந்தாள். அழகானவள். செம்மை படிந்த உருண்டை முகம், இனிய நோக்கு... பார்க்கப் பார்க்கத் தெவிட்டாத அழகு. தூங்கும் போது கனவில்தான் இந்த மாதிரி மணமகள் ஒருவனுக்குக் கிடைப்பாள். பிலிப் அவள் மேல் மிகுந்த காதல் கொண்டிருந்தார், மாரியா வும் அவரைக் காதலித்தாள். காதல் கனிந்து மணத்தை

நெருங்கிற்று. ஆனால் ஒரு தடை குறுக்கிட்டது: பிலிப் இளங் கம்யூனிஸ்டுகளோடு தொடர்பு கொண்டிருந்தார்... அங்கும் இளங் கம்யூனிஸ்டுகள் சங்க உறுப்பினர் ஆகவில்லை, ஆனால் அவர்கள் போலவே பழைய மூட வழக்கங்களை எதிர்த்துக் கத்தினார், அவற்றை நிராகரித்தார். கிராம முதியவர் களுக்கும் அவர்களுடைய நிர்ப்பந்தங்களுக்கும் எதிராக இளங் கம்யூனிஸ்டுகள் கிளர்ச்சி நடத்தியது பிலிப்புக்குப் பிடித்திருந்தது. அரசியல் உணர்வுள்ள இளைஞர்கள் எல்லோ ரும் சர்ச்சில் திருமணச் சடங்கு நடத்துவதை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தார்கள். முன்பு கேள்விப்பட்டிராத நிகழ்ச்சி இது... முதியவர்களால் ஒன்றும் செய்ய முடிய வில்லை. அவர்கள் ஆத்திரம் அடைந்து சவுக்குகளைக் காட்டி மிரட்டினார்கள். சவுக்கால் அடித்தாவது இந்தச் சோப்ப ளாங்கிகளை வழிக்குக் கொண்டு வருவோம் என்று கிளம்பி னார்கள். ஆனால் இதனால் இளைஞர்களின் பிடிவாதம் இன் னும் வலுத்ததுதான் மிச்சம். குதூகலமான நேரம் அது. பிலிப்பும் இந்த இளைஞர்களின் தரப்பில் இருந்தார். திரு மணச் சடங்கை எதிர்த்தார். ஆனால் மாரியா அதை எதிர்க்க வில்லை. மாரியாவின் தாயார் தகப்பனார் பழமைப் பற்றில் உறுதியாய் இருந்தார்கள். மாரியாவும் முன்னணி இளைஞர் வரிசைகளிலிருந்து முடிவாக விலகி விட்டாள். சர்ச்சில் திருமணச் சடங்கு நடக்க வேண்டும் என்றாள். பிலிப் சங் கடத்தில் மாட்டிக் கொண்டார். மாரியாவுக்குப் பல வகை களில் எடுத்துச் சொல்லி அவளை வழிப்படுத்த முயன்றார் (பேச்சில் அவர் சூரர். இது கிராமத்தில் அரிய கலை ஆதலால் இதற்காகவே மாரியா அவரைக் காதலித்தாள் போலும்). பட்டிக்காட்டு அறியாமை இருளை விலக்கி, நம்பிக்கை ஏற்படும்படி விவரித்தார், பல வகையான கட்டுரைகளையும் நையாண்டிச் சொல்லோவியங்களையும் அவளுக்குப் படித்துக் காட்டினார். நெஞ்சில் வேதனையுடன் அவளை ஓயாமல் எள்ளி நகையாடினார்... மாரியா அசைந்து கொடுக்க வில்லை. திருமணச் சடங்கு நடந்தாக வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தாள். இப்போது தம் வாழ்க்கையைத் திரும்பிப் பார்க்கும் போது அந்தக் காலத்தில் தாம் திருத்த முடியாத அளவு மட்டியாகி இருந்ததாக அவருக்குத் தெரிந் தது. மாரியாவும் அவரும் பிரிந்து விட்டார்கள். பிலிப் பிறகும் மாறவில்லை. வாழ்க்கையை மாற்றி அமைப்பதில்

சக்திக்கு ஏற்ப, இயன்ற அளவு தாம் பங்கு எடுத்துக் கொண்டதற்காகஅவர்ஒருபோதும் வருந்தவில்லை, இப்போதும் வருத்தப்படவில்லை. ஆனால் மாரியாவுக்காக வருந்தினர். வாழ்நாள் முழுதும் இதயம் இரத்தக் கண்ணீர் சிந்தியது, வலித்தது. அவர் மாரியாவை நினைக்காத நாளே இல்லை. துவக்கத்தில் துயரம் பொறுக்க முடியாமல் போனதால் தற்கொலை செய்து கொள்ளக் கூட அவர் முயன்றார். ஆண்டு கள் கழிந்த பிறகும் வலி தீரவில்லை. இவ்வளவிற்கும் சட்டப் படி பதிவுத் திருமணம் நடந்து குழந்தைகள் பிறந்தன... ஆனாலும் மாரியாவுக்காக நெஞ்சம் வேதனை கொண்டு துடித் தது. அவருடைய மனைவி பெக்ளா குஸோவ்னிகவா பிலிப் பின் இந்த ஆறாத் துயரத்தைக் கண்டு கொண்டதும் அவரை வெறுக்கலானாள். இந்த ஆழ்ந்த, அமைதியான வெறுப்பும் அவளுடைய உள்ளத்தில் நிலைத்து விட்டது. பிலிப் பெக் ளாவை வெறுக்கவில்லை. இல்லை... ஆனால், யுத்தத்தின் போது, ''நீங்கள் உங்கள் தாய்மாரையும் மனைவிமாரை யும்... காத்துப் போரிடுகிறீர்கள்'' என்று சொல்லப்பட்ட போது, பெக்ளாவுக்குப் பதில் மாரியாவை பிலிப் கற்பனைக் கண்ணால் கண்டார். கொல்லப்பட்டிருந்தாலும் மாரியாவின் நினைவாகவே உயிர் துறந்திருப்பார். ஆண்டுகள் கழிந்த தால் வலி தீர்ந்து விடவில்லை, எனினும் மண வாழ்க்கை யின் முதல் ஆண்டுகளில் நெஞ்சைக் காந்தச் செய்தது போலக் காந்தச் செய்யவில்லை. இதே கையோடு பிலிப் அப் போது தான் பேச்சைக் குறைத்துக் கொள்ளத் தொடங்கி னார் என்பதைச் சொல்லி விட வேண்டும். முன்போலவே ஊக்கத்துடன் செயலாற்றினார், பேசியும் வந்தார், ஏனென் றால் மக்களுக்கு நம்பிக்கை ஊட்ட வேண்டி இருந்தது. ஆனால் கசப்பான தம் பெரிய சிந்தனையில் தோன்றியவற்றை அவர் பொருத்தமின்றி எடுத்தாள்வது போல் இருந்தது. சிந்தனை யில் மேலும் மேலும் ஆழ்ந்து கொண்டே போனவர், சட்டென்று சுதாரித்துக் கொண்டு மறுபடி மக்களுக்கு அறிவூட்டினார், முன் இல்லாத புதுமையைக் காண்பதற்கு அவர்களுடைய கண்களைத் திறந்து விட்டார். ஆனால் மாரியா அப்போது... மாரியாவை அப்போது கிராமத்திலிருந்து அழைத்துப் போய் விட்டார்கள். எவனோ ஒருவன் (எவனோ ஒருவன் அல்ல, பிற்காலத்தில் பிலிப் அவனைப் பல முறை சந்தித்தார்), கிராயுஷ்கினோவைச் சேர்ந்த ஒரு பணக்கார

இளைஞன் விஷயத்தைத் தெரிந்துகொண்டே அவளை மணக்க விரும்பினான். அவன் வீட்டார் வந்து பெண் பேசி, மணம் முடித்து, அழைத்துப் போய் விட்டார்கள். சர்ச்சில் திரு மணச் சடங்கு நடந்தது என்பதைச் சொல்லவே வேண்டாம். ஓர் ஆண்டு கழிந்த பின் மாரியாவின் கணவன் பாவெலிடம், ''உனக்கு வெட்கமாய் இல்லையா? சர்ச்சுக்குப் போனாயே...'' என்று கேட்டார் பிலிப். அதற்குப் பாவெல் ஆச்சரியம் அடைந்தவன் போல முகத்தை வைத்துக் கொண்டான். ''எனக்கு எதற்காக வெட்கமாய் இருக்க வேண்டும்?'' என்று பிறகு கேட்டான். ''கிழவர்களுக்குப் படிந்து போனாயே.'' ''நான் ஒன்றும் படிந்து போகவில்லை. சர்ச்சில் சடங்குப்படி மணம் செய்து கொள்ளவே நானும் விரும்பினேன்'' என்றான் பாவெல். பிலிப் தடுமாறினார். ''அதைத்தான் நானும் கேட்கிறேன், வெட்கமாய் இல்லையா என்று. கிழவர்களை யாவது மன்னித்து விடலாம். ஆனால் நீங்களோ?.. இப்படி இருந்தால் அறியாமை இருளிலிருந்து வெளியேற நம்மால் ஒருபோதும் முடியாது'' என்றார். இதற்குப் பதிலாகப் பாவெல் ஆபாசமான வசவுகளைப் பொழிந்தான். ''போங் களடா!..'' என்று திட்டியவன், பேசுவதை அதோடு நிறுத்தி விட்டான். ஆனால் பிலிப் ஒரு விஷயத்தைக் கவனித்தார். அவரைச் சந்தித்த போது பாவெல் மறைமுகமான ஏதோ வன்மத்துடன், வலியுடன்கூட, அவரைப் பார்த்தான். எதை யோ புரிந்து கொள்ள அவன் விரும்புவது போலவும் புரிந்து கொள்ள அவனுக்கு முடியவே இல்லை போலவும் தோன்றி யது. அவனும் மாரியாவும் மோசமான குடித்தனம் நடத்து வதாகவும் மாரியா ஏங்குவதாகவும் வதந்தி பரவியது. பிலிப்புக்கு இது வெந்த புண்ணில் வேலைப் பாய்ச்சுவது போல் இருந்தது. புதிதாக ஏற்பட்ட இந்த வலியைப் பொறுக்க மாட்டாமல் குடிக்கத் தலைப்பட்டார். ஆனால் பிற் பாடு குடியை நிறுத்தி விட்டு இந்த மாதிரி வாழ்ந்து வந் தார். இந்த வலிப் பாம்பைத் தமக்குள் நிலையாக வைத்துக் கொண்டிருந்தார். அது மறுபடி மறுபடி கடித்த வண்ண மாய் இருந்தது. ஆனாலும் அவர் பொறுத்துக் கொண்டார்.

கார்களுடன் வந்த இந்தத் திருமணக் குழு இம்மாதிரி மகிழ்வற்ற எண்ணங்களை மனத்தில் எழுப்பியது. இந்த எண்ணங்களோடு அக்கரைக்கும் இக்கரைக்கும் போய் வந்து கொண்டிருந்த பிலிப், மதியச் சாப்பாட்டுடன் ஒரு கிளாஸ்

வோத்கா பருக வேண்டும் போலும் என்று நினைத்தார். குளிர் காற்று எலும்புகள் வரையில் துளைத்தது, நெஞ்சு எதனுலோ தேம்பியது. சோர்ந்து போயிற்று, வெளிப்படையாகக் கலவரம் அடைந்தது.

''இன்னும் இரண்டு தடவைகள் போய் வந்து விட்டு மதியச் சாப்பாட்டுக்குப் போகிறேன்'' என்று முடிவு செய்தார் பிலிப்.

மறு கரையில் (சொந்தக் கிராமத்தார் பரிசலில் ஏறுவது பிலிப்பின் சொந்தக் கரை, மற்றவர்கள் ஏறுவது மறு கரை) பரிசலைச் சேர்த்ததும், மூடிய லாரியையும் அதன் அருகே ஆட்களின் கும்பலையும் கண்டார். அது என்ன லாரி என்பதையும் அதன் பின் பகுதியில் இருப்பது யார் என்றும் பிலிப்பின் அனுபவம் உள்ள கண்கள் உடனே புரிந்து கொண்டன. அதில் இருந்தது இறந்தவரின் சடலம். மனிதர்கள் இறந்தவர்களின் உடல்களை எடுத்துப் போவது ஒரே மாதிரி தான். பரிசலின் அருகே ஆட்கள் லாரியின் பின் பகுதியிலிருந்து இறங்கி ஆற்றை ஒரு விதமாகப் பார்த்தவாறு மௌனமாய் இருந்தார்கள். அதிலிருந்து விஷயம் சட்டெனப் புரிந்தது.

''யாருடையது இது?'' என்று ஆட்களைப் பார்வையிட்டபடி எண்ணிஞர் பிலிப். ''ஆற்றுப் போக்கின் எதிர்ப்புறம் உள்ள ஏதோ கிராமத்தவருடையது, ஏனென்ருல் அண்டை அயலில் யாரும் காலமானதாகச் சேதி காதில் படவில்லை. ஆனுல் எங்கிருந்தோ இங்கே ஏன் கொண்டுவருகிருர்கள்? காலமானது சொந்த வீட்டில் இல்லையோ, அதனுல்தான் புதைக்கச் சொந்த இடத்துக்கு எடுத்துப் போகிருர்களோ?''

பரிசல் கரையை நெருங்கியதும் லாரியின் பக்கத்தில் நின்றவர்களில் ஒருவன் மாரியாவின் கணவன் பாவெல் என்பதை பிலிப் கண்டு கொண்டார். காலமானது யார் என்பது அவருக்கு உடனே விளங்கி விட்டது... இது மாரியாவின் சடலம். ஒரு நிகழ்ச்சி அவருடைய நினைவுக்கு வந்தது. கோடை காலத் தொடக்கத்தில் மாரியா தன் மகளைப் பார்க்க நகரத்துக்குப் போனுள். பரிசல் மறு கரை சேரும் வரை பிலிப்பும் அவளும் பேசிக் கொண்டார்கள். நகரத்தில் தன் மகளுக்குக் குழந்தை பிறந்திருப்பதாகவும் இப்போதைக்கு அவளுக்கு ஒத்தாசை செய்ய வேண்டும் என்றும் சொன்

ளுள் மாரியா. அப்போது பிலிப்பும் அவளும் நன்ருகப் பேசிக் கொண்டார்கள். கணவனும் தானும் மோசமில் லாமல், நன்ருக வாழ்வதாகவும் குழந்தைகள் (மூவர்) வேலே பார்த்துக் கொண்டு நலமாய் இருப்பதாகவும் தனக்குப் பென்ஷன் கிடைப்பதாகவும் பாவெலுக்கும் பென்ஷன் கிடைப்பதாகவும் ஆளுல் அவன் இன்னும் வேலே செய்வ தாகவும் வீட்டில் கொஞ்சம் போலத் தச்சு வேலேகளேச் செய்து கொடுப்பதாகவும் சொன்ஞள். ஆடு மாடுகள் நிறைய வைத்துக் கொள்ளவில்லே என்றும் ஆளுல் மொத்தத்தில் எல் லாம் இருப்பதாகவும் கூறிஞள்... வான்கோழிகள் வளர்க்கப் பழகி விட்டார்களாம். சென்ற ஆண்டு வீட்டைச் செப் பனிட்டுப் புதுப்பித்தார்களாம். பிள்ளேகள் வந்து உதவிஞர் களாம். பிலிப்பும் தம் கதையைச் சொன்ஞர். தம் வாழ்க்கை யும் தற்போதைக்கு நன்ருய் இருப்பதாகவும் தாமும் பென்ஷன் வாங்குவதாகவும், உடல்நிலேயில் தற்போதைக்கு ஒரு குறையும் இல்லே என்றும் ஆளுல் பருவ நிலே மோச மாளுல் தலே கொஞ்சம் வலிப்பதாகவும் கூறிஞர். தன் இருத யத்தில் ஏதோ கோளாறு என்ருள் மாரியா... இருதயத் தால் தொல்லேப்பட்டாளாம். சில வேளேகளில் ஒன்றுமில்லே போல் இருக்கிறதாம், வேறு வேளேகளில் திடீரென்று இறுகு கிறதாம், நசுக்குகிறதாம்... ராத்திரி வேளேகளில் குடைந்து குடைந்து வேதனே எடுக்கும் போது பொறுக்கவே முடிய வில்லேயாம். இப்படிச் சொன்ஞள் அவள். இதோ, மாரியா வின் முடிவு வந்து விட்டதாகத் தெரிகிறது... பாவெலே அடையாளம் தெரிந்து கொண்டது முதல் பிலிப் நெஞ்சுக் குள் ஓலமிட்டார். உடம்பில் குப்பென்று சூடேறிற்று.

பரிசல் அற்றலேந்த இறங்கு துறைமேல் மோதியது. பரிசல் சங்கிலிகள் இறங்கு துறை வளேயங்களில் மாட்டப் பட்டன. பரிசலுக்கும் துறைக்கும் பலகைத் துண்டுகளால் இணேப்பு ஏற்படுத்தப்பட்டது... மூடிய லாரி முன் சக்கரங் களால் துறைக் கட்டைகளின் உறுதியைச் சோதித்துப் பார்த்து விட்டது. கட்டைகள் அசைந்தன, சடசடத்தன, கிரீச்சிட்டன...

பிலிப் மந்திரத்தால் கட்டுண்டவர் போலத் தம் துடுப் பின் அருகே நின்று லாரியைப் பார்த்துக் கொண்டிருந்தார். கடவுளே, கடவுளே, மாரியாவைக் கொண்டு போகிருர் கள், மாரியாவை... லாரியைப் பரிசலில் எப்படி நிறுத்து

வது என்று காரோட்டிக்குக் காட்டுவது பிலிப்புக்கு அவசிய மாய் இருந்தது, ஏனென்றல் பின்னே இன்னும் இரண்டு கார்கள் நின்றன. ஆனால் அவரோ அடித்த சிலை போல் நின்று மூடிய லாரியை, அதன் பின்பகுதியைப் பார்த்துக் கொண்டே இருந்தார்.

''எங்கே நிறுத்துவதாம்?'' என்று கத்தினர் காரோட்டி.

''என்ன?''

''எங்கே நிறுத்துவது என்று கேட்கிறேன்.''

''ஆமாம், நிறுத்தும்...'' என்று தெளிவில்லாமல் கையை ஆட்டினர் பிலிப். இறந்த மாரியாவின் சடலம் எடுத்துப் போகப்படுகிறது என்று அவரால் எவ்வகையிலும் முழுமையாகப் புரிந்து கொள்ள முடியவில்லை... எண்ணங்கள் ஒன்று சேராமல் தனித்தனியே சிதறி மூளையில் சோக வட்டமாக அசைந்தாடின. அவள் இங்கே பரிசலில் தாங்கள் நன்றாக வாழ்வதாகத் தம்மிடம் சொன்ன தோற்றத்தில் மாரியாவை ஒரு தரம் நினைத்துக் கொண்டார்... மறு தரம் இள நங்கையாக அவளைக் கண்டார். எப்படி அவள்... கடவுளே, • கடவுளே... மாரியா... நீதானா இது?

கடைசியில் பிலிப் கால்களை இடத்திலிருந்து சிரமத்துடன் எடுத்து வைத்துப் பாவெலை நெருங்கினர்.

வாழ்க்கை பாவெலைக் கோணலாக்கி விட்டது. முகத்தில் தளதளப்பும் கண்களில் அறிவுக் கூர்மையும் தெளிவும் இன்னும் இருந்தன, ஆனால் பெருமிதப் பாங்கைக் காணோம். அறிவார்ந்த விழிகளிலும் அமைதியான பெருந் துயரம் தேங்கி இருந்தது.

''என்ன, பாவெல்?..'' என்று கேட்டார் பிலிப்.

பாவெல் அவரை மேலோட்டமாகப் பார்த்தான். கேட்டது என்ன என்று அவன் ஒன்றும் புரிந்து கொள்ளவில்லை போல் இருந்தது. மறுபடி கீழே, பரிசல் பலகைகள் மேல் பார்வை செலுத்தலானன். இன்னொரு தரம் அவனை விசாரிப்பது பிலிப்புக்குச் சங்கடமாக இருந்தது... அவர் தம் துடுப்புக்குத் திரும்பினர். போன போது மூடிய லாரியின் பின் பகுதி ஓரமாகச் சுற்றிச் சென்றர், அதற்கு உள்ளே எட்டிப் பார்த்தார், சவப் பெட்டி இருந்தது. இதயம் வெளிப்படையாக வலித்தது. எண்ணங்கள் ஒன்றகி, மாரியா தான் என்றன.

பரிசல் புறப்பட்டது. சுக்கான் துடுப்பை இயந்திர ரீதி

யாக இயக்கியவாறு பிலிப் ''கண்மணி மாரியா, மாரியா...'' என்றே மனதில் செபித்துக் கொண்டிருந்தார். எல்லோரி லும் இனியவள் அவரோடு கடைசி முறையாகப் பரிசலில் போகிருள்... பரிசல்காரராகப் பணி ஆற்றி வரும் இந்த முப்பது ஆண்டுகளில் மாரியா எத்தனை தடவைகள் பரிச லில் மறு கரைக்குப் போயிருக்கிருள் என்பதை அவர் துல் லியமாக அறிந்திருந்தார். பெரும்பாலும் குழந்தைகளைப் பார்க்க நகரத்துக்குப் போனுள். சில வேளைகளில் அவர் கள் அங்கே படித்துக் கொண்டிருந்தார்கள், வேறு சமயங் களில் அவர்கள் வேலையில் அமர்ந்து விட்டார்கள், பின்பு அவர்களுக்குக் குழந்தைகள் பிறக்கலாயின... ஆக இப்போது, மாரியா இல்லை.

பரிசல் மறு கரையை நெருங்கிற்று. மீண்டும் சங்கிலி கள் கிலுங்கின, மோட்டார்கள் ஊளையிட்டன... பிலிப் மறு படி துடுப்பருகே நின்று மூடிய லாரியை நோக்கினுர். புரிந்து கொள்ள முடியாத விஷயம்... மாரியா இருந்தால் என்ன ஆகும் என்று தம் வாழ்நாளில் ஒரு தரமாவது பிலிப் எண்ணிப் பார்த்தது இல்லை. எதனுலோ ஒரு தடவை கூட நினைத்ததில்லை. அவர் எதற்கேனும் தயாராய் இல்லை என்ருல் அது அவளுடைய சாவுதான். மூடிய லாரி பரிசலிலிருந்து கிளம்பத் தொடங்கியதும் தாங்க முடியாத வலி மார் பில் ஏற்பட்டதை பிலிப் உணர்ந்தார். நாம் ஏதோ செய்ய வேண்டுமே? என்ற எண்ணம் அவரது உள்ளத்தை அலைத்து ஆட்டியது. இதோ கொண்டு போய் விடுவார்களே, ஒரே யடியாக. வெறும் பார்வையால் வழியனுப்பியதோடு நின்று விடுவது சரி ஆகுமா? இப்படியே விடலாமா? அமைதி யின்மை அவரை மேலும் மேலும் ஆட்கொண்டது. அவர் இடத்தை விட்டு அசையவே இல்லை. இதனுல் அவர் முன்னி லும் அதிகச் சஞ்சலம் அடைந்தார்.

''அடேடே, பிரிவு சொல்லிக் கொண்டிருக்க வேண்டும்!..'' என்று மூடிய லாரி கரையில் புறப்படத் தயாராய் இருந்த போது புரிந்து கொண்டார். ''பிரிவாவது சொல்லிக் கொள் வோம்!.. கடைசித் தரம் பார்க்கவாவது செய்வோம்! சவப் பெட்டியில் இன்னும் ஆணி அடிக்கப்படவில்லை, பார்க்க முடியுமே!'' தம் அருகாக மாரியாவைக் கொண்டு சென்ற இந்த ஆட்கள் இப்படிச் செய்திருக்கக் கூடாது என்று பிலிப் புக்குத் தோன்றியது. இது யாருடையவாவது துயரம் என்

ருல் எல்லோரிலும் அதிகமாக அவருடைய துயரம். சவப் பெட்டியில் இருப்பவள் மாரியா ஆயிற்றே. அவளை அவர் கள் எங்கே கொண்டு போகிருர்கள்?.. வாழ்க்கையில் அனுபவிக்கப்படாதவை, காலத்தால் அழிக்கப்படாதவை, மறக்கப்படாதவை, வலியுண்டாக்கும் அளவுக்கு இனியவை யாவும் பிலிப்பின் மேல் கவிழ்ந்தன... நீண்ட வாழ்க்கை அனைத்தும் அவர் கண் முன்னே நின்றது—யாவற்றிலும் முக்கியமானது, யாவற்றிலும் அவசியமானது, எதனுல் அவர் உயிர்த்திருந்தாரோ அது... தாம் அழுவதை அவர் கவனிக்க வில்லை. சவப்பெட்டி வைத்திருந்த பயங்கரமான லாரி யின் பின்னே பார்வை செலுத்திஞர்... லாரி மேட்டில் ஏறி, வீதியை அடைந்து, கண்ணுக்கு மறைந்தது. இனி வாழ்க்கை எப்படியோ வேறு விதமாக நடக்கும். உலகில் மாரியா இருக் கிருள் என்ற எண்ணத்தில் அவர் வாழ்ந்து வந்தார். கடினமாயிருந்தது, சிரமமாக, ஆயினும் மாரியாவை நினைவு படுத்திக் கொண்டு தனிமையை அறியாமல் இருந்து வந் தார். இனி எப்படி வாழ்வார்? கடவுளே, எப்பேர்ப்பட்ட வெறுமை, எப்பேர்ப்பட்ட வேதனை!

பிலிப் தடதடவென்று பரிசலிலிருந்து இறங்கிஞர். அப் போதுதான் கரையில் இறங்கியிருந்த கடைசி லாரி எத ஞலோ சுணங்கியது... பிலிப் அதன் ஓட்டுநரிடம் போஞர்.

''சவப் பெட்டி வைத்த... மூடிய லாரியை எட்டிப் பிடியேன்'' என்று முன் அறையில் ஏறி வேண்டிக் கொண் டார்.

''எதற்காக?.. ஏன்?''

''வேண்டும்.''

காரோட்டி பிலிப் மீது கண்ணோட்டிஞர், வேறு எது வும் கேட்கவில்லை. லாரி புறப்பட்டது.

கிராமத்தின் வழியே லாரி போய்க் கொண்டிருந்த போது காரோட்டி பிலிப்பைப் பல முறை பக்கப் பார்வையாகப் பார்த்தார்.

''இவர்கள் கிராயுஷ்கிஞேக்காரர்களோ?'' என்று முன்னே சென்ற மூடிய லாரியைக் குறிப்பால் காட்டி வினவிஞர்.

பிலிப் மௌனமாகத் தலையாட்டிஞர்.

''உறவினர்களோ?'' என்று மேலே கேட்டார் ஓட்டுநர்.

இதற்கு பிலிப் பதில் சொல்லவில்லை. மூடிய லாரியையே வைத்த விழி வாங்காமல் மீண்டும் பார்த்துக் கொண்டிருந்

தார். பின் பகுதியின் நடுவில் இருந்த சவப் பெட்டி இங்கிருந்து பார்வைக்குத் தெரிந்தது... இரு மருங்கிலும் உட்கார்ந்திருந்தவர்கள் தமக்கும் சவப் பெட்டியில் இருந்தவர்களுக்கும் வேற்ருராக அவருக்குத் தோன்றினுர்கள். எந்தச் சொந்தத்தில் அவர்கள் அங்கே இருக்கிருர்கள்? சவப் பெட்டியில் இருப்பவள் மாரியா அல்லவா?

''முந்தட்டுமா?'' என்று கேட்டார் ஓட்டுநர்.

''முந்தும்... என்னை இறங்க விடும்.''

பிலிப்பின் லாரி சவப் பெட்டி லாரியை முந்தியது... பிலிப் முன்னறையிலிருந்து இறங்கி, நிறுத்தும்படிக் கையால் சைகை செய்தார். இருதயம் துள்ளத் தொடங்கியது. இங்கே இப்போது ஒன்று நிகழப் போகிறது, மாரியா பிலிப்புக்குயார் என்பதை எல்லோருக்கும், பிலிப்புக்கும் கூட அது தெளிவாக்கி விடும் என்பது போலத் துள்ளியது இருதயம். என்ன நடக்கும் என்பதை அவர் அறியவில்லை. சவப் பெட்டி லாரி நின்றதும் தாம் என்ன மாதிரிச் சொற்கள் கூறப் போகிருர் என்பது அவருக்குத் தெரியவில்லை. மாரியாவைப் பார்க்க ஒரே ஆசையாக இருந்தது. அது பெரிதும் தேவையாக, முக்கியமாக இருந்தது. அவள் இந்த மாதிரிப் போய் விடுவது கூடாது அல்லவா? அவருடைய வாழ்க்கையும்தான் கழிந்து விட்டது. அவருக்கும் இனி யாரும் இருக்க மாட்டார்கள்...

லாரி நின்றது.

பிலிப் பின்னே போனுர்... பக்கப் பலகையைப் பிடித்துக் கொண்டு குட்டையான இரும்புப் படிகளில் ஏறினுர்.

''பாவெல்'' என்று கெஞ்சும் குரலில் சொன்னுர். தம் குரலை அவருக்கே அடையாளம் தெரியவில்லை. இவ்வளவு கெஞ்சுவதாக அவர் எண்ணவில்லை. ''அவளிடம் பிரிவு சொல்லிக் கொள்ள என்னை அனுமதி... திற, ஒரு பார்வையாவது பார்க்கிறேன்.''

பாவெல் சட்டென்று எழுந்து அவரை நெருங்கினுன்... அவனுடைய முகத்தைக் கிட்டத்தில் பார்க்க பிலிப்புக்கு முடிந்தது... மாறிய முகத்தை. சற்று முன் துயரம் குடிகொண்டிருந்த விழிகளில் இப்போது சீற்றம் பொங்கியது...

''போ இங்கிருந்து!'' என்று தணிந்த குரலில் கொடுமையாகச் சொன்னுன் பாவெல். பிலிப்பை மார்பில் இடித்தான். இதை எதிர்பார்க்காத பிலிப் விழத் தெரிந்தார்.

பின்பகுதியை வலிவாகப் பற்றிக் கொண்டு சமாளித்தார். ''போ!..'' என்று கூச்சலிட்டான் பாவெல். இன்னொரு தரம் இடித்தான். பின்னும் ஒரு தடவை பலமாக இடித்தான். பிலிப் வலிமை எல்லாம் திரட்டி லாரியின் பின் பகுதியைப் பற்றிக் கொண்டிருந்தார். அவர் பாவெலை உற்று நோக்கி ஞர், அவனை அவரால் அடையாளம் காண முடியவில்லை. ஒன்றுமே அவருக்குப் புரியவில்லை.

பின்பகுதியில் இருந்தவர்கள் பயந்து போய், ''ஏ, ஏ, எதற்காக நீங்கள்?'' என்று குறுக்கிட்டார்கள். ஓர் இளை ஞன், மகன் போலும், பாவெலின் தோளைப் பிடித்து உள்ளே நடத்திச் சென்ருன். ''என்ன நீ? உனக்கு என்ன நேர்ந்தது?'' என்ருன்.

''இவனைப் போகச் சொல்லு!'' என்று கொடிய வன்மத் துடன் சொன்ஞன் பாவெல். ''இவனை இங்கிருந்து போகச் சொல்லு!.. நான் உன்னைப் பார்த்துக் கொள்கிறேன், தொற்றியா ஏறுகிருய், அசிங்கம் பிடித்தவனே. போ அப் பாலே! போய்த் தொலை!..'' பாவெல் காலால் தொப்பென்று அடித்தான். துயரத்தால் வெறி கொண்டவன் போலக் காணப்பட்டான்.

பிலிப் லாரியிலிருந்து இறங்கிஞர். பாவெலுக்கு என்ன நேர்ந்தது என்பது இப்போதுதான் அவருக்குப் புரிந்தது. அவரும் கீழிருந்து வன்மத்துடன் பாவெலை நோக்கிஞர். என்ன சொல்கிறேம் என்று தாமே அறியாதவராகப் பேசி ஞர். இந்தச் சொற்கள் அவருடைய நெஞ்சில் ஓயாமல் குமைந்து கொண்டிருந்தன போலும்.

''என்ன, கடுந் துயரமாய் இருக்கிறதோ?.. பிறத்தியா னுக்கு உரியதைக் கையாடிஞயே, இப்போது கசக்கிறதோ? அப்போது களி கொண்டாடிஞய் அல்லவா?..''

''நீ ரொம்பத்தானே சந்தோஷப்பட்டு விட்டாய்!'' என்று லாரியில் இருந்தபடிக் கூறிஞன் பாவெல். ''நீ எப்படி மகிழ்ச்சியில் திளைத்தாய் என்பதை நான் அறியேஞ?..''

''மற்றவனுடைய துன்பத்தால் தன் வாழ்க்கையை அமைத்துக் கொள்வது இப்படித்தான் முடியும்'' என்று பாவெல் சொன்னதைக் காதிலேயே வாங்கிக் கொள்ளாமல் பேசிக் கொண்டு போஞர் பிலிப். தாம் எண்ணியதைச் சொல் வது அவசியமாய் இருந்தது—மிகவும் அவசியமாக. ''இன்ப வாழ்க்கை நடத்துவோம் என்று மனக் கோட்டை கட்டிஞய்

அல்லவா? இல்லே, அப்படி நடப்பதில்லே. ஒருபோதும் நடப்பதில்லே. உனக்கு எப்படிக் கைமேல் பலன் கிடைத்தது என்பதை இதோ பார்க்கிறேன்...''

''நீ பிரமாத இன்பம் அனுபவித்து விட்டாயோ? நீ மட்டும்... நீயே மட்டும்... இப்படி வில்லாக உன்னே வளேத்தது எதுவோ? நீ நன்ருக வாழ்ந்திருந்தால், ஏன் இப்படிக் கூனிப் போனுய்? இன்ப வாழ்வினுலா?''

''அப்போது சந்தோஷப் பட்டாயே? பார்—படு சந்தோஷப் பட்டு விட்டாய்... பிச்சைக்காரப் பயலே! நீ தான் பிச்சைக்காரப் பயல்!''

''எதற்காக நீங்கள் இப்படி? உங்களுக்குப் பைத்தியமா என்ன?.. சண்டை போட நல்ல வேளேதான் பார்த்தீர்கள்!'' என்று கோபித்துக் கொண்டான் இளேஞன்.

லாரி புறப்பட்டது. பாவெல் லாரியில் இருந்தபடியே மீண்டும் கூவினுன்:

''நான் பிச்சைக்காரனுக்கும்!.. நீயோ, ஆயுள் முழுவதும் தேம்பிக் கொண்டிருந்தாய், தெரு நாய்க்குட்டி போல! பிச்சைக்காரன் நான் அல்ல, நீதான்!''

பிலிப் மெதுவாகத் திரும்பிப் போனுர்.

''மாரியா'' என்று எண்ணமிடலானுர். ''ஐயோ மாரியா, மாரியா... இப்படித்தான் நீ எல்லார் வாழ்க்கையையும் கோணலாக்கினுய். இதோ, இரண்டு மடையர்கள் நாய்கள் போல் குலேத்துக் கொண்டார்கள்... நீயும் நாங்கள் இருவரும் பிச்சைக்காரர்கள். பாவெல், ரொம்பத்தானே வலிப்புக் காட்டாதே. நீ பிச்சைக்காரன் இல்லே என்ருல் எதற்காகச் சீறுகிருய்? சிறு வயதில் இன்பத் துண்டை விண்டு எடுத்துக் கொண்டாய் என்ருல் வாழ்ந்து மகிழ். ஆனுல் நீயும் மகிழ்ச்சியை அறியவில்லே. அவள் உன்னேக் காதலிக்கவில்லே, அதனுல்தான் இப்போது துயரம் உன் கழுத்தை நெரிக்கிறது. அப்போது கையாடுவது சுளுவாக இருந்தது. வந்தாய், ஒரே நொடியில் கடத்திப் போய் விட்டாய்! மகிழ்ந்து போனுய்!''

பிலிப்புக்குக் கைப்பாய் இருந்தது... ஆனுல் இப்போது கசப்பான துயரத்தோடு மாரியா மீது எரிச்சலும் சேர்ந்து கொண்டது.

''நீயும் நல்லவள்தான்: பொறுத்திருக்க முடியவில்லே, அவர்களுடைய தூண்டிலில் சுளுவாக மாட்டிக் கொண்டு

கிராயுஷ்கிளே போய் விட்டாய்! அவ்வளவு பொறுக்க முடியாமல் போய் விட்டதாக்கும்! பயன் ஏதாவது உண்டா... எதற்கு இப்பொழுது இந்த முடிவு?..''

''இப்போது இதெல்லாம் எதற்கு...'' என்று முடிவாகத் தம்மிடம் சொல்லிக் கொண்டார் பிலிப். ''இனி பரவாயில்லை. முடிவுவரை எப்படியாவது வாழ வேண்டும்... அப்புறம் அவள் பின்னே போக வேண்டும். எதையும் இனி திருப்பிக் கொண்டுவர முடியாது.''

காற்று கணிசமாக அடங்கிவிட்டது. வானம் தெளிந்தது, சூரியன் ஒளி வீசிற்று, ஆனாலும் குளிராய் இருந்தது. சுற்றிலும் இலையுதிர்ந்த மொட்டை மரங்களும் குளிரும். இப்போதுதான் இலையுதிர் காலம் ஆயிற்றே, வெப்பம் எங்கிருந்து வரும்?

## பின்னுரை

''நான் முதன்மையாக எழுத்தாளன்...'' என்று வசீலி ஷுக்ஷீன் தம்மைப் பற்றிக் கூறிக் கொண்டார். ஆனால் எவரையும் பின்பற்றாத, வியப்பூட்டும் திறன் வாய்ந்த நடிகராகவே வாசகர்கள் முதலில் அவரை அறிந்து கொண்டார்கள். திரைப்படத் துறையில் அவரது முதல் வேலை—''இரண்டு பியோதர்கள்'' என்னும் படத்தில் கதாநாயகன் பாத்திரம்—இதை ரசிகர்களுக்கு அறிவித்தது. நினைவில் இதை விட ஆழமாகப் பதியக் கூடியவையும் கிளர்ச்சியூட்டுபவையுமான பாத்திரப் படைப்புகளை இதன் பின் அவர் ரசிகர்களுக்கு வழங்கினார். ''... 'ஏரியின் அருகே' என்னும் படத்தில் யாவற்றிலும் ஆற்றல் மிக்க நிகழ்ச்சி வசீலி ஷுக்ஷீன்தான். நடிகரே அல்ல, மனிதர். முழுக்க முழுக்க இயல்பான...' இங்கே சாத்தியமான ஒரே ஒரு நடிப்பு. ருஷ்ய நடிப்புக் கலை இங்கே தன் உச்சத்தை எட்டி விடுகிறது, எதனுடனும் ஒப்பிட முடியாததாக விளங்குகிறது'' என்று எழுதினார் பெரிய ருஷ்ய நாடகாசிரியர் அலெக்சேய் அர்பூஸவ். ''ஏரியின் அருகே'' என்ற படத்தில் பிரதான பாத்திரமாக நடித்ததற்காக வசீலி ஷுக்ஷீனுக்கு சோவியத் யூனியனின் அரசாங்கப் பரிசு அளிக்கப்பட்டது. இதன்பின் ''பேச்கி-லாவச்கி'', ''கலீனா கிராஸ்னயா'', ''அவர்கள் தாய்நாட்டுக்காகப் போரிட்டார்கள்'' போன்ற படங்களில் அவர் நடித்தார்...

திரைப்பட இயக்குநராகவும் ஷுக்ஷீன் இவ்வளவே விரைந்த முற்போக்குடனும் ஈடற்ற முறையிலும் பணியாற்றத் தொடங்கினார். தாமே எழுதிய திரைக் கதையின் அடிப்படையில் அவர் தயாரித்து அளித்த ''இருக்கிறான் இத்தகைய இளைஞன்'' என்னும் முதல் திரைப்படம் சோவியத் வெள்ளித் திரைகளில் வெற்றி வலம் வந்து வெனிஸ் உலகத் திரைப்பட விழாவின் தலைமைப் பரிசான ''தங்கச் சிங்கத்தைப்'' பெற்றது. ஷுக்ஷீன் இயக்கிய இரண்டாவது படமான ''உங்கள் மகனும் சோதரனும்'' ருஷ்ய சோவியத் சோஷலிசக் குடியரசின் அரசாங்கப் பரிசைப் பெற்றது. சோவியத் திரைப்படக் கலையில் வசீலி ஷுக்ஷீனின் தனிவகையான, பயன் மிக்க இயக்குநர் பாணி நிலையான இடம் பெற்று விட்டதை உறுதிப்படுத்தின ''விந்தை மனிதர்கள்,'' ''பேச்கி-

லாவச்கி'', ''கலீனு கிராஸ்னயா'' போன்ற அடுத்த படங்கள். ஆயினும் வசீலி ஷுக்ஷீன் முதன்மையாக எழுத்தாளர். **கிராமவாசிகள்** என்னும் அவருடைய முதலாவது சிறுகதைத் தொகுப்பே வாசகர்களிடையிலும் விமர்சகர்களிடையிலும் பெருத்த ஆர்வத்தை ஏற்படுத்தியது. இதை அடுத்து வெளி வந்த **இரண்டு கிழவர்கள், சுபாவங்கள், தெளிந்த நிலவில் உரையாடல்கள்** என்னும் சிறுகதைத் தொகுப்புக்களும் **லியுபாவின் குடும்பத்தார், நான் உங்களுக்கு விடுதலை அளிக்க வந்தேன்** என்னும் நாவல்களும் இந்த வெற்றியை உறுதி யாக நிலைப்படுத்தி, யாவரிலும் திறமை மிக்க, மூலச் சிறப்பு வாய்ந்த சோவியத் சொற் கலைஞர்களின் வரிசையில் அவருடைய பெயருக்கு இடம் அளித்தன.

**இலக்கியப் பார்வையீடு** என்னும் மாஸ்கோச் சஞ்சிகை, ''சென்ற ஆண்டின் மூன்று தலைசிறந்த படைப்பு இலக்கிய நூல்கள் எவை?'' என்ற கேள்விக்கு 1974ல் வாசகர்களின் பதில்களைத் திரட்டித் தொகுத்த போது வசீலி ஷுக்ஷீனின் சிறுகதைத் தொகுப்பு பெரும்பான்மை வாக்குகள் பெற்றது. மக்களின் சுபாவங்களையும் சாத்தியமான எல்லாவித வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் நடந்த கதைகளையும் வரலாறுகளையும் அவர் மிக நன்முக அறிந்திருந்தார். துர்கேனி வின் காலம் முதல் ருஷ்ய மூல இலக்கியத்தில் பெருமளவில் வழங்கி வந்த பண்புச் சொல்லோவியக் கலையை ஷுக்ஷீன் மீண்டும் உயிர்ப்பித்தார் எனலாம்.

வசீலி ஷுக்ஷீன் இளமை கழியும் முன்பே—நாற்பத் தைந்தாம் வயதிலேயே—நம்மை விட்டுச் சென்று விட்டார். மிகயீல் ஷோலகவின் ''அவர்கள் தாய்நாட்டுக்காகப் போரிட்டார்கள்'' என்னும் நாவலின் அடிப்படையில் அதே பெயருடன் தயாரிக்கப்பட்ட திரைப்படப் பிடிப்பு மும்முரமாக நடந்து கொண்டிருந்த போது, 1974ம் ஆண்டு இலையுதிர் காலத்தில் அவர் காலமானுர். உழைப்பாளியும் போராட்ட வீரனுமான அந்திரேய் லபாஹின் என்ற பாத்திரத்தை ஏற்று இந்தப் படத்தில் நடித்து வந்தார் ஷுக்ஷீன்.

ஷுக்ஷீன் தமது வாழ்க்கைப் பயணத்தை இடர்களுடன் தொடங்கினுர். அவரது வாழ்க்கை ஒருபோதும் எளிதாய் இருக்கவில்லை. பாசிசத்துக்கு எதிராக நடந்த மாபெரும் தேசபக்த யுத்தத்தின் போது வளர்ந்தார் ஷுக்ஷீன். பதினுறு வயதில் அவர்கூட்டுப்பண்ணை வயல்களில் உழைத்தார். பிற்

பாடு டிராக்டர் தொழிற்சாலையில் தொழிலாளராக இருந் தார். பள்ளிப் படிப்பை அவர் வெளியிலிருந்து கற்று முடித் தார். பின்னர் அப்பள்ளியில் இலக்கியம் கற்பித்தார், தலைமை ஆசிரியர் ஆனார்... 1954ம் ஆண்டில்தான் அவர் அகில சோவியத் அரசாங்கத் திரைப்படக்கலைக் கல்லூரி மாண வர் ஆனார். கல்லூரிப் பயிற்சி நிறைவுற்ற போது ஷுக்ஷீ னுக்கு முப்பது வயது ஆகி விட்டது. ஆனால் இதைப் பற்றி வருந்தத் தேவையில்லை. வாழ்க்கை குறித்த ஆழ்ந்த அறிவு அவருடைய பெருத்த திறமையை அசாதாரணமாக வளப் படுத்தியது. மக்களுக்குச் சொல்வதற்கு அவரிடம் விஷயங் கள் இருந்தன, அவற்றை எப்படிச் சொல்வது என்பதை அவர் அறிந்திருந்தார். மக்கள் அவர் மீது நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டு போன ஆழ்ந்த கவனத்தால் அவ ருக்குக் கைம்மாறு செய்தார்கள். தங்கள் இதயங்களில் அவருக்கு இடம் அளித்தார்கள்.

இலக்கிய, கலைத் துறையில் ஆக உயர்ந்த பரிசான லெனின் பரிசு வசீலி ஷுக்ஷீனுக்கு அவரது மரணத்துக்குப் பின், 1976ம் ஆண்டில் அளிக்கப்பட்டது.

**வாசக நேயர்களுக்கு**

இந்த மொழிபெயர்ப்பைப் பற்றியும் இந்தப் புத்தகத்தின் தயாரிப்பைப் பற்றியும் வாசக நேயர்களின் கருத்தை **முன்னேற்றப் பதிப்பகம்** மகிழ்வுடன் வரவேற்கும்.

கடிதங்களைத் தயை செய்து “Progress Publishers, 17, Zubovsky Boulevard, Moscow, USSR” என்ற முகவரிக்கு அனுப்புங்கள்.


**விற்பனையாளர்கள்**

**நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்**

**தலைமை அலுவலகம்**

41. பி. சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்.
சென்னை—600098.

**ஷோ-ரூம்**

136. மவுண்ட் ரோடு. சென்னை—600002.

**கிளைகள்**

80. மேலக் கோபுர வீதி. மதுரை—625001.
87/89. ஒப்பணக்கார தெரு. கோயம்பத்தூர்—641001.
சிங்காரத் தோப்பு. திருச்சிராப்பள்ளி—620008.
செர்ரி ரோடு. சேலம்—636001.

**விற்பனை நிலையங்கள்**

3—22—75—D, மதுரை சாலை;
திருநெல்வேலி ஜங்ஷன்.
66, கீழராஜ வீதி, தஞ்சாவூர்.

"மக்களுக்கு அந்தரங்கமானது வேண்டியிருந்த போது அவர் தருணத்தை நழுவவிடவில்லை. எளிய, வீரப்பண்பு இல்லாத, ஒவ்வொருவருக்கும் உவப்பான கதைகளை, அவ்வாறே எளிமையாக, குரலை உயர்த்தாமல், மிகவும் நம்பிக்கை ஏற்படும் விதத்தில் சொன்னார். ஷுக்ஷினின் படைப்பு சிவ்வென்று உயரே பறந்து பல மனிதர்களின் இதயங்களில் விரிவான எதிரொலி எழுப்பியதன் காரணம் இதுவே..."

மிஹயீல் ஷோலகவ்

ஸ்தெபான் ராஸின் வேடத்தில்

"வசீலி ஷுக்ஷீன் நடிகராக மட்டும், இயக்குநராக மட்டும், திரைக்கதை, நாடக ஆசிரியராக மட்டும், முடிவில், உரைநடைக் கலைஞராக மட்டும் இருந்திருந்தால் கூட, இந்த ஒவ்வொரு துறையிலும் அசாதாரண மேதை வாய்ந்தவரை நாம் பெற்றிருப்போம். ஆனால் இந்த மேதைகள் யாவும் ஒரே மனிதருக்கு உரியவை. இத்தகைய வியப்பூட்டும் சேர்க்கை நமது கலை முன்பு அறியாத ஒன்று."

செர்கேய் ஸலீகின், சோவியத் எழுத்தாளர்